# நன்னூல் உரை வளம்

11

## பெயரியல் - 2

இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies

# நன்னூல் உரைவளம் (தொகுதி-11)

# பெயரியல் 2

பதிப்பாசிரியர்
முனைவர் இரா. கண்ணன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
இரண்டாம் முதன்மைச் சாலை,
தரமணி, சென்னை-600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | **Peyariyal - 2 (Vol. 11)** |
| Author | : | Dr. R. Kannan<br>Associate Professor<br>Dept. of Tamil Language<br>Presidency College, Chennai - 5 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 699 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2010 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 11 Point |
| No. of Pages | : | 408 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 180/- (Rupees One hundred and eighty only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>New No. 47, Rajanga Mathya Street<br>Vadapalani, Chennai - 600 026.<br>Phone : 23621409 |
| Subject | : | Tamil Grammar |

**முனைவர் கரு.அழ. குணசேகரன்**
**இயக்குநர்**
**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை – 113**

# அணிந்துரை

வாழ்வை இலகுவாக்க மனிதன் படைத்துக் கொண்ட கருவிகள் பற்பல. அவற்றுள் மொழியும் ஒன்று. ஆயினும் பிற கருவிகள் யாவற்றுள்ளும் தலையாயதும் தனிச் சிறப்புடையதும் மொழியே. மொழி இன்றேல் வேறு எக்கருவியும் தோன்றி யிராது. மொழி, மனத்தின் உயிர்; பிறபிற கலைகளுக்கும் கருவிகளுக்கும் தாய். மாந்தரின வாழ்விற்கு இத்துணை இன்றியமையாக் கருவியாய்த் திகழும் மொழி, உலகம் யாண்டும் பரவிக் கிடக்கும் மக்களினக் குழுக்களிடையே பலவாகக் காணக் கிடக்கிறது. அம் மொழிக்கூட்டத்திடையே பன்மீன் நாப்பண் விளங்கு பால்மதி போல் இலங்குவது தமிழ்.வரலாற்றுக்காலந் தொடங்கி இன்றளவும் தன்னேரிலாத் தகைசால் சீர்மை யுடன் திகழும் இத் தமிழ்மொழியின் இலக்கிய இலக்கணப் பரப்பு அளந்திட்டுக் கூற ஒண்ணா விரிவினை உடையது. காலமும் கடும்புனலும் கொண்டது போக எஞ்சியன சிலவே யாயினும், மறைந்து போனவற்றிற்கு மாற்றாகக் காலந் தோறும் தோன்றிய பனுவல்களோ பற்பல. அழகு தமிழில் அமைந்த அந்நூல்களின் பொதிபொருளைப் பழகு தமிழில் விளக்க எழுந்த உரைகளும் மிகப் பல.

ஒல்காப் புகழுடைய தொல்காப்பியத்திற்குப் பின் ஏறத்தாழ பன்னிரண்டு நூற்றாண்டுகள் கழித்துத் தோன்றி இன்றளவும் தனிச் சிறப்புடன் வாழ்வது நன்னூல். பெயருக்கு ஒப்பவே தமிழின் இலக்கணத்தை நலம்படவும் நயம்படவும் இயம்பும் இந்நூலிற்கு உரைவிளக்கம் கண்டோர் பலர். அவ்வுரைகளுள் பல, தம் பெயரை மட்டுமே நிறுத்தி தாம் மாய்ந்தன. வேறுபலவோ, அச்சேறியபோதும் இன்று காணுதற்கும் அரியனவாய் உள்ளன. இவ்வாறு காலச் செலவால் அருகி உள்ள உரைகளை அரிதின் முயன்று திரட்டி இருபத்திரண்டு தொகுதிகளாக உருவாக்கப் பெற்றுள்ள இவ்வுரை வளத்தினைஎம் நிறுவனத்தின் வழி வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறோம்.

மயிலை நாதர், சங்கர நமச்சிவாயர்,சிவஞான முனிவர், கூழங்கைத் தம்பிரான், விசாகப் பெருமாளையர், ஆ.முத்துத் தம்பிப்பிள்ளை, இராமானுச கவிராயர், கா.கோபாலா சாரியார், தி.கோ.ரங்காசாரியார், ஆறுமுக நாவலர், வ.குமார சாமிப் புலவர், வை.மு.சடகோபராமானுசாசாரியார், சே.கிருட்டிணமாசாரியார், பவானந்தம் பிள்ளை, கொ.இராம லிங்கத்தம்பிரான், கா.நமச்சிவாய முதலியார், மோசசு பொன்னையா ஆகியோரின் உரைகளும், என்றி பவார் செய்த பாயிரப் பகுதிக்கான ஆங்கில மொழி பெயர்ப்பும், இலாசரசு செய்த எழுத்ததிகாரம் மற்றும் சொல் லதிகாரத்திற்கான ஆங்கில மொழிபெயர்ப்பும் இவ்வுரை வளத்தில் திரட்டப் பெற்றுள்ளன. நன்னூலைத் தழுவி இயற்றப் பெற்று ஒரு நூற்றாண்டு காலத்திற்கும் மேல் மீள்பதிப்புக் காணாத திருப்பாற்கடல்நாதன் கவிராயரின் தமிழிலக்கணம், சி.அருணாசலம் பிள்ளையின் TAMIL GRAMMAR, இ.சாமுவேல் பிள்ளையின் தொல்காப்பிய நன்னூல், G.U.போப்பின் காண்டிகையுரை, ஆ.முத்துத் தம்பிப்பிள்ளையின் நன்னூல் இலகுபோதம் ஆகியன இவ்வுரைவளத் திரட்டில் தனித்தனி நூல்களாக வெளியிடப் பெற்றுள்ளன. இவ்வுரைவளம் தமிழன்னைக்கு அணி சேர்க்கும் என்பதில் ஐயமில்லை.

நன்னூல் உரைவளத்தின் பதிப்பாசிரியரான முனைவர் இரா.கண்ணன், சென்னை மாநிலக்கல்லூரித் தமிழ்த் துறையில் இணைப்பேராசிரியராகப் பணியாற்றுகிறார். இவர் அறுபதிற்கும் மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். இவ்வுரைவளத்தின் பதிப்புப் பணியோடு எழுத்துக் கோர்த்தல், மெய்ப்புத் திருத்தல், வடிவமைத்தல் உள்ளிட்ட அனைத்துப் பணிகளையும் தனியொருவராக இருந்து சிறப்புடன் செய்துள்ள இப்பதிப்பாசிரியரை மனதார வாழ்த்துவதுடன் நன்றி நவிலுங் கடப்பாடுமுடையேன்.

நிறுவனப் பணிகளில் எம்முடன் இணைந்து பணியாற்றும் துணை இயக்குநர், பேராசிரியப் பெருமக்கள் மற்றும் அலுவலக ஊழியர்கள் ஆகிய அனைவர்க்கும் எம் நன்றி உரித்தாகுக.

கரு.அழ.குணசேகரன்

சென்னை – 113.

12.10.2010.

# முன்னுரை

தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி ஆகிய ஐம்பெரும் பிரிவுகளை உடையது என்பர். இது பொது வழக்கே யாயினும் பிற்காலத்தில் பாட்டியல் அனைய புதுப்புது இலக்கணப் பிரிவுகள் தமிழில் தோன்றி நன்கு செழித்து வளர்ந்துள்ளன. அவ்வாறே எழுத்து, சொல் முதலான ஒவ்வொரு பிரிவினிலும் தோன்றிய இலக்கண நூல்களும் பல உள. தொல்காப்பியம், எழுத்து, சொல், பொருள் ஆகிய மூன்று அதிகாரங்களை உடையதாதலான் அது மூன்றிலக்கணம் கூறும் நூல் என்பது போதரும். ஆயினும் பொருளதிகாரத்துள் அமைந்து கிடக்கும் உவமவியலும், செய்யுளியலும் முறையே அணியிலக்கணத்தையும், யாப்பிலக்கணத்தையும் வேண்டுமளவிற்கு விளக்கிக் கூறுதலான், அந்நூல் ஐந்திலக்கண நூலுமாம். தொல்காப்பியத்திற்குப் பின் பல்வேறு இலக்கண நூல்கள் எழுந்தன.பழங்காலத்தில் பெருவழக்காய் வழங்கிய அவ்விலக் கண நூல்கள் இன்று வீழ்ந்து போயின. இன்று வழங்கப் பெறும் இலக்கண நூல்களுள் வீரசோழியம், தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்த முதல் ஐந்திலக்கண நூலாகும். ஆயினும் அந்நூல் வடமொழி சார்பினைப் பெரும்பான்மை தழுவிச் செல்வதால் அது அவ்வளவாகப் போற்றப் படுவதில்லை. வீரசோழியத்திற்குப் பின் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண் டளவில் பவணந்தி முனிவரால் நன்னூல் இயற்றப்பட்டது. நன்னூல் ஐந்திலக்கணம் கூறிய நூல் என்றும், இன்று எழுத்து மற்றும் சொல்லிலக் கணம் உரைக்கும் பகுதி மட்டுமே கிடைக்கப் பெறுகிறது என்றும் எஞ்சிய பகுதிகள் காலச் செலவால் அழிந்திருக்கக் கூடும் என்றும் கருதுவாரும் உண்டு. இன்று வழக்கில் உள்ள நன்னூலின் மொத்த நூற்பாத் தொகை நானூற்று அறுபத்திரண்டு. பாயிரம், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம் என மூன்று பகுதிகளாய் அமைந்துள்ள இந்நூலின்கண் பாயிரம் 55 நூற்பாக்களையும், எழுத்ததிகாரம் 202 நூற்பாக்களையும் சொல்லதிகாரம் 205 நூற்பாக்களையும் பெற்றுள்ளன. பாயிரம், பவணந்தியால் இயற்றப்பட்டதன்று என்பர்.

நன்னூலிற்கு இன்றுகாறும் எழுந்துள்ள உரைகள் பல. ஆயினும் மயிலைநாதரின் உரையே முதலில் எழுந்த உரையாகும். மயிலைநாதர் நன்னூல் ஆசிரியர் பவணந்தியின் சம காலத்தவர். மயிலைநாதரின் உரை நன்னூலிற்கு இன்று வரை எழுந்துள்ள உரைகள் யாவற்றிலும் தலைமை யானது, தனிச் சிறப்புடையது. இவ்வுரைக்குப் பின் பல உரைகள் எழுந்தன. அவற்றுள் சில அச்சேறாமலேயே இறந்தன.வேறுசில அச்சேறிய பின்னும் இன்று அருகியுள்ளன.இவ்வாறு காலச்செலவான் அருகி வரும் உரைகளைக் காத்தற் பொருட்டும், தமிழாய்விற்குத் தக்க கருவி நூலாய் அமையும் திறம் நோக்கியும் இவ்வுரைவளம் உருவாக்கப் பெற்றுள்ளது.இதில் நன்னூலின் சிறந்த உரைகள் அனைத்தும் திரட்டப் பெற்றுள்ளன.

நூற்பா அதன்கீழ் சீர் பிரிக்கப் பெற்ற நிலையில் நூற்பா,ஆங்கில எழுத்துப் பெயர்ப்பு, இலாசரசு செய்த மூல நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பு, தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான இலக்கண நூல்களில் இருந்து தரப்பெற்றுள்ள ஒப்புமைப் பகுதி,நன்னூல் உரைகள் ஆகியன இவ்வுரைவளத்தில் நிரல்படுத்தப்பட்டுள்ளன. மூலநூலின் பாட வேறுபாடும், மயிலை நாதர் உரையின் பாடவேறுபாடும் காட்டப் பெற்றுள்ளன.

நன்னூலிற்கு விருத்த யாப்பில் எழுந்த ஆண்டிப்புலவர் உரை அழிந்து போனது. அச்சேறிய உரைகளுள் பல இன்று அருகி பெயரளவில் மட்டுமே அறியப் பெறுபவையாக உள்ளன. அச்சேறிய அரிய உரைகளை யேனும் காக்கும் வகையில் இவ்வுரைவளம் இருபத்திரண்டு தொகுதிகளாக வெளியிடப் பெறுகின்றது. தமிழ் உலகம் ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர், பேராசிரியர் முனைவர் ***கரு.அழ.குணசேகரன்*** அவர்களும், துணை இயக்குநர் **திரு.க.ந.வீரபாகு சுப்பிரமணியன்** அவர்களும் நன்னூல் உரைவள நூல்கள் அனைத்தையும் விரைந்து வெளிக் கொணர்ந்தனர். அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வுரைவளத் திரட்டுப் பணியின்போது பல்லாற்றான் உதவிய சென்னை இராணிமேரி கல்லூரிப் பேராசிரியை **முனைவர் ந.கலைவாணி** அவர்களுக்கும், உற்றுழி உதவிய அனைவர்க்கும் உளமார்ந்த நன்றியினை உரித்தாக்கிக் கொள்வதோடு, தோன்றாத் துணையாய் இருந்து எம்மை இயக்கி வரும் தில்லைக் கூத்தனின் பொன்னார் திருவடிகளைப் போற்றிப் பணிந்து அமைகிறேன்.

10.10.2010 **இரா.கண்ணன்.**

சென்னை–55

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அவி | – | அவிநயம் |
| இடள் | – | இதன் பொருள் |
| இல, விள | – | இலக்கண விளக்கம் |
| உ–ம் | – | உதாரணம் |
| உணர்–ற்று | – | உணர்த்துதல் நுதலிற்று |
| எ–டு | – | எடுத்க்காட்டு |
| எ–று | – | என்றவாறு |
| எ–னின் | – | என் நுதலிற்றே எனின் |
| சுவாமி | – | சுவாமிநாதம் |
| சூ–ம் | – | சூத்திரம் |
| தொல், எழு | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல், சொல் | – | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |
| தொல், பொருள் | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொன் | – | தொன்னூல் விளக்கம் |
| நச் | – | நச்சினார்க்கினியர் |
| ந.பா | – | நவநீதப் பாட்டியல் |
| நேமி | – | நேமிநாதம் |
| பா–டு | – | பாட வேறுபாடு |
| பொ–ரை | – | பொழிப்புரை |
| மா.அலங் | – | மாறனலங்காரம் |
| து.வீ | – | முத்துவீரியம் |
| வீர | – | வீரசோழியம் |
| வெண், பாட் | – | வெண்பாப் பாட்டியல் |

**அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ ,ஒ, ஓ, ஔ, ஃ – இவ்வெழுத்துக்கள் முறையே** a , ā , i , ī ,u ,ū ,e, ē ,ai ,o, ō, au, kh **எனவும்,**

**க், ங் , ச், ஞ் , ட் ,ண், த், ந் , ப், ம், ய், ர் , ல் , வ், ழ், ள், ற் , ன் – வ்வெழுத்துக்கள் முறையே** k, ṅ , s, ñ , t , ṇ, ṭ , n , p , m , y , r , l , v ,ḻ ,ḷ, ṟ , ṉ, kh

**எனவும் ஆங்கில எழுத்துப்பெயர்ப்பில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.**

## நன்னூல் உரைவளம்–11

## சொல்லதிகாரம்

# பெயரியல் – 2

**290. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.**

ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய்ப் பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை

ērkum evvakaip peyarkkum īru āyp poruḻ
vērrumai seyvana̲ ettē vērrumai.

### இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

CASES

Eight are the cases which coming at the end of declinable nouns, (variously) modify their meanings.

### ஒப்புமைப் பகுதி

**வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே**

(தொல். எழு.: 117)

**வேற்றுமை தாமே ஏழென மொழிப**

(தொல். சொல்.: 62)

**விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே**

(தொல். சொல்.: 63)

................. வேற்றுமை எட்டாகும் – மூண்டவைதாம்
தோற்றம் பெயர் முன்னர் ஏழுந் தொடர்ந்தியலும்
ஏற்ற பொருள்செய் யிடத்து

(நேமி.: 40: 2–4)

எட்டாம் ............ வேற்றுமை....

(வீர.: 29:1)

ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்பொருள்
வேற்றமை செய்வன வேழென மொழிப
விளிகொள் வதன்கண் விளியலங் கடையே

(இ.வி.: 193)

வேற்றுமைப் படுத்தலின் வேற்றுமையாம்.........
........................................ எட்டே

(தொ.வி.: 55)

எல்லாப் பெயரும் வேற்றமை யேற்கும்

(மு.வீ.: 506)

வேற்றுமை தானே விளியோ டெட்டே

(மு.வீ.: 507)

.................... உருபு ஏற்பது உருபு
பயன்மூன்றே வேறுபட்டும் வேறுபடுத் தியம்பின்
போகமுற முடித்தும்வேற் றுமையாகிப் பெயரின்
பொருளைவேற் றுமைசெய்வது எட்டு வேற்றுமையே

(சுவாமி.: 40: 3–4)

## மயிலை நாதர்

**எ–ன்,** மேல் வேற்றுமை சார்தற்கிடனுமாய் வினைப் பெயரல்லாதன காலந் [1]தோன்றாதனவுமாய் வருதல் பெயர்க்கிலக்கண மென்று தன்பகுதியெல்லா முணர்த்தி, ஈண்டு அவ்வேற்றுமை யுணர்த்துவா னெடுத்துக்கொண்டார், அவற்றுள், இச்சூத்திரம் வேற்றுமைகளினியல்பும் அவற்றின் பகுதியு முணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** தம்மை ஏற்பனவான ஒருமொழிப்பெயர், தொடர்மொழிப்பெயர், பொதுமொழிப்பெயர், உயர்திணைப்பெயர், அஃறிணைப்பெயர், ஆண்பாற்பெயர், பெண்பாற்பெயர், [1]பலர்பாற்பெயர், ஒன்றன்பாற்பெயர், பலவின்பாற்பெயர், தன்மைப்பெயர், முன்னிலைப் பெயர், படர்க்கைப் பெயர், பொருட்பெயர், இடப்

---

பாட வேறுபாடு:–

1.தோன்றாவுமாய்

பெயர், காலப்பெயர், சினைப்பெயர், பண்புப்பெயர், தொழிற்பெயர், எண்ணுப் பெயர், நிறைப்பெயர், அளவுப்பெயர், ஆகுபெயர், சுட்டுப்பெயர், வினாப் பெய ரென்னும் எல்லாப்பெயர்களுக்கும் ஈற்றிலே நின்று பொருள்களை வேற்றுமை செய்வனவான வேற்றுமைகள் எட்டாம்,எ—று.

வேற்றுமை செய்தலான் வேற்றுமை; வேற்றுமைசெய்வன யாவை அவை வேற்றுமை யெனவுமாம். **'எட்டே'** என்புழி ஏகாரம் தேற்றேகாரம்; [2]விளியைப் பெயரது விகாரமென்று அப்பெயருளடக்கி ஏழென்பாருமுளர்; அது பெயரின்விகாரமே யாயினும் படர்க்கையை முன்னிலையாக வேறுபடுத்தலுடை மையின்,எட்டெடன்பார் மதங்கோடற்கு வந்ததென்க;

**"ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை**
**வேறென விளம்பான் பெயரது விகாரமென்**
**றோதிய புலவனு முளனொரு வகையா**
**னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்"**

என்றார், அகத்தியனாரென்க.

வேற்றுமை செய்தலாவது: முதலாவது சாத்தனென அப்பெயர்தான் தன்பொருண்மையிற் றிரிபின்றி ஏனைய வற்றின் வேறுபடுத்தது. இரண்டாவது சாத்தனையென அப்பெயர்ப் பொருண்மையைக் காரியமாக்கிற்று. மூன்றாவது சாத்தனாலென அப்பெயர்ப்பொருண்மையைக் கருத்தா வாக்கிற்று. நான்காவது சாத்தற்கென ஏற்றுக்கொள்வ [3]தாக்கிற்று. ஐந்தாவது சாத்தனினென நீக்குவ[4] தாக்கிற்று. ஆறாவது சாத்தனதெனக் கிழமைத்[5]தாக்கிற்று. ஏழாவது சாத்தன் கண்ணென இட[6]மாக்கிற்று. எட்டாவது சாத்தாவென முன்னிலை[7]யாக்கிற்று. இவ்வகையவாதல் தத்தம் இலக்கணச் சூத்திரங்களுட் காண்க.

**'ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்'** எனவே, ஏனைவினைச் சொற்களும் பெயர்ப்படா இடையுரிச் சொற்களும் வேற்றுமை யேலாவென்பது தானேபோதருமெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மேல் 'வேற்றுமைக்கு இடனாய்' (275) என்றார், அவ்வேற்றுமை இனைய எனவும் இத்துணைய எனவும் **உணர்—ற்று.**

**இ—ள்.:** தம்மை ஏற்றுக்கோடற்கு உரிய எவ்வகைப்பட்ட பெயர்கட்கும்

---

பாட **வேறுபாடு:—**

**1.பல்லோர்பெயர் ஒன்றன் பெயர் பலவின் பெயர்**

**2.விளிபெயர்களது விகாரமன்றடக்கி**

**3–7. ஆயிற்று.**

இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவான வேற்றுமைகள் எட்டேயாம், எ – று.

வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே எனக் கூட்டுக.

எல்லாப் பெயரும் எல்லா வேற்றுமையும் ஏலாது என்பார் '**ஏற்கும்**' என்றும், வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொற் களுள் பெயர்ப்பட நின்றனவும் தழீஇக்கோடற்கு '**எவ்வகை**' என்றும், வினை முதலிய மூன்றும் வேற்றுமை கொள்ளாது என்பார் '**பெயர்**' என்றும், ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய் என எய்தியதனை விலக்கி 'எழுவாயுருபு திரிபில்பெயரே' (295) எனப் பிறிதுவிதி வகுத்தலின் பெயர் முழுவதூஉம் உருபாம் எழுவாயுருபினை ஒழித்து விளியுருபிற்குப் பெயரிறுதியாகிய அகப்பாட்டெல்லையினையும் ஏனை ஆறுருபிற்கும் அதன் இறுதியாகிய புறப்பாட்டெல்லை யினையும் தழீஇக்கோடற்குப் '**பொதுமையின் ஈறாய்**' என்றும், பொருளையே யன்றிச் சொல்லையும் ஒரோவழி வேறுபடுப்பது ஐ முதலிய ஏழுருபிற்குமேயன்றி எழுவாய்க்கு ஒவ்வாமையானும் பொருள் ஒன்றனையும் வேறுபடுத்தல் எட்டு உருபிற்கும் ஒப்ப முடிந்தமையானும் சொல்லையும் உடன்கூறாது 'பொருள்' என்றும், வேற்றுமை என்னும் காரியத்தைச் செய்யும் கருத்தாவாகிய எட்டு வேற்றுமை யுருபிற்கும் வேற்றுமை எனவும் பெயர்போந்தது காரிய ஆகுபெயராகிய காரணக்குறி என்பார், '**வேற்றுமை செய்வன வேற்றுமை**' என்றும்,

**"ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை**
**வேறென விளம்பான் பெயரது விகாரமென்(று)**
**ஓதிய புலவனும் உளனொரு வகையான்**
**இந்திரன் எட்டாம் வேற்றுமை என்றனன்"**

என ஆசிரியர் அகத்தியனார் கூறுப ஆகலின் விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலின் அதனை எழுவாயுள் அடக்காது வேறுகோடலே தம்துணிபு என்பார் '**எட்டே**' என்றும் கூறினார். வேற்றுமை என்னும் பண்புப்பெயர் பண்பிக்கு ஆகாமையின் பண்பாகு பெயரன்றாயிற்று.

இனி **இரட்டுற மொழிதலான்** வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே எனக் கொண்டு கூட்டாது ஆற்றொழுக்காக நிறீஇ ஏகாரத்தைத் தேற்றமாக்காது பிரிநிலையாக்கி இங்ஙனம் வருவனவாகிய எட்டு உருபும் வேற்றுமை; அவையன்றி ஒருசாரார் கூறும் உருபு அடைந்த பெயரும், உருபின் பயனிலையும் வேற்றுமையல்ல எனவும் பொருள் உரைத்துக் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ-ம்,** வேற்றுமைகளினது இயல்பும் அதன் பகுதியும் கூறுகின்றது.

**இ-ள்.: ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்** – தம்மை ஏற்பனவான எவ்வகைப் பெயர்களுக்கும் ஈற்றிலே நின்று, **பொருள் வேற்றுமை செய்வன** – அப் பெயர்ப் பொருள்களை வேற்றுமை செய்வன, **எட்டே வேற்றுமை** – வேற்றுமை எட்டாம், **எ-று.**

**அரும்பதவுரை:**

வேற்றுமை செய்தலான் வேற்றுமை. வேற்றுமை செய்வன யாவை அவை வேற்றுமை. **"எட்டே"** என்பது தேற்றேகாரம். விளியைப் பெயரது விகாரமெனப் பெயருள் அடக்கி ஏழென்பாருமுளர். பெயர் விகாரமே ஆயினும் படர்க்கையை முன்னிலையாக வேறுபடுத்தல் உடைமையின் எட்டே என்பார் மதம் கோடற்கு வந்ததென்க.

வேற்றுமை செய்தலாவது: முதலது சாத்தன் என்றது. அப்பெயர்தான் தன் பொருண்மையிற் பிரிவின்றி எடுத்தலோசையான் ஏனையவற்றின் வேறுபடுத்தது. இவ்வகையாதல் தத்தம் இலக்கணச் சூத்திரத்துட் காண்க. இரண்டாவது சாத்தனையென அப்பெயர்ப் பொருண்மையைக் காரியமாக்கிற்று. மூன்றாவது சாத்தனாலென அப்பெயர்ப் பொருண்மையைக் கருத்தாவாக்கிற்று. நான்காவது சாத்தற்கென ஏற்றுக்கொள்வதாயிற்று. ஐந்தாவது சாத்தனின் என நீக்குவதாயிற்று. ஆறாவது சாத்தனது என கிழமைய தாக்கிற்று. ஏழாவது சாத்தன்கண்ணென இடமாக்கிற்று. எட்டாவது சாத்தாவென முன்னிலையாக்கிற்று.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் வேற்றுமைக்கிடனா யென்னப்பட்ட வேற்றுமைகள் இப்படிப்பட்டவை யென்பதும் இத்தனை யென்பதும் உணர்த்துகின்றது.

**இ-ள்.:ஏற்கும்**–தம்மையேற்றுக் கொள்ளுதற்குரிய, **எவ்வகைப் பெயர்க்கும்** – எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும், **ஈறாய்** – இறுதியாய், **பொருள்**– அப்பெயர்ப் பொருளை, **வேற்றுமை செய்வன** – வேற்றுமை படுத்துவனவாகிய, **வேற்றுமை**–வேற்றுமைகள், **எட்டே**–எட்டேயாகும், **எ-று.**

(தன்னை யேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்கிற வுருபை வேற்றுமை யென்றது காரியவாகுபெயர்)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வேற்றுமை இலக்கணமுந் தொகையுங் கூறுஞ் சூத்திரம் யாது?

ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வெட்டே வேற்றுமை.
(ஏற்றும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய் பொருள்
வேற்றுமை செய்வன எட்டே வேற்றுமை)

**இ–ள்.:** தம்மை யேற்றுக்கொள்ளுதற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாய் அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவாகிய வேற்றுமைகள் எட்டே யாகும், **எ–று.**

தன்னையேற்ற பெயர்ப்பொருளுக்கு வேற்றுமை யென்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய உருபை வேற்றுமை யென்றது காரியவாகுபெயர். வேற்றுமையென்னும் பண்புப் பெயர் பண்புக்காகாமையாற் பண்பாகுபெய ரென்றாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மேல் வேற்றுமைக் கிடனா யென்ற வேற்றுமை யித் தன்மையை யுடையன வென்பதும் இவ்வளவினை யுடையன வென்பதும் உணர்த்திற்று.

**இ–ள்.: ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்** – தம்மை யேற்றுக் கொள்ளுதற்கு உரிய எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாகி, **பொருள் வேற்றுமை செய்வன**– பெயர்ப்பொருளை வேறுபடுத்து வனவாகிய, **எட்டேவேற்றுமை** – வேற்றுமையுருபுகளெட்டேயாம், **எ–று.**

**'வேற்றுமை செய்வன வேற்றுமை யெட்டே'** எனக் கூட்டுக. வினை முதலிய மூன்றும் வேற்றுமை கொள்ளாமையால் அவற்றை நீக்கிப் 'பெயர்க்'கென்றார், மேல் எழுவாயுருபிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி கூறுதலால் அதனை யொழித்து விளியுருபிற்குப் பெயரின் இறுதியாகிய அகப்பாட்டு எல்லையையும், மற்ற ஆறு உருபிற்கும் அதன் இறுதியாகிய புறப்பாட்டெல்லையையும் தழுவுதற்குப் பொதுமையினீறா யென்றார். பொருளை யன்றிச் சொல்லையும் வேறுபடுத்துவது எழுவாயுருபிற்கு இல்லாததினாலும், பொருளை வேறுபடுத்து வது எட்டுருபிற்கும் உண்மையாலும் சொல்லை யொழித்துப் பொருள் வேற்றுமை செய்வன வேற்றுமை யெட்டென்றுங் கூறினார். வேற்றுமை யென்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய எட்டு வேற்றுமை யுருப்பிற்கும் வேற்றுமை எனப் பெயர் தந்தது காரிய ஆகுபெயர்.

**"ஏழியன்முறைய தெதிர்முக வேற்றுமை**
**வேறென விளம்பான் பெயரது விகாரமென்**
**றோதிய புலவனு முளனொரு வகையா**
**னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்"**

என ஆசிரியர் அகத்தியனார் கூறுவாராகலின், விளியுருபு படர்க்கைச், சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமைசெய்தலால் அதை யெழுவாயுள் அடக்காமல் வேறாக்குதலே தமது துணிவென்று சொல்லவந்தவர் எட்டேவேற்றுமை யென்றார்.

**"வேற்றுமை தாமே யேழென மொழிப**
**விளிகொள்வதன்கண் விளியோ டெட்டே"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **ஏற்கும்** – தம்மை ஏற்றுக் கொள்ளுதற்கு உரிய, **எவ்வகைப் பெயர்க்கும்** – எல்லாவகைப்பட்ட பெயர்களுக்கும், **ஈறு ஆய்** – இறுதியில் வருவனவாய், **பொருள்** – அப்பெயர்களின் பொருளை, **வேற்றுமை செய்வன** – வேறுபடுத்துவனவாகிய, **வேற்றுமை** – வேற்றுமைகள், **எட்டே** – எட்டாகும்.

குறிப்பு:–

தன்னை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்துதற்குக் காரணமான உருபை 'வேற்றுமை' என்றது காரியவாகுபெயர். வேறுபடுத்தலாவது – பெயரின் இயற்பொருளை வினைமுதற் பொருள், செயப்படுபொருள், கருவிப்பொருள் முதலியனவாக மாற்றுவது. 'பெயர்க்கு ஈறாய்' என்றதனால் இவ்வேற்றுமையை வினைமுதலிய மூன்றுசொற்களும் கொள்ளாவென்றதாயிற்று. 'எவ்வகைப்பெயர்க்கும்' எனவே, அம்)மூன்று சொற்களின் அடியாகவரும் பெயர்களும் வேற்றுமை ஏற்கும் என்றறிக. எழுவாய் வேற்றுமை ஏனையவேற்றுமைகள் போலாது, பொருள்மாத்திரை வேறுபடுதலால், 'சொல் வேற்றுமை செய்வன' என்னாது, 'பொருள் வேற்றுமை செய்வன' என்றார். வடநூலார் வேற்றுமையை 'விபக்தி' எனவும், விளிவேற்று மையை 'ஸம்போதநப்ரதமை' என்று முதல் வேற்றுமையுளடக்கி, வேற்றுமை ஏழெனவுங் கூறுவர்.

## ஆறுமுகநாவலர்

இ–ள்.: **ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய்**–தம்மை யேற்றுக் கொள்ளுதற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாய், **பொருள் வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே** – அப் பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவாகிய வேற்றுமைகள் எட்டே யாகும், **எ–று.**

தன்னையேற்ற பெயர்ப்பொருளுக்கு வேற்றுமை யென்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய உருபை வேற்றுமை யென்றது காரியவாகுபெயர். வேற்றுமை யென்னும் பண்புப்பெயர் பண்பிற்காகாமையாற் பண்பாகு பெயரன்றாயிற்று, **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய்** – தம்மையேற்றுக் கொள்ளுதற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாய், **பொருள் வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே** – அப்பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவாகிய வேற்றுமைகள் எட்டேயாகும். **எ–று.**

''பகுபதம் பகாப்பத மிருவகைத் தொடர்பதம்
வினைமுற்றுப் பெயர் குறிப்பு முற்றுப் பெயர்,

தொழிற் பெயராதியிற்றோன் றுமெட்டுருபே''

என்பதனால் வேற்றுமையுருபையேற்கும் பெயர்களின் வகையறிக.

வினைமுதலியமூன்றும் வேற்றுமைகொள்ளாமையால் அவற்றை நீக்கிப் பெயர்க்கென்றார். மேல் எழுவாயுருபிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி கூறுதலால் அதனையொழித்து வினியுருபிற்குப் பெயரின் இறுதியாகிய அகப்பாட்டெல்லையையும் தழுவுதற்குப் பொதுமையினீறா யென்றார்; பொருளையன்றிச் சொல்லையும் வேறுபடுத்துவது எழுவாயுருபிற்கு இல்லாததினாலும் பொருளை வேறுபடுத்துவது எட்டுருபிற்கும் உண்மையாலும் சொல்லையொழித்துப் பொருள் வேற்றுமை செய்வன வேற்றுமையெட்டென்றுங் கூறினார்; வேற்றுமையென்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாயாகிய எட்டுவேற்றுமையுருபிற்கும் வேற்றுமை எனப் பெயர் தந்தது காரியஆகுபெயர்.

"ஏழியன்முறைய தெதிர்முகவேற்றுமை,
வேறெ விளம்பான பெயரதுவிகாரமென்,
றோதியபுலவனு முளனொருவகையா,
னிந்திர னெட்டாம். வேற்றுமையென்றனன்''

என ஆசிரியர் அகத்தியனார் கூறுவராகலின் விளியுருபு படர்க்கைச் சொல்லையும் பொருளையும் முன்னிலைச் சொல்லும் பொருளுமாக வேற்றுமை செய்தலால் அதை எழுவாயுள் அடக்காமல் வேறாக்குதலே தமது துணிவென்று சொல்லவந்தவர் எட்டே வேற்றுமையென்றார்.

"வேற்றுமைதாமே யேழெனமொழிப
விளிகொள்வதன் கண்விளியோடெட்டே''

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஏற்கும்** – தம்மை ஏற்றுக் கொள்ளுதற்கு உரிய, **எ வகை பெயர்க்கும்** – எல்லா வகைப்பட்ட பெயர்கட்கும், **ஈறு ஆய்** – இறுதியில் வருவனவாய், **பொருள்** – (அப் பெயர்களின்) பொருளை, **வேற்றுமை செய்வன** – வேறு படுத்துவனவாகிய, **வேற்றுமை** – வேற்றுமைகள், **எட்டே** – எட்டேயாம்.

தன்னை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்துவதற்குக் காரணமான உருபை 'வேற்றுமை' என்றது, காரியவாகுபெயர்; வேறுபடுத்துதல் – கருத்தாப்பொருளும் செயப்படுபொருளும் கருவிப்பொருளும் முதலாக வேறு பொருள்களைத் தரச் செய்தல்; அது, மேல்வரும் சிறப்புச் சூத்திரங்களிற்

சொல்லப்படும். விளி வேற்றுமையைப் பெயரது விகாரமென்று முதல் வேற்றுமையில் அடக்கி வேற்றுமை ஏழென்பாரது கொள்கையை மறுத்து, அது பெயரின் விகாரமே யாயினும் படர்க்கையை முன்னிலையாக வேறுபடுத்தலுடைமையின் வேறென்றற்கு, 'எட்டே வேற்றுமை' எனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினார்.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:** ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறு ஆய்—தம்மை யேற்றுக் கொள்ளுதற்குரிய எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாய், பொருள் வேற்றுமை செய்வன வேற்றுமை எட்டே—அப்பொயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவாகிய வேற்றுமைகள் எட்டேயாகும். **எ—று.**

பொருளையன்றிச் சொல்லையும் வேறுபடுத்துவது எழுவா யுருபிற்கு இல்லாததாலும், பொருளை வேறுபடுத்துவது எட்டுருபிற்கும் உண்மையாலும் சொல்லையொழித்துப் 'பொருள் வேற்றுமைசெய்வன' எட்டென்றார்.

எட்டாம் வேற்றுமை எழுவாய் வேற்றுமையி லடங்குமெனக் கொண்டு வேற்றுமை ஏழே என்பா ருளராதலின் எட்டென்பதே தமது துணிபென்ப துணர்த்த 'எட்டே' எனத் தெற்றேகாரத்தாற் கூறினார்.தன்னையேற்ற பெயர்ப்பொருளுக்கு வேற்றுமை யென்னுங் காரியத்தைச் செய்யுங் கருத்தாவாகிய உருபை வேற்றுமை யென்றது காரியவாகுபெயர். வேற்றுமை யென்னும் பண்புப்பெயர் பண்பிக்காகாமையாற் பண்பாகுபெயரன்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ—ள்.) ஏற்கும்— (தம்மை) ஏற்றுக் கொள்ளுதற்குரிய, எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்— எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும் இறுதியாய், பொருள் வேற்றுமை செய்வன— அப் பெயர்ப்பொருளை வேற்றுமைப் படுத்துவனவாகிய, வேற்றுமை— வேற்றுமைகள், எட்டே— எட்டேயாகும். (எ—று)

(பொ—ரை.) தம்மை ஏற்ற எவ்வகையான பெயர்களுக்கும் இறுதியாய், அப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துவனவாகிய வேற்றுமைகள் எட்டாம்.

தன்னை யேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்கிற உருபை வேற்றுமை என்றது காரியவாகுபெயர்.

வேறுபடுத்துதல்— கருத்தாப் பொருளும், செயப்படு பொருளும், கருவிப் பொருளும் முதலாக வேறு பொருள்களைத் தாச்செய்தல்; அது, மேல்வருஞ் சிறப்புச் சூத்திரங்களிற் சொல்லப்படும். விளிவேற்றுமையைப் பெயரது விகாரமென்று முதல் வேற்றுமையில் அடக்கி வேற்றுமை ஏழென்பாரது கொள்கையை மறுத்து, அது பெயரின் விகாரமே யாயினும் படர்க்கையை முன்னிலையாக வேறு படுத்த லுடைமையின் வேறென்றற்கு, 'எட்டே வேற்றுமை' எனத் தேற்றேகாரங் கொடுத்துக் கூறினார்.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஏற்கும்** – தம்மை ஏற்றுக் கொள்ளுதற்குரிய, **எவ்வகைப் பெயர்க்கும்** – எவ்வகைப்பட்ட பெயர்களுக்கும், **ஈறாய்** – இறுதியாய், **பொருள்** – அப்பெயர்ப் பொருளை, **வேற்றுமை செய்வன** – வேற்றுமைப் படுத்துவனவாகிய, **வேற்றுமை** – வேற்றுமைகள், **எட்டே** – எட்டேயாகும்.

> தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்யும் உருபை வேற்றுமை யென்றது காரியவாகுபெயர்.

## மோசசு பொன்னையா

வேற்றுமைப் பொருளை ஏற்கும் எல்லா வகைப் பெயர்களுக்கும் ஈற்றின்கண் அமைந்துநின்று, அவ்வப்பெயரின் பொருளை வேறுபடுத்துவன வாகிய வேற்றுமைகள் எட்டே எ–று.

பெயரின் பொருள் வேற்றுமைகளை ஈறு பற்றி வகைப்படுத்தி யுரைத்தல் பண்டைத் தமிழர் மேற்கொண்ட முறையை எனத் தெரிகிறது. தொல்காப்பியர்

**அவைதாம்**
**பெயர் ஐ ஒடு கு**
**இன் அது கண் விளி யென்னும் ஈற்ற,**[1]

என ஈறு பற்றி ஓதுவதால் அது புலனாகின்றது. அவர்கள் ஈறு எனக் கொண்டது பொருளையே யன்றி வடிவையன்று வடிவையன்று என்பது விளியையும் உடன் கூறியதாற் புலப்படாநிற்கும். எனவே, ஐ, ஒடு, கு, இன், அது கண் என்பனவும் அவ்வவ் வேற்றுமைப் பொருளை உணர்த்தும் பொருள் வாய்பாட்டுக் குறிகளேயன்றி, நிலை உருபுகளாகா என்பதும் நுணித்துணரற்பாற்று, தொல்காப்பியர், எழுவாய் வேற்றுமையைப் பெயர்[1] எனவும், ஐயனெப் பெயரிய வேற்றுமை[2], ஒடுவெனப் பெயரிய வேற்றுமை[3], கு எனப் பெயரிய வேற்றுமை[4], இன்னெனப் பெயரிய வேற்றுமை[5], அதுவெனப் பெரிய வேற்றுமை,[6] கண்ணெனப் பெரிய வேற்றுமை[7], விளியெனப்படுப[8] என ஏனைய வேற்றுமை

---

குறிப்புகள்:–

1. தொல். சொல். 64,65
2. தொல். சொல், 71
3. தொல். சொல். 73
4. தொல். சொல். 75
5. தொல்., சொல். 77
6. தொல். சொல் 79
7. தொல். சொல்.. சொல். 118
8. தொல். சொல். 65;71;73;75;77;79;81;118

களையும் பெயரிட்டு வழங்குவதாலும் இது நன்கு தெளிவுறும். எழுவாய், இரண்டாகுது மூன்றாவது என்றிவ்வாறு வழங்குதல் தொல்காப்பியர் அமைத்துக் கொண்ட புதுமுறையாகலாம் எனத் தெரிகிறது. பெயர் ஐ, ஒடு முதலிய குறிகள் தாமும் அவ்வவ் வேற்றுமைப் பொருளைத் தெற்றென உணர்த்தாமை கண்டு, வேற்றுமைப் பொருள் மரபை உணர்த்துவதற்காக, அவ்வவ் வேற்றுமை கொள்ளும் பயனிலைகளை வரை யறுத்தும் நூற்பா செய்துள்ளார்.

ஐ முதலியன பொருள்வாய்பாட்டுக் குறிகளாகத் தொல்காப் பியத்தில் கூறப்பட்டுள்ளன வாதலால், அவ்வவ் வேற்றுமைப் பொருளை அவ்வக் குறிகளே புலப்படுத்தி நிற்கும், பிற புலப் படுத்துவதில்லை எனக் கோடலும் பிழையாகும். தொல் காப்பியர் கண், கால், புறம், அகம் முதலியனவும் பிறவும்[1]கண்ணெனப் பெயரிய வேற்றுமைப் பாலனவாகும் எனக் கூறியுள்ளமையாலும், ஒடு உருபை அவர் உடம்பொடு புணர்த்தி ஆட்சி காட்டியுள்ளமையாலும்,[2] வேற்றுமை மயங்கியலில் ஆனுருபு[3] ஒன்றைக் கூறியுள்ளமையாலும்,

**வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை**
**ஈற்றுநின் றியலுந் தொகைவயின் பிரிந்து**
**பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்**
**எல்லாச் சொல்லும் உரிய வென்ப**[4]

எனக் கூறி எல்லாச் சொல்லையும் வேற்றுமைப் பொரு ளுணர்த்துவனவாகக் கொண்டமையாலும், வேற்றுமை மயங்கியலில் விரியின் கண்ணும், தொகையின் கண்ணும் யாதானுமொரு வேற்றுமைக்குரிய உருபு வேறு பொருளுக்கு உரிமைப்பட்டு மயங்கி நிற்றலையும், ஒன்றற்கு மேற்பட்ட உருபுகள் ஒரு வேற்றுமைப் பொருளை ஏற்று நிற்றலையும்[5] கூறியுள்ளமையாலும் அஃது இனிது விளங்கும். அவ்வாறு ஒன்றற்குரிய உருபு பிறிதொன்றிற்கு உரிமைப்பட்டும், பிறவாறும் மயங்கி வருமிடங்களி லெல்லாம் பொருள் அடிப்படை வழுவாது நின்று மயக்கறுத்து உணர்தல் வேண்டும் என்பாராய்,

---

குறிப்புகள்:–

1. தொல். சொல். 82
2. தொல். எழு; 10, 17, 65
3. தொல். சொல். 74, 97, 103
4.தொல். சொல் 830
5.. தொல். சொல். 104

**யாத னுருபிற் கூறிற் றாயினும்**

**பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்**[1]

எனக் கூறியுள்ளார். இவ்வாற்றான், தொல்காப்பியர் உருபுகள் அடிப்படையில் வேற்றுமைகளை வகைப்படுத்தாமல் பொருள் அடிப்படையிலேயே வகைப்படுத்தினார் என்பது தெளிவுறும்.

இவ்வாசிரியர்,தொல்காப்பியரின் கொள்கையை உடன்பாட்டு,

**யாத னுருபிற் கூறிற் றாயினும்**

**பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்**[2]

என்ற நூற்பாவை மாற்ற மின்றி ஏற்று மொழிந்துள்ளாரேனும், பெயர்க்கு ஈறாய் நின்று பொருளை வேற்றுமை செய்வன எவையோ, அவையே வேற்றுமை; அவை எட்டே எனக் கொள்ளுமாறு அயர்த்துக் கூறுவாரேபோல் கூறியுள்ளார். வேற்றுமை எனப்படுவது உருபு மன்று, உருபுகளின் தொகை என்டு மன்று என்பதை யாவரும் அறிவர். வேற்றுமைப் பொருள் தொடரின் கண்ணே நிலைபெறுவது என்பதும் பெயருக்கும் அதன் வேற்றுமைப் பொருள் நோக்கிய சொற்கும் இடையே வேற்றுமைப் பொருளுக்கு உபகாரப்பட்டுப் பெயரின் ஈற்றின் கண் நிற்பதே உருபாகுமேயன்றி வேறன்று என்பதும்,

**கூறிய முறையின் உருபுநிலை திரியாது**

**ஈறுபெயர்க் காகும் இயற்கை என்ப,**[3]

எனத் தொல்காப்பியர் ஆக்கச்சொற் புணர்த்திக் கூறியுள்ளதனாற் புலனாகும்.

பொருள் வேற்றுமை புலப்படுத்தி நிற்கும் வேற்றுமைகளுள் இயற்பொருள், வினையாற்படும் பொருள், காரணமாய கருவிப் பொருள், ஏற்கும் பொருள், பொருவுப்பொருள், கிழமைப் பொருள், இடப்பொருள் ஆகிய இவை ஏழும் நின்று, பயனிலை ஏற்கும் சிறப்புடையன ஆதலின், அவற்றையே முன்னையோர் வேற்றுமை எனக் கொண்டனர் என்பது,

**வேற்றுமை தாமே ஏழென மொழிப**[4]

என்றதனால் போதரும், பயனிலை யேற்கும் சிறப்பில்லாத வேற்றுமையாகிய விளியையும் ஏற்று அமைத்துக் கோடல்

---

பாட வேறுபாடு:–

1. தொல், சொல். 106.
2. நன். 317
3. தொல். சொல். 49
4. தொல். சொல். 62

தொல்காப்பியர் கொள்கை என்பது,

**விளிகொள் வதன்கண் விளியோ டெட்டே**[1]

என்றதனால் உணரப்படும்.

இனி, வேற்றுமைகளை உருபுகளின் அடிப்படையில் எட்டே என வரையறைப்படுத்தி யுள்ளமை வளர்ச்சியும் வளமைப் பெருக்கமும் சிறந்து மக்களுக்கு இயல் நெறி காட்டி இயங்கும் தமிழ் மொழிக்கு ஏற்றதாக இல்லை.

பொருளுக்குச் சிறப்பிடம் கொடுத்து வளரும் இம்மொழியின் பற்பல இயல் மரபுகளையும் உள்ளடக்கி இயல் இலக்கணம் படைப்பதே மொழியில்புக்குப் பொருந்துவதாகும்.[2]

தொல்காப்பியர் காலத்திற்குப் பின்னர் வழக்கிற் புகுந்த பற்பல வேற்றுமைப் பொருட்களையும் இலக்கண ஆசிரியர்களும், உரையாசிரியர்களும் மேற்கண்ட எட்டனுள் திணித்து முடிக்க முற்பட்டதன் விளைவால், இவ்வாசிரியர் இரண்டு முதல் ஏழு வரையுள்ள வேற்றுமைகள் ஒவ்வொன்றுக்கும் ஒன்றுக்கு மேற்பட்ட பொருளுரைத்தார். அவை ஒரே பொருளின் நுண் பிரிவுகள் எனக் காணப்படாமல், முற்றிலும் வேறானவை களாகவும் காணப்படுகின்றன.

அறிஞர் கால்டுவெல் ‘தமிழ்மொழி’யில் வேற்றுமைகளை எட்டாக வரையறுத்துக் கூறியது பொருத்தமற்றது’[3] எனக் கூறியுள்ளமையுங் காண்க.

வேற்றுமை எட்டு என்ற தொல்காப்பியரே,

**ஐஒடு குஇன் அதுகண்ணென்னும்**
**அவ்வா றென்ப வேற்றுமை உருபே.**[4]

எனவும் கூறியுள்ளமையால் உருபை வேற்றுமை எனல் பண்டை மரபன்று என்பது

---

குறிப்புகள்:–

1. தொல். சொல். 63

2. The number of cases to be recognised in a language (at one particular stage of its development) must be decided by the forms found in that language; case dis tinctions are not notional or logical but exclusively Grammatical categories – (The system of Grammar)

- *Jesperson* P.25;

3. Caldwell's comparative grammar P.254

4. தொல். எழு.114

புலனாகும். இவ்வாசிரியர் காலத்திலும்,

உருபேற் றதனையும் உருபையு முருபு
நோக்கிவந் ததனையும் வேற்றுமை என்பர்.[1]

என்ற கொள்கையர் மிகுதியாக இருந்தனர் போலும்.

(34)

**291. பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.**

பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளி என்று ஆகும் அவற்றின் பெயர் முறை.

peyarē ai āl ku iṉ atu kaṇ
viḷi eṉṟu ākum avaṟṟiṉ peyarmuṟai.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The names and order of cases**

The names and Order of these (eight Cases) are as follows— The Noun itself, ai, al, ku, in, atu, kan and the 'Vocative'.

## ஒப்புமைப் பகுதி

அவைதாம்
பெயர் ஐ ஒடுகு
இன்அது கண்விளி யென்னும் ஈற்ற

(தொல். சொல்.: 64)

காண்டகுபேர் ஐஒடுகு இன்அது கண்விளியென்
றீண்டுரைப்பின் வேற்றுமை எட்டாகும்...

(நேமி.: 40: 1–2)

பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை

(இ.வி.: 194)

---

குறிப்புகள்:–

1. இலக்கணக்.200

**.......................................... இவை**
**பெயர் ஐஆல் குஇன் அதுகண் விளி எட்டே**

(தொ.வி.: 55)

**பெயரை யொடுகுவ் வின்னது கண்விளி**

(மு.வீ.: 508)

**வேற்றுமையா வதிற்பெயர் ஐயால்குவ்வின் னதுகண்**
**விளியுருபின் பெயர்முறையாம்......**

(சுவாமி.: 41:1)

## மயிலை நாதர்

**எ—ன்,** மேல், "எட்டே" என்ற வேற்றுமைகளின் பெயரும் முறையும் உணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:** மேல், பெயர்கள், வேற்றுமை யேற்குமென்றதற்கு ஈண்டு ஓதிய பெயரே பெயர்; இம்முறையே முறை, **எ—று.**

ஏகாரம் அசைநிலை.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ — னின்,** வேற்றுமைகள்தம் பெயரும் முறையும் **உணர்—ற்று.**

**இ — ள்.:** மேல் 'எட்டே வேற்றுமை' (291) என்றவற்றின் பெயர் என்னை கிடக்கைமுறை என்னை எனின் பெயர் முதலாக விளி ஈறாக இங்ஙனம் கூறிய பெயரும் முறையுமாம், **எ — று.**

ஏகாரம் எண். மேல் 'எட்டே' என்ற தொகைக்கு வகை தோன்றப் பெயர் கூறினாரன்றி இவ்வேற்றுமைகளின் பெயர் விகற்பமெல்லாம் கூறப் புகுந்தாரல்லராதலின் அவையெல்லாம் வரும் சிறப்புச் சூத்திரங்களான் உணர்க. இவை இம்முறை நிற்றற்குக் காரணமும் அங்ஙனம் காட்டுதும். ***அன்றியும்,***

***"நாரா யணன்பூ ஒரா யிரத்தைக்***
***கரத்தாற் கொய்தோ ரரற்கே கொடுத்துச்***
***சக்கரச் சிறுமையின் நீங்கி நற்கவை***
***பாற்கடற் கண்ணே பள்ளி கொண்டான்"***

***என்பதனாலும் அறிக.***

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** மேல் எட்டென்ற வேற்றுமைகள் தம் பெயரும் முறையும் கூறுகின்றது.

**இ—ள்.: பெயரே ஐ ஆல் கு இன் அது கண் விளி** – பெயருரும் ஐயுருபும் ஆலுருபும் குவ்வுருபும் இன்னுருபும் அதுவுருபும் கண்ணுருபும் விளியுருபும், **என்றாகும் அவற்றின் பெயர்** – இவ்வகையாற் சொல்லப்படும் அவற்றினது பெயர்கள், **முறை** – இவை நின்ற முறையாம், எ—று.

## விசாகப் பெருமாளையர்

இது, முன்னேயெட்டு வேற்றுமை என்று சொல்லப்பட்டவற்றின் பெயருமுறையு முணர்த்துகின்றது.

**இ—ள்.: அவற்றின்** – முன்னே யெட்டு வேற்றுமை யென்னப் பட்டவைகளினுடைய, **பெயர்**–பெயர்களும், **முறை** – முறையுமாவன, **பெயர்** – பெயரையும், **ஆல்** – ஆலும், **கு** – குவ்வும், **இன்** – இன்னும், **அது** – அதுவும், **கண்**– கண்ணும், **விளி** – விளியும், என்றாகும் என்றிப்படி சொல்லப்பட்டவையாகும், எ—று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வேற்றுமையின் பெயரும் முறையுங் கூறுங் சூத்திரம் யாது?

பெயரே ஐ ஆல் கு இன் அது கண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.

(பெயர் ஐ ஆல் கு இன் அது கண்
விளி என்று ஆகும் அவற்றின் பெயர் முறை.)

இ—ள்.: முன்னே எட்டு வேற்றுமையெனப் பட்டவைகளினுடைய பெயர்களுங் கிடக்கை முறையுமாவன பெயரும் ஐயும் ஆறுங்குவ்வும் இன்னும் அதுவுங் கண்ணும் விளியும் என்றிப்படிச் சொல்லப்பட்டவை யாகும், எ—று.

## முகவை இராமானுச கவிராயர்

இது, அவ்வேற்றுமைகளின் பெயரும் முறையுங் கூறுகின்றது.

இ—ள்.: மேல் எட்டே வேற்றமை என்றவற்றின் பெயரும் அவற்றின் கிடக்கை முறையும் இங்கே பெயர் முதலாக விளி யீறாகக் கூறிய பெயரும் இங்கே நின்ற முறைமேயாம், எ—று.

ஏகாரம் எண். மேல் எட்டேயென்ற தொகைக்கு வகை தோன்றக் கூறியதன்றி அவ் வேற்றுமைகளின் பெயர் விகற்பங் கூற வந்தவர் அல்லர்; அவை யெல்லாமினி வருஞ் சிறப்புச் சூத்திரங்களாலுணர்க. இவை யிம்முறை நிற்றற்குக் காரணம்,

**"பரம சிவனோர் வரத்தைக் கொடுத்தே**
**நாரா யணனால் அசுரனுக் கஞ்சித்**
**தோலிட்ட சிறுமையினீங்கித் தனதுவப்**
**பாற்கயி லைக்கட் சென்றான்"**

எனக் கூறிய இதினாலுமுணர்க. அவற்றின் பெயர்முறை யிவையாமென முடிக்க.

**"அவைதாம்**

**பெயரை ஒடுகு**
**இன்னது கண்விளி யென்னு மீற்ற"**
என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– அவற்றின்** – அவ்வேற்றுமைகளினுடைய, **பெயர்** – பெயர்களும், **முறை** – முறையுமாவன; – **பெயரே** – பெயரும், **ஐ**– ஐயும், **ஆல்** – ஆலும், **கு** – குவ்வும், **இன்** – இன்னும், **அது** – அதுவும், **கண்** – கண்ணும், **விளி**–விளியும், **என்று ஆகும்** – என்று இப்படிச் சொல்லப்பட்டவையாம்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: அவற்றின் பெயர் முறை** – முன்னே எட்டு வேற்றுமை யெனப்பட்டவைகளினுடைய பெயர்களுங் கிடக்கை முறையுமாவன, **பெயர் ஐ ஆல் கு இன் அது கண் விளி என்று ஆகும்** – பெயரும் ஐயும் ஆலுங் குவ்வும் இன்னும் அதுவுங் கண்ணும் விளியும் என்றிப்படிச் சொல்லப்பட்டவையாகும், எ – று.

## வ. குமாரசாமிப்புலவர்

**இ–ள் அவற்றின் பெயர்முறை** – முன்னே எட்டு வேற்றுமையெனப் பட்டவைகளினுடைய பெயர்களுங் கிடக்கை முறையுமாவன, – **பெயர் ஐ ஆல் கு இன் அது கண் விளி என்று ஆகும்** – பெயரும் ஐயும் ஆலுங் குவ்வும் இன்னும் அதுவும் கண்ணும் விளியும் என்றிப்படிச் சொல்லப்பட்டவையாகும். **(எ–று).**

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: அவற்றின்** – அவ் வேற்றுமைகளினுடைய, **பெயர்** – பெயர்களும், **முறை** – முறையுமாவன:– (1) **பெயரே** – பெயரும், (2) **ஐ** – ஐயும், (3) **ஆல்** – ஆலும், (4) **கு**– குவ்வும், (5) **இன்** – இன்னும், (6) **அது** – அதுவும், (7) **கண்** – கண்ணும், (8) **விளி** – விளியும், **என்று ஆகும்; எ–று.**

முதல் வேற்றுமை வேறு உருபு ஏற்காமல் பெயர் மாத்திரமாய் நிற்றலால் பெயர் வேற்றுமை யென்றும், எட்டாம் வேற்றுமை விளித்தற்பொருள தாதலால் விளிவேற்றுமை யென்றும் பெயர்பெறும்; விளித்தல் – அழைத்தல்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.** அவற்றின் பெயர் முறை–முன்னே எட்டு வேற்றுமையெனப் பட்டவை களினுடைய பெயர்களுங் கிடக்கை முறையுமாவன, பெயர் ஐ ஆல் கு இன் அது கண் விளி என்று ஆகும்–பெயரும் ஐயும் ஆலுங் குவ்வும் இன்னும் அதுவுங் கண்ணும் விளியும் என்றிப் படிச் சொல்லப்பட்டவையாகும். **எ–று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ-ள்.) அவற்றின்- முன்னே எட்டுவேற்றுமை என்னப் பட்டவைகளிலுடைய, பெயர் முறை- பெயர்களும் முறையுமாவன, பெயர்- பெயரும், ஐ- ஐயும், ஆல்- ஆலும், கு- குவ்வும், இ- இன்னும், அது- அதுவும், கண்- கண்ணும், விளி- விளியும், என்று ஆகும்- என்று இப்படிச் சொல்லப்பட்டவையாகும். (எ-று)

(பொ-ரை.) அவ் வேற்றுமைகளுடைய பெயர்களும், முவையுமாவன, பெயர், ஐ, ஆல், கு, இன், அது, கண், விளயென்பனவாம்.

முதல்வேற்றுமை வேறுஉருபு ஏற்காமல் பெயர்மாத்திர மாய் நிற்றலால், பெயர்வேற்றுமை என்றும், எட்டாம்வேற்றுமை விளித்தற் பொருளாதலால், விளிவேற்றுமை யென்றும் பெயர் பெறும். (விளித்தல்-அழைத்தல்.)

## கா. நமச்சிவாய முதலியார்

**அவற்றின்** - முன்னே எட்டு வேற்றுமை யென்னப் பட்டவைகளின், **பெயர்** - பெயர்களும், **முறை** - முறையுமாவன, **பெயர்** - பெயரும், **ஐ** - ஐயும், **ஆல்** - ஆலும், **கு** - குவ்வும், **இன்** - இன்னும், **அது** - அதுவும், **கண்** - கண்ணும், **விளி** - விளியும், என்று **ஆகும்** - என்று இப்படிச் சொல்லப்பட்டவையாகும்.

## மோசசு பொன்னையா

முன்னைய நூற்பாவில் எட்டே எனப்பட்ட வேற்றுமைகள் முறையே பெயர், ஐ.ஆல்.,கு, இன். அது கண், விளி எனப் பெயரும் எண்முறையும் பெறும் எ-று.

இவ்வாசிரியர் கொண்ட பெயரும் முறையும் பண்டு தொட்டு வழங்கி வந்தனவே என்பது தொல்காப்பியத்தால் போதரும். தொல்காப்பியர் ஒடு என வழங்கிய வேற்றுமையை இவ்வாசிரியர் ஆல் வழங்குகின்றார்; அஃதொன்றே வேறுபாடாம் என அறிக.

**(36)**

## 292. ஆற னுருபு மேற்குமவ் வுருபே.

**ஆறன் உருபும் ஏற்கும் அவ் உருபு ஏ.**

āṟaṉ urupum ēṟkum av urupu ē.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The six casal signs added to the nominative**

That 'Noun itself' may receive all the signs of the (next) six cases.

## ஒப்புமைப் பகுதி

ஆற னுருபு மேற்குமவ் வுருபே

(இ.வி. 195)

ஆறனுருபு மேற்குமவ் வுருபே

(மு.வீ.: 509)

அதனொடு ஐம் முதல் ஆறும் ஏற்கும்

(தொ.வி.: 63)

## மயிலை நாதர்

எ – ன், எய்தாதது எய்துவித்தல் நுதலிற்று.

இ–ள்.: மேல், பெயர்கள் வேற்றுமையை ஏற்குமென்றார்; அவையேயன்றி ஆறனுருபும் [1]அவ்வுருபுகளை யேற்கும், எ – று.

அஃதேல், பெயரோடு இதற்கு வேற்றுமை யாதோவெனின், உருபேற்புழியும் தன் இருகிழமைப்பொருளினும் திரியாது நிற்றலென்க.

[2]உம்மை எண்ணும்மை.

வ – று.:

சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தனதன்கணென வரும்.

விளியேலா தெனினும் உருபேற்றலிற் குறைபட்டதாகாது; சில உறுப்பிற் குறைப்பட்டாரும் மக்களெனப்படுவர், அதுபோல வென்பது.பெயர்வேற்றுமையும் ஏனையுருபுகளையும் ஏற்குமால், அஃது ஒழித்த தென்னையோ வெனின், பெயர் எழுவா யுருபாவது தன்பயனிலை தோன்ற நின்றகாலையன்றே; ஆண்டுப் பிறவுருபுகளையேலாது; ஏற்பின் தன் பொருண் மையும், ஏற்கும் உருபின் பொருண்மையும் ஒருங்குடைத்தாதல் வேண்டும்; அதனாற் பயனிலைகொள்ளாது நின்ற பெயரே உருபுகளை ஏற்குமெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ–னின், *மேற்கூறிய வேற்றுமையுருபு எட்டனுள் எழுவாயுருபே ஏனைய உருபுகளை ஏற்கும் என்பது உணர்–ற்று.*

---

பாட வேறுபாடு:–

1. உருபுகளேற்கும்.
2. உம் எண்ணும்மை

*இ–ள்.: எழுவாய் வேற்றுமையாவது பெயர் மாத்திரையாய்த் தோன்றி நிற்கும்நிலை என்பவாகலின் அவ்வெழுவாயாய் நின்ற உருபே ஐம்முதலிய ஆறு வேற்றுமைகளின் உருபும் ஏற்கும், எ – று.*

*எனவே,விளியுருபாவது பெயரது விகாரமே யாகலின் அவ்வெழுவாயுருபின் வேறல்ல எனவும்படும் என்பதுபற்றி ஆறன்உருபும் ஏற்குமவ்வுருபே என்றார். இங்ஙனம் ஆறனுருபும் என அன்சாரியை தவிர்வழி வந்தமையால் செய்யுள் விகாரம்.*

*இனி இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாது பெயரே யன்றி ஆறாம் வேற்றுமையுருபும் அவ்வுருபுகளை ஏற்கும் எனப் பொருள்கொண்டு சாத்தனது, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தன தனது, சாத்தனதன்கண், சாத்தனதே என உதாரணம் காட்டுவாரும் உளர். உருபேற்றல் பெயர்க்கே உரிய இலக்கணமன்றி வினை முதலியவற்றிற்கு உரிய இலக்கணமன்றாம் ஆதலானும்,*

*'பெயர்வழித் தம்பொருள் தரவரும் உருபே' (241)*

*என்றும்,*

*'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும் ஈறாய்' (291)*

*என்றும் வரையறை கூறிப் போந்தமையானும் ஈண்டு இடைச்சொல் உருபு ஏற்கும் எனின் மாறுகொளக் கூறலாமாதலானும், சாத்தனதை சாத்தனதால் என்புழிச் சாத்தனது என்பது குழையது கோட்டது என்றாற் போலத் துவ் விகுதியும் அகரச் சாரியையும் பெற்று உருபேற்று நின்ற வினைக்குறிப்புப் பெயராமாதலானும், அன்றியும் உருபேற்புழிப் பெயர்போலத் தனித்து நின்று உருபேற்றல் வேண்டும் ஆதலானும், அதனை அதனால் என உருபேற்கும் எனின் சுட்டுப்பெயர் உருபேற்றதாமன்றி உருபு உருபு ஏற்றதன்றாம் ஆதலானும் அது பொருந்தாது என்க.*

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** உருபின்மேலும் உருபு பெறுமெனக் கூறுகின்றது.

**இ–ள்.: ஆறனுருபும்** – மேற் பெயர்கள் வேற்றுமை ஏற்கும் என்றார். அப்பெயர்களன்றி ஆறனுருபும், **ஏற்கும் அவ்வுருபே** – அவ்வுருபுகளை ஏற்று நிற்கும், **எ–று.**

**உ–ம்.:**

சாத்தனது, சாத்தனதனை, சாத்தனதனால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தனதன்கண் என வரும்.

விளியேலாதேனும் உருபேற்றலிற் குறைப்பட்டதாகாது; சில உறுப்பிற் குறைபட்டாலும் மக்கள் என்பர்; அது போலவெனக் கொள்க. பெயர் வேற்றுமையும் ஏனை உருபுகளையும் ஏற்குமால் அது ஒழித்தது என்னையோ வெனின் பெயர் எழுவா யுருபாவது தன் பயனிலை தோன்றுகின்றகாலை யன்றே; ஆண்டுப் பிற உருபுகளை ஏலாது. ஏற்பிற் றன் பொருண்மையும் ஏற்கும் உருபின் பொருண்மையும் ஒருங்குடைத்தாதல் வேண்டும்; அதனால் பயனிலை கொள்ளாது நின்ற பெயரே உருபுகளை ஏற்குமெனக் கொள்க. ஆகலின் ஆறாம் வேற்றுமையுருபு ஒழிந்த உருபுகளை ஏற்புழித் தன் இருகிழமைப் பொருளினும் திரியாது நிற்குமெனக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன்னே சொல்லப்பட்ட உருபுகளெட்டனுள் எழுவாயுருபு மற்றை யுருபுகளை யேற்குமென்பது உணர்த்துகின்றது.

**இ—ள்.: அவ்வுருபே** – பெயராய் நிற்கின்ற அவ்வெழுவாயுருபே, **ஆறனுருபும்** – ஐம்முதலாகிய வாறு வேற்றுமை யுருபுகளையும், **ஏற்கும்** –ஏற்கும், **எ—று.**

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

பெயர்மாத்திரமன்று உருபேற்ற பெயருமொன்று ஆறுருபுகளையு மேற்குமெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

ஆற னுருபு மேற்கு மவ் வுருபே.

(ஆறனுருபும் ஏற்கும் அவ்வுருபே.)

**இ—ள்.:** பெயரேயன்றி ஆறனுருபும் அவ்வுருபுகளை ஏற்கும், **எ—று.**

**வ—று.** சாத்தனதனை சாத்தனதனால் சாத்தனதற்கு சாத்தனதனின் சாத்தனதனது சாத்தனதன்கண் என வரும். **ஏற்பழிக்கோடலான்** எழுவாயும் விளியும் ஒழித்து ஏனையவே கொள்க. பெயரோடு இதற்கு வேற்றுமை, உருபு ஏற்புழியுந் தன் இரு கிழமைப்பொருளினுந் திரிபின்றி நிற்றலாகும். பெயர்வேற்றுமையும் ஏனையுருபுகளையும் ஏற்குமால் அஃது ஒழிந்த தென்னையெனின் அஃது ஏனையுருபுகளை ஏலாமைமேற் பெறப்படும்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** எழுவாயுருபு மற்ற வுருபுகளையு மேற்கு மென்ப துணர்த்திற்று.

**இ—ள்.: ஆறனுருபு மேற்கும்** – ஐ முதலிய ஆறு உருபுகளையுங் கொண்டு நிற்கும், **அவ்வுருபு** – அந்த எழுவாயுருபு, **எ—று.**

எனவே, விளியுருபு பெயரது விகாரமே யாதலால், எழுவாயுருபின் வேறன்றென்பது பற்றி யதனை நீக்கி,

ஆறுருபுமேற்கு மென்றாரென்பதாயிற்று.

இனி யிச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள் கொள்ளாமல் ஆறாம் வேற்றுமையுருபும் அவ்வுருபுகளை யேற்குமெனப் பொருள்கூறிச் சாத்தனதை சாத்தனதால் சாத்தனதற்கு சாத்தனதனின் சாத்தனதனது சாத்தனதன்கண் என உதாரணங் காட்டுவாருமுளர். உருபேற்பது பெயர்க்குரிய இலக்கணமே யன்றி வினை முதலியவற்றிற்கு அன்றாதலாலும், 'பெயர்வழி வருமுரு'பென்றும், 'எவ்வகைப் பெயர்க்கு மீறா'யென்றும் வரையறை கூறியதினாலே இங்கே, இடைச்சொல் உருபேற்றுகு மெனினது மாறுகொளக் கூறலாம் ஆதலாலும், சாத்தனது – சாத்தனதை என்பன, குழையது கோட்டது என்றாற் போலத் துவ் விகுதியும் அகரச் சாரியையும் பெற்று நின்ற குறிப்பு வினையாலணையும் பெயராமாதலாலும், பெயர் போலத் தனித்து நின்று உருபேற்றல் கூடாமையாலும், அது பொருந்தா தென்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **உருபே** – (பெயர்மாத்திரையாய் நிற்கின்ற) அவ்வெழுவாயுருபு, **ஆறன் உருபும்** – (ஐமுதலிய) ஆறு வேற்றுமையுருபுகளையும், **ஏற்கும்** – ஏற்றுவரும்.

குறிப்பு:–

விளியுருபு பெயரினுடைய விகாரமேயாதலால் அதனை நீக்கி, மற்றைய ஆறுருபுகளையும் ஏற்குமென்றார் என்க. இனி, இச்சூத்திரத்திற்கு "பெயரேயன்றி ஆறுருபும் அவ்வுருபுகளை ஏற்கும்" என்று பொருளுரைப்பர் இலக்கணவிளக்க நூலுடையார்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:** அவ்வுருபே–பெயராய் நிற்கும் அவ்வெழுவாயுருபே, **ஆறனுருபும் ஏற்கும்** – ஐமுதலாகிய ஆறு வேற்றுமையுருபுகளையும் ஏற்கும், எ–று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். அவ்வுருபே** – பெயராய்நிற்கும் அவ்வெழுவாயுருபே – **ஆறனுருபும் ஏற்கும்** – ஐம்முதலாகிய ஆறு வேற்றுமையுருபுகளையும் ஏற்கும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: அ உருபே** – (பெயர் மாத்திரமாய் நிற்கின்ற) அவ்வெழுவாயுருபே,

**ஆறன் உருபும்** – ( ஐ முதலாகிய) ஆறு வேற்றுமை யுருபுகளையும், **ஏற்கும்** – ஏற்று வரும்; எ–று.

விளியுருபு பெயரின் விகாரமே யாதலால், அதனை நீக்கி, மற்றை ஆறு உருபுகளையும் ஏற்கு மென்றாரென்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** அவ்வுருபே–பெயராய் நிற்கும் அவ்வெழுவாயுருபே, ஆறனுருபும் ஏற்கும்–ஐம்முதலாகிய ஆறு வேற்றுமயுருபுகளையும் ஏற்கும். எ–று.

உ–ம்.:–

இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கொள்ளாமல் 'ஆறாம்வேற்றுமையுருபும் ஐ முதலிய ஆறுருபுகளையும் ஏற்கும்' என்று பொருள் கொண்டு, சாத்தனதை, சாத்தனதால், சாத்தனதற்கு, சாத்தனதனின், சாத்தனதனது, சாத்தனதன் கண்'–என உதாரணம் காட்டினார் மயிலைநாதல். உருபேற்பது பெயரேயாதலானும், சாத்தனது என்பது உருபேற்குமிடத்து, துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்றுவந்த குறிப்பு வினையாலணையும் பெயராய் நின்று உருபேற்குமென்பதன்றி அது என்னும் உருபிடைச்சொல் உருபேற்குமெனல் பொருந்தாதாதலானும் இவ்வுரை ஒவ்வாதென்றறிக.

## கா. நமச்சிவாய முதலியார்

**அவ்வுருபே** – பெயராய் நிற்கின்ற அவ் வெழுவாயுருபே, **ஆறு உருபும்** – ஐம் முதலாகிய ஆறு வேற்றுமை யுருபுகளையும், **ஏற்கும்** – ஏற்கும்.

அன், வேண்டாவழி வந்த சாரியை.

## மோசசு பொன்னையா

வேற்றுமைப் பொருளை ஏற்கும் எல்லா வகைப் பெயர்களுமே யல்லாமல், ஆறாவதன் உருபாகிய அது என்பதும், ஐ முதலிய உருபுகளை ஏற்கும் எ–று

எ–டு.:–

**மரத்தது, மரத்ததை, மரத்ததால், மரத்ததற்கு**
**மரத்ததனின், மரத்தது, மரத்ததின்கண்**

இறந்தது தழீஇய எச்ச உம்மையால் ஆறன் உருபு உருபேற்றல் பெயர் உருபேற்றல் போன்று வழக்கில் பயின்று வருவதன்று என்பதும், அஃது அஃறிணை ஒருமைப்பால் ஒன்றிலேயே பயின்றுவரும் என்பதும் உணர்த்தப்பட்டது.

சுட்டுப்பெயர்களும், மாற்றுப்பெயர்களும், கொள் பெயர்களும் உடைமைப் பொருளுடன் பொருந்தி நின்றே வேற்றுமைப் பொருளை ஏற்கின்றன. இயற்பெயர்களும்,

**கிழவன் றன்னொடுங் கிழத்தி தன்னொடு**
**நற்றாய் கூறன் முற்றத் தோன்றாது**

என்றிவ்வாறு தற்சுட்டு இடப்பெயர்களைப் பெற்று உடைமைப் பொருளுடன் நின்று வேற்றுமைப் பொருளை ஏற்று வழங்குதலும், ஐம்பான்மை விகுதி பெற்ற பெயர்களும் அவ்வாறே உடைமைப் பொருளுடன் வேற்றுமைப் பொருளை ஏற்றலும் வழக்கிற் கண்ட உண்மைகளேயாம்.

மகர வீற்றுப் பால்பகா அஃறிணைப் பெயர்களும், மாடு, ஆடு முதலிய பிற சாதி ஒருமைகளும் ஒன்றன்பாலைச் சுட்டி நின்று உடைமைப் பொருள்நிலை யெய்தி, முறையே அத்தும், அதுவும் பெற்றதன் பின்னரே வேற்றுமை உருபுகளை ஏற்கும் மரபு இருந்தது, நாளடைவில் ஒப்புமைப் போலியால் முன்னவை அத்துடன் அதுவையும் பெற்று உருபேற்கும் வழக்கு உண்டாகி இருக்கலாம். அவ்வழக்கைக் கண்ட தொல்காப்பிய உரை யாசிரியர்களிற் தெய்வச்சிலையார் நீங்கலாக, மற்றையோர்,

**பிறிதுபிறி தேற்றலு முருபுதொக வருதலு**
**நெறிபட வழங்கிய வழிங்மருங் கென்ப,**

என்ற தொல்காப்பிய நூற்பாவின் உரையில், பிரிது, பிறிதேற்றல், என்பதனை 'ஆறனுருபு ஏனையுருபேற்கும்' எனப் பொருளுரைத்து, சாத்தனதனை, சாத்தனதனோடு என எடுந்துக்காட்டிஞ் சென்றனராக; இவ்வாசிரியரும் அவர்வழி நின்று இவ்வாறு நூற்பா செய்தார். இந்நூற்பாவும், 'எழுவாயாய் நின்ற உருபே ஐம் முதலிய ஆறு வேற்றுமைகளி னுருபு மேற்கும்' என உரை கூற இடந்தரவில்லை.

எனவே, குழையது, கோட்டது, மாட்டது என்றிவ்வாறு அகரச் சாரியையும் துவ்விகுதியும் பெற்று வழங்கும் குறிப்புப் பெயர்கள் உருபேற்றலையே ஆறன் உருபு நின்று உருபேற்றது எனக் கொண்ட மயக்கமே இதற்குக் காரணம் என்பதை உணர்ந்த கொள்க.

(36)

## 293. நீயிர் நீவிர்நா னெழுவா யலபெறா.

**நீயிர் நீவிர் நான் எழுவாய் அல பெறா.**

nīyir nīvir nān eḻuvāy alaperā.

### இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Indeclinable nouns**

The (three) Nouns 'niyir', nivir, and nân are indeclinable.

## ஒப்புமைப் பகுதி

**நீயிர் நீவிர்நா னெழுவா யலபெறா**

(இ.வி.: 196)

**நீயிர் நீவிர்நா னெழுவா யலபெறா**

(மு.வீ.: 510)

## மயிலை நாதர்

**எ – ன்**, மேல், "ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீறாய்" என்றார்; எனவே ஏலாப் பெயருமுள வென்பதுமாயிற்று; அவை இவையென்பது உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:**இம் [1]மூன்றுபெயரும் எழுவாயுருபினை யொழிய ஏனை யுருபுகளை யேலா, **எ – று.**

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்**, மேல் 'ஏற்கும் எவ்வகைப் பெயர்க்கும்' (291) என்றமையின் ஏலாப்பெயரும் உள என்றாராதலின் அவற்றுள் இரண்டாவது முதலிய ஏழுருபும் ஏலாதன இவை என **உணர்–ற்று.**

**இ–ள்.:** இம்மூன்று பெயரும் எழுவாய் வேற்றுமையினை யன்றி ஏனை ஏழு வேற்றுமையினையும் ஏலா, **எ – று.**

எனவே, நீர் என்னும் ஈரெழுத்தொருமொழி அதுபோல ஈரெழுத்தொருமொழியாகிய நும் எனவும், யான் என்னும் யகர முதன்மொழி யகரத்தோடு பிறப்பொத்த எகர முதன்மொழி யாகிய என் எனவும் திரிந்து ஐ முதலிய ஆறுருபும் ஏற்றாற் போல, நீயிர் நீவிர் நான் என்னும் மூன்றும் அங்ஙனம் வாராமையின் நும் என் எனத் திரிதலும் அவ்வுருபுகளை ஏற்றலும் இல என்பதாயிற்று.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்**, மேல் "ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மீறாய்" என்றார்; எனவே ஏலாப் பெயர்களும் உள என்பதாயிற்று; அவை இவையெனக் கூறுகின்றது.

**இ–ள்.: நீயிர் நீவிர் நான்** – நீயிர் நீவிர் நான் என்னும் இம் மூன்று பெயரும், **எழுவாயல பெறா** – எழுவாய் உருபினையொழிய ஏனை உருபுகளை ஏலாது, **எ–று.**

**உ–ம்.:** நீயிர் வந்தீர், நீவிர் வந்தீர், நான் வந்தேன் என வரும்.

---

**பாட வேறுபாடு:–**

**1. மூவகைப் பெயரும்**

## விசாகப் பெருமாளையர்

**இது**, ஏற்கு மெவ்வகைப் பெயர்க்கு மென்றதனால் ஐம் முதலாகிய வுருபுகளை யேலாத பெயரிவை யென வுணர்த்துகின்றது.

இ–ள்.: **நீயிர், நீவிர் நான்** – நீயிர் முதலாகிய விம்மூன்று பெயர்களும், **எழுவாயல்**–எழுவாயல்லாத வேற்றுமைகளை, **பெறா**–ஏலாவாம், **எ–று**.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

"ஏற்குமெவ்வகைப்பெயர்க்கும்" என்னுஞ் சூத்திரத்தில் ஏற்குமென்றதனால் உருபு ஏலாதபெயரு முண்டென்றாராயிற்று: அவை இவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

நீயிர் நீவிர் நா னெழுவா யலபெறா.

(நீயிர் நீவிர் நான் எழுவாய் அல பெறா.)

**இ–ள்.**: நீயிர் முதலாகிய இம்மூன்று பெயர்களும் எழுவாயல்லாத வேற்றுமைகளை ஏலாவாம். **எ–று**.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, மேலேற்கு மெவ்வகைப் பெயர்க்கு மென்றதினாலே ஏலாப் பெயர்களுமுள வென்றார் அவை இவை யென்பதுணர்த்திற்று.

இ–ள்.: **நீயிர் நீவிர் நான்** – இம்மூன்று பெயர்களும், **எழுவாயல பெறா** – எழுவாய் வேற்றுமையை யன்றி மற்ற ஏழுருபுகளையுங் கொள்ளா, **எ–று**.

எனவே யிம்மூன்று பெயரும் யான் நீ என்பன போலத் திரிந்து நின்று முருபுகளை யேலா வென்பதுமாயிற்று. நீயிர் நீவிர் நான் பெறாவென முடித்துக் கொள்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– நீயிர் நீவிர் நான்** – 'நீயிர்' 'நீவிர்' என்னும் முன்னிலைப் பெயர்களும் 'நான்' என்னும் தன்மைப்பெயரும், **எழுவாய் அல** – எழுவாயல்லாத மற்றைய எழுவேற்றுமையுருபுகளை, **பெறா** – பெற்று வாராவாம்.

குறிப்பு:–

'நும்மை' 'நும்மால்' 'உம்மை' 'உம்மால்' முதலியவற்றின் முதல்வேற்றுமை. 'நீர்' என்பதும், 'என்னை' 'என்னால்' முதலியவற்றின் முதல்வேற்றுமை யான் என்பதும் அறிக.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: **நீயிர் நீவிர் நான்** – நீயிர் முதலாகிய இம் மூன்று பெயர்களும், **எழுவாய் அல பெறா** – எழுவாயல்லாத வேற்றுமைகளை ஏலாவாம், **எ–று**.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். நீயிர் நீவிர் நான்** — நீயிர்முதலாகிய இம்மூன்று பெயர்களும், **எழுவாய் அல பெறா** — எழுவாயல்லாத வேற்றுமைகளை ஏலாவாம். **எ—று.**

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.: நீயிர் நீவிர் நான்** — நீயிர் நீவிர் என்னும் முன்னிலைப் பெயர்களும் நான் என்னும் தன்மைப் பெயரும், **எழுவாய் அல** — எழுவாயல்லாத மற்றை ஏழு வேற்றுமை யுருபுகளை, **பெறா** — பெற்றுவராவாம்; **எ—று.**

நும்மை நும்மால், உம்மை உம்மால் முதலியன — நீர் என்னும் முன்னிலைப்பெயரின் வேற்றுமைகளாதலாலும், என்னை என்னால் முதலியன — யான் என்னும் தன்மைப்பெயரின் வேற்றுமைகளாதலாலும், நீயிர் நீவிர் என்பவையும் நான் என்பதும் — எழுவாய் வேற்றுமை யொன்றையே யன்றி மற்றை வேற்றுமைகளை ஏலா வாயின என அறிக. (யாம் என்பது — எம் என்று வருதல்போல, யான் என்பது — என் என்று வரும்; அவ்வாறே நாம் என்பது நம் என்று வருதல் போல, நான் என்பது — நன் என வர வேண்டும்; அங்ஙனம் வராமையால், நான் என்பது — பிற வேற்றுமைகட்கு வராமையை அறிக.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:** நீயிர் நீவிர் நான்—நீயிர் முதலாகிய இம் மூன்று பெயர்களும் எழுவாய் அல பெறா—எழுவாயல்லாத வேற்றுமைகளை ஏலாவாம். **எ—று.**

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ—ள்.) நீயிர் நீவிர் நான்— நீயிர் முதலாகிய இம் மூன்று பெயர்களும், எழுவாய் அல— எழுவாய் அல்லாத வேற்றுமைகளை, பெறா—ஏறாவாம். (எ—று)

(பொ—ரை.) நீயிர், நீவிர் நான் என்னும் மூன்று பெயர்களும், எழுவாய் வேற்றுமை அல்லாத பிறவேற்றுமைதளை ஏலா.

> எனவே, நீர் என்னும் ஈரெழுத்து ஒருமொழி, அவ்வீரெழுத் தொரு மொழியைப் போலவே ஈரெழுத் தொருமொழியாகிய நும் எனவும், யான் என்னும் யகர முதன்மொழி யகரத்தோடு பிறப்பொத்த எகர முதன்மொழியாகிய என் எனவும் திரிந்து ஐ முதலிய ஆறுருபு மேற்றாற்போல, நீயிர் நீவிர் நான் என்னும் மூன்று பெயரும் திரிந்து வாராமையின், நும், என் எனத்திரிதலும், அவ்வுருபுகளை யேற்றலும் இலவென்ப தாயிற்று.

## கா. நமச்சிவாய முதலியார்

**நீயிர் நீவிர் நான்** — நீயிர் நீவிர் நான் ஆகிய இம்மூன்று பெயர்களும், **எழுவாய் அல** — எழுவா யல்லாத வேற்றுமைகளை, பெறா — ஏலாவாம்.

## மோசசு பொன்னையா

நீயிர், நீவிர், நான் என்னும் மூன்று இடப்பெயர்களும் எழுவாய் வேற்றுமைப் பொருளாகிய பெயரின் தோன்று நிலைப் பொருளை யன்றிப் பிற பொருள் வேற்றுமைகளைப் பெறுவதல்லை எ–று.

உருபு புணரியலில் இவ்வாசிரியர்

**தான்தாம் நாம் முதல் குறுகும் யான்யாம்**

**நீநீர் என்எம் நின்நு மாம்....**

என நூற்பா செய்து நீர் நும் எனவும், யான் என் எனவும் திரியும் என்றார் நீம் + இர் = (1) , நீவிர் ; (2) நீயிர் நீர் எனத்திரிதல் இயல்பாதலால்3, நீவிர், நீயிர் என்பனவும் நும் என நின்று வேற்றுமைப் பொருளை ஏற்றன எனல் பிழைபடாது ஆதலானும், யான் என்பதன் மாற்று வடிவமாக அமைந்த நான் என்பது ஒப்புமைப்போலியாக வழங்குவதாதலின் அதுவும் என் என நின்று வேற்றுமைப் பொருளை ஏற்கும் எனல் பிழைபடாது3 ஆதலானும், இந்நூற்பாவின் பொருளை ஏற்ற பெற்றி மாற்றியமைத்து ஆய்ந்து தெளிக. குறில்கள் சொற்களின் முதற்கண் வருங்கால் ஒலியழுத்தம் பெற்று நீண்டு ஒலிப்பதே மொழி இயல்பன்றி, சொற்களின் முதற்கண் நெட்டுயிர் நலிந்து குற்றுயிராதல் மொழியியல்பாகாது ஆதலின், இவ்வாசிரியர் கூறியுள்ள திரிபு முறையை மாற்றியுரைத்துக் கொள்வதே ஏற்புடையதாம், தொல்காப்பயிர் 'நும்மின் திரி பெயர்' என நீயிர் என்பதனைக் குறிப்பிட்டது மொழி இயல்புக்கு ஏற்ற கூற்றாகும் என்பதையும் அறிக.

**(37)**

**294. அவற்றுள்,**
**எழுவா யுருபு திரிபில் பெயரே**
**வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.**

அவற்றுள்,
எழுவாய் உருபு திரிபு இல் பெயரே
வினை பெயர் வினாக்கொளல் அதன் பயனிலை ஏ.

avarruḻ,
eḷuvāy urupu ṭiripu il peyarē
vin̲aipeyar vin̲ākkoḻal aṭan̲ payan̲ilai ē.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The first or nominative case**

Of the eight cases,—the Nominative is the unchanged 'Noun itself', itself predicate is a verb, noun to an interrogative.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே
(தொல். சொல்.: 65)

அவற்றுள்
எழுவா யுருபு திரிவில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே
(இ.வி.: 197)

எழுவா யுருபு பெயர்தோன்று நிலையே
(மு.வீ.: 511)

வியங்கோள் வினைநிலை வினாவே பெயர்பண்பு
அதன்பொரு ளென்மனா ரறிந்திசி னோரே
(மு.வீ.: 512)

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே
(தொல். சொல்.: 66)

பெயர் எழுவாய் வேற்றுமையாம் பின்பதுதான் ஆறு
பயனிலையும் ஏற்கப் படுதல் – கயல்விழியாய்
ஈற்றின் உருபாலும் ஏற்றல்முக் காலமும்
தோற்றாமை நிற்றல் துணிபு

(நேமி.: 41)

அவற்றுள்
எழுவா யுருபு திரிவில் பெயரே
வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே

(இ.வி.: 197)

எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப

(இ.வி.: 198)

எழுவா யுருபு பெயர்தோன்று நிலையே

(மு.வீ.: 511)

வியங்கோள் வினைநிலை வினாவே பெயர்பண்பு
அதன்பொரு ளென்மனா ரறிந்திசி னோரே

(மு.வீ.: 512)

எழுவாய் உருபாம் இயல்பின் பெயரே
மீண்டு அதன்பொருளாம் வினைபெயர் வினாவே

(தொ.வி.: 56)

.............................. அவற்றுளெழு வாய்க்குருபின் றென்பார்
ஊற்றுபெயர் தோன்றல் வினைமுதலாதல் பயனை
யுறுதல்வினை யுறுதல் விகாரப்பெயர்பின் விகுதி
ஏற்றல் உருபு என்பார் ஆனவன் முதல்ஐம் பால்மூன்
றிடமுக்காலச் சொல்பெயர்க் குருபு என்னப் படுமே

(சுவாமி.: 41 : 2–4)

## மயிலை நாதர்

எ–ன், நிறுத்த முறையானே பெயர் வேற்றுமையது இலக்கண முணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: மேற்சொன்ன எட்டனுள்ளும் முதல்வேற்றுமைக்கு உருபாவது திரிபு யாதுமின்றி நிற்கும் பெயர்தானேயாம்; வினையையும் பெயரையும் வினாவையுங்கோடல் அதற்குப் பொருணிலையாம், எ–று.

வினைபெயரென்று பொதுப்பட வைத்தமையான், வினை முற்றுக் குறிப்புமுற்றுப் பெயரெச்ச வினையெச்சங் களினும் [1]இருதிணை யைம்பால் மூவிடத்துப்பெயர்களினும் இவற்றின் பொதுப்பெயரிகளினும் ஏற்பனவெல்லாம் கொள்க.

ஏகார ஒகாரங்கள் இடைச்சொல்லாய் இவற்றுளடங்காமையின் வினாவென வேறெடுத்தோதினாரென்க. மேலே உருபுசொல்லி ஈண்டுஞ் சொல்லுதல் கூறியதுகூறலென்னும் குற்றமாம் பிறவெனின், ஆண்டுப்பெயரும் முறையும் சொன்னார்; ஈண்டு வேற்றுமைக்கு வரும் இலக்கணமெல்லாம் சொன்னாராதலின் ஆகாதென்க. இக்கடா விடை மேல் வருவனவற்றிற்கும் ஒக்கும்.

**வ—று.:**

அவன் வந்தான், அவள்வந்தாள், அவர்வந்தார், அதுவந்தது, அவை வந்தன எனவும், யான்வந்தேன், யாம்வந்தேம் எனவும், நீவந்தாய், நீவிர் வந்தீர் எனவும், தான்வந்தான், தான்வந்தாள், தான்வந்தது, தாம்வந்தார், தாம்வந்தன, எல்லாம்வந்தார், எல்லாம்வந்தன, எல்லாம்வந்தேம், எல்லாம் வந்தீர் எனவும், அவன்வாழ்க, [2]யான்வாழிய, நீவாழியர் எனவும் வினைமுற்று வந்தன.[3]அவன்வேலினன், அவன்அகத்தான், அவன் ஆதிரையான், அவன் [4]தாடியான், அவன்கரியான், அவன் செலவினன், அவனுண்டு, அவனில்லை, அவர் வேறு, அது கரிது, அவையுளவென வினைக்குறிப்புமுற்று வந்தன. அவன் செய்த, [5]அவள் செய்கின்ற, அவர்செய்யும், அது செய்த, அவை செய்யுமெனப் பெயரெச்சமேற்றன. அவன் செய்து, அவள் செய்பு, அவர்செய்யா, அதுசெய்யூ, அவை செய்தென வென இவை வினையெச்சங் கொண்டன.

அவன்அந்தணன், அவள்பேதை, [6]அவர்சான்றோர், அவன் யான், அவன் நீ, அவன்யாவன், இவன் எவன், இவள் எவள், அவள் நீ, உவர் தந்தையார், அது பெடை, இது சேவல், உவை ஊர்கள் எனவும், யான் அரசன், யாம் விறலியர், யான் நீ, யாம்நீங்கள், யாம்[7]மந்திரிகள் எனவும், நீ புலவன், [8]நீயிர்

---

**பாட வேறுபாடு:—**

**1.இருதிணை மூவிடத்தைம்பாற் பெயர்களினும்**

**2. யான் வாழ்க**

**3.அவன்வேலன்**

**4.முடியான்**

**5. அவன்செய்கின்ற, அவன் செய்யும்**

**6. அவர்சான்றார்**

**7.வந்திகள்**

**8.நீயிர் அரிவையீர்**

அவையீர், நீகிள்ளை, நீயிர் தாயர் எனவும், சாத்தன் அவன், எல்லாம் மாந்தர், எல்லாம் மான்கள் எனவும் பெயர்களேற்றன.

அவன்யாவன், [1]இவள்யாவள்; அவனே, இவளே, உவரே, அதுவோ, அவையோ எ – ம், யான்யாவன், யான்யாவள்; யாமே, யாமோ எனவும், [2]நீயிரெவரீர்; நீரே, நீரோ எனவும், சாத்தனே, மக்களோ எனவும் வினா ஏற்றன.

[3]ஆயன் சாத்தனென்றற் றொடக்கத்தன பண்பொட்டுப் பெயராய் இம்மூன்றனுள் ஒன்று கொள்ளுமென்க.

"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல், வினைநிலை யுரைத்தல், வினாவிற் கேற்றல், பண்புகொள வருதல் பெயர் கொள வருத [4]லென்றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே" (தொல். வேற்றுமையியல், 5) என்னு மிவ்வாறும் இம்மூன்ற னுளடங்குமெனக் கொள்க.

**"வினைநிலை யுரைத்தலும் வினாவிற் கேற்றலும் பெயர்கொள வருதலும் பெயர்ப்பய னிலையே"**
என்றார் அகத்தியனாருமென்க.

**சங்கர நமச்சிவாயர்**

**சிவஞானமுனிவர்**

எ–னின், நிறுத்த முறையானே பெயர்வேற்றுமையது இலக்கணம் உணர் – ற்று.

இ–ள்.: மேற்கூறிப்போந்த எட்டு வேற்றுமையுள், முதல் வேற்றமையின் உருபாவது திரிபில்லாத பெயரேயாம்; அதன் *பொருள் நிலையாவது* வினையையும் பெயரையும் வினாவையும் கொள வருதலாம், எ–று.

*திரிபு இல்லாமையாவது, உருபும் விளியும் ஏலாது முடிக்குஞ் சொல்லும் நோக்காது, ஆ என்றாற்போலத் தன்னிலையில் நிற்றலாம்.*

*பயனிலை என்றது ஈண்டு முடிக்குஞ் சொலன்று; பொருள் நிலை என உணர்க. பொருள்நிலை எனினும், பயனிலை எனினும் ஒக்கும்.*

---

பாட வேறுபாடு:–

1. (1) இவளெவள், உவரோ, அதுவோ;
   (2) யானோ, யாமோ எனவும்
2. நீயிர்யாவர்
3. ஆதன்சாத்தன்
4. (1) லென்றிவ்வனைத்தும்,
   (2) லென்றிவையனைத்தும்

***பொருள் என வாளா கூறாது பொருள்நிலை என்றது என்னையெனின்:– ஏனை வேற்றுமையின் பொருள்கட் கெல்லாம் அப்பொருள் முதற்கண் நிலைபெறுதலின் என்க. கொள வருதலாவது முடிக்குஞ் சொல் கொளவரும் தன்மை.***

எனவே, எழுவாய் வேற்றுமை உருபாவது தன்னிலையினிற்கும் பெயரே என்பதூஉம், பெயரே என்றமையான் இதற்கு இது என வேறுருபின்று என்பதூஉம், ***அதன் பொருளாவது வினை முதற் பொருண்மையாகத் தன்னைத்தானே வேற்றுமை செய்தல் என்பதூஉம் பெற்றாம்.***

தன்னைத்தானே வேற்றுமை செய்தல்,

**“நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை**
**நிலைகலக்கிக் கீழிடு வானும் நிலையினும்**
**மேன்மேல் உயர்த்தி நிறுப்பானும் தன்னைத்**
**தலையாகச் செய்வானும் தான்”**

என்பதனானும் உணர்க.

வினை எனப் பொதுப்படக் கூறினமையின், வினையும் வினைக்குறிப்புமாகிய விகற்பமெல்லாம் கொள்க. இவ்வாறே ஆசிரியர் தொல்காப்பியரும்,

**“எழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே”**

எனவும்,

**“பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்**
**வினைநிலை உரைத்தல் வினாவிற் கேற்றல்**
**பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்(று)**
**அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே”**

எனவும் கூறிய முறைமையும், பொருண்மைசுட்டல் முதலியவாகக் கூறிய ஆறும் இம்மூன்றுள் அடங்குமாறும் காண்க.

**உ–ம்.:** ஆ உண்டு என்பது ஒரு பொருளின் பண்பு முதலாயின சுட்டாது அப்பொருட்டன்மையது உண்மைத்தன்மையே சுட்டி நிற்க வருதலாம். ஆ செல்க என்பது தான் ஏவலைக்கொள்ள வருதலாம். ஆ கிடந்தது என்பது தனது தொழலினைச் சொல்ல வருதலாம். ஆ கரிது என்பது தனது பண்பினைத் தான்கொள வருதலாம். வினைக்குறிப்பாதல் ஒப்புமையான் ஆ இல்லை ஆ அல்ல என்னும் தொடக்கத்துக் குணப் பொருள வல்லா வினைக்குறிப்புக் கொளவருதலும் கொள்க. இவை யெல்லாம் வினைப்பாற்பட்டன. ஆ பல என்பது தான். பெயரைக் கொண்டு முடிய வருதலாம்; ஆ யாது ஆ எவன் என்பன தான் வினாவுதற்குப் பொருந்தி வருதலாம் எனப் பகுத்துக் காண்க. அங்ஙனம் பகுத்துக் காண்புழி அவிகாரியாய்

நின்றபெயர். இம்முடிக்குஞ் சொற்களை அவாவியகாலத்து அவிகாரியினின்றும் விகாரியாகத் தன்னைத் தானே வேற்றுமை செய்து நின்றமையும் காண்க. இதனை முதல் வேற்றுமை என்றது என்னையெனின் பெயரேயாய் நிற்ற லானும் வினைமுதற் பொருண்மையைத் தருதலானும் என்க.

இனிப் பயனிலை என்றது முடிக்குஞ்சொல் எனக் கூறுவாரும் உளர். வினை பெயர் வினாக்கொளும் என முற்றுச் சொல்லால் கூறாது வினை பெயர் வினாக்கொளல் எனத் தொழிற் பண்புச் சொல்லால் கூறுதலானும், இரண்டாம் வேற்றுமை முதலியவற்றிற்கு உருபும் பொருளும் கூறுதலான் இம்முதல் வேற்றுமைக்கும் உருபும் பொருளும் கூறவேண்டு மாதலானும், இவ்வெட்டு வேற்றுமைக்கும் முடிக்குஞ்சொல் 'எல்லை யின்னும் அதுவும் பெயர்கொளும் அல்ல வினைகொளும்' (319) என்னும் சூத்திரத்தால் பிற் கூறுத லானும், ஈண்டும் கூறின் கூறியது கூறலாம் ஆதலானும், **அது பொருந்தாது என்க.** இன்னும் அவருள் சிலர் வினாக்கொளல் என்பதற்குச் சாத்தனோ என வினா இடைச் சொற்களைக் கொள்ளும் என உதாரணம் காட்டுவர். அங்ஙனமாயின் தெரிநிலை தேற்றம் முதலிய பொருள்தரும் இடைச் சொற்களையும் கொள்ளும் எனக் கூறல் வேண்டுமாதலானும், இஃது இடைச்சொற் சந்தி யன்றி எழுவாய்ச் சந்தி யன்றாம் ஆதலானும், அவர்க்கு அது கருத்தன்று என்க. ***இவ் வினைமுதற்பொருள்,***

***"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா***
***பிற்பகல் தாமே வரும்"***

(குறள்.:319)

***[1]"பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்***
***வரிசை வரிசையா நந்தும் – வரிசையா***
***வானூர் மதியம்போல் வைகலும் தேயுமே***
***தானே சிறியார் தொடர்பு" (நாலடி.: 125)***

***என்பவற்றுள் இன்னா தாமே வரும், கேண்மை தானே நந்தும், தொடர்பு தானே தேயும் எனச் செயப்படு பொருட்கண்ணும்; ஆதித்தன் கற்றீப் பிறப்பித்தான், காற்றுப் பழம் உதிர்த்தது என ஏதுவின்கண்ணும்; சாத்தன் உண்டான் எனத் தன்வசம் என்பதன்கண்ணும்; மாடம் செயப்பட்டது என வினைமுதல் என்று தெரியப்படாமல் வினைமுதலாயே நிற்பதாகிய தெரியா நிலைக்கண்ணும்;***

***[2]"ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப"***

***(தொல். களவியல்.: 2)***

***என ஓர் பொருளே ஒருகால் வினைமுதலாயும் ஒருகால் செயப்படு பொருளாயும் நிற்கும் தடுமாற்றத்தின்கண்ணும்;***

*"அறவினை யாதெனின் கொல்லாமை கோறல் பிறவினை யெல்லாம் தரும்"*

*என்பதனுள் கொல்லாமை அறவினை எல்லாம் தரும் கோறல் பிறவினை எல்லாம் தரும் எனத் தொழிற் பெயர்க்கண்ணும்; கண்காணும், செவிகேட்கும் எனக் கருவியின்கண்ணும்; குன்று குவட்டைத் தாங்கும், தூண் போதிகையைத் தொட்டது என இடத்தின்கண்ணும்; "இரப்பவர் என்பெறினும்கொள்வர்" எனக் கொள்பவன் கண்ணும் வரும் எனவும் தாய் மகவுக்கு ஊட்டினாள், ஆசிரியன் மாணாக்கனைப் படிப்பித்தான், தலைவன் தலைவியைப் புல்லினான் என [4]"இருவினை முதலா ஒருவினையும் உள" எனவும்; அரசன் தேர்செய்தான், தச்சன் தேர்செய்தான், சாத்தன் உறங்கினான் என [5]"ஏவுதல் இயற்றுதல் இவையின் வேறாதல் என வினைமுதல் மூவகையாம்" எனவும் கொள்க. இவை யெல்லாம் உரையிற்கோடல் என்னும் தந்திரவுத்தி. இவ்வாறு பிற வருவனவும் அன்ன.*

## கூழங்கைத் தம்பிரான்

**சூ-ம்,** நிறுத்தமுறையானே பெயர் வேற்றுமையது இலக்கணம் கூறுகின்றது.

**இ-ள்.: அவற்றுள்** – மேற்கூறிய எட்டு வேற்றுமையுள்ளும், **எழுவாயுருபு திரிபில் பெயரே** – முதல் வேற்றுமைக்கு உருபாவது திரிபுயாதுமின்றி நிற்கும் பெயர்தானேயாம்; **வினைபெயர் வினாக் கொளல்** – வினையையும் பெயரையும் வினாவையும் கொண்டுமுடிதல், **அதன் பயனிலையே** – அதற்குப் பொருணிலையாம், **எ-று.**

**உ-ம்.:**

சாத்தன் வந்தான், சாத்தன் அவன், சாத்தன் எவன் என வரும்.ஆயன் சாத்தன் என்பன இருபெயரொட்டுப் பண்புத் தொகையாய் ஒரு மொழிபோல் நின்று இம் மூன்றனுள் ஒன்று கொள்ளுமென்க. ஆயன் சாத்தன் வந்தான், ஆயன் சாத்தன் சிறியன், ஆயன் சாத்தன் எவன் என வரும்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** நிறுத்த முறையாலே பெயர்வேற்றுமையி னிலக்கண முணர்த்துகின்றது.

**இ-ள்.: அவற்றுள்** – முன் சொல்லப்பட்ட வெட்டு வேற்றுமைகளுள், **எழுவாய்** – முதல் வேற்றுமையினது, **உருபு** – உருபாவது, **திரிபில்** – ஐம், முதலாகிய வுருபேற்றுத் திரிதலில்லாத, **பெயரே** – பெயரேயாம், **வினை–** வினையையும், **பெயர்**–பெயரையும், **வினா** – வினாவையும், **கொளல்** – கொள்ள

வருதல், அதன் அவ்வுருபினது, **பயனிலை** – பொருணிலையாய் வருதலாம், **எ–று.**

(எனவே அத்திரிபில்லாத பெயர்தானே தன்பொருளை வினைமுதற்பொருளாக வேற்றுமை செய்யுமென்பதாயிற்று, வினைமுதல், செய்பவன், ஒருபொருட் சொற்கள், இதனை வடநூலார் கருத்தாவென்பர்)

சாத்தன் வந்தான், கொற்றன் வாழ்க, அவன் பெரியன், ஆவுண்டு–இவை வினைகொளவந்தன. ஆவொன்று, அரசனிவன், இவை பெயர் கொளவந்தன. அவனயார், ஆயாது, இவை வினாக்கொள வந்தன.

வினைமுதற்பொருளாவது தனது புடைபெயர்ச்சியாகிய தொழிலிற் சுதந்தரமுடைய பொருளாம், சாத்தான் வந்தான் என்கிறவிடத்தே சாத்தனென்கிற பெயர்ப்பொருளாகிய வொருவன் தன்புடை பெயர்ச்சியாகிய வருகைத்தொழிலிலே சுதந்தரமுடையனாதல் காண்க.

இவ்வெழுவாய்க்கு ஐம் முதலானவை போன்ற உருபில்லாதிருந்தாலும் **உரையிற் கோடலென்கிற** உத்தியான், ஆனவன், ஆகின்றவன், ஆவான், முதலாக வைம்பாலிலும் வருகிற சொல்லுருபுகளுண்டெனக் கொள்க. அவை சாத்தனானவன், சாத்தியானவள், சாத்தரானவர், ஆவானது, ஆக்களானவை, எனச் சிலவிடங்களிலே வரும். அல்லாமலும் சிறுபான்மை, சாத்தனென்பவன், என வருவதுங் கொள்க. இன்னு மிவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப் படுஞ் சொல்லுருபுகளுக்கெல்லாங் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எழுவாய் வேற்றுமையினியல்பும் அதன் பயனிலையும் கூறுஞ் சூத்திரம் யாது?

**அவற்றுள்,–**
**எழுவா யுருபு திரியில் பெயரே**
**வினைபெயர் வினாக்கொள லதன்பயனிலையே.**

**(அவற்றுள்,–**
**எழுவாய் உருபு திரிபு இல் பெயரே**
**வினைபெயர் வினாக்கொள லதன்பய னிலையே.)**

**இ–ள்.:–** முன் சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள் முதல்வேற்றுமையினுருபாவது ஐ முதலிய உருபேற்றுத் திரிதலில்லாத பெயரேயாம்; வினையையும் பெயரையும் வினாவையுங் கொள்ள வருதல் அவ்வுருபினது பொருணிலையாய் வருதலாம்.

பயனிலையாவது தொடர்மொழிக்கண் முடிக்குஞ்சொல்.

எனவே, அத்திரிபில்லாத பெயர்தானே தன்பொருளை

வினைமுதற் பொருளாக வேற்றுமை செய்யுமென்பதாயிற்று.

இவ்வெழுவாய் கொள்ளும் பெயர், இன்னது, இவ்வளவிற்று என்னும் பொருள்படவரும் பெயராம்.

**உ—ம்.:—**

(1) சாத்தன் வந்தான்; கொற்றன் வாழ்க; இவை தெரிநிலை வினைகொள வந்தன. அவன் பெரியன்; ஆவுண்டு இவை குறிப்புவினை கொள வந்தன.

(2) சாத்தனிவன்; கொற்றனவன்; இவை இன்னது என்னும் பொருள்பட வரும் பெயர்கொள வந்தன. ஆவொன்று; யானை நூறு; இவை இவ்வளவிற்று என்னும் பொருள்பட வரும் பெயர் கொள வந்தன.

(3) அவன் யார்; ஆ யாது; இவை வினாக் கொள வந்தன. வினைமுதற்பொருளாவது ஒரு தொழினிகழ்ச்சியிலே தன்வயத்தாகக் குறிக்கப்படும் பொருளாம். வினைமுதல், செய்பவன், கருத்தா என்பன ஒரு பொருட்சொற்கள்.

**உ—ம்.:—**

சாத்தன் வந்தான் என்புழித் தொழினிகழ்ச்சி வருதல்; அத்தொழினிகழ்ச்சியிலே தன்வயத்ததாகக் குறிக்கப்படும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் வினைமுதற்பொருள்.

இவ்வெழுவாய்க்கு, ஐ முதலியன போன்ற உருபில்லையாயினும், உரையிற்கோடலென்னுமுத்தியினாலே, சிறுபான்மை, ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்பவன், ஆனவள், ஆனவர், ஆனது, ஆனவை முதலிய ஐம்பாற்சொற்களுஞ் சொல்லுருபுகளாக வருமெனக் கொள்க.

**உ—ம்.:—**

சாத்தனானவன் வந்தான்; சாத்தியானவள் வந்தாள்; சாத்தரானவர் வந்தார்; யானையானது வந்தது; யானையானவை வந்தன என வரும். பிறவுமன்ன.

இன்னும், இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படுஞ் சொல்லுருபுகளுக்கெல்லாங் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நிறுத்த முறையே பெயர் வேற்றுமை யிலக்கண முணர்த்திற்று.

**இ—ள்.: அவற்றுள்—** மேற்கூறிய எட்டு வேற்றுமை யுருபுகளுள், **எழுவாயுருபு —** முதல் வேற்றுமை யுருபாவது, **திரிவில் பெயரே—**விகாரமில்லாத பெயரே யாம், **அதன் பயனிலை —** அதன் பொருளாவது, **வினை பெயர் வினாக் கொளல்—**வினையையும் பெயரையும் வினாவையுங் கொண்டு முடிந்து நிற்பதாம். **எ—று.**

திரிவில்லாமையாவது, உருபும் விளியுங் கொள்ளாமல் முடிக்குஞ் சொல்லையும் நோக்காமல், ஆ என்றாற்போலத் தன்னிலையில் நிற்பதாம்; பயனிலை யென்றது, இங்கே முடிக்குஞ் சொல்லை யன்று; பொருள் நிலையை யென உணர்க. பயனிலை யெனினும், பொருள் நிலை யெனினும் ஒக்கும். 'பெயரே' என்றதினாலிதற்கு வேறு உருபின் றென்பதும், அதன் பொருளாவது வின்முதற் பொருளின் குணமாகத் தன்னைத்தானே வேற்றுமை செய்தலென்பதும் பெறப்படும், 'வினை'யெனப் பொதுப்படக் கூறினதினாலே வினையும் வினைக்குறிப்பு முதலிய வினைவிகற்ப மடங்கலுங் கொள்க.

**உ–ம்.:–**

சாத்தன்வந்தான்–சாத்தன்கரியன்–அவன்வாழ்க–ஆவுண்டு–அவனுண்டு–அவனில்லை–அவன்வேறு–எனவும், புலிகடிக்கப்பட்டான்,பேய்பிடிக்கப்பட்டான்–அவனின்றியமையாது– அவனன்றிக்கூடாது–சாத்தனுண்டசோறு–சாத்தன்பெரியமனிதன்–என வினவ வினைகொண்டன. சாத்தனிவன்–பசுவொன்று–பசுவாயிரம் என விவை பெயர்கொண்டன. அவன்யாவன்–ஆயாது–அஃதெவன்–அவையெவை–என விவைவினாக் கொண்டன, பிறவுமன்ன.

**"வினைநிலை யுரைத்தலும் வினாவிற் கேற்றலும்**
**பெயர்கொளவருதலும் பெயர்ப்பயனிலையே"**

என ஆசிரியர் அகத்தியனாரு மிவ்வாறு கூறுதல் காண்க.

ஆயின்,

**"அவற்று**
**ளெழுவாய் வேற்றுமை பெயர்தோன்று நிலையே"**

**"பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்**
**வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்**
**பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்**
**றன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் இதன் பயனிலையை அறுவகையாகக் கூறிய தென்னெனின், பொருண்மைசுட்டல்: ஆவுண்டு எனவும், வியங்கொளவருதல், ஆசெல்க எனவும், வினைநிலையுரைத்தல்:– ஆ கிடந்தது எனவும்; பண்புகொள வருதல்; ஆகரிது எனவும், வருமிந்த நான்கும் வினையின்பாற் பட்டன ஆதலாலென்க. இனி யுரையிற் கோடலென்னு முத்தியால் இது. தோன்றா எழுவாயாக நின்று பயனிலை கொள்ளுதலு முண்டெனக் கொள்க. **உ–ம்.:** கருவூர்க்குச் செல்வாயோ சாத்தா என்றவழிச் செல்வேனெனவும், நான்யாது செய்வேன் என்றவழி இது செய் எனவும், இவன் யாவனென்றவழி படைத்தலைவனெனவும் – சொன்னபோது,

யான் நீ இவன் என்னு மெழுவாய் வெளிப்படாது நின்று செல்வேன் இது செய் படைத் தலைவன் என்னும் பயனிலை கொண்டவாறு காண்க. இன்னுமதினாலே ஏவுதற் கருத்தா, இயற்றுதற்கருத்தா, இவற்றின் வேறாதற் கருத்தா என இது மூவகைப்படுமெனவுங் கொள்க.

உ–ம்.:–

அரசன் கோயில் கட்டினான் என வருவது ஏவுதற் கருத்தா; தச்சன் கோயிலைக் கட்டினான் என வருவது இயற்றுதற் கருத்தா; சாத்தனுறங்கினான் என வருவது. இவற்றின் வேறாதற் கருத்தா, எனக் காண்க. இன்னுமிவ்வுருபு. கருவி நிலஞ் செயல் காலங்களிலும் வினைச்சொல் இடைச்சொல் உரிச்சொற்களிலும் வருமெனக் கொள்க.

உ–ம்.:–

கண்காணும், செவி கேட்கும் எனவிவை கருவி; செய்விளைந்தது, ஊர் நகைத்தது என விவை நிலம்; கொல்லாமை நன்று, கொலை செயல் தீது என விவை செயல்; பகல் நீங்கிற்று, இரவு வந்தது, வருடம் பிறந்தது, மாதம் பிறந்தது என விவைகாலம்; திண்ணை மெழுகியது; சோறுசமைத்தது என்றாற் போல்வன செயப்படு பொருள் எனவும், 'எல்லார்க்கு நன்றாம் பணிதல்', 'சொற்கோட்ட மில்லது செப்பம்' என்றாற் போல்வன வினை; உம் முப்புல்லும் குவ்வின் அவ்வரும், மற்றென் கிளவிவினை மாற்றசை நிலை, கொல்லேயையமசை நிலைக்கூற்றே என்றாற் போல்வன இடைச்சொல்; சாலவுறுதவ நனிகூர் கழிமிகல், மன்றவென் கிளவிதேற்றஞ் செய்யும்–(மன்ற என்பதை இடைச்சொல் வென்பாருமுளர்), 'கூர்ப்புங் கழிவுமுள்ளது சிறக்கும்' என்றாற் போல்வன உரிச்சொல், எனக் காண்க. இனி இதை முதல் வேற்றுமை யென்ற தென்னெனின், பெரும்பாலும் பெயர்ச் சொல்லாய் நிற்றலாலும் ஒழிந்த உருபுகளை யெல்லாம் பின்னிட்டுத் தான் முன்னிற்றலாலும் கருத்தாவாதலாலு மென்க. பிறவகையால் வரு மெனினுங் காண்க. உருபுபெயர், கொளல் பயனிலை யென இரு முடிபாக்குக.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– அவற்றுள்** – முன் சொல்லப்பட்ட எட்டுவேற்றுமைகளுள், **எழுவாய் உருபு** – முதல் வேற்றுமையின் உருபாவது, **திரிபு இல்** – (ஐமுதலிய உருபுகளை ஏற்றுத்) திரிதலில்லாத (ஏற்காமல் இயல்பாய் நிற்கிற), **பெயரே** – பெயரேயாம்; **வினை** – வினையையும், **பெயர்** – பெயரையும், **வினா** – வினாவையும், **கொளல்** – கொள்ளவருதல், **அதன்** – அவ்வுருபினது, **பயனிலை** – பயனிலையாம்.

**குறிப்பு:–** எனவே, எழுவாய் வேற்றுமைக்கு வேறு உருபு இல்லை என்றும், உருபேற்றுத் திரிதலில்லாத பெயரை 'வேற்றுமை' என்றது தானே தன் பொருளைக் கருத்தாப் பொருளாக வேறுபடுத்தலால் என்று மறிக. எழுவாய், முதல்வேற்றுமை, வினைமுதல், செய்பவன் என்பன. (ஒரு பொருளன; இவற்றைக் 'கர்த்தா' என்பர் வடநூலார்)

உ–ம்:– இராமன் வந்தான், அவன் பெரியன் – வினைகொள வந்தன.
ஆ ஒன்று, அரசன் இவன் –பெயர்ச்கொள வந்தன
அவன் யார்? ஆ யாது? – வினாக்கொள வந்தன.

கருத்தாப் பொருள் – தொழிலிற் சுதந்தரமுடைய பொருளாம். 'இராமன் வந்தான்' என்றதில் இராமன் வருகைத் தொழிலிற் சுதந்தரமுடைய னாதல்காண்க. இனி உரையிற்கோடல் என்னும் உத்தியால், ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்றவன், என்கின்றவன், என்பவன், அவன், முதலாக ஐம்பாலிலும் வருகிற சொல்லுருபுகள் உண்டெனக் கொள்க. அவை:– இராமனாகிறவன், சீதையாகிறவள், இராமனாவான் ஆவென்பது, ஆக்களானவை எனவரும். இன்னும் இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிற் காட்டப்படும் சொல்லுருபுகளுக்கெல்லாங் கொள்க. (சொல்லுருபு – சொல்லே உருபாய் வருவது). இனி, தோன்றா எழுவாயாக வருதலும் உண்டு; உ–ம்:– 'சொல்லாயோ இராமா' என்றவிடத்து 'நீ' என்பது தோன்றா எழுவாய்.

கருத்தா – இயற்றுதற் கருத்தா, ஏவுதற் கருத்தா என இருவகைப்படும்; இயற்றுதற்கருத்தா – தானே செய்வது. ஏவுதற்கருத்தா – தான் வேறொருவனைக் கொண்டு செய்விப்பது.

உ–ம்:– தச்சன் கோயிலைக் கட்டினான். – (இயற்றுதற்கருத்தா)
அரசன் கோயிலைக் கட்டினான்.– (ஏவுதற்கருத்தா)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: அவற்றுள்** – முன்சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள், **எழுவாய் உருபு திரிபு இல் பெயரே** – முதல் வேற்றுமையினுருபாவது ஐ முதலிய உருபேற்றுத் திரிதலில்லாத பெயரேயாம், **வினை பெயர் வினாக் கொளல் அதன் பயனிலை** – வினையையும் பெயரையும் வினாவையுங் கொள்ள வருதல் அவ்வுருபினது பொருணிலையாய் வருதலாம், **எ – று.**

எனவே, அத் திரிபில்லாத பெயர் தானே தன்பொருளை வினைமுதற்பொருளாக வேற்றுமை செய்யுமென்பதாயிற்று.

இவ்வெழுவாய் கொள்ளும் பெயர், இன்னது, இவ்வளவிற்று என்னும் பொருள்பட வரும் பெயராம்.

**உ – ம்.:–**

சாத்தன் வந்தான், கொற்றன் வாழ்க இவை தெரிநிலை வினைகொள வந்தன. அவன் பெரியன், ஆவுண்டு இவை குறிப்புவினை கொள வந்தன.

சாத்தனிவன், கொற்றனவன் இவை இன்னது என்னும் பொருள்பட வரும் பெயர் கொள வந்தன. ஆவொன்று; யானை நூறு இவை இவ்வளவிற்று என்னும் பொருள்பட வரும் பெயர் கொள வந்தன.

அவன் யார்; ஆ யாது இவை வினாக்கொள வந்தன.

வினைமுதற்பொருளாவது ஒரு தொழினிகழ்ச்சியிலே தன்வயத்ததாகக் குறிக்கப்படும் பொருளாம். வினைமுதல், செய்பவன், கருத்தா என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ – ம்.:–**

சாத்தன் வந்தான் என்புழித் தொழினிகழ்ச்சி வருதல்; அத்தொழினிகழ்ச்சியிலே தன்வயத்ததாகக் குறிக்கப்படும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் வினைமுதற்பொருள்.

இவ்வெழுவாய்க்கு, ஐ முதலியன போன்ற உருபில்லையாயினும், **உரையிற்கோடலென்னு**முத்தியினாலே சிறுபான்மை, ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்பவன் முதலிய ஐம்பாற் சொற்களுஞ் சொல்லுருபுகளாக வருமெனக் கொள்க.

**உ – ம்.:–**

சாத்தனானவன் வந்தான்; சாத்தியானவள் வந்தாள்; சாத்தரானவர் வந்தார்; யானையானது வந்தது; யானையானவை வந்தன என வரும். பிறவுமன்ன.

இன்னும், இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படுஞ் சொல்லுருபுகளுக்கெல்லாங் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். அவற்றுள்** – முன்சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள், **எழுவாய் உருபு திரிபு இல் பெயரே** – முதல்வேற்றுமையினுருபாவது ஐம் முதலிய உருபேற்றுத் திரிதலில்லாத பெயரேயாம், – **வினை பெயர் வினாக்கொளல் அதன் பயனிலை** – வினையையும் பெயரையும் வினையையும் கொள்ளவருதல் அவ்வுருபினது பொருணிலையாய் வருதலாம். **எ–று.**

எனவே, அத்திரிபில்லாத பெயர்தானே தன்பொருளை வினைமுதற்பொருளாக வேற்றுமை செய்யுமென்பதாயிற்று.

இவ்வெழுவாய் கொள்ளும்பெயர் இன்னது, இவ்வளவிற்று என்னும் பொருள்பட வரும் பெயராம்.

**உ–ம்.:–**

(1).சாத்தன்வந்தான்; கொற்றன்வாழ்க இவை தெரிநிலைவினைகொளவந்தன. அவன்பெரியன்; ஆவுண்டு இவை குறிப்புவினை கொளவந்தன.

(2)சாத்தனிவன்; கொற்றனவன். இவை இன்னது என்னும் பொருள் படவரும் பெயர்கொள வந்தன. ஆவொன்று; யானை நூறு இவை இவ்வளவிற்று என்னும் பொருள்படவரும் பெயர்க்கொள வந்தன.

(3)அவன்யார்; ஆயாது இவை வினாக்கொளவந்தன வினைமுதற்பொருளாவது ஒரு தொழினிகழ்ச்சியிலே தன் வயத்ததாகக் குறிக்கப்படும் பொருளாம். வினைமுதல், செய்பவன், கருத்தா என்பன ஒருபொருட்சொற்கள்.

உ–ம்,.:–

சாத்தனானவன் வந்தான்; சாத்தியானவள் வந்தாள்; சாத்தரானவர் வந்தார்; யானையானது வந்தது; யானையான வைவந்தன என வரும், பிறவுமன்ன, இன்னும், இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படுஞ் சொல்லுரு புகளுக்கெல்லாங் கொள்க,

சூத்திரம் “வனைநிலையுரைத்தலும் வினாவிற்கேற்றலும், பெயர் கொளவருதலும் பெயர்ப்பயனிலையே” என ஆசிரியர் அகத்தியனாரு மிவ்வாறு கூறுதல்காண்க

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: அவற்றுள்** – முன்சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள், **எழுவாய்** – முதல் வேற்றுமையினது, **உருபு** – உருபாவது; **திரிபு இல்** – (ஐ முதலாகிய உருபுகளை ஏற்றுத்) திரித லில்லாத (ஏற்காமல் இயல்பாய் நிற்கிற), **பெயரே** – பெயரேயாம்; **வினை** – வினையையும்; **பெயர்**–பெயரையும், **வினா**– வினாவையும், **கொளல்** – கொள்ளவருதல், **அதன்** – அவ்வுருபினது, **பயனிலை** – பொருள்நிலையாம்; **எ–று.**

எனவே, எழுவாய் வேற்றுமைக்கு வேறு உருபு இல்லையென்பதும், வினையும் பெயரும் வினாவும் கொண்டு முடியுஞ் சொல்லாய் வந்து நிற்க, அவற்றுக்குக் கருத்தாவாய் நிற்பதே அதன்பொரு ளென்பதும் பெறப்பட்டன. திரிதலில்லாத பெயரை வேற்றுமை யென்றது, தானே தன்பொருளைக் கருத்தாப்பொருளாக வேறுபடுத்துதலால். எழுவாய் வேற்றுமை, முதல்வேற்றுமை, பெயர்வேற்றுமை, வினைமுதல், செய்பவன், கருத்தா என்பன. ஒரு பொருட்சொற்கள்.

எழுவாயெனினும், முதலெனினும் ஒக்கும். வினைமுதல்—பயனிலையிற் குறிக்கும் தொழிலைச் செய்தற்கு முதலாயுள்ள பொருள். செய்பவனெனினும், கருத்தாவெனினும் ஒக்கும்; கர்த்தா—வடசொல்.

**உ—ம்.:—**

சாத்தன் வந்தான், அவன் பெரியன்—வினைகொள வந்தன.

ஆ ஒன்று, அரசன் இவன் – பெயர்கொள வந்தன.

அவன் யார், ஆ யாது – வினாக்கொள வந்தன.

**கருத்தாப் பொருளாவது** – தொழிலிற் சுதந்தரமுடைய பொருளாம். பொன்னன் வந்தான் என்றதில், பொன்னன் வருகைத் தொழிலிற் சுதந்தரமுடையனாதல் காண்க.

எழுவாய் வேற்றுமைக்கு ஐ முதலானவை போன்ற உருபு இல்லாதிருந்தாலும், **உரையிற்கோடல்** என்கிற உத்தியால் – ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்றவன், என்கின்றவன், என்பவன், அவன் முதலாக ஐம்பாலிலும் வருகிற சொல்லுருபுகள் உண்டெனக் கொள்க; அவை – சாத்தனாகிறவன், சாத்தியவள், சாத்தரானவர், ஆவென்பது ஆக்களானவை என வரும். இன்னும் இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றமைகளிற் காட்டப்படும் சொல்லுருபுகட்கெல்லாம் கொள்க.

இனி, இது தோன்றாஎழுவாயாக வருதலும் உண்டு;

**உ—ம்.:—**

செல்வாயோ சாத்தா என்றவிடத்து, நீ என்பது – தோன்றா எழுவாய். (எழுவாய் தொக்கது.)
கருத்தா – இயற்றுதற் கருத்தா, ஏவுதற் கருத்தா என இருவகைப்படும். இயற்றுதற்கருத்தா – தானே நேராகச் செய்வது. ஏவுதற் கருத்தா – தானே நேராகச் செய்யாமல் வேறொருவனைக் கொண்டு செய்விப்பது.

**உ—ம்.:** தச்சன் கோயிலைக் கட்டினான் – இயற்றுதற் கருத்தா.

அரசன் கோயிலைக் கட்டினான் – ஏவுதற் கருத்தா.

கருத்தா மூன்றாம் வேற்றுமையா யிருக்கும்போது செயப்படுபொருள் முதல் வேற்றுமையாய் வருதலால், முதல் வேற்றுமைக்குச் செயப்படுபொருளும் சிறுபான்மை உண்டெனக் கொள்க.

**உ—ம்.:** கடவுளால் உலகம் படைக்கப்பட்டது.

## பவானந்தம் பிள்ளை

**இ—ள்.:** அவற்றுள்—முன்சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள், எழுவாய் உருபு திரிபு இல் பெயரே—முதல் வேற்றுமையினுருபாவது ஐ முதலிய உருபேற்றுத்

திரிதலில்லாத பெயரேயாம்; வினை பெயர் வினாக் கொளல் அதன் பயனிலை– வினையையும் பெயரையும் வினாவையுங் கொள்ள வருதல் அவ்வுருபினது பொருணிலையாய் வருதலாம். **எ–று.**

எனவே, அத் திரிபில்லாத பெயர்தானே தன்பொருளை வினைமுதற்பொருளாக வேற்றுமைசெய்யு மென்பதாயிற்று.

வேற்றுமையாவது சொல்வேறுபடுதலும் பொருள்வேறுபடுதலு மாதலால், பொருள் வேறுபடுதலன்றிச் சொல் வேறுபடுத லில்லை யென்ற முதல் வேற்றுமை தவிர, மற்றைய ஏழு வேற்றுமைகளுக்கும் சொல்வேறுபாடும் பொருள்வேறுபாடும் காட்டல்வேண்டும்.

இங்கே 'பயனிலை' என்பது முடிக்கும் சொல் அன்று, 'பொருள் நிலை' யா மென்பதறிக. 'பொருள்' என்னாது 'பொருள்நிலை' என்றது என்னை யெனின், ஏனை வேற்றுமையின் பொருள்கட் கெல்லாம் அப்பொருள் முதற்கண் நிலைபெறுதலின் என்க.

உ–ம்.:

(1) சாத்தன் வந்தான்; கொற்றன் வாழ்க; அவன் பெரியன்; ஆவுண்டு.–இவை வினைகொள வந்தன.

(2) சாத்தனிவன்; கொற்றனவன்; ஆவொன்று; யானை நூறு.– இவை பெயர் கொள வந்தன.

(3) அவன் யார்; ஆ யாது.–இவை வினாக் கொள வந்தன.

கருத்தா, வினைமுதல், செய்பவன் என்பன ஒருபொருட் சொற்கள்.

கருத்தாப்பொருள் ஆவது ஒருதொழில் நிகழ்ச்சியிற் சுதந்தர முடையதாகக் குறிக்கப்படும் பொருள். 'சாத்தன் வந்தான்' என்பதில் தொழில்நிகழ்ச்சி வருதல்; அதில் சுதந்தரமுடைய தாகக் குறிக்கப்படும் பொருள் சாத்தன். ஆதலால் 'சாத்தன்' என்பது கருத்தாப் பொருள்.

இது, இயற்றுதற்கருத்தா, ஏவுதற்கருத்தா என இருவகைப்படும்.

இயற்றுதற்கருத்தாவாவது தனக்குச் சுதந்தரமுடையதாகக் குறிக்கப்படும் தொழிலைத் தானே நேரிற் செய்வது.

உ–ம்.:–

தச்சன் கோயிலைக் கட்டினான்.

ஏவுதற்கருத்தாவாவது எனக்குச் சுதந்தரமுடையதாகக் குறிக்கப்படும் தொழிலைத் தானே நேரிற் செய்யாமல் பிறனை ஏவிச் செய்விப்பது.

உ–ம்.;–

அரசன் கோயிலைக் கட்டினான்.

இவ்வெழுவாய்க்கு, ஐ முதலியன போன்ற உருவின்லை யாயினும், உரையிற்கோடலென்னு முத்தியினாலே சிறுபான்மை, ஆனவன், ஆகின்றவன், ஆவான், என்பவன் முதலிய ஐம்பாற்சொற்களும் உருபுகளாக வருமெனக் கொள்க.

இங்ஙனம் வரும் சொற்கள் சொல்லுருபுகள் எனப்படும்.

உ–ம்.:–

சாத்தனானவன் வந்தான்; சாத்தியானவள் வந்தாள்; சாத்தரானவர் வந்தார்; யானையானது வந்தது; யானையானவை வந்தன.

இன்னும், இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படுஞ் சொல்லுருபுகளுக்கெல்லாங் கொள்க.

'எழுவாய்' எனினும் 'முதல் வேற்றுமை' எனினும் ஒக்கும்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) அவற்றுள்– முன் சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள், எழுவாய் உருபு– முதல்வேற்றுமையினது உருபாவது திரிபு இல்பெயரே– (ஐம் முதலாகிற உருபேற்றுத்) திரிதலில்லாத பெயரே யாம்; வினை– வினையையும், பெயர்– பெயரையும், வினா– வினாவையும், கொளல்– கொள்ளவருதல், அதன் பயனிலை– அவ்வுருபினது பொருள்நிலையாய் வருதலாம். (எ–று)

(பொ–ரை.) வேற்றுமைகளுள் முதல் வேற்றுமையின் உருபு, ஐ முதலிய உருபேற்றுத் திரியாத பெயரேயாம்; வினை, பெயர், வினா ஆகிய இவைகளைக் கொள்வதே அதன் பொருள் நிலையாம்.

எனவே அத் திரியில்லாதபெயர் தானே தன்பொருளை வினைமுதற் பொருளாக வேற்றுமை செய்யும் என்பதாயிற்று. வினை முதல், சொற்கள்.

(உ–ம்.) சாத்தான் வந்தான்.
கொற்றன் வாழ்க. வினை கொள வந்தன.
அவன் பெரியன்.
ஆ உண்டு.
ஆ ஒன்று. பெயர் கொள வந்தான்.
அரசன் அவன்.
அவன் யார். வினாக் கொள வந்தன. ஆயாது.

வினைமுதற்பொருளாவது தனது புடைபெயர்ச்சியாகிய தொழிலிற் சுதந்தரமுடைய பொருளாம்.

சாத்தான் வந்தான்– இங்கு, சாத்தன் என்கிற பெயர்ப் பொருளாகிய ஒருவன், தன் புடைபெயர்ச்சியாகிய வருகைத் தொழிலிலே சுந்தரமுடையனாதல் காண்க.

இவ்வெழுவாய்க்கு ஐம் முதலானவைபான்ற உருபு இல்லா

திருந்தாலும் உரையிற் கோடல் என்கிற உத்தியால், ஆனவன், ஆகின்றவன், ஆவான் முதலாக ஐம்பாலிலும் வருகிற சொல்லுருபுகள் உண்டெனக் கொள்க. அவை சாந்தனானவன், சாத்தியானவள், சாத்தரானவர், ஆவானது, ஆக்களானவை எனச் சிலவிடங்களிலே வரும். அல்லாமலும் சிறுபான்மை சாத்த னென்பவன் என வருவதும் கொள்க. இன்னும் இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படும் சொல்லுருபுகளுக் கெல்லாம் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**அவற்றுள்** – முன் சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள், **எழுவாய்** – முதல் வேற்றுமையின், **உருபு** – உருபாவது, **திரிபு இல்** – (ஐம்முதலாகிய உருபேற்றுத்) திரிதலில்லாத, **பெயரே** – பெயரேயாம் ; **வினை** – வினையையும், **பெயர்** – பெயரையும், **வினா** – வினாவையும், **கொளல்** – கொள்ளவருதல், **அதன்** – அவ்வுருபினது, **பயன்நிலை** – பொருள் நிலையாம்.

எனவே, அத்திரிபில்லாத பெயர், தானே தன்பொருளை வினை முதற்பொருளாக வேற்றுமை செய்யும் என்பதாயிற்று. எழுவாய், வினை முதல், செய்பவன் என்பன ஒருபொருட் சொற்கள். இதனை வடநூலார், **கருத்தா** என்பர்.

சாத்தன் வந்தான், – தெரிநிலைவினை கொள்ள வந்தது.

கொற்றன் வாழ்க,
அவன் பெரியன், – குறிப்புவினை கொள்ள வந்தன.
ஆ உண்டு.

ஆ ஒன்று,
அரசன் இவன் – பெயர் கொள்ள வந்தன.

அவன் யார்?
ஆ யாது? – வினாக் கொள்ள வந்தன.

எழுவாயின் பொருளாவது, தனது புடைபெயர்ச்சியாகிய தொழிலில் சுதந்தரமுடைய பொருளாம். சாத்தன் வந்தான் என்னுமிடத்தே, சாத்தன் என்னும் பெயர்ப்பொருளாகிய ஒருவன், தன் புடைபெயர்ச்சியாகிய வருகைத்தொழிலிலே சுதந்தரமுடையனாதல் காண்க.

இவ்வெழுவாய்க்கு ஐம் முதலானவை போன்ற உருபில்லா திருந்தாலும், '**உரையிற் கோடல்**' என்னும் உத்தியால், ஆனவன், ஆனவள், ஆனவர், ஆனது, ஆனவை என ஐம்பாலிலும் வரும் சொல்லுருபுகள் உளவெனக் கொள்க.

**அவை** : சாத்தனானவன், சாத்தியானவள், சாத்தரானவர், ஆவானது, ஆக்களானவை எனச் சில இடங்களிலே வரும். அன்றியும் சிறுபான்மை, சாத்தன் என்பவன் என வருவதும் கொள்க.

இன்னும் இவ்வுத்தியைப் பின்வரும் வேற்றுமைகளிலே காட்டப்படுஞ் சொல்லுருபுகளுக் கெல்லாம் கொள்க.

## மோசசு பொன்னையா

முன்னர்ச் சொல்லப்பட்ட எட்டு வேற்றுமைகளுள் எண் முறைப்படி முதற்கண்நின்ற எழுவாய் வேற்றுமையின் உருபாவது, திரிபின்றி நிற்கும் பெயரேயாகும்; வினையையும், பெயரையும், வினாவையும் பயனிலையாகக் கொள்ளுதல் அதன் பொருள் நிலையாகும். எ—று.

எ—டு

1. சாத்தன் வந்தான்.
   சாத்தன் வாழ்க. தொழில்வினை வினை கொண்டன
   சாத்தன் பெரியன்
   ஆ உண்டு குறிப்பு வினை
2. சாத்தன் இவன் பெயர் கொண்டன
   ஆ ஒன்று
3. அவன் யார்?
   ஆ யாது வினாக் கொாண்டன

பெயர் வேற்றுமையைத் தொல்காப்பியர் எழுவாய் வேற்றுமை எனக் குறிப்பிட்டவாறே இவ்வாசிரியரும் எழுவாய் எனக் குறிப்பிட்டார். அவர்,

அவற்றுள்,

**எழுவாய் வேற்றுமை பெயர்த்தோன்று நிலையே,**

எனவும்,

**பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்**
**வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்**
**பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்**
**றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே,**

எனவும் கூறி எழுவாய் வேற்றுமையின் இலக்கணத்தை உணர்த்தினார். அதன்படி, இயற்பெயரேயாயினும் ஆகுக, திரிபெயரேயாயினும் ஆகுக, இரு பெயரொட்டுப் பெயரே யாயினும் ஆகுக; இரண்டாகுவது முதலிய வேற்றுமைகளின் பொருள்களுள் எதனையும் ஏற்காது தோன்றுநிலைப் பொருளையுடையது எதுவோ. அதுவே எழுவாய் வேற்றுமை எனவும், தோன்றுநிலைப் பொருளும் பொருண்மை சுட்டல் முதலிய பயனிலைகளைக் கொாள்வதாலேயே தெற்றென விளங்காநிற்கும் எனவும் தெள்ளத்தெளியப் புலப்படுத்தினார். எழுவாய் என்ற பெயர்தானும் அது வாக்கியத்தில் அமைந்து நிற்குங்கால் கொள்ளப்படும் ஒன்று என்பதையும், பயனிலையை அவாவியே நிற்கும் ஒன்று அது என்பதையும் புலப்படத் தோற்றி நிற்பது நுண்ணுணர்வினருக்கு விளங்கும். அவ்வாறாகவும், இவ்வாசிரியர், எழுவா யுருபு திரிபில் பெயரே

என இந்நூற்பாவைச் செய்தது வியப்பாகவே உள்ளது. இவ்வாசிரியர் உருபை வேற்றுமை எனக் கொண்டதற்கேற்ப, தொல்காப்பியர் பெயர் தோன்றுநிலை என்றதனைப் பெயரின் உருத்திரியா வடிவம் எனக் கொண்டும், பொருள் வேற்றுமையே வேற்றுமை என்பதை மறந்தும் இவ்வாறு கூறுகின்றார் போலும். சங்கரநமச்சிவாயர், 'எழுவாயுருபு திரிபில் பெயரே என்ற துணையானே அதன் பொருளும் திரிபில் பெயர்ப் பொருளேயென்பது போதருமென்னக' என உரைத்தது நூலாசிரியர் கொள்கைக்கு உரையாசிரியர் குறை சுட்டல் மரபன்று என்ற தம் கொள்கைக் கிணங்க அமைத்துக் கொண்ட நாகரிக மறுப்பே யன்றிப் பிறிதன்று என அறிக. தொல்காப்பியர் வேற்றுமை உருபுகளை வேற்றுமை தோறும் கூறிற்றிலர் என்பதையும், எழுவாய் வேற்றுமை முதல், விளிவேற்றுமை ஈறாக உள்ள எட்டு வேற்றுமைகளின் பொருள்களையும் தெளிவுறுப்பதற்காக முதற்கண் அவ்வேற்றுமைப் பொருட்டன்மையை ஒரு நூற்பாவால் கூறி, அப்பொருண்மையை முடித்து நிற்கும் சொற்களை வாய்பாட்டு வகையாற் பின்னர் கூறிச் செல்வதை நோக்குவார்க்கு, இவ்வாசிரியர் இவ்வாறு நூற்பா செய்தமை முன்னூலோடு முரண்பட்டுத் தமிழ்மொழி மரபோடு பொருந்தாது நிற்றல் புலனாகும்.

இனி, இவ்வாசிரியர் கூறியவாறே திரிபில்லாத பெயரே எழுவாய் வேற்றுமையின் உருபாகும் எனக் கொள்ளின்,

நல்லவர், நல்லாள், செய்தவன், செய்தான் முதலியனவும், இடுகாடு, கருங்குதிரை, துடியிடை முதலியனவும், மரங்கள், ஊரவர், ஊரார் முதலியனவும் முதனிலை நீண்டும் கடைக் குறைந்தும் வரும் பிற பெயர்களும் எழுவாய் வேற்றுமைப் பொருளில் நின்று பயனிலை ஏற்று வாக்கியத்தில் இடம் பெறுதற்குப் பொருந்தாதன என முடிவுகூற வேண்டியதாகும்.

எழுவாயைச் சொல் வரையறைப்படுத்திப் பொருள் நிலையை விடுத்ததேபோல் பயனிலையையும் இவ்வாசிரியர் வினை பெயர் வினாக்கொளால் அதன்பய நிலையே எனச் சொல் வரையறைப்படுத்தி அமைத்துப் போந்தார். சங்கர நமச்சிவாயர், 'யாவர், யார் என்றற் றொக்கத்தன பெயர் வினைகளுள் அடங்காவோ?' என்ற வினாவை எழுப்பி, அதற்கு விடையாகக் கூறுவதனைக் கூர்ந்து நோக்கு வோர்க்கு, இவ்வாசிரியர் சொல் வரையறைப்படிப் பயனிலை யமைத்துக் கூறியதன் குறைபாடும், பொருண்மை சுட்டல் முதலியன இவ்வாசிரியரின் கருத்தைக் கவராததன் விளைவும் புலப்படாநிற்கும்.

இந்நூற்பாவில் உருபு பற்றியும், பயனிலைப்பட்டுவரும் சொற்கள் பற்றியுங் கூறினாரேயன்றி, எழுவாய் வேற்றுமையின் பொருள் இத்தன்மைத்து எனக் கூறாது விடுத்தார். எனவே, எழுவாய் வேற்றுமை பெயரின் தோன்றுநிலைப் பொருளுக்கு, அதாவது செயப்படு பொருள் முதல் விளி ஈறாகக் கூறப்படும் வேறு பொருளல்லாத, நிலைப்பொருளுக்கு உரிமைப்பட்டு, முடிக்கும் பயனிலையை அவாவி நிற்கும் பெயரை முதற்கண் பெற்று, பொருண்மை சுட்டல் முதலிய பொருள் நிலையாம் பயனிலைகளை இரண்டாம் நிலையாகப் பெற்று, செயப்படு பொருள் முதலிய வேற்றுமைகள் போல் வேறு உருபு எதனையும் பெறாது அமையும் எனக் கொள்க.

இனி, தொல்காப்பியர்,

**பல்லா றாகப் பொருண்புணர்ந் திசைக்கும்**
**எல்லாச் சொல்லுக்கும் உரிய வென்ப,**

என விதித்தவாறே எழுவாய் வேற்றுமையின் பொருளை விரித்தற்கு வரும் ஆனவன், ஆனவள், ஆனவர், ஆனது, ஆனவை

ஆகின்றவன், ஆவான், ஆகப்பட்டவன் என இவ்வாறு பெயரையடுத்து வரும் பெயர்ப்பொருள் விளக்கச் சொற்களை முதலாம் வேற்றுமையின் சொல்லுருபுகள் எனலும் ஏற்கத் தக்கதேயாம் என்க.

**(38)**

295. இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத நீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.

இரண்டாவதன் உருபு ஐயே அதன் பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும்.

iraṇṭāvataṉ urupu aiyē ataṉ poruḷ
ākkal aḻittal ataital nīttal
ottal utaimai āṭi ākum.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### The second or accussative case

Ai is the (only) sign of the 2nd case; its meanings are making, destroying, obtaining, renouncing, resembling, possessing and others of a similar nature.

## ஒப்புமைப் பகுதி

இரண்டா குவதே
ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்பு
அவ்விரு முதலில் தோன்றும் அதுவே

(தொல். சொல்.: 71)

காப்பின் ஒப்பின் ஊர்தியின் இழையின்
ஒப்பின் புகழின் பழியின் என்றா
பெறலின் இழவின் காதலின் வெகுளியின்
செறலின் உவத்தலின் கற்பின் என்றா
அறுத்தலின் குறைத்தலின் தொகுத்தலின் பிரித்தலின்
நிறுத்தலின் அளவின் எண்ணின் என்றா
ஆக்கலின் சார்தலின் செலவின் கன்றலின்
நோக்கலின் அஞ்சலின் சிதைப்பின் என்றா

அன்ன பிறவும் இம்முதற் பொருள
என்ன கிளவியும் அதன்பால என்மனார்

(தொல். சொல்.: 72)

ஐயென் னுருபிரண் டாவ ததுவினையும்
எய்தும் குறிப்பும் இயலவரும்...

(நேமி.: 42: 1–2)

இரண்டா வதனுரு பையே யதன்பொரு
ளியற்றவுந் திரிக்கவு மெய்தவும் படூஉந்
திறத்தவும் பிறவுமாஞ் செயப்படு பொருளே

(இ.வி.: 199)

இரண்டாவதன் உருபு ஐயே அதன் பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதீ ஆகும்

(தொ.வி: 57)

ஐயே யிரண்டா வதனுரு பாகும்

(மு.வீ.: 513)

காப்பி னொப்பி னாக்கலி னழித்தலின்
அடைதலி னீத்தலி னஞ்சலி னுடைமையின்
அன்ன பிறவும் அதன்பய னிலையே

(மு.வீ.: 514)

..................இரண்டனுருபு ஐயாம் கன்மத்தின்
முடுகு செயப் படுபொருளே யேற்கும் வினைக் குறிப்பான்
முற்று..................

(சுவாமி.: 42: 1–2)

## மயிலை நாதர்

எ–ன், நிறுத்த முறையானே இரண்டாம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: இரண்டாம் எண்ணுமுறைமைக்கணின்ற வேற்றுமைக்கு ஐயென்பது உருபாம்; அத்னது பொருள் ஒன்றை ஆக்கலும் அழித்தலும் அடைதலும் நீத்தலும் ஒத்தலும் உடைமையு முதலானவையாம், எ – று.

**'ஆதி'** என்றதனால், ஒவ்வாமை முதலானவும் இவற்றின் பரியாயமொழிகளும் கொள்க.

**வ–று.:–**

அறத்தை ஆக்கினான், நூலைக் கற்றான், தேரை ஊர்ந்தான், அணியை அணிந்தான், பொன்னை நிறுத்தான், நெல்லை அளந்தான், [1]நீரைக் கட்டினானென்றற் றொடக்கத்தன ஆக்கல். அறத்தை அழித்தான், மரத்தை அறுத்தான், காமனை வென்றான், பகையைக் கொன்றான், ஊரை எரித்தான், மரத்தைக் குறைத்தா னென்றற் றொடக்கத்தன அழித்தல். அறத்தை அடைந்தான், வீட்டை மேவினான், ஊரை ஒன்றினான், நாட்டை நண்ணினான், குன்றைக் குறுகினா னென்றற் றொடக்கத்தன அடைதல். அறத்தைத் துறந்தான், மறத்தை நீத்தான், வீட்டைவிட்டான், பாட்டை [2]ஒழிந்தானென்றற் றொடக்கத்தன நீத்தல். மண்ணை ஒத்தான், பொன்னை ஒத்தான், புலியை ஒத்தான், சிங்கத்தைப் போன்றானென்றற் றொடக்கத்தன ஒத்தல்.

அருளை யுடையான், [3]கொடையை யுடையான், முடியை யுடையா னென்றற் றொடக்கத்தன உடைமை; வினைக் குறிப்பு.

அவனை ஒவ்வான்,இவனைப் போலானென்றற் றொடக் கத்தன ஒவ்வாமை.அறத்தைக் காத்தான்; வளர்த்தான், பெருக்கினான், படைத்தானென்றற் றொடக்கத்தன ஆக்கல் மொழிப்பரியாயம். பிறவற்றிற்கும் இவ்வாறே வருவன கண்டுகொள்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ – **னின்,** இரண்டாம் வேற்றுமையது இலக்கணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:** இரண்டாம் வேற்றுமையினது உருபு மேற்கூறிய ஐயுருபு ஒன்றுமே; அதன் பொருள்களாவன தன்னை ஏற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படு பொருளாகவும், அழிக்கப்படு பொருளாகவும், அடையப்படு பொருளாகவும், துறக்கப்படு பொருளாகவும், ஒக்கப்படு பொருளாகவும், உடைமைப் பொருளாகவும் இவை போல்வன பிறவாகவும் வேற்றுமை செய்தலாம், **எ–று.**

---

பாட **வேறுபாடு:–**

1. **நிரையைக் கட்டினான்**
2. **ஒழித்தான்**
3. **கொட்டையை.**

ஈண்டுத் தந்துரைந்தன எல்லாம் மேற்போந்த **'ஏற்கும் எவ்வகை'** என்னும் சூத்திரத்திற்கு இயையவந்த இசையெச்சம். மேல் வருவனவும் அன்ன.

**வ—று.:—**

குடத்தை வனைந்தான், உடைத்தான், அடைந்தான், துறந்தான், ஒத்தான், உடையான் எனவரும். குடந்தை ஒத்தான் என்புழிச் சுதந்திரம் இன்றி ஒழுகினான் என்பது பொருள்.

**'ஆதி'** என்றமையான் இவ்வாறு செயப்படுபொருளாக வேற்றுமை செய்தலெல்லாம் கொள்க.

ஒருவன் ஓர்வினை செய்ய அதனால் தோன்றிய பொருள்யாது அது செயப்படுபொருள் என்பதாம். ஒருவன் ஓர்வினை செய்யத் தொழிற்படு பொருள் யாது அது செய்ப்படுபொருள் எனினும் அமையும். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் கிளவி.

அழித்தல் முதலிய வினை செய்தவழித் தோன்றிய காரியங்கள் என்னை யெனின்:— அழிபொருளாதன் முதலியனவும் குறிப்பு வினையுள் ஒன்றனை உடையனாகிய காலத்து அஃது உடைமையாதலும் ஆம். பிறவும் அன்ன.

*இச் செயப்படுபொருள் கருத்துண்டாதல், கருத்தின் றாதல், இருமையுமாதல், ஈருருபு இணைதல், கருத்தா வாதல், அகநிலையாதல், தெரிநிலை என இவை முதலியன வாகியும் வரும் எனக் கொள்க. இவற்றிற்கு உதாரணம்: சோற்றை உண்டான் எனவும்; சோற்றைக் குழைத்தான் எனவும்; எறும்பை மிதித்து வழியைச் சென்றான், பசும்புல்லை மிதித்துப் பலவூரை அடைந்தான், தூளொடு கூழையுண்டான், நஞ்சினைக் கலந்த பாலைக் குடித்தான், கத்தரிக்காயையும் புழுவையும் கறித்தான், பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் எனவும்; ஆரியனை ஐயுற்ற பொருளை வினாவினான் எனவும்; பசுவினைப் பாலினைக் கறந்தான், யானையைக் கோட்டைக் குறைத்தான், பசுவினது யானையது என்பனபோல ஆரியனது என வாராமை பற்றி இங்ஙனம் ஈருருபு இணைதல் இருவகைப்பட்டன எனவும்; தன்னைப் புகழ்ந்தான், தன்னைக் குத்தினான் தன்னைப் பேணினான், தன்னைக் காதலித்தான் எனவும்; வருதலைச் செய்தான் எனவும்; மாடம் செயப்பட்டது எனவும் முறையே காண்க.*

*தெரிநிலையாவது வினைமுதல் உருபு ஏற்றும் செய்யப்படுபொருளே எனத் தெரிய நிற்றல். எயிலை இழைத்தான், பொருளைப் பெற்றான், கயிற்றை அறுத்தான் என முறையே இயற்றப்படுதலும் எய்தப்*

***படுதலும் வேறுபடுக்கப்படுதலும் முதலியன அவற்றுள்ளே அடங்கும். 'முதலியன' என்றதனால், ஆசிரியன் மாணாக் கனை ஊர்க்குப் போக்கினான், தாய் மகளை ஊர்க்குப் போக்கினாள், என்புழி மாணாக்கன் மகள் என்னும் இருவரும் போதலாலே வினைமுதலாயும், ஏவப்படுதலால் செயப்படு பொருளாயும், ஏவுவித்துக் கொள்ளுதலால் ஏவுதற் கருத்தாவாயும், ஏவப்போதலால் இயற்றுதற் கருத்தாவாயும் வந்தன.***

இவ்வேற்றுமை தன் பெயர்ப்பொருளை மேற் போந்த கருத்தனாலாகிய காரியமாக்குதலின் இரண்டாம் வேற்றமை எனப்பட்டது.

## கூழங்கைத் தம்பிரான்

சூ–ம், இரண்டாம் வேற்றுமை இலக்கணம் கூறுகின்றது.

இ–ள்.: **இரண்டாவதன் உருபு ஐயே** – இரண்டாம் எண்ணின் முறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு ஐ உருபாம்; **அதன் பொருள்** – அதனது பொருளாவது, **ஆக்கல் அழித்தல்** – ஒன்றை ஆக்கலும் ஒன்றை அழித்தலும், **அடைதல் நீத்தல்** – ஒன்றை அடைதலும் ஒன்றை நீத்தலும், **ஒத்தல் உடைமை ஆதி யாகும்** – ஒன்றை ஒத்தலும் ஒன்றை உடைமையும் இவை முதலானவை ஆகும், **எ–று.**

**உ–ம்.:–**

அறத்தை ஆக்கினான், நூலைக் கற்றான் எனவும்; மரத்தை அறுத்தான், வீட்டை விட்டான் எனவும்; பொன்னை ஒத்தான், புலியைப் போன்றான் எனவும்; அருளை உடையான், கொடையை உடையான் எனவும் வரும். பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** இரண்டாம் வேற்றுமையதிலக்கண முணர்த்துகின்றது.

இ–ள்.:– **இரண்டாவதன்** – இரண்டாம் வேற்றுமையினது, **உருபு**– உருபாவது, **ஐயே**–முன் சொல்லப்பட்ட ஐ யொன்றுமே யாம், **அதன்**–அதனுடைய, **பொருள்**–பொருள்களாவன, **ஆக்கல்**–ஆக்கப்படுபொருளும், **அழித்தல்**– அழிக்கப்படுபொருளும், **அடைதல்**–அடையப்படுபொருளும், **நீத்தல்**– துறக்கப்படுபொருளும், **ஒத்தல்** – ஒக்கப்படுபொருளும், **உடைமை**– உடைமைப்பொருளும், **ஆதியாகும்** – முதலியனவாக அவ்வுருபை யேற்ற பெயர்ப் பொருள்கள் வேறுபட்ட செயப்படுபொருள்களாம், **எ–று.**

குடத்தை வனைந்தான், மரத்தை வளர்த்தான் – ஆக்கப்படுபொருள். கோட்டையை யிடித்தான், வேலியைப் பிரித்தான்–அழிக்கப்படுபொருள், ஊரையடைந்தான், தேரையூர்ந்தான்,–அடையப்படுபொருள். மனைவியைத் துறந்தான், பதியைநீத்தான்–துறக்கப்படுபொருள். புலியை

யொத்தான், வேளை நிகர்த்தான்,– ஒக்கப்படுபொருள். பொன்னை யுடையான், புலியையுடையான்,–உடைமைப் பொருள்.

செயப்படுபொருளாவது, வினைமுதற் றொழிற் பயனுறுவது. குடத்தை வனைந்தான் என்கிறவிடத்தே மண்கூட்டுகை, திரிகை சுழற்றுகை முதலானவை வினைமுதலினுடைய தொழிலாம், குடத்தினது தோன்றுதல் அத்தொழிலின் பயனாம், அப்பயனுறுவது குடமாதலாற் குடஞ்செயப்படு பொருளாகும். கோட்டையை யிடித்தான் என்கிற விடத்தே கோட்டையை யிடித்தல் செய்பவனது தொழிலாம், அதனது வடிவு குலைதல் அத் தொழிலின் பயனாம், அப்பயனுறுவது கோட்டையாதலாற் கோட்டை செயப்படு பொருளாகும். ஊரையடைந்தான் என்கிற விடத்தே நடந்து செல்லுதல், கருத்தாவினது தொழிலாம், ஊரைச்சேர்தல் அத்தொழிலின் பயனாம், அப்பயனுறுவது ஊராதலால் ஊர் செயப்படுபொருளாகும். மனைவியைத் துறந்தான் என்கிறவிடத்தே வெறுத்துவிடுதல் வினைமுதலின் றொழிலாம், உரிமைக்கேடு அதன் பயனாம், அப்பயனுறுவது மனைவியாதலான் மனைவி செயப்படு பொருளாகும். புலியையொத்தான் என்கிறவிடத்தே அஞ்சாது பாய்ந்து கொல்லுதலாற் புலியை உபமானமாகக் கொள்ளுதல் கருத்தனது தொழிலாம், உபமானமாகக் கொள்ளப்படுதல் அத் தொழிலின் பயனாம், அப்பயனுறுவது புலியாதலால் அது செயப்படு பொருளாகும். பொன்னையுடையான், என்கிற விடத்தே சம்பாதித்தல் வினை முதலின் றொழிலாம், தனதாகுகை அத்தொழிலின் பயனாம் அப்பயனுறுவது பொன்னாதலாற் பொன் செயப்படு பொருளாகும், மற்றவையு மிப்படியே.

இன்னுஞ் செயப்படுபொருள் குன்றாத முதனிலைகளின் மேல் வி முதலிய விகுதிகள் சேர்ந்து வருவனவாகிய பிறவினைகளிலே சிலவற்றிற்கு இயற்றும் வினைமுதல் இரண்டாம் வேற்றுமையில் வருதலால், அரசன் பகைவரைச் சிறைச்சாலையை யடைவித்தான் என விரண்டு செயப்படு பொருள் வரும். சிலவற்றிற்கு அது மூன்றாம் வேற்றுமையிலே வருதலால் 'சாத்தன் கொற்றனாற் பசுவைப் புரப்பித்தான்' என அப்படி வாராவாம். செயப்படுபொருள் குன்றாத தன்வினைகளி லெங்குமிரண்டு செயப்படுபொருள் வருதலில்லையோ வென்றால், 'பசுவைப் பாலைக் கறந்தான்', 'யானையைக் கோட்டைக் குறைத்தான்' எனச் சில விடங்களிலே வருதலுமுண்டு; ஆனால், இப்பசுவையும் யானையையுஞ் செயப்படு பொருளாகக் குறியாமல் நீக்கப்பொருளாகக் குறித்தால், பசுவினின்றும் பாலைக் கறந்தான், யானை யினின்றுங் கோட்டைக் குறைத்தான் எனவும்; சம்பந்தப்

பொருளாகக் குறித்தால் பசுவினது பாலைக் கறந்தான், யானையினது கோட்டை குறைத்தான், எனவும் வருதலாற் சிறப்பில்லை யென்றறிக. மற்றவைகளு மிப்படியே.

ஆதியென்தனால் வீட்டை விரும்பினான், நூற்பொருளை யறிந்தாய், என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற் றொழில்களுக்கு விடனமாகிய வீடும் நூற்பொருளும் செயப்படு பொருளாகுகை முதலானவையுங் கொள்க. அல்லாமலும் அச் செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும், கருத்தின்றிச் செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூன்று வகையாம். அவை முறையே சோற்றையுண்டான், சோற்றைக் குழைத்தான், பதரையுநெல்லையும் பணத்திற்குக் கொண்டான், என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

இரண்டாம்வேற்றுமையுருபும் பயனிலையுங் கூறுஞ் சூத்திரம் யாது?

இரண்டா வதனுரு பையே யதன்பொருள்
ஆக்க லழித்த லடைத னீத்தல்
ஒத்த லுடைமை யாதி யாகும்.

(இரண்டாவதன் உருபு ஐயே அதன் பொருள்
ஆக்கல் அழித்தல் அடைதல் நீத்தல்
ஒத்தல் உடைமை ஆதி ஆகும்.)

**இ–ள்.:** இரண்டாம் வேற்றுமையினதுருபு முன் சொல்லப்பட்ட ஐ யொன்றுமேயாம். அதன்பொருள்களாவன, ஆக்கப் படுபொருளும், அழிக்கப்படுபொருளும், அடையப்படுபொருளும், துறக்கப்படுபொருளும், ஒக்கப்படுபொருளும், உடைமைப் பொருளும் முதலியனவாக அவ்வுருபையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட செயப்படுபொருள்களாம், **எ–று.**

(உதாரணம்)

குடத்தை வனைந்தான்................ஆக்கப்படுபொருள்.

கோட்டையை யிடித்தான்.....................அழிக்கப்படுபொருள்.

ஊரை யடைந்தான்...................அடையப்படுபொருள்.

மனைவியைத் துறந்தான்................துறக்கப்படுபொருள்.

புலியை யொத்தான்.................................ஒப்புப்பொருள்.

பொன்னை யுடையான்........................உடைமைப்பொருள்.

செயப்படுபொருளாவது வினைமுதற்றொழிற்பயனுறுவது. செயப்படுபொருள், செய்பொருள், கருமம். காரியம் என்பன ஒரு பொருட்சொற்கள்.

**உ–ம்.:–**

குடத்தை வனைந்தான் என்புழி மண் கூட்டுகை திரிகை

சுழற்றுகை முதலியன வினை முதலினது தொழில்; குடத்தினது தோன்றுதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது குடமாதலாற் குடஞ்செயப்படுபொருள். கோட்டையை யிடித்தான் என்புழிக் கோட்டையை யிடித்தல் வினைமுதலினது தொழில்; அதனது வடிவு குலைதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது கோட்டையாதலாற் கோட்டை செயப்படுபொருள். ஊரையடைந்தான் என்புழி நடந்து செல்லுதல் வினைமுதலினது தொழில்; ஊரைச்சேர்தல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது ஊராதலால் ஊர் செயப்படுபொருள். மனைவியைத் துறந்தான் என்புழி வெறுத்துவிடுதல் வினைமுதலினது தொழில்; உரிமைக்கேடு அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது மனைவியாதலன் மனைவி செயப்படுபொருள். புலியை யொத்தான் என்புழி அஞ்சாது பாய்ந்து கொல்லுதலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் வினைமுதலினது தொழில்; உவமானமாகக் கொளப்படுதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது புலியாதலாற் புலி செயப்படுபொருள். பொன்னையுடையான் என்புழிச் சம்பாதித்தல் வினை முதலினது தொழில்; தனதாகுகை அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது பொன்னாதலாற் பொன் செயப்படுபொருள்.

ஆதி என்றதனால், வீட்டை விரும்பினான்; நூற்பொருளை யறிந்தான் என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற் றொழில்களுக்கு விடயமாகிய வீடும் நூற்பொருளுஞ் செயப்படு பொருளாகுகை முதலானவையுங் கொள்க.

அச் செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும், கருத்தின்றிச் செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூவகைப்படும்.

**உ—ம்.:—**

(1) சோற்றையுண்டான் என்புழிச், சோறு உண்ணப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட செயப்படு பொருள்.

(2) சோற்றைக் குழைத்தான் என்புழிச், சோறு, குழைக்கப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள்.

(3) பதரையு நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் என்புழிப், பதர், கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள்; நெற் கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட செயப்படுபொருள்.

செயப்படுபொருள் குன்றாத முதனிலைகளின்மேல் விபி முதலிய விகுதிகள் புணர்ந்து வருவனவாகிய பிறவினைகளுள்ளே, சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல்

இரண்டாம் வேற்றுமையில் வருதலால் இரண்டு செயப்படு பொருள் வரும்; சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் மூன்றாம்வேற்றுமையில் வருதலால், செயப்படுபொருள் ஒன்றே வரும், இரண்டு வராவாம்.

உ–ம்.:–

(1) பகவரைச் சிறைச்சாலையை யடைவித்தான்; சாத்தனைச் சோற்றை யுண்பித்தான்.

(2) கொற்றனாற் பூதனைக் கொல்வித்தான், சாத்தனாற் பசுவைப் புரப்பித்தான்.

செயப்படுபொருள் குன்றாத தன்வினைகளுள்ளே, கறத்தல், குறைத்தல் முதலிய சிலவினைகளுக்கு இரண்டு செயப்படுபொருள்கள் வருதலுமுண்டு; வரினும், முன்னின்ற செயப்படுபொருள் சிறப்புடைத்தன்றெனக் கொள்க.

உ–ம்.:–

பசுவைப் பாலைக் கறந்தான்; யானையைக் கோட்டைக் குறைத்தான் என வரும். இவற்றுள், கறத்தலாவது உள்ளிருக்கு நெகிழ்ச்சிப் பொருட்பிரிவை யுண்டாக்குந் தொழிலை யுண்டாக்குந்தொழில்; ஆதலால், வினைமுதற் றொழிற்பயன் இரண்டாகவே, அப்பயனுறுவதாகிய செயப்படுபொருளும் இரண்டாயின. எங்ஙனமெனின்;– உள்ளிருக்கு நெகிழ்ச்சிப் பொருள் பால்; அப்பாற்கும் பசுவிற்கும் பிரிவையுண்டாக்குந் தொழில் பாலிலிருக்கும் வீழ்ச்சி; அவ்வீழ்ச்சியை யுண்டாக்குந் தொழில் முலைபற்றியுருவல்; இவற்றுள் வீழ்ச்சித்தொழிலானிகழும் பிரிவாகிய பயனுறுவது பசுவெனவும், முலைபற்றி யுருவற் றொழிலானிகழும் வீழ்ச்சியாகிய பயனுறுவது பாலெனவும் அறிக. மற்றை யுதாரணமும் இப்படியே காண்க. குறைத்தலாவது, இங்கே பிரிவை யுண்டாக்குந் தொழிலை யுண்டாக்குத்தொழில். இப்பசுவையும் யானையையுஞ் செயப்படுபொருளாகக் கருதாது, நீக்கப்பொருளாகக் கருதின், பசுவினின்றும் பாலைக்கறந்தான், யானையினின்றுங் கோட்டைக் குறைத்தான் என ஐந்தனுருபும், சம்பந்தப்பொருளாகக் கருதின், பசுவினது பாலைக்கறந்தான், யானையினது கோட்டைக் குறைத்தான் என ஆறனுருபும் வருமெனக் கொள்க.

இன்னும் அச்செயப்படுபொருள், அகநிலை யாகவும், தானே கருத்தாவாகவும் வரும்.

உ–ம்.:–

(1) நடத்தலைச் செய்தான்; உண்டலைச்செய்தான் எனத்

தெரிநிலை வினைகளை விரித்துரைக்குமிடத்துச் செயப்படுபொருள் அகநிலையாய் வந்தது.

(2) தன்னைக் குத்தினான், தன்னைப் புகழ்ந்தான் எனச் செயப்படுபொருளே கருத்தாவுமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** இரண்டாம் வேற்றுமை யிலக்கண முணர்த்திற்று.

**இ—ள்.: இரண்டாவதனுரு பையே** – இரண்டாம் வேற்றுமையினுருபு மேற்கூறிய ஐயுருபு ஒன்றுமேயாம், அதன்பொருளாவன, **ஆக்கல்** – தன்னையேற்ற பெயர்ப்பொருளை ஆக்கப் படுபொருளாகவும், **அழித்தல்** – அழிக்கப்படுபொருளாகவும், **அடைதல்** – அடையப்படு பொருளாகவும், **நீத்தல்** –நீக்கப் படுபொருளாகவும், **ஒத்தல்** – ஒக்கப்படு பொருளாகவும், **உடைமை யாதி யாகும்** – உடைமைப் பொருளாகவும் வேற்றுமை செய்தல் முதலியவாம், எ—று.

**வ—று.:–**

குடத்தை வனைந்தான், குடத்தை யுடைத்தான், குடத்தைச் சேர்ந்தான், குடத்தை யிழந்தான், குடத்தை யொத்தான், குடத்தை யுடையன், எனவரும். '**ஆதி**' யென்றதினாலே, இவ்வாறு செய்யப்படு பொருளாக வேற்றுமை செய்தலெல்லாங் கொள்க.

ஒரு வினைமுதல் செய்யுந் தொழிலினை யேற்கும் பொருள் யாது அது செயப்படுபொருளாம். வினை முதல் செய்யுந் தொழிற் பயனுறுவது செயப்படுபொருளென்றா லென்னை யெனின், சாத்தன் பகைஞரை வென்றான் எனின், போர் செய்தல் வினை முதலின்தொழில், வெற்றியுண்டாதல் அதனால் வருபயன். அப்பயனை யடைந்தது பகைஞரென வேண்டுதலாற் பொருந்தாமை யுணர்க. வென்றானென்பதில் வெல்லுதலன்றோ வினைமுதலின் தொழிலாவதெனின் வெல்லப்படுதல் பகைஞராதலாற் செய்யப்படுபொருளென்பது தெளிவாக விளங்கிற்றென்க. அங்ஙனமாயின் தொழிற் பயனுறுவ தின்றோவெனின், ஆசிரியர் தொல்காப்பியனார்,

**"இரண்டாகுவதே**
**ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்**
**பவ்விரு முதலிற் றோன்று மதுவே"**

என்று கூறிய சூத்திரத்திற்குச் செய்யப்படுபொருள் இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவதுமென மூன்று வகைப்படுமெனவும்; அவற்றுள், முன்னைய விரண்டுந் தொழிலுறுவதென்றும்; பின்னைய தொன்றும் பெரும்பாலுந் தொழிலுறுவதுஞ் சிறுபான்மை தொழிற்பயனுறுவதுமென்று உரையாசிரியருரை யெழுதினராயினும் அச் சிறுபான்மை

பற்றிச் செயப்படுபொருளெனல் கூடாதென்பதற்குச் செயப்படு பொருளென்னு மிந்த வாய்பாடும், ஒரு வினைமுதல் செய்யுந் தொழிலை யுறுவது செயப்படுபொருளென அவரெழுதிய உரையுமே சான்றாதலுணர்க. ஒருவனோர் வினை செய்ய அதினால் தோன்றிய பொருள் செயப்படு பொருளெனினும் அமையும். செயப்படுபொருள் செய்பொருள் கருமம், காரியம் எனுமிவை நான்கிற்கும் பொருளொன்று. இனி இச் செயப்படுபொருள் கருத்துண்டாதல், கருத்தின்றாதல் இருமையுமாதல் ஈருருபிணைதல் கருத்தாவாதல் – அகநிலை யாதல் தெரிநிலை என இவை முதலியனவாகவும் வருமெனக் கொள்க.

**உ–ம்.:–**

சோற்றையுண்டான் என்பது கருத்துண்டாதல்; சோற்றைக் குழைத்தான்; என்பது கருத்தின்றாதல்; எறும்பை மிதித்து வழியைச் சென்றான், பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் – இவை இருமையுமாதல்; ஆசிரியனையை யுற்றபொருளை வினாவினான் என்பதும் பசுவினைப் பாலைக் கறந்தான் என்பதும் பசுவினது பாலைக் கறந்தான் என்பது போல ஆசிரியனது என வாராததினாலே ஈருருபிணைத லிருவகைப்படுமெனக் காண்க. தன்னைப்புகழ்ந்தான் என்பது கருத்தாவதால், வருதலைச்செய்தான்–என்பது அக நிலையாதல், மாடஞ் செய்யப்பட்டது என்பது தெரிநிலை, இதுவினை முதலுருபேற்றுஞ் செய்யப்படு பொருளே யெனத் தெரிய நிற்பது, இவ்வேற்றுமைகள் தன் பெயர்ப்பொருளை மேலே சொல்லிய எழுவாய்க்கண் வருங் கருத்தானாலாகிய காரியமாக்குதலாலிரண்டாம் வேற்றுமை யெனப்பட்டது. உருபு ஐ, பொருள் உடைமையாதி யாகும் என இருமுடிபாக்குக.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– இரண்டாவதன்** – இரண்டாம் வேற்றுமையினது, **உருபு** – உருபாவது; **ஐயே** – (முன்சொல்லப்பட்ட) ஐ ஒன்று மேயாம்; **அதன்** – அதனுடையு, **பொருள்** – பொருள்களாவன – **ஆக்கல்** – ஆக்கப்படுபொருளும், **அழித்தல்** – அழிக்கப்படுபொருளும், **அடைதல்** – அடையப்படுபொருளும், **நீத்தல்** – நீக்கப்படுபொருளும், **ஒத்தல்** – ஒக்கப்படுபொருளும், **உடைமை** – உடைமைப் பொருளும், **ஆதி ஆகும்** – முதலியனவாகத் தன்னை (உருபை) ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்துதலாம்.

**குறிப்பு:–**

எனவே, இவ்வேற்றுமையின் பொருள் செயப்படுபொருள் என்றதாயிற்று. செயப்படுபொருளாவது – கருத்தாவின்

தொழிலின் பயனை அடைவது; 'குடத்தைவனைந்தான்' என்பதில் வனைதல் – கருத்தாவினது தொழில்; உருவமைதல் – அத்தொழிலின் பயன்; அப்பயனை அடைவது குடம்; ஆதலால் குடம் – செயப்படுபொருள். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருளன.

உ–ம்:–

| | | |
|---|---|---|
| குடத்தை வனைந்தான் | – | ஆக்கப்படுபொருள் |
| கோட்டையை இடித்தான் | – | அழிக்கப்படுபொருள் |
| ஊரைச் சேர்ந்தான் | – | அடையப்படுபொருள் |
| வீட்டை விட்டான் | – | நீக்கப்படுபொருள் |
| புலியைப் போன்றான் | – | ஒக்கப்படுபொருள் |
| பொன்னை உடையான் | – | உடைமைப் பொருள் |

(வினையைநோக்கி இன்ன பொருள் என்றறிக).

இனிச் சிலவிடங்களில் தன்வினை பிறவினைகட்கு இரண்டு செயப்படுபொருள் வருதலுமுண்டு. உ–ம்;– 'இடையன் பசுவைப் பாலைக் கறந்தான்', 'அரசன் பகைவரைச் சிறைச்சாலையை அடைவித்தான்'. இதனை வடநூலார் 'த்விகர்ம கர்த்தரி ப்ரயோகம்' என்பர்.

'ஆதி' என்றதனால் – 'வீட்டை விரும்பினான்', 'நூற் பொருளை' அறிந்தான் என விரும்பப்படுதல், அறியப்படுதல் முதலியனவுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: இரண்டாவதன் உருபு ஐயே** – இரண்டாம் வேற்றுமையினதுருபு முன் சொல்லப்பட்ட ஐ யொன்றுமே யாம், **அதன் பொருள்** – அதன் பொருள்களாவன, **ஆக்கல்**–ஆக்கப்படுபொருளும், **அழித்தல்**–அழிக்கப்படு பொருளும், **அடைதல்**–அடையப் படுபொருளும், **நீத்தல்** – துறக்கப்படு பொருளும், **ஒத்தல்**–ஒக்கப்படு பொருளும், **உடைமை** – உடைமைப்பொருளும், **ஆதி ஆகும்** – முதலியனவாக அவ்வுருபை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட செயப்படு பொருள்களாம், **எ–று.**

**உ–ம்.:**

குடத்தை வனைந்தான் . . . .ஆக்கப்படுபொருள்.

கோட்டையை யிடித்தான். . . அழிக்கப்படுபொருள்.

ஊரையடைந்தான். . . . .. . . . அடையப்படுபொருள்.

மனைவியைத் துறந்தான். . . துறக்கப்படுபொருள்.

புலியையொத்தான். . . . . . . ஒக்கப்படுபொருள்.

பொன்னையுடையான். . . . . உடைமைப்பொருள்.

செயப்படு பொருளாவது வினைமுதற் றொழிற் பயனுறுவது. செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒரு பொருட்சொற்கள்.

உ – ம்.:–

குடத்தை வனைந்தான் என்புழி மண் கூட்டுகை, திரிகை சுழற்றுகை முதலியன வினைமுதலினது தொழில்; குடத்தினது தோன்றுதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது குடமாதலாற் குடஞ் செயப்படுபொருள். கோட்டையை யிடித்தான் என்புழிக் கோட்டையை யிடித்தல் வினைமுதலினது தொழில்; அதனது வடிவு குலைதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது கோட்டை ஆதலாற் கோட்டை செயப்படு பொருள். ஊரையடைந்தான் என்புழி நடந்து செல்லுதல் வினை முதலினது தொழில்; ஊரைச் சேர்தல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது ஊராதலால் ஊர் செயப்படுபொருள். மனைவியைத் துறந்தான் என்புழி வெறுத்து விடுதல் வினைமுதலினது தொழில்; உரிமைக்கேடு அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது மனைவியாதலான் மனைவி செயப்படுபொருள். புலியையொத்தான் என்புழி அஞ்சாது பாய்ந்து கொல்லுதலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் வினைமுதலினது தொழில்; உவமானமாகக் கொள்ளப்படுதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது புலியாதலாற் புலி செயப்படுபொருள். பொன்னை யுடையான் என்புழிச் சம்பாதித்தல் வினைமுதலினது தொழில்; தனதாகுகை அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது பொன்னாதலாற் பொன் செயப்படுபொருள்.

'ஆதி' என்றதனால், வீட்டை விரும்பினான், நூற்பொருளை யறிந்தான் என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற் றொழில்களுக்கு விடயமாகிய வீடும் நூற்பொருளுஞ் செயப்படுபொருளாகுகை முதலானவையுங் கொள்க.

அச் செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும் கருத்தின்றிச் செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூவகைப்படும்.

உ–ம்.:–

சோற்றை யுண்டான் என்புழிச் சோறு, உண்ணப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட, செயப்படுபொருள்.

சோற்றைக் குழைத்தான் என்புழி, சோறு குழைக்கப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள்.

பதரையு நெல்லையும் மணத்திற்குக் கொண்டான் என்புழிப் பதர், கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள்; நெல், கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட, செயப்படுபொருள்.

செயப்படுபொருள் குன்றாத முதனிலைகளின் மேல் வி பி முதலிய விகுதிகள் புணர்ந்து வருவனவாகிய பிறவினை களுள்ளே, சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் இரண்டாம் வேற்றுமையில் வருதலால், இரண்டு செயப்படு பொருள் வரும்; சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் மூன்றாம் வேற்றுமையில் வருதலால், செயப்படுபொருள் ஒன்றே வரும், இரண்டு வாராவாம்.

உ-ம்.:-

பகைவரைச் சிறைச்சாலையை யடைவித்தான், சாத்தனைச் சோற்றை யுண்பித்தான்.

கொற்றனாற் பூதனைக் கொல்வித்தான், சாத்தனாற் பசுவைப் புரப்பித்தான்.

செயப்படுபொருள் குன்றாத தன்வினைகளுள்ளே, கறத்தல் குறைத்தல் முதலிய சில வினைகளுக்கு இரண்டு செயப்படு பொருள்கள் வருதலுமுண்டு; வரினும் முன்னின்ற செயப்படுபொருள் சிறப்புடைத்தன்றெனக் கொள்க.

உ-ம்.:-

பசுவைப் பாலைக்கறந்தான், யானையைக் கோட்டைக் குறைத்தான் என வரும். இவற்றுள், கறத்தலாவது உள்ளிருக்கு நெகிழ்ச்சிப் பொருட்பிரிவை யுண்டாக்குந் தொழிலை யுண்டாக்குந்தொழில்; ஆதலால், வினைமுதற் றொழிற் பயன் இரண்டாகவே அப்பயனுறுவதாகிய செயப்படுபொருளும் இரண்டாயின. எங்ஙனமெனின்;- உள்ளிருக்கு நெகிழ்ச்சிப்பொருள் பால், அப்பாற்கும் பசுவிற்கும் பிரிவை யுண்டாக்குந் தொழில் பாலிலிருக்கும் வீழ்ச்சி; அவ்வீழ்ச்சியை யுண்டாக்குந் தொழில் முலைபற்றி யுருவல்; இவற்றுள் வீழ்ச்சித் தொழிலானிகழும் பிரிவாகிய பயனுறுவது பசுவெனவும், முலைபற்றி யுருவற் றொழிலானிகழும் வீழ்ச்சியாகிய பயனுறுவது பாலெனவும் அறிக. மற்றை யுதாரணமும் இப்படியே காண்க. குறைத்தலாவது, இங்கே பிரிவை யுண்டாக்குந் தொழிலை யுண்டாக்குந் தொழில். இப் பசுவையும் யானையையுஞ் செயப்படுபொருளாகக் கருதாது நீக்கப் பொருளாகக் கருதின், பசுவினின்றும் பாலைக் கறந்தான், யானையினின்றுங் கோட்டைக் குறைத்தான் என ஐந்தனுருபும், சம்பந்தப் பொருளாகக் கருதின் பசுவினது பாலைக் கறந்தான், யானையினது கோட்டைக் குறைத்தான் என் ஆறனுருபும், வருமெனக் கொள்க.

இன்னும் அச்செயப்படுபொருள், அகநிலையாகவும், தானே கருத்தாவாகவும், வரும்.

**உ–ம்.:** நடத்தலைச் செய்தான்; உண்டலைச் செய்தான் எனத் தெரிநிலை வினைகளை விரித்துரைக்கு மிடத்துச் செயப்படுபொருள் அகநிலையாய் வந்தது.

தன்னைக் குத்தினான்; தன்னைப் புகழ்ந்தான் எனச் செயப்படுபொருளே கருத்தாவு மாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.: இரண்டாவதன் உருபு ஐயே**–இரண்டாம் வேற்றுமையின துருபு முன்சொல்லப்பட்ட ஐயொன்றுமேயாம், – **அதன்பொருள்** – அதன் பொருள்களான, – **ஆக்கல்** – ஆக்கப்படுபொருளும் – **அழித்தல்** – அழித்க்கப்படுபொருளும், – **அடைதல்** – அடையப்படுபொருளும், – **நீத்தல்** – துறக்கப்படுபொருளும், – **ஒத்தல்** – ஒக்கப்படுபொருளும், – உடைமை – உடைமைப்பொருளும், – **ஆதி ஆகும்** – முதலியனவாக அவ்வுருபையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட செயப்படுபொருள்களாம். **எ–று.**

**(உதாரணம்)**

குடத்தை வனைந்தான்.................. ஆக்கப்படுபொருள்
கோட்டையை யிடித்தான்............ அழிக்கப்படுபொருள்
ஊரை யடைந்தான்....................... அடையப்படுபொருள்
மனைவியைத் துறந்தான்............. துறக்கப்படுபொருள்
புலியை யொத்தான்............................ஒக்கப்படுபொருள்
பொன்னை யுடையான்.................... உடைமைப்பொருள்

செயப்படுபொருளாவது வினைமுதற்றொழிற் பயனுறுவது. செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட்சொற்கள்,

உ–ம் குடத்தை வனைந்தான் என்புழி மண் கூட்டுகை திரிகை சுழற்றுகை முதலியன வினைமுதலினது தொழில்; குடுத்தினது தோன்றுதல் அத்தொழிலின்பயன்; அப்பயனுறுவது குடமாதலாற் குடஞ்செயப்படுபொருள், கோட்டையை யிடித்தான் என்புழிக் கோட்டையை யிடித்தல் வினைமுதலினது தொழில்; அதனது வடிவுகுலைதல் அத்தொழிலின்பயன்; அப்பயனுறுவது கோட்டையாதலாற் கோட்டை செயப்படுபொருள், ஊரை யடைந்தான் என்புழி நடந்துசெல்லுதல் வினைமுதலினது தொழில்; ஊரைச்சேர்தல் அத்தொழிலின்பயன்; அப்பயனுறுவது ஊராதலால் ஊர் செயப்படுபொருள். மனைவியைத் துறந்தான் என்புழி வெறுத்துவிடுதல் வினைமுதலினது தொழில், உரிமைக்கேடு அத்தொழிலின்பயன்; அப்பய னுறுவது மனைவியாதலான் மனைவி செயப்படு பொருள், புலியை யொத்தான் என்புழி அஞ்சாது பாய்ந்து கொல்லு தலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் வினை

முதலினது தொழில்; உவமானமாகக் கொள்ளப்படுதல் அத்தொழிலின் பயன்; அப்பயனுறுவது புலியாதலாற் புலி செயப்படுபொருள், பொன்னை யுடையான் என்புழிச் சம்பாதித்தல் வினைமுதலினது தொழில்; தனதாகுகை அத்தொழிலின்பயன்; அப்பயனுறுவது பொன்னாதலாற் பொன் செயப்படுபொருள்.

ஆதி என்றதனால், வீட்டை விரும்பினான்; நூற்பொருளை யறிந்தான் என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற்றொழில்களும் விடயமாகிய வீடும் நூற்பொருளுஞ் செயப்படுபொருளாகுகை முதலானவையுங்கொள்க.

அச்செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும், கருத்தின்றிச்செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூவகைப்படும்.

(1) உ–ம் சோற்றையுண்டான் என்புழிச், சோறு, உண்ணப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட செயப்படுபொருள்.

(2) சோத்தைக் குழைத்தான் என்புழிச், சோறு, குழைக்கப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள். (ஈண்டுக் குழைத்தான் என்பது பதத்தின்மேற்பட வேகப்படுதலை யென்றறிக.)

(3) பதரையு நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் என்புழிப், பதர், கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்படாத செயப்படுபொருள்; நெற் கொள்ளப்படுவதாக வினைமுதலால் இச்சிக்கப்பட்ட செயப்படுபொருள்.

செயப்படுபெருள் குன்றாத முதனிலைகளின்மேல் விபி முதலிய விகுதிகள் புணர்ந்து வருவனவாகிய பிறவினைகளுக்குள்ளே, சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் இரண்டாம் வேற்றுமையில் வருதலால், இரண்டுசெயப்படு பொருள் வரும்; சிலவற்றிற்கு, இயற்றும் வினைமுதல் மூன்றாம் வேற்றுமையில் வருதலால்; செயப்படுபொருள் ஒன்றேவரும்; இரண்டு வாராவாம்.

(1) உ–ம் பகைவரைச் சிறைச்சாலையையடைவித்தான்; சாத்தனைச் சோற்றையுண்பித்தான், இருசெயப்படுபொருள் வந்தமை காண்க.

(2) கொற்றனாற் பூதனைக் கொல்வித்தான்; சாத்தனாற் பசுவைப் புரப்பித்தான். செயப்படுபொருள் ஒவ்வொன்றே வந்தமை காண்க.

செயப்படுபொருள் குன்றாத தன்வினைகளுள்ளே, கறத்தல், குறைத்தல் முதலிய சில வினைகளுக்கு இண்டு செயப்படுபொருள்கள் வருதலுமுண்டு; வரினும், முன்னின்ற செயப்படுபொருள் சிறப்புடைத்தன்றெனக்கொள்க.

உ–ம் பசுவைப் பாலைக்கறந்தான்; யானையைக் கோட்டைக்குறைத்தான் எனவரும், இவற்றுள்,

கறத்தலாவதுஉள்ளிருக்கு நெகிழ்ச்சிப் பொருட்பிரிவையுண்டாக்குந் தொழிலையுண்டாக்குந் தொழில்; ஆதலால்; வினைமுதற்றொழிற்பயன் இரண்டாகவே, அப்பயனுறுவதாகிய செயப்படுபொருளும் இரண்டாயின. எங்ஙனமெனின்; – உள்ளிருக்கு நெகிழ்ச்சிப்பொருள் பால்; அப்பாற்கும் பசுவிற்கும் பிரிவையுண்டாக்குந் தொழில் பாலிலிருக்கும் வீழ்ச்சி; அவ்வீழ்ச்சியை யுண்டாக்குந்தொழில் முலைபற்றியுருவல்; இவற்றுள்வீழ்ச்சித் தொழிலா னிகழும் பிரிவாகிய பயனுறுவது, பசுவெனவும், முலைபற்றியுருவற்றொழிலானிகழும் வீழ்ச்சியாகிய பயனுறுது பாலெனவும் அறிக. மற்றையுதாரணமும் இப்படியே காண்க, குறைத்தலாவது, இங்கே பிரிவையுண்டாக்குந் தொழிலையுண்டாக்குந் தொழில், இப்பசுவையும் யானையையுஞ் செயப்படுபாருளாகக் கருதாது, நீக்கப்படுபொருளாகக் கருதின், பசுவினின்றும் பாலைக் கறந்தான், யானையினின்றுங் கோட்டைக் குறைத்தான் என ஐந்தனுருபும்; சம்பந்தப்பொருளாகக் கருதின், பசுவினது பாலைக்கறந்தான், யானையினது கோட்டைக் குறைத்தான் என ஆறனுருபும் வருமெனக்கொள்க.

இன்னும் அச்செயப்படுபொருள் அகநிலையாகவும், தானே கருத்தாவாகவும் வரும்.

உ–ம்.:–

(1) நடத்தலைச்செய்தான்; உண்டலைச் செய்தான் எனத்தெரிநிலைவினைகளை விரித்துரைக்குமிடத்துச் செயப்படுபொருள் அகநிலையாய் வந்தது.

(2) தன்னைக்குத்தினான்; தன்னைப் புகழ்ந்தான் எனச் செயப்படுபொருளே கருத்தாவுமாயிற்று.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** **இரண்டாவதன்** – இரண்டாம் வேற்றுமையினது, **உருபு** – உருபாவது, **ஐயே** – (முன்சொல்லப்பட்ட) ஐ ஒன்றுமேயாம்; **அதன்** – அதனுடைய, **பொருள்** – பொருள்களாவன: **ஆக்கல்** – ஆக்கப்படுபொருளும், **அழித்தல்** – அழிக்கப்படுபொருளும், **அடைதல்** – அடையப்படுபொருளும், **நீத்தல்** – நீக்கப்படுபொருளும், **ஒத்தல்** – ஒக்கப்படுபொருளும், **உடைமை** – உடைமைப்பொருளும், **ஆதி ஆகும்** – முதலியனவாம்; **எ–று.** எனவே, இரண்டாம் வேற்றுமையின் பொருள் செயப்படுபொரு ளென்றதாயிற்று.

உ-ம்.:-

| | | |
|---|---|---|
| குடத்தைச் செய்தான் | - | ஆக்கப்படுபொருள். |
| கோட்டையை இடித்தான் | - | அழிக்கப்படுபொருள் |
| ஊரைச் சேர்ந்தான் | - | அடையப்படுபொருள் |
| வீட்டை விட்டான் | - | நீக்கப்படுபொருள். |
| புலியைப் போன்றான் | - | ஒக்கப்படுபொருள். |
| பொன்னை உடையான் | - | உடைமைப்பொருள். |

செயப்படுபொருளாவது - கருத்தாவினது தொழிலின் பயனை அடைவது. 'குடத்தைச் செய்தான்' என்றதில், செய்தல் கருத்தாவினது தொழில்; செய்யப்படுதல் - அத்தொழிலின் பயன்; அப்பயனை அடைவது குடம்: ஆதலால், குடம் செயப்படுபொருள். செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் சொற்கள். கர்மம், கார்யம்- வடசொற்கள்.

'ஆதி' என்றதனால், வீட்டை விரும்பினான், நூற்பொருளை அறிந்தான் என விரும்பப்படுதலும் அறியப்படுதலும் முதலானவையும் கொள்க. இவையெல்லாம் ஆக்கல் முதலிய ஆறுபொருள்களுள் ஒருவாறு அடங்குதல் அறிக.

இனி அரசன் பகைவரைச் சிறைச்சாலையை அடைவித்தான், சாத்தன் பசுவைப் பாலைக் கறந்தான் என இரண்டு செயப்படு பொருள்கள் சில இடங்களிலே தன்வினை பிறவினை இண்டிலும் வருதலும் உண்டு.

## பவானந்தம் பிள்ளை

**இ-ள்.:-** இரண்டாவதன் உருபு ஐயே-இரண்டாம் வேற்றுமையினதுருபு முன்சொல்லப்பட்ட ஐ ஒன்றுமேயாம். அதன் பொருள்-அதன் பொருள்களாவன, ஆக்கல்-ஆக்கப்படுபொருளும், அழித்தல்-அழிக்கப்படுபொருளும், அடைதல்-அடையப்படுபொருளும், நீத்தல்-துறக்கப்படுபொருளும், ஒத்தல்-ஒக்கப்படுபொருளும், உடைமை-உடைமைப்பொருளும், ஆதி ஆகும்-முதலியனவாக அவ்வுருபையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட செயப்படுபொருள்களாம். **எ-று.**

எனவே, (1) ஆக்கப்படுபொருள் (2) அழிக்கப்படுபொருள் (3) அடையப்படுபொருள் (4) துறக்கப்படுபொருள் (5) ஒக்கப்படுபொருள் (6) உடைமைப்பொருள் என்னும் இவ்வாறும் இரண்டாம் வேற்றுமைக்குரிய ஐயுருபின் பொருள்களாம்.

உ-ம். குடத்தை வனைந்தான்................ ஆ;ககப்படுபொருள்

கோட்டையை யிடித்தான்................ அழிக்கப்படுபொருள்.

ஊரை யடைந்தான்................ அடையப்படுபொருள்.

மனைவியைத் துறந்தான்................ துறக்கப்படுபொருள்.

புலியை யொத்தான்................. ஒக்கப்படுபொருள்.

பொன்னை யுடையான்................. உடைமைப்பொருள்.

செயப்படு பொருளாவது கருத்தா செய்யும் தொழிலை ஏற்கும் பொருள். கருத்தா செய்யும் தொழிலின் பயனை அடையும் பொருளே செயப்படுபொருள் என்று கூறுவது முண்டு. அவ்வாறு கூறின், 'அரசன் பகைஞரை வென்றான்' என்பதில், போர்செய்தல் கருத்தாவின் தொழில்; வெற்றியுண்டாதல் அதரன் பயன்; அப் பயனை அடைந்தது பகைஞர் என்று கொள்ள நேரும். ஆதலின் அங்ஙனம் கூறுதல் பொருந்தாதென் றுணர்க. செயப்படுபொருள், செய்பொருள், கருமம், காரியம் என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ–ம்.:–**

'குடத்தை வனைந்தான்' என்புரி மண்கூட்டுகை திரிகை சுழற்றுகை முதலியன கர்த்தாவினது தொழில்; அத்தொழிலை ஏற்றது குடமாதலாற் குடம் செயப்படுபொருள். 'கோட்டையை யிடித்தான்' என்புழிக் கோட்டையாதலாற் கோட்டை செயப்படுபொருள். 'ஊரை யடைந்தான்' என்புழி நடந்து செல்லுதல் கர்த்தாவினது தொழில்; அத்தொழிலை ஏற்றது ஊராதலால் ஊர் செயப்படுபொருள். 'மனைவியைத் துறந்தான்' என்புழி வெறுத்துவிடுதல் கர்த்தாவினது தொழில்; அத்தொழிலினை ஏற்றவன் மனைவியாதலான் மனைவி செயப்படுபொருள். 'புலியை யொத்தான்' என்புழி அஞ்சாது பாய்ந்து கொல்லுதலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் வினைமுதலினது தொழில்; அத்தொழிலினை ஏற்றது புலியாதலாற் புலி செயப்படுபொருள். 'பொன்னையுடையன்' என்புழிச் சம்பாதித்தல் வினைமுதலினது தொழில்; அத்தொழிலினை ஏற்றது பொன்னாதலாற் பொன் செயப்படுபொருள்.

'ஆதி' என்றதனால், வீடடை விரும்வினான்; நூற்பொருளை யறிந்தான்–என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற்றொழில்களுக்கு விடயமாகிய வீடும் நூற்பொருளுஞ் செயப்படுபொருளாகுகை முதலானவையுங் கொள்க.

அச்செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும், கருத்தின்றிச் செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூவகைப்படும்.

**உ–ம்.:–**

(1) 'சோற்றையுண்டான்'–கருத்திற் செயப்படும் செயப்படு பொருள்.

(2) 'சோற்றைக் குழைத்தான்'–கருத்தின்றிச் செயப்படும் செயப்படு பொருள்.

(3) 'பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான்' இதில் பதர்–கருத்தின்றிச் செயப்படும் செயப்படுபொருள்; நெல்– கருத்திற் செயப்படும் செயப்படு பொருள்.

செயப்படுபொருள் குன்றாத முதனிலைகளின்மேல் விபி முதலிய பிகுதிகள் புணர்ந்து வருவனவாகிய பிறவினைகளுள்ளே, சிலவற்றிற்கு, இயற்றும் கருத்தா இரண்டாம் வேற்றுமையில் வருதலால், இரண்டு செயப்படுபொருள் வரும்; சிலவற்றிற்கு, இயற்றும் கருத்தா மூன்றாம் வேற்றுமையில் வருதலால், செயப்படுபொருள் ஒன்றே வரும், இரண்டு வாரா.

**உ–ம்.:–**

(1) பகைவரைச் சிறைச்சாலையை யடைவித்தான்; சாத்தனைச் சோற்றை யுண்பித்தான்.

(2) கொற்றனாற் பூதனைக் கொல்வித்தான்; சாத்தனாற் பசுவைப் புரப்பித்தான்.

செயப்படுபொருள் குன்றாத தன்விகைளுள்ளே, கறத்தல், குறைத்தல் முதலிய சில வினைகளுக்கு இரண்டு செயப்படுபொருள்கள் வருதலுமண்டு; வரினும் முன்னின்ற செயப்படுபொருள் சிறப்புடைத்தன்றெனக் கொள்க.

**உ–ம்.:–**

பசுவைப் பாலைக் கறந்தான்; யானையைக் கோட்டைக் குறைத்தான். (இவற்றுள், கறத்தலாவது உள்ளிருக்கும் நெகிழ்ச்சிப் பொருட்பிரிவை யுண்டாக்குந் தொழிலை யுண்டாக்குந் தொழில்; ஆதலால், கருத்தாவின் தொழிலை ஏற்பன இரண்டாகவே, செயப்படுபொருளும் இரண்டாயின. எங்ஙனமெனின்–உள்ளிருக்கும் நெகிழ்ச்சிப் பொருள் பால்; அப்பாற்கும் பசுவிற்கும் பிரிவை யுண்டாக்குந்தொழில் பாலிலிருக்கும் வீழ்ச்சி; அவ்வீழ்ச்சியை யுண்டாக்குந் தொழில் மடிபற்றியுருவல். இவற்றுள் வீழ்ச்சித் தொழிலை ஏற்பது பால் எனவும், மடிபற்றி யுருவற்றொழிலை ஏற்பது பசு எனவும் அறிக. மற்றையுதாரணமும் இப்படியே காண்க. இப் பசுவையும் யானையையுஞ் செயப்படுபொருளாகக் கருதாது, நீக்கப் பொருளாகக் கருதின், பருவினின்றும் பாலைக்கறந்தான், யானையினின்றுங் கோட்டைக் குறைத்தான் என ஐந்தனுருபும்; சம்பந்தப்பொருளாகக் கருதின், பசுவினது பாலைக் கறந்தான், யானையினது கோட்டைக் குறைத்தான் என ஆறனுருபும் வருமெனக் கொள்க.)

இன்னும் அச் செயப்படுபொருள், அகநிலையாகவும், தானே கருத்தாவாகவும் வரும்.

உ–ம்.:–

(1) நடத்தலைச் செய்தான்; உண்டலைச் செய்தான் – செயப்படுபொருள் அகநிலையாய் வந்தது.

(2) தன்னைக் குத்தினான்; தன்னைப் புகழ்ந்தான் – செயப்படுபொருள் தானே கருத்தாவு மாயிற்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) இரண்டாவதன் உருபு– இரண்டாம் வேற்றுமை யினது உருபாவது, ஐயே– (முன் சொல்லப்பட்ட) ஐ ஒன்றுமேயாம்; அதன்பொருள்– அதனுடைய பொருள்களாவன, ஆக்கல்– ஆக்கப்படு பொருளும், அழித்தல்– அழிக்கப்படு பொருளும், அடைதல்– அடையப்படு பொருளும், நீத்தல்– துறக்கப்படு பொருளும், ஒத்தல்– ஒப்பப்படு பொருளும், உடைமை– உடைமைப் பொருளும், ஆதி ஆகும்– முதலியனவாக (அவ்வுருபையேற்ற பெயர்ப் பொருள்கள் வேறுபட்ட) செயப்படு பொருள்களாம். (எ–று)

(பொ–ரை.) இரண்டாம் வேற்றுமையின் உருபு ஐ என்பதே, அதன்பொருளாவன, தன்னை யேற்ற பெயர்ப்பொருளை ஆக்கப்படு பொருளாகவும், அழிக்கப்படு பொருளாகவும், அடையப்படு பொருளாககம், துறக்கப்படு பொருளாகவும், ஒக்கப்படு பொருளாகவும், உடைமைப்படு பொருளாகவும், இவைபோல்வன பிறவாகவும் வேற்றுமை செய்தலாம்.

(உ–ம்)

| | |
|---|---|
| குடத்தை வனைந்தான்.<br>மரத்தை வளர்த்தான். | ஆக்கப்படு<br>பொருள். |
| கோட்டையை யிடித்தான்.<br>வேலியைப் பிரித்தான். | அழிக்கப்படு<br>பொருள். |
| ஊரை யடைந்தான்.<br>தேரை யூர்ந்தான். | அடையப்படு<br>பொருள். |
| மனைவியைத் துறந்தான்.<br>பதியை நீத்தான். | துறக்கப்படு<br>பொருள். |
| புலியை யொத்தான்.<br>வேளை நிகர்த்தான். | ஒக்கப்படு<br>பொருள். |
| பொன்னை யுடையான்.<br>புவியை யுடையான். | உடைமைப்<br>பொருள். |

செயப்படுபொருளாவது வினைமுதற்றொழிற்பயன் உறுவது.

குடத்தை வனைந்தான்– இங்கு, மண்கூட்டுகை; திரிகை சுழற்றுகை முதலானவை, வினைமுதலினுடைய தொழிலாம், குடத்தினது வடிவந் தோன்றுதல் அத் தொழிலின்பயனாம், அப்

பயனுறுவத குடமாதலால், குடம் செய்யப்படு பொருளாகும்.

கோட்டையை யிடித்தான்– இங்கு, கோட்டையை யிடித்தல் செய்பவனது தொழிலாம், அதனது வடிவு குலைதல் அத் தொழிலின் பயனாம், அப் பயனுறுவது கோட்டை யாதலால், கோட்டை செயப்படு பொருளாகும்.

ஊரையடைந்தான்– இங்;கு, நடந்து செல்லுதல் கருத்தா வினது தொழிலாம், ஊரைச் சேர்தல் அத் தொழிலின் பயனாம்; அப் பயனுறுவது ஊராதலால், ஊர் செயப்படு பொருளாகும்.

மனைவியைத் துறந்தான்– இங்கு, துறங்குதுவிடுதல் வினை முதலின் றொழிலாம், உரிமைக்கேடு அதன்பயமுனாம், அப் பயனுறுவது மனைவியாதலால், மனைவியாதலால், மனைவி செயப்படு பொருளாகும்.

புலியை யொத்தான்– இங்கு, அஞ்சாது பாய்ந்து வெல்லுதலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் கருத்தாவினது தொழிலாம், உவமானமாகக் கொள்ளப்படுதல் அத் தொழிலின் பயனாம், அப்பயனுறுவது புலி யாதலால், புலி செயப்படு பொருளாகும். மற்ற வையு மிப்படியே.

இன்னுஞ் செயப்படு பொருள் குன்றாத முதனிலைகளின்மேல் வி, பி முதலிய விகுதிகள் சேர்ந்து வருவனாவாகிய பிறவினை களிலே சிலவற்றிற்கு இயற்றும்வினைமுதல், இரண்டாம் வேற்றுமையில் வருதலால், அரசன் பகைவரைச் சிறைச்சாலையை அடைவித்தான் என இரண்டு செயப்படுபொருள் வரும்.

சிலவற்றிற்கு அது மூன்றாம் வேற்றுமையிலே வருதலால், 'சாத்தன் கொற்றனாற் பசுவைப் புரப்பித்தான்' எனப் செயப்பட்டு பொருள் ஒன்றே வரும்.

செயப்படுபொருள் குன்றாத தன் வினைகளிலெங்கும் இரண்டு செயப்படுபொருள் வருதலில்லையோ வென்றால்,– 'பசுவைப் பலைக்கறந்தான்,' 'யானையைக் கோட்டைக் குறைத்தான்' எனச் சில விடங்களிலே வருதலுமுண்டு; ஆனால் இப் பசுவையும் யானையையும் செயப்படு பொருளாகக் குறியாமல் நீக்கப் பொருளாகக் குறித்தால், பசுவினின்றும் பாலைக் கறந்தான்; யானையினைன்றும் போட்டைக் குறைத்தான் எனவும், சம்பந்தப் பொருளாகக் குறித்தால், பசுவினது பாலைக்கறந்தான், யானையினது கோட்டைக் குளைத்தான் எனவும் வருதலாற் சிறப்பில்லை யென்றறிக. மற்றவைகளு மிப்படியே.

ஆதி யென்றதனால் வீட்டை விரும்பினான், நூற்பொருளை யறிந்தான் என விரும்புதலும் அறிதலுமாகிய வினைமுதற் றொழில்களுக்கு விடயமாகிய வீடும் நூற்பொருளும் செய்ப்படு பொருளாகுகை முதலிலானவையும் கொள்க.

அல்லாமலும் அச் செயப்படுபொருள் கருத்திற் செயப்படுவதும், கருத்தின்றிச் செயப்படுவதும், இருமையிற் செயப்படுவதும் என மூன்றுவகையாம். அவை முறையே சோற்றையுண்டான், சோற்றைக் குழைத்தான், பதரைலயும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான் என வரும்.

## கா. நமச்சிவாய முதலியார்

**இரண்டாவதன்** – இரண்டாம் வேற்றுமையின், **உருபு** – உருபாவது, **ஐயே** – ஐ ஒன்றுமேயாம் ; **அதன்** – அதனுடைய, **பொருள்** – பொருள்களாவன, **ஆக்கல்** – ஆக்கப்படு பொருளும், **அழித்தல்** – அழிக்கப்படுபொருளும், **அடைதல்** – அடையப்படுபொருளும், **நீத்தல்** – நீக்கப்படுபொருளும், **ஒத்தல்** – ஒக்கப்படுபொருளும், **உடைமை** – உடைமைப் பொருளும், **ஆதி ஆகும்** – முதலியனவாகும்.

**உதாரணம்**

| | |
|---|---|
| குடத்தை வனைந்தான் | |
| மரத்தை வளர்த்தான் | ஆக்கப்படுபொருள் |
| கோட்டையை யிடித்தான் | |
| வேலியைப் பிரித்தான் | அழிக்கப்படுபொருள் |
| ஊரை யடைந்தான் | |
| தேரை யூர்ந்தான் | அடையப்படுபொருள் |
| மனைவியைத் துறந்தான் | |
| பதியை நீத்தான் | நீக்கப்படுபொருள் |
| புலியை யொத்தான் | |
| வேளை நிகர்த்தான் | ஒக்கப்படுபொருள் |
| பொன்னை யுடையான் | |
| புவியை யுடையான் | உடைமைப்பொருள் |

செயப்படுபொருளாவது, கருத்தாவின் தொழிற்பயனை உறுவது.

செயப்படுபொருள், செய்பொருள், கருமம் என்பன ஒரு பொருட் சொற்கள்.

**குடத்தை வனைந்தான்** என்னுமிடத்தே மண் கூட்டுகை, திரிகை சுழற்றுகை முதலானவை கருத்தாவின் தொழிலாம் ; குடத்தினது வடிவம் தோன்றுதல் அத்தொழிலின் பயனாம் ; அப்பயன் உறுவது குடமாதலால், குடம் செயப்படுபொருளாகும்.

**கோட்டையை இடித்தான்** என்னுமிடத்தே – கோட்டையை யிடித்தல் கருத்தாவின் தொழிலாம் ; அதனது வடிவு குலைதல் அத்தொழிலின் பயனாம்; அப்பயன் உறுவது கோட்டை யாதலால், கோட்டை செயப்படு பொருளாகும்.

**ஊரை யடைந்தான்** என்னுமிடத்தே – நடந்து செல்லுதல்

கருத்தாவின் தொழிலாம்; ஊரைச்சேர்தல் அத்தொழிலின் பயனாம்; அப்பயன் உறுவது ஊராதலால், ஊர் செயப்படு பொருளாகும்.

**மனைவியைத் துறந்தான்** என்னுமிடத்தே – வெறுத்து விடுதல் கருத்தாவின் தொழிலாம் ; உரிமைக்கேடு அதன் பயனாம் ; அப்பயன் உறுவது மனைவியாதலால், மனைவி செயப்படுபொருளாகும்.

**புலியை ஒத்தான்** என்னுமிடத்தே – அஞ்சாது பாய்ந்து கொல்லுதலாற் புலியை உவமானமாகக் கொள்ளுதல் கருத்தாவின் தொழிலாம் ; உவமானமாகக் கொள்ளப்படுதல் அத்தொழிலின் பயனாம் ; அப்பயன் உறுவது புலியாதலால், புலி செயப்படு பொருளாகும்.

**பொன்னை யுடையான்** என்னுமிடத்தே – சம்பாதித்தல் கருத்தாவின் தொழிலாம் ; அவனது ஆகுதல் அத்தொழிலின் பயனாம் ; அப்பயன் உறுவது பொன்னாதலால், பொன் செயப்படு பொருளாகும்.

இன்னும், செயப்படுபொருள் குன்றாத முதனிலைகளின்மேல், வி–பி முதலிய விகுதிகள் சேர்ந்து வருவனவாகிய பிறவினைகளிலே சிலவற்றிற்கு, இயற்றுதற்கருத்தா இரண்டாம் வேற்றுமையில் வருதலால், **அரசன் பகைவரைச் சிறைச்சாலையை யடைவித்தான்** என இரண்டு செயப்படு பொருள் வரும். சிலவற்றிற்கு இயற்றுதற்கருத்தா மூன்றாம் வேற்றுமையிலே வருதலால், சாத்தன் **கொற்றனாற் பசுவைப் புரப்பித்தான்** எனச் செயப்படு பொருள் ஒன்றேவரும், இரண்டு வாரா. செயப்படுபொருள் குன்றாத தன் வினைகளில் எங்கும் இரண்டு செயப்படுபொருள்கள் வருதல் இல்லை. ஆனால், **பசுவைப் பாலைக் கறந்தான் ; யானையைக் கோட்டைக் குறைத்தான்** எனச் சில இடங்களிலே வருதலும் உண்டு ; ஆயின், இங்கே **பசு**வையும் **யானை**யையும் செயப்படு பொருளாகக் குறியாமல், சம்பந்தப் பொருளாகக் குறித்தால், **பசுவினது பாலைக் கறந்தான் ; யானையினது கோட்டைக் குறைத்தான்** என வருதலால், முன்னின்ற செயப்படுபொருள் சிறப்பில்லை யென்று அறிக.

ஆதி என்றதனால், வீட்டை விரும்பினான், நூற் பொருளை அறிந்தான், என விரும்புதலும், அறிதலுமாகிய வினைமுதற்றொழில் களுக்கு விஷயமாகிய வீடும் நூற்பொருளும் செயப்படுபொருளாதல் முதலானவையும் கொள்க.

அன்றியும், அச்செயப்படுபொருள் கருத்திற்செய்யப்படுவதும், கருத்தின்றிச் செய்யப்படுவதும், இருமையிற் செய்யப்படுவதும்

என மூன்று வகையாம். அவை முறையே,

சோற்றையுண்டான்
சோற்றைக்குழைத்தான்
பதரையும் நெல்லையும் பணத்திற்குக் கொண்டான்.

என வரும்.

## மோசசு பொன்னையா

இரண்டாம் வேற்றுமையின் உருபாவது ஐ ஒன்றுமேயாகும்; ஆக்கப்படு பொருளும், அழிக்கப்படு பொருளும், அடையப்படு பொருளும், துறக்கப்படுபொருளும், ஒக்கப்படுபொருளும், உடைமைப்படுபொருளும் அவை போல்வன பிறவும் அதன் பொருள்களாம். எ–று.

எ–டு.

| | | |
|---|---|---|
| குடத்தைச் செய்தான் | – | ஆக்கப்படுபொருள் |
| கோட்டையை இடித்தான் | – | அழிக்கப்படுபொருள் |
| ஊரையடைந்தான் | – | அடையப்படுபொருள் |
| வீட்டை விட்டான் | – | துறக்கப்படுபொருள் |
| புலியைப் போன்றான் | – | ஒக்கப்படுபொருள் |
| பொன்னை உடையன் | – | உடைமைப்படுபொருள் |

ஆதி என்றதனால் தொழிலுங் குறிப்புமாகி வரும் பெயர் வினைச் சொற்கள் செயப்படுபொருளாய் வருதலின்கண் இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வருவன பிற உளவேல் அவற்றையும் அடக்குக. தொல்காப்பியர்,

**இரண்டா குவதே**
**ஐயெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**யெவ்வழி வரினும் வினையே வினைக்குறிப்**
**பவ்விரு முதலில் தோன்று மதுவே,**[1]

என இரண்டாம் வேற்றுமையின் பொருள்மரபைக் கூறி,

அதன் பின்னர் அப்பொருளின் பல்வேறு பகுதிகளை வாய்பாட்டு வகையான் உணர்த்தப் புகுந்து,

**காப்பின் ஒப்பின் ஊர்த்தியின் இழையின்**

---------- ----------- ----------------------------

**அன்ன பிறவும் அம்முதற் பொருள**
**என்ன கிளவியும் அதன்பால என்மனார்,**[2]

பாட வேறுபாடு:–

1.தொல், சொல். 71
2.தொல், சொல். 72

என உரைத்தார், அதனால், இரண்டாகுவதன் முதற் பொருள் 'எவ்வழி வரினும் வினையே வினைக்குறிப், பவ்விரு முதலில் தோன்றுமது' என்பதும், காப்பின்ஒப்பின் முதலியன அதன் பகுதியாவனவே என்பதும் வெளிப்படை. சேனாவரையர் அம் முதற்பொருளை, 'வினையே வினைக்குறிப்' பென்றாராயினும் அவற்றின் செயப்படு பொருளே கொள்ளப்படும்' எனவும்; புகழை நிறுத்தான், புகழை நிறுத்தல், புகழையுடையான், புகழையுடைமை என இரண்டாவது பெயரொடு தொடர்ந்த வழியும் வினைச்செயப்படு பொருளும், குறிப்புச் செயப்படுபொருளும் பற்றியே நிற்கு மென்பார் எவ்வழி வரினும் என்று யாப்புறுத்தார்'[2] எனவும் கூறி விளக்கியுள்ளமை காண்க. எனவே, தொழிற்கும், குறிப்புக்கும் காரணமாய் அமைந்தும், கருத்து நிகழ்த்தப்படும் பொருளாய் அமையுந் தன்மை பெற்றும், பெயரின் தோன்றுநிலைப் பொருளை எழுவாயின் பயனுறு பொருளாக மாற்றியும் நிற்பதே இரண்டாம் வேற்றுமையின் பொருள் என்பது புலனாகும். ஆயின், எழுவாயின் பயனுறு பொருளாம் செயப்படுபொருளே, இரண்டாவதன் பொருளாம் என்க. நச்சினார்க்கினியரும் 'வினைச்சொல்லினும், வினைக் குறிப்புச் சொல்லினும் பிறந்த செயப்படுபொருள்'[3] என்றே இரண்டன் பொருள் மூலத்தைக் குறிப்பிட்டுள்ளமை காண்க.

இவ்வாசிரியர், இரண்டாம் வேற்றுமைப் பொருள் தொழில், குறிப்புச் சொற்களடியாக அமையும் செயப்படு பொருளாகி, ஆக்கல் முதலிய பல்வேறு பகுதிக்கண் இயன்றுவரும்

என்னாமல், ஆக்கல் முதலியனவே அதன் பொருள் எனக் கொள்ளுமாறு நூற்பா செய்து மயங்க வைத்தார்.

இனி, இவ்விரண்டாம் வேற்றுமைப் பொருள்நிலையெய்திய பெயரும் முடிக்குஞ் சொல்லும் பக்கிசைத்தலின்றி, ஊர்ச் சேர்ந்தான், நிலங்கடந்தான் என இவ்வாறு உருபு தொக்கு ஒரு சொன்னடைத்தாய் வழங்குதல் இயல்பாகும். அதனை மனங்கொண்டே சேனாவரையர் 'பெயரினாகிய தொகையும் என்னும் உம்மையால், பெயரோடு பெயர் தொக்கனவேயன்றி நிலங்கடந்தான், மாக்கொணர்ந்தான் எனப் பெயரொடு வினை வந்து தொக்க வினையினாகிய தொகையு முள என்பதாம்'[4] எனக் கூறினார் எனக் கொள்க.

---

பாட வேறுபாடு:–

1. தொல் சொல் 71 உரை
2. தொல் சொல். 72 உரை
3. தொல் சொல் 67 உரை
4.. நாலடி 81

உயர்திணை எழுவாய்ப் பொருளில், அவர் சேர்ந்தார், நச்சுவார் சேரார் என வழங்கற்பாலன, செயப்படு பொருளில் அவர்ச் சேர்ந்தார், நச்சுவார்ச்சேரார்[4] என ஒற்றுமிகப் பெற்றோ அல்லது அவரைச் சேரார், நச்சுவாரைச் சேரார் என உருபு விரிந்து நின்றோ வேறுபட வழங்கி வருதலையும் இவண் அறிக.

தமிழில் நின்னை என வழங்குஞ் சொல் பழங்கன்னடத்தில் நின்னம் எனவும், புதுக்கன்னடத்தில் நின்ன எனவும் வழங்குவதால், பழந்தமிழிலும் இரண்டாகுவதன் உருபு அம் என அமைந்து, பின்னர் அ எனத் திரிந்து தொல்காப்பியருக்கு அண்மைப்பட்ட முற்காலத்தில் ஐ என வழங்கிற்று எனக் கருத இடமுண்டு என்பார் அறிஞர் கால்டுவெல்.[1] 'காவலோனம் களிறஞ் சும்மே' என்பதின்கண் அம் என அமைந்த சும்மே' என அ எனத் திரிந்தது என்பதையும், தொல்காப்பியர், ஐயுருபின் இடத்தில் செய்யுளில் அ என்பதும் வரும்[2] எனக் கூறியுள்ளதையும் எடுத்துக்காட்டி, தொ.பொ.மீ. அவர்கள் அவர் கொள்கைக்கு ஆதரவு காட்டியுள்ளார்கள்.[3] தொல்காப்பியத்தின் வழிநின்று இரண்டாவது என எண்முறைப் பெயரால் செயப்படுபொருள் வேற்றுமையைச் சுட்டிக் கூறினார்; ஏனை வேற்றுமைகட்கும் இவ்வாறே உரைத்துக் கொள்க.

(39)

**296. மூன்றா வதனுரு பாலா னோடொடு**
**கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.**

**மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஒடு**
**கருவி கருத்தா உடன்நிகழ்வு அதன் பொருள்.**

mūṉrāvataṉ urupu āl āṉ ōtu otu
karuvi karuttā utaṉnikaḷ ataṉporuḷ.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The third or casual conjunctive case.**

The signs of the 3rd case are al and an, and otu and otu; and its meanings are instrumentality, agency and sociality.

## ஒப்புமைப் பகுதி

மூன்றா குவதே
ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே

(தொல். சொல்.: 73)

அதனி னியறல் அதற்றகு கிளவி
அதன்வினைப் படுதல் அதனி னாதல்
அதனிற்கோடல் அதனொடு மயங்கல்
அதனோ டியைந்த ஒருவினைக் கிளவி
அதனோ டியைந்த வேறுவினைக் கிளவி
அதனோ டியைந்த ஒப்பல் ஒப்புரை
இன்னா னேது ஈங்கென வரூஉம்
அன்ன பிறவும் அதன்பால என்மனார்

(தொல். சொல்.: 74)

........................ தையலாய்
ஆனாடு மூன்றா வதுதான் வினைமுதலும்
ஏனைக் கருவியுமாம் ஈங்கு

(நேமி.: 42: 204)

மூன்றா வதனுரு பாலா னோடொடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்

(இ.வி.: 200)

மூன்றாவதன் உருபு ஆல்ஆன் ஒடுஒடு
கருவி கருத்தா உடனிகழ்வு அதன்பொருள்

(தொ.வி.: 58)

ஆலோ னோடொடு மூன்றன துருபே

(மு.வீ.: 515)

கருவி யுடனிகழ்வு கருத்தா வதன்பொருள்

(மு.வீ.: 516)

.............. மூன்றுருபு ஆல்ஆன் ஒடு ஓடு கொண்டு என்று
இடுதல் வினைமுதற் கருவி யுடனிகழ்வே ஏற்கும்
இசைவிளை பேர்பய னிலையாம்..............

(சுவாமி.: 42 : 2–3)

## மயிலை நாதர்

**எ–ன்,** நிறுத்த முறையானே மூன்றாம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** மூன்றாம் வேற்றுமைக்கு உருபு ஆலும் ஆனும் ஒடும் ஒடுவுமாம்; அதற்குப் பொருள் கருவியாதலும் கருத்தாவாதலும் உடனிகழ்ச்சியுமாம், **எ–று.**

மேல், ஆலொன்றையும் இதற்கு உருபாகச் சொல்லி, ஈண்டு [1]நாலுருபு சொல்லுதல் மலைவாம் பிறவெனின், ஆண்டுப் பெயரும் முறையும் காட்டுதன் மாத்திரைக்கு வழக்கிடத்தும் செய்யுளிடத்தும் பயின்று வருவதனைச் சொன்னார்; [2]ஈண்டு இவ்வேற்றுமைக்கு வரும் உருபெல்லாம் எடுத்தோதினா ராகலான், மலைவாகா தென்க. [3]இக்கடாவிடை மேல்வருவன வற்றிற்கும் ஒக்கும்.

**"ஆலு மானு மோடு மொடுவும்**
**சாலு மூன்றாம் வேற்றுமைத் தனுவே**
**செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி**
**யெய்திய தொழின்முத லியை புடைத் ததன்பொருள்"**

என்றார் அகத்தியனாருமென்க. அஃதேல், அவர் ஐந்து பொருளாகச் சொன்னாராலோவெனின், இவர், இவ்வாறு அறிதற்குக் கருவியான ஞாபகக் கருவியையும் இயற்றுதற்குக் கருவியான காரகக் கருவியையும் பொதுவே கருவியெனவும், ஏவுதற் கருத்தாவையும் இயற்றுதற் கருத்தாவையும் பொதுவே கருத்தா வெனவும் அடக்கி மூன்றாக வோதினாரென்க. கருவி யெனினுங் காரண மெனினும் ஏதுவெனினும் நிமித்தமெனினு மொக்கும். அவ்விருவகைக் கருவியும் முதற்காரணமும் துணைக்காரணமுமென இரண்டாம். அவற்றுள் முதற்காரண மாவது அவ்விருவழியுள்ளும் தன்னை இன்றியமையாச் சிறப்புடையது. துணைக்காரணமாவது அவ்விரு வழியுள்ளும் முதற்காரணத்துக்குத் துணையாக வருவது.

**வ–று.:–**

கடல்கண்டானென்றால், அக் காட்சிக்கு உணர்வு முதற்காரணம்; கண்ணும் ஒளியு முதலானவை துணைக் காரணம்; இவை ஞாபகக் கருவி. குழை செய்தானென்றால், அதற்குப் பொன் முதற்காரணம், [4]கம்மக் கருவியும் தீயு

---

**பாட வேறுபாடு:–**

1. நாலுருபாகச்
2. ஈண்டை
3. இக்கடாவும் விடையும்
4. கருமக் கருவியும்

முதலானவை துணைக்காரணம். இவை காரகக் கருவி; பிறவுமன்ன.கருவியைப் பொருண்மைப் பன்மையான் முற் கூறினாரென்க. உணர்வினால் உணர்ந்தான், சுடரினாற் கண்டான், புகையுண்மையால் எரியுள்ளது, அலகினால் எண்ணினான், நாழியால் அளந்தான்; இவை ஞாபகக் கருவி. பொன்னாலாய மணி, மண்ணாலாய குடம், வாளா லெறிந்தான், கையால் வாங்கினான், தவத்தால் வீடெய்தினான், முயற்சியா லாயினான்,காலாலேகினான்,பொன்னாலணிந் தான்; இவை காரகக் கருவி;

**"முதல்வனும் பொருளுங் கருமமுங் கருவியும்**
**ஏற்பது நீக்கமு மெனவிவை காரகம்."**

தச்சனாலியற்றப்பட்ட வையம், கடவுளாலாக்கப்பட்ட விமானம், புலியால் [1]விழுங்கப்பட்டான், சுறவால் ஏறுண்டான்; இவை செய்யும்வினை முதல். அரசனா லியற்றப்பட்ட தேவகுலம், தேவராலாய திரு; இவை ஏவல் வினை முதல்.

**"தூங்குகையா லோங்குநடைய**
**உறழ்மணி யாலுயர் மருப்பின"**

(புறநா. 22)

**"பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்**
**பெண்டகையாற் பேரமர்க்கட்டு"**

(குறள். 1083)

இவை உடனிகழ்ச்சி.ஆனுருபோடும் இவ்வாறே ஒட்டிக் கொள்க.

**"உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றும்**
**கல்லா ரறிவிலா தார்"**

(குறள். 140)

**"நாவீற் றிருந்த கலைமாமக ளோடு நன்பொற்**
**பூவீற்றிருந்த திருமாமகள் புல்ல நாளும்"**

(சீவக. 30)

**"சுழியோ டெறிபுனற் பொன்னி நன்னாடன் சுரகுருவின்**
**(சோழனின்) வழியோ னமலன் மயிலையன் னீர்மணி**
**வாயினின்று**

---

பாட வேறுபாடு:-

**5. விழுங்கப்பட்டானென்றற் றொடக்**
**கத்தன இவை துறைநகைத் துறை**

மொழியோ தெரிந்தில கொங்கையுஞ் செய்ய முகத்தினின்ற
விழியோ படுகொலை யோவிலங் கோவந்து மீண்டனவே"

"மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை"

(குறள். 395)

என ஒடு ஒடு வந்தவாறு.

அரசனால் இயற்றப்பட்ட தேவகுலமென்றற் றொடக்கத்தன வற்றுள் உருபல்லாத பிறமொழிகள் [1]வருமாறென்னை யெனின், அவை கனலொடு புகையும் குடையொடு நிழலும் போல உருபு வரவந்து நீங்க நீங்கும், பொருளை விளக்க வேண்டுழி யெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ–னின்,** மூன்றாம் வேற்றுமையது இலக்கணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:** மூன்றாம் வேற்றுமையின் உருபு மேற்கூறிய ஆலேயன்றி ஆனும் ஓடும் ஒடுவும் ஆம்; அவற்றின் பொருள்களாவன தம்மை ஏற்ற பெயர்ப்பொருளைக் கருவியாகவும் ஏதுப்பொருட்டாகிய கருத்தாவாகவும் உடனிகழ்வதாகவும் வேற்றுமை செய்தலாம், **எ–று.**

மூன்றாம் வேற்றுமைப் பொருளாதலின் ஏதுப்பொருட்டாகிய கருத்தா என்றும், 'அதன்பொருள்' என்பது, தொகுதி யொருமை யாதலின் அதற்கு அவற்றின் பொருள் என்றும் பொருள் கூறினாம்.

கருவி காரணம் ஏது நிமித்தம் என்பன வேறுபொருட் கிளவியாயும் ஒருபொருட் கிளவியாயும் வருதலின், காரணம் மூன்றனுள் முதற்காரணம் துணைக்காரணம் என்னும் இரண்டனையும் கருவி என்றும், ஏவுதற் கருத்தாவும் இயற்றுதற் கருத்தாவுமாகிய நிமித்த காரணம் இரண்டனையும் கருத்தா என்றும் கூறினார். வனைந்தான் என்புழிக் குடமாகிய காரியத்திற்கு அதுவதுவாகிய மண் முதற்காரணம்; குலாலனது அறிவும் அந்தக்கரணமும் முதலிய ஞாபகக் கருவியும் தண்டசக்கரம் முதலிய காரகக் கருவியும் அம் முதற்காரணத்துக்குத் துணையாய் நின்று காரியத்தைத் தருதலின் துணைக்காரணம். குலாலன் நிமித்தமாக அக்

---

பாட வேறுபாடு :–

1. என்னை வருமாறெனின்.

காரியம் தோன்றுதலின் அவன் நிமித்தகாரணம். ஞாபகக்கருவி என்பது அறிதற்கருவி. காரகக்கருவி என்பது செய்தற்கருவி. நடந்தான் என்புழிக் குடம்போல்வதோர் காரியம் இன்றேனும் நடத்தலைச் செய்தான் என்பது பொருளாதலின் நடத்தல் காரியம். அவயவத்தால் பலவேறுவகைப்பட்ட குடம் முதலிய கலன்களில் பொதுமையில் நிற்கும் மண்போலப் பலவேறு வகைப்பட்ட வினைகளில் பொதுமையின் நிற்கும் தொழில், நடத்தற்கு முதற்காரணம். அறிவும் காலும் முதலியன துணைக்காரணம். வினைமுதல் நிமித்தகாரணம். பிறவும் அன்ன.

**வ – று.:**

அறிவாலாக்கிய காட்சி, அறிவாலாகிய காட்சி என்புழி ஆலுருபு பெயர்ப்பொருளை ஞாபக முதற்கருவியாக வேற்றுமை செய்தது. கண்ணாலாக்கிய காட்சி, கண்ணாலாகிய காட்சி என்புழி ஞாபகத் துணைக்கருவியாக வேற்றுமை செய்தது. காட்சி என்றது காட்சியுணர்வை. மண்ணாலாக்கிய குடம், மண்ணாலாகிய குடம் என்புழிக் காரக முதற்கருவியாக வேற்றுமை செய்தது. திரிகையாலாக்கிய குடம், திரிகை யாலாகிய குடம் என்புழிக் காரகத் துணைக்கருவியாக வேற்றுமை செய்தது. இங்ஙனம் ஆக்குதற்கு வினைமுதல் அறிவனும் குலாலனுமாம். ஆதற்கு வினைமுதல் காட்சி யுணர்வும் குடமுமாம். இக் காட்சியுணர்வும் குடமும் வினை முதலாகிய காலத்து இக் கருவிகள் ஏதுப்பொருளவாய் நின்றன. அரசனாலாகிய தேவகுலம், தச்சனாலாகிய தேவகுலம் என்புழி முறையே ஏதுப் பொருளவாகிய ஏவுதற் கருத்தாவாகவும் இயற்றுதற் கருத்தாவாகவும் வேற்றுமை செய்தது. ஆக்கிய தேவகுலம் என வரின் மூன்றாம் உருபு ஏலாவாய் அரசனும் தச்சனும் எழுவாயாம். இஃது எழுவாய்க்கண் வரும் கருத்தாவிற்கும் இவ்வேற்றுமைக்கண் வரும் கருத்தாவிற்கும் தம்முள் வேற்றுமை என்க.

**"தூங்கு கையால் ஓங்கு நடைய**
**உறழ் மணியால் உயர் மருப்பின"** (புறம்.: 22)

[1]**"பண்டறியேன் கூற்றென் பதனை இனியறிந்தேன்**
**பெண்டகையாற் பேரமர்க் கட்டு"** (குறள்.: 1083)

என்புழி ஆலுருபு உடனிகழ்வதாக வேற்றுமை செய்தது. ஆனுருபையும் இவ்வாறே ஒட்டிக் காண்க.

**"நாவீற் றிருந்த கலைமா மகளோடு நன்பொற் பூவீற்**
**றிருந்த திருமா மகள்புல்ல நாளும்"**
(சீவக: 30)

எனவும்,

**"மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு**
**தானம்செய் வாரின் தலை"** (குறள். 295)

எனவும் முறையே ஓடும் ஒடுவும் உடனிகழ்வதாக்கின. **ஏற்புழிக் கோடலான்** இவ்விரண்டு உருபிற்கும் உடனிகழ்ச்சிப் பொருளொன்றுமே கொள்க.

இங்ஙனம் வரும் கருத்தா ஏதுப்பொருட்டாய் வருதலின் விதந்து கூறாது கருவியின்பாற்படுத்தினும் அமையும் என்பது தோன்ற இவ்வுருபிற்குச் சிறந்த கருவிப்பொருளை முற்கூறினார்.

***இக்கருவிப்பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக் கருவி என மூன்றாயும் வரும் எனக் கொள்க. அவை யாவன மனத்தான் நினைத்தான், வாளால் வெட்டினான், அறிவால் அறிந்தான் என முறையே காண்க.***

இரண்டாம் வேற்றுமைப் பொருளாகிய காரியத்திற்கு வேண்டும் கருவிப்பொருளைத் தருதலின் இது மூன்றாம் வேற்றுமை எனப்பட்டது.

**"ஆலும் ஆனும் ஓடும் ஒடுவும்**
**சாலு மூன்றாம் வேற்றுமைத் தனுவே**
**செய்வோன் காரணம் செயத்தகு கருவி**
**எய்திய தொழின்முதல் இயைபுடன் அதன்பொருள்"**

என்றார் ஆசிரியர் **அகத்தியனாரும்** என்க. முதற் காரணத்தைக் காரணம் என்றும் ஏவற்கருத்தாவைத் தொழின்முதல் என்றும் விதந்து கூறினாராதலின் இங்ஙனம் பொருள் ஐந்தாயின.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** முறையே மூன்றாம் வேற்றுமை இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.: மூன்றாவதன் உருபு** – மூன்றாம் எண்ணின் முறைமைக்கு நின்ற வேற்றுமைக்கு உருபு, **ஆல் ஆன் ஒடு ஓடு** – ஆலும் ஆனும் ஒடும் ஒடுவும் இந்நான்கு உருபாம்; **கருவி கருத்தா உடனிகழ்வு** – கருவியாதலும் கருத்தாவாதலும் உடனிகழ்ச்சியாதலும் என்னும் இம்மூன்றும், **அதன் பொருள்**– அதற்குப் பொருளாம், **எ–று.**

**அரும்பதவுரை:** ஞாபகக் கருவியையும் இயற்றுதற் கருவியான காரகக் கருவியையும் பொதுவே கருவியெனவும் ஏவதற் கருத்தாவையும் இயற்றுதற் கருத்தாவையும் பொதுவே கருத்தாவெனவும் அடக்கி உடனிகழ்வுமென மூன்றாக ஓதினார் என்க. அவ்விரு வகைக் கருவியும் முதற் காரணமும் துணைக் காரணமும் என இரண்டாம். அவற்றுள் முதற் காரணமாவது அவ்விரு வழியும் தன்னை இன்றியமையாச் சிறப்புடையது. துணைக் காரணமாவது அவ்விரு வழியும் முதற் காரணத்துக்குத் துணையாய் வருவது.

**வ–று.:**

கடல் கண்டான் என்றால் காட்சிக்கு உணர்வு ஞாபக முதற் காரணம்; கண்ணும் ஒளியும் முதலானவை ஞாபகத் துணைக் காரணம்; அவை ஞாபகக் கருவி. குழை செய்தான் என்றால் அதற்குப் பொன் காரக முதற் காரணம்; கம்மக் கருவியும் தீ முதலானவையும் காரகத் துணைக் காரணம்; இவை காரக முதற் கருவி. உணர்வினால் உணர்ந்தான், சுடரினாற் கண்டான், புகையால் எரியுள்ளது, அலகினால் எண்ணினான், நாழியால் அளந்தான் என இவை ஞாபக முதற் கருவியும் ஞாபகத் துணைக் கருவியும். பொன்னாலாய மணி, மண்ணாலாய குடம் என இவை காரகத் துணைக் கருவி.

தச்சனால் இயற்றப்பட்ட வையம், கடவுளால் ஆக்கப்பட்ட விமானம், புலியால் விழுங்கப்பட்டான், சுறவால் ஏறுண்டான் என இவை இயற்றுதற் கருத்தா. அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம், தேவராலாய திரு. இவை ஏவுதற் கருத்தா:

**"தூங்கு கையா லோங்கு நடைய**
**உறழ் மணியா லுயர் மருப்பின"**

(புறம். 22)

**"பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்**
**பெண்டகையாற் பேரமர்க் கட்டு"**

(குறள். 1083)

என இவை உடனிகழ்ச்சி.

அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம் என்பவற்றுள் உருபல்லாத பிற மொழிகள் வருவது என்னையோ வெனின் கனலொடு புகையும் குடையொடு நிழலும்போல் உருபு வர வந்து நீங்கவும் பெறும். ஆறன் உருபொடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க.

"உலகத்தோ டொட்ட ஒழுகல்" (குறள். 140), "மனத்தோடு வாய்மை மொழியில்" (குறள். 295) என ஓடுவும் ஒடுவும் வந்தவாறு கண்டு கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** மூன்றாம் வேற்றுமைய திலக்கண முணர்த்துகின்றது.

**இ-ள்.: மூன்றாவதன்**-மூன்றாம் வேற்றுமையினுடைய, **உருபு**-உருபுகளானவை, **ஆலானோடொடு**-முன் சொல்லப்பட்ட ஆலே யன்றி ஆனும், ஒடும்-ஒடுவும் ஆகும், **அதன்** - அவ்வுருபுகளுடைய, **பொருள்** - பொருள் களானவை, **கருவி** - கருவிப்பொருளும், **கருத்தா**-வினைமுதற் பொருளும், **உடனிகழ்வு**-உடனிகழ்ச்சிப்பொருளும் ஆகிய அவ்வுருபுகளை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட மூன்றுமாகும், **எ-று.**

(இந்த நான்குருபுகளுக்கும் மூன்று பொருள்களுமாமெனக் கூட்டிச் சொன்னாராயினும், **ஏற்புழிக்கோடலென்**கிற உத்தியால் அவ்வுருபுகளுள் ஆல்

ஆன் உருபுகளுக்குக் கருவியும் வினைமுதலும் ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சியுஞ் சிறந்தனவென்று கொள்க)

**வ–று.:**

வாளாற் பகைவனை வெட்டினான், இது கருவிப் பொருளாம், கருவியாவது வினைமுதற் றொழிற்பயனைச் செயப்படு பொருளிற் சேர்ப்பது. வாளாற் பகைவனை வெட்டினான் என்கிற விடத்தே வாளைப்பற்றி வீசுதல் வினைமுதலினது தொழிலாம், பகைவனுடம்பு அறுதல் அத்தொழிற்குப் பயனாம், வாள் அப்பயனைப் பகைவனாகிய செயப்படுபொருளிலே சேர்க்கையால் அது கருவியாகும். இன்னும் அக்கருவிப் பொருள் முதற்கருவியும் துணைக்கருவியும் என விருவகைப்படும். அவற்றுள், முதற்கருவியாவது செயப்படு பொருளோ டொற்றுமையுடையது. அது, 'மண்ணாற் குடத்தை வனைந்தான்' என வரும். துணைக்கருவியாவது, முதற் கருவிக்குத் துணையாய் அது காரியப்படுமளவு முடனிகழ்வது. அது, 'தண்டசக்கரங்களாற் குடத்தை வனைந்தான்' என வரும்.

'அரசனாற் பகைவன் கொல்லப்பட்டான்.' இது வினை முதற்பொருள், வினைமுதலிப்படிப்பட்டதென்று முன்னே யெழுவாய்ச் சூத்திரவுரையிற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வருகிற வினைமுதற்பெயர் தன் விகுதி வினையினாலே முடியும். இம் மூன்றாம் வேற்றுமையில் வருகிற வினைமுதற்பெயர் செயப்படுபொருள் விகுதி வினையினாலே முடியும். இதுவே அவ்விரண்டற்கும் வேறுபாடாம். இன்னும் அவ்வினை முதற்பொருள் இயற்றும் வினைமுதலும் ஏவும் வினைமுதலும் என விருவகைப்படும். அவற்றுள், இயற்றும் வினைமுதலாவது கருவியைத் தொழிற்படுத்துவது. அது தச்சனாற் கோயில் கட்டப்பட்டது எனவரும், ஏவும் வினைமுதலாவது அவ்வியற்றும் வினைமுதலினது தொழிலை யுண்டாக்குந் தொழிலையுடையது. அது, 'அரசனாலே கோயில் கட்டுவிக்கப்பட்டது' என வரும். தச்சனாலாகியது கோயில் என வந்தால் தச்சனை நிமித்தகாரணமாகக் கொள்க.

'மைந்தனோடு தந்தை வந்தான்'. இது உடனிகழ்ச்சிப் பொருளாம். உடனிகழ்ச்சிப் பொருளாவது, வினைகொண்டு முடிகிற பொருளினது தொழில் போன்ற தொழிலைத் தன்னிடத்து முடனிகழ்கிறதாக வுடையது. மைந்தனோடு தந்தை வந்தான் என்கிற விடத்தே தந்தை வினை கொண்டு முடிகிற பொருளாம். வருதல், அப்பொருளினது தொழிலாம். அத்தொழில் போன்ற தொழில் வருதலாம், இவ் வருதலைத் தன்னிடத்து முடனிகழ்கிறதாக வுடைய பொருளாதலால் மைந்த னுடனிகழ்ச்சிப் பொருளாகும். அவ்வுடனிகழ்ச்சிப்

பொருள் தலைமைப் பொருளும், தலைமையில் பொருளும் என விருவகைப்படும். அவற்றுள் தலைமைப் பொருளாவது, வினைகொண்டு முடிகிற பொருளினுயர்வுடையது; அது, 'மன்னவனோடு மந்திரிவந்தான்' என வரும். தலைமையில் பொருளாவது, வினைகொண்டு முடிகிற பொருளி னிழிவுடையது. அது, 'மாணாக்கனோடாசிரியன் வந்தான்' என வரும்.

சிறுபான்மை ஆல் ஆன் உருபுகள் முதற்பொருளின் மேலேற்றிச் சொல்லப்பட்ட விகாரத்தையுடைய சினைப் பொருளிலும் வரும். அது கண்ணாற்குருடன், காலான்முடவன் என வரும், அல்லாமலும் ஒரோவிடத்துத் தோறுமென்கிற பொருளையுந் தரும். ஊராலொரு கோயில் என்கிறவிடத்து ஊர்தோறு மொவ்வொரு கோயில் எனப் பொருள் படுதல் காண்க.

சிறுபான்மை ஒடு ஓடு உருபுகள் வேறு வினைப்பொருண் முதலாகிய பிறபொருள்களிலும் வரும். 'தொடியொடு தொல்கவின் வாடியதோள்', தொடிக்குக் கழலுதலாகிய வேறுவினை யுடனிகழ்தலால் வேறுவினை யுடனிகழ்ச்சிப் பொருளாம். மலையொடு பொருதமால் யானை. பொருதல் யானைக் கல்லது மலைக்கில்லாமையால் வினையில லுடனிகழ்ச்சிப் பொருளாம். பாலொடு தேன் கலந்தற்றே தேனைக் கலக்கப்படுதலால் பால் கலப்புறு பொருளாம் எழுத்தொடு புணர்ந்தசொல் எழுத்துச் சொல்லுக்கு முதற் கருவியாதலால் ஒற்றுமைப் பொருளாம். கோபத்தோடு வந்தான் வருதற்கு விசேடணமாதலால் கோபம் அடைமொழிப் பொருளாம்.

இந் நான்குருபுகளும் தனித்தன்றி ஏகாரம் பெற்றும் வரும். அவற்றுள் ஆல், ஆன், உருபுகளிலொன்று நிற்றற்குரிய விடத்தே கொண்டு என்கிறது முன் ஐகாரம் பெற்றும் பெறாமலுஞ் சொல்லுருபாக வரும். ஒடு ஓடு, உருபுகளிலொன்று நிற்றற்குரியவிடத்தே உடன் என்கிறது தனித்தும் ஏகாரம் பெற்றுஞ் சொல்லுருபாக வரும். அவைவாளாலே வெட்டினான், வாளைக்கொண்டு வெட்டினான், வாள்கொண்டு வெட்டினான், மகனோடே தந்தை வந்தான், மகனுடன்றந்தை வந்தான், மகனுடனே தந்தை வந்தான் என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மூன்றாம் வேற்றுமை யுருபும் பொருளுங் கூறுஞ் சூத்திரம் யாது?

மூன்றா வத்னுரு பாலா னோடொடு

கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.

(மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஒடு

கருவி கருத்தா உடனிகழ்வு அதன் பொருள்.)

**இ–ள்.:** மூன்றாம்வேற்றுமையினுருபு முன் சொல்லப்பட்ட ஆலேயன்றி ஆனும் ஒடும் ஒடுவுமாம். அவ்வுருபுகளின் பொருள்களாவன கருவிப்பொருளும் வினைமுதற்பொருளும் உடன் நிகழ்ச்சிப்பொருளும் ஆகிய அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட மூன்றுமாகும், **எ–று.**

இந்நான்குருபுகளுக்கும் மூன்றுபொருள்களுமாமெனக் கூட்டி சொன்னா ராயினும், **ஏற்புழிக்கோடலென்னு** முத்தியால், அவ்வுருபுகளுள், ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவியும் வினைமுதலும், ஒடு ஒடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சியுஞ் சிறந்தனவெனக் கொள்க.

(உதாரணம்)

வாளால் வெட்டினான்..................... கருவி.

வாளான் வெட்டினான்......................

அரசனாலாகிய கோயில்................... கருத்தா.

அரசனானாகிய கோயில்...................

மைந்தனோடு தந்தை வந்தான்........... உடனிகழ்ச்சி.

மைந்தனோடு தந்தை வந்தான்...........

கருவியாவது யாது?

கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படு பொருளிற்சேர்ப்பது. கருவி, காரணம், ஏது என்பது ஒருபொருட்சொற்கள்.

**உ–ம்.:–**

வாளாற் பகைவனை வெட்டினான் என்புழி, வாளைப்பற்றி வீசுதல் வினைமுதலினது தொழில்; பகைவனுடம்பறுதல் அத்தொழிற்குப் பயன்; அப்பயனைப் பகைவனாகிய செயப்படுப் பொருளிலே சேர்ப்பது வாளாதலால் வாள் கருவிப்பொருள்.

அக்கருவிப்பொருள் முதற்கருவியுந் துணைக்கருவியுமென இருவகைப்படும். அவற்றுள், முதற்கருவியாவது செயப்படு பொரு ளோடொற்றுமை யுடையது. முதற்காரணம், ஆதிகாரணம் சமவாயிகாரணம் என்பன ஒருபொருட்சொற்கள். துணைக்கருவியாவது முதற்கருவிக்குத் துணையாய் அது காரியப்படுமளவும் உடனிகழ்வது.

**உ–ம்.:–**

(1) மண்ணாற் குடத்தை வனைந்தான் என்புழிக், குடமாகிய காரியத்தோ டொற்றுமையுடையது மண்ணாதலான் மண் முதற்கருவி.

(2) திரிகையாற் குடத்தை வனைந்தான் என்புழி, மண்ணாகிய முதற்கருவிக்குத் துணையாய் அது குடமாகக் காரியப்படு

மளவும் உடனிகழ்வது திரிகையாதலாற் றிரிகை துணைக் கருவி.

இக்கருவிப்பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக்கருவி என மூன்றாயும் வருமெனக்கொள்க.

**உ–ம்.:–**

மனத்தா னினைந்தான்; அகக்கருவி. வாளால் வெட்டினான் புறக்கருவி. அறிவா லறிந்தான் ஒற்றுமைக்கருவி.

வினைமுதல் இன்னதென்பது முன்னே எழுவாய்ச்சூத்திர வுரையிற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வரும் வினைமுதற்பெயர் தன் விகுதிவினையினாலே முடியும்; இம் மூன்றாம் வேற்றுமையில் வரும் வினைமுதற்பெயர் செயப்படுபொருள் விகுதிவினையினாலே முடியும்; இதுவே அவ்விரண்டற்கும் வேறுபாடாம்.

**உ–ம்.:–**

(1)குயவன் குடத்தை வனைந்தான் என்புழிக், குயவனென்னும் எழுவாய்க்கருத்தாத் தனக்குரிய ஆன்விகுதி வினையினாலே முடிந்தது.

(2)குயவனாற் பானை வனையப்பட்டது என்புழிக், குயவ னென்னும் மூன்றனுருபின் கருத்தாத் தனக்குரிய ஆன் விகுதி வினையினாலே முடியாது, செயப்படுபொருட்குரிய துவ் விகுதி வினையினாலே முடிந்தது.

அவ்விருவகை வினைமுதலும், தனித்தனியே, இயற்றும் வினைமுதலும் ஏவும் வினைமுதலும் என, இருவகைப்படும். அவற்றுள், இயற்றும் வினைமுதலாவது கருவியைத் தொழிற் படுத்துவது. ஏவும் வினைமுதலாவத அவ்வியற்றும் வினைமுதலினது தொழிலையுண்டாக்குந் தொழிலுடையது.

**உ–ம்.;–**

(1) தச்சன் கோயில் கட்டினான்; தச்சனாற் கோயில் கட்டப் பட்டது என்புழித் தச்சன் இயற்றுதற்கருத்தா.

(2) அரசன் கோயில் கட்டுவித்தான்; அரசனாற் கோயில் கட்டுவிக்கப்பட்டது என்புழி அரசன் ஏவுதற்கருத்தா.

65. உடனிகழ்ச்சிப்பொருளாவது யாது?

உடனிகழ்ச்சிப்பொருளாவதுவினை கொண்டு முடியும் பொருளின் றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக வுடைய பொருளாம்.

**உ–ம்.** மைந்தனோடு தந்தை வந்தான் என்புழித், தந்தை, வினைகொண்டு முடியும் பொருள்; வருதல் அப்பொருளின் றொழில்; அவ் வருதற்றொழிலைத் தன்னிடத்திலும்

டடனிகழ்வதாகவுடைய பொருள் மைந்தனாதலால் மைந்தன் டடனிகழ்ச்சிப் பொருள்.

அவ்வுடனிகழ்ச்சிப்பொருள், தலைமைப்பொருளும், நலைமையில் பொருளும் என இருவகைப்படும். அவற்றுள், நலைமைப் பொருளாவது வினைகொண்டுமுடியும் பொருளி றுயர்வுடையது. தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளி னிழிவுடையது.

உ–ம்.:–

(1) மன்னவனோடு மந்திரி வந்தான் என்புழி, வினைகொண்டு முடியும் பொருள் மந்திரி; அப்பொருளினுயர்வுடைய பொருள் மன்னவனாதலால், உடனிகழ்ச்சிப் பொருள் தலைமைப்பொருளாயிற்று.

2)மாணாக்கனோடாசிரியன் வந்தான் என்புழி, வினைகொண்டு முடியும்பொருள் ஆசிரியன்; அப்பொருளினிழிவுடைய பொருள் மாணாக்கனாதலால், உடனிகழ்ச்சிப்பொருள் தலைமையில் பொருளாயிற்று.

56. ஆல் ஆன் ஒடு ஓடு தமக்குரிய பொருளில் மாறியும் வருமோ?

ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளிலும் ஒடு ஓடு உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருள்களிலும், ஒரோவிடத்து அருகி வரும்.

**உ–ம்.:–**

(1)"தூங்கு கையா னோங்கு நடைய" "உறழ்ம ணியானுயர்மருப்பின" என ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது காண்க. இவற்றிற்குத் தூங்குகையோடு என்றும், உறழ்மணியோடு என்றும், பொருள் கொள்க. தூங்கு கையா னோங்கு நடைய என்புழி, நடத்தலாகிய வேறிடப்புணர்ச்சி கைக்கும் யானைக்கும் உளதாதலறிக. உறழ்மணியானுயர் மருப்பின என்புழி, யானையினது உடைமை மணிக்கும் மருப்பிற்கும் உளதாதலறிக.

(2) "கொடியொடு துவக்குண்டான்;" "ஊசியொடு குயின்ற தூசும்பட்டும்" என்புழிக், கொடியொடு, ஊசியொடு என்பன கொடியால், ஊசியால் எனப் பொருள்படுதலும், கொடி, ஊசி என்பன முறையே வினைமுதற்பொருள் கருவிப்பொருளாதலுங் காண்க.

சிறுபான்மை ஆல் ஆன் உருபுகள், முதற்பொருண்மே லேற்றிச் சொல்லப்படும் விசாரத்தையுடைய சினைப்பொருளிலும், தொறுப்பொருளிலும் வரும்.

**உ–ம்.:–**

(1) கண்ணாற் குருடன்; காலான் முடவன் என்புழிக், குருடன் முடவன் முதற்பொருள்கள்; அவைகளின் மேலேற்றிச் சொல்லப்படும் விகாரங் குருட்டுத்தன்மையும் முடத்தன்மையும், அவ்விகாரத்தையுடை சினைப்பொருள் கண்ணுங் காலுமாதல் காண்க.

(2)"ஊரானோர் தேவகுலம்" என்புழி, ஊர்தோறு மொவ்வொரு தேவகுலம் எனப் பொருள்கொள்ளப்படும். தொறுவென்பது தன்னையேற்ற பெயர்ப்பொருளெங்கும் அப்பெயர்ப்பொரு ளோடியையும் பொருளிருக்கை. தேவ–குலம்கோயில்.

சிறுபான்மை ஒடு ஒடு உருபுகள், வேறு வினையுடனிகழ்ச்சிப் பொருளிலும், வினையியல்பொருளிலும், கலப்புறு பொருளிலும், ஒப்புப்பொருளிலும்; ஒப்பலொப்புப்பொருளிலும், ஒற்றுமைப் பொருளிலும், அடைமொழிப்பொருளிலும், வரும்.

உ–ம். :–

(1) "தொடியொடு தொல்கவின் வாடிய தோள்" என்புழி, வினைகொண்டு முடியும் பொருள் கவின்; அதனது தொழில் வாடல்; அத்தொழில் நிகழுங்காலையில் நிகழும் வேறுதொழில் சேர்தல்; அதனையுடையது தொடியாதலால், தொடி வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருள்.

(2) "மலையொடு பொருத மால்யானை" என்புழிப், பொருதல் யானைக்கல்லது மலைக்கில்லாமையால் மலைவினையில் பொருள்.

(3)"பாலொடு தேன் கலந்தற்றே" என்புழித், தேன்கலக்கப்படுதலாற் பால் கலப்புறுபொருள்.

(4)மதியொடொக்கு முகம் என்புழி, முகத்துக்கு உவமான மாகுகையால், மதி ஒப்புப்பொருள்.

(5) "விலங்கொடு மக்களனையர்" என்புரி, ஒப்பல்லாத விலங்கு ஒப்பாகச் சொல்லப்படுதலால், விலங்கு ஒப்பலொப்புப்பொருள்.

(6) "எழுத்தொடு புணர்ந்த சொல்" என்புழி, உருபைத் தொடர்ந்த சொல்லென்னும் பொருளோடு ஒற்றுமை யுடையதாதலால், எழுத்து ஒற்றுமைப்பொருள்.

(7) கோபத்தோடு வந்தான் என்புழி, வருதற்கு விசேடண மாதலால், கோபம் அடைமொழிப்பொருள்.

ஆல் ஆன் உருபுகள் நிற்றற்குரியவிடத்துச் கொண்டென்பதும், ஒடு ஒடு உருபுகள் நிற்றற்குரியவிடத்து உடனென்பதும், சொல்லுருபுகளாக வரும்.

உ–ம்.:–

வாள்கொண்டு வெட்டினான். தந்தையுடன் மைந்தன் வத்தான் என வரும்.

"பெயரே ஐ ஆல் கு" என்னுஞ் சூத்திரத்திலே மூன்றாவதற்கு ஒருருபுகூறி இங்கே "மூன்றாவதனுருபு ஆல் ஆன் ஒடு ஓடு" என நான்குருபு கூறியதென்னை?

அங்கே ஆலென்றதனால் ஆல் வேற்றுமையென மூன்றாம் வேற்றுமைக்குப் பெயரிட்டார். இங்கே அவ்வேற்றுமைக்குரிய உருபுகளெல்லாங் கூறினார்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, மூன்றாம் வேற்றுமை யிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.: மூன்றாவதனுருபு ஆல் ஆன் ஒடு ஓடு** – மூன்றாம் வேற்றுமையுருபு, **மேற்கூறிய ஆலே யன்றி** –ஆனும்ஒடும்ஓடுவுமாம், **அதன் பொருள்**–அவற்றின் பொருளாவன, **கருவி கருத்தா வுடனிகழ்வு** – (தம்மை யேற்ற பெயர்ப் பொருளை) கருவியாகவும் ஏதுப் பொருட்டாகிய கருத்தாவாகவும் உடனிகழ்வதாகவும் வேற்றுமை செய்தலாம், **எ–று.**

மேலே ஆல் ஒன்றையுமிதற்கு உருபாகச் சொல்லி யிங்கே உருபு நான்கு என்றது மயக்கமெனின், அங்கே பெயரையும் முறையையுங் காட்டுகிற நிமித்தம் வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் வழங்கி வருவதைச் சொன்னார்; இங்கே, அவ்வேற்றுமைக்கு வரும் உருபுகளையெல்லா மெடுத்துச் சொல்லவேண்டுதலால் நான்கெனக் கூறியது மயக்கமன்றென்க. இந்த வினா விடைகளை மேல் வருவனவற்றிற்கு முரைத்துக் கொள்க. கருவியாவது, வினைமுதலின் தொழிற்பயனைச் செயப்படு பொருளிலே செலுத்துவது; கருவி, காரணம், ஏது, நிமித்தம் என்பன ஒருபொருள். முதற்காரணந் துணைக்காரணம் நிமித்தகாரணம் எனக் காரணம் மூன்று வகைப்படும். அவற்றுள், முதற்காரணந் துணைக்காரண மிரண்டையுங் கருவியென்றும், ஏவுதற் கருத்தாவும் இயற்றுதற் கருத்தாவுமாகிய நிமித்த காரணமிரண்டையுங் கருத்தா வென்றுங் கூறினார். இன்னுமந்தக் கருவி, காரகக் கருவியும், ஞாபகக் கருவியுமென விருவகைப்படும். அவற்றுள் காரகக் கருவியாவது, தொழிலை இயற்றுவிப்பது; ஞாபகக்கருவி, அறிவிப்பது. குடத்தை வனைந்தான் எனின், குடமாகிய காரியத்திற்கு அதுவது ஆகிய மண் முதற்காரணம் எனவும்; குயவனது அறிவும், அந்தக் கரணமு முதலிய ஞாபகக் கருவியும்; தண்டசக்கர முதலிய காரகக் கருவியும் முதற்காரணத்திற்குத் துணையாய் நின்று காரியத்தைத்தருலால் துணைக் காரணம் எனவும் குயவனிமித்தமாக அந்தக்காரியந் தோன்றலால் குயவன் நிமித்த காரணம் எனவும் காண்க.

**வ–று.:**

அறிவாலாக்கியகாட்சி, ஆகியகாட்சி எனின், ஆலுருபு பெயர்ப்பொருளை ஞாபக முதற்கருவியாக வேற்றுமை செய்தது. கண்ணாலாக்கிய ஆகியகாட்சி எனின் ஞாபகத்துணைக் கருவியாக வேற்றுமை செய்தது; (காட்சி–உணர்வு,). மண்ணாலாக்கிய ஆகிய குடம் எனின் காரகமுதற்கருவி, திரிகையாலாக்கிய ஆகிய குடம் எனின், காரகத்

துணைக்கருவி. இங்கே ஆக்குதற்கு வினைமுதல் அறிவனும் குயவனுமாம்; ஆதற்குவினை முதல் காட்சியுணர்வுங் குடமுமாம்; இந்தக் காட்சியுணர்வுங் குடமும் வினைமுதலான காலத்தில், அறிவு கண் மண் திரிகை என்ற கருவிகள் ஏதுப் பொருளவாய் நின்றன. (கருத்தாவெனினும் வினை முதலெனினு மொன்று). இந்த மூன்றாம் வேற்றுமையில் வரும் ஏவுதற் கருத்தா, இயற்றுதற் கருத்தா வென்னு மிருவகை வினைமுதலும் கருவி முதலாகிய காரணங்களைத் தொழிற்படுத்துவதெனக் காண்க. தச்சனாலாகிய தேவகுலம், தச்சனாற் செய்யப்பட்ட தேர், அகத்தியனாலுரைக்கப்பட்ட தமிழ் என்றாற் போல்வன இயற்றுதற் கருத்தா. அரசனாலாகிய தேவகுலம் அரசனாற் செய்யப்பட்ட தேவகுலம் (குலம்-கோயில்,) தேவரால் தரப்பட்ட திரு என்றாற் போல்வன ஏவுதற் கருத்தா, (திரு-செல்வம்,). ஆக்கிய தேவகுல மென வரின் மூன்றாம் வேற்றுமையுருபு கொள்ளாமல் அரசனுந் தச்சனுமெழுவாயாக நிற்கும் எனக் காண்க. கொடியொடு கட்டுண்டான், ஊசியொடு குயின்ற தூசும் பட்டும் என்றாற் போல்வன உடனிகழ்ச்சி; கொடி சாத்தனைத் தொழிலுறு விக்கும்போது அக்கொடி யவனை விட்டு நீங்காமலே யுடனிகழ்தலாலும்; ஊசி சாத்தன் தொழிற் பயனைத் தூசிலும் பட்டிலுஞ் செலுத்தும்போது அந்த ஊசி யவற்றை விட்டு நீங்காமலே யுடனிழ்தலாலும் இவை முறையே வினை முதற்பொருள் மேலுங் கருவிப்பொருள் மேலும் வந்தன. (உடனிகழ்ச்சி - கூடவே நடப்பது,).

**"தூங்கு கையா லோங்கு நடைய**
**உறழ் மணி யாலுயர் மருப்பின"**
**"பெண்டகையாற் பேரமர்க் கட்டு"**

இவை ஆலுருபால் வந்த உடனிகழ்ச்சி, தூங்குகையோடு ஓங்குநடை என ஓடுருபை வைத்துக் காண்க.

**"நாவீற் றிருந்த கலைமா மகளோடு நன் பொற்**
**பூவீற் றிருந்த திருமா மகள்புல்ல நாளும்"**

எனின் இருவரும் புல்லவென ஒருவினை யுடனிகழ்ச்சி-ஓடு.

**"மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு**
**தானஞ்செய் வாரிற் றலை"**

எனின் தவமுந் தானமுஞ் செய்வாரில் என ஒரு வினையுடனிகழ்ச்சி ஓடு மனத்தொடு வாய்மைமொழிதல் வேறுவினை யுடனிகழ்ச்சி, மொழிதல் மனத்திற்கு இல்லாவிடினும் நினைத்தலுளதாகலின்,

**"தொடியொடு தொல்கவின் வாடியதோள்"**

எனின், தொடிகழலுதலும் தோள்வாடுதலுமாதலா லிதுவுமது,

இதனுள் ஆலுருபு வந்தவிடங்களில் ஆனுருபையு மொட்டிக் காண்க.

ஆக்கிய தேவகுலமென வரின், மூன்றாம் வேற்றுமை யுருபுகொள்ளா தென்றதென் னெனின், தன் புடைபெயர்ச்சி யாகிய செய்வினை யென்னுந் தந்தொழில் தோன்றாது கருவியைத் தொழிற்படுத்தித் தானேதுவாக நிற்பதும், செயப்பாட்டு வினையாகிய தம்மினாகிய தொழில் வெளிப்பட்டுத்தானேதுவாக நிற்பதும் மூன்றாம் வேற்றுமையிலே வருங் கருத்தாவின் குணம்; தானே துவாகாமல் புடைபெயர்ச்சியாகிய செய்வினையென்னுந் தந்தொழில் தோன்றி நிற்பது – எழுவாயில் வருங்கருத்தாவின் குணம்–ஆதலால் ஆக்கல் போக்கல் என்றாற் போல்வன எழுவாயிலே வரும் வினைமுதற்குத்தந் தொழில் ஆக்கப் படுதல், போக்கப்படுதல் என்றாற்போல்வன மூன்றாம் வேற்றுமையிலே வரும் வினைமுதற்குரிய தம்மினாகிய தொழில்; இவை தம்முள் வேற்றுமையென்க. அகத்தியனா லுரைக்கப்பட்டது தமிழ் என்ற இடத்தில் உரைத்தல் தன் புடைபெயர்ச்சியாகிய தந்தொழில் தோன்றிய தன்றோவெனின், உரைத்தல், செய்வினையாகிய தந்தொழி லென்றது போலவே உரைக்கப்படுதல் செயப்பாட்டு வினையென்னும் தம்மினாகிய தொழிலாவதே யன்றி வேறு பகுக்கப்படாதென்க. இதுபற்றி யன்றோ, 'புள்ளியு முயிரு மாயிரு சொன்முன்' என்னுஞ் சூத்திரத்துரையில் தந்தொழில் வேறு, தம்மினாகிய தொழிலும் வேறு; எழுவாய்க் கண்வரும் வினைமுதல் வேறு; மூன்றாம் வேற்றுமையில் வரும் வினைமுதலும் வேறென் றுரைத்தது மென்க. அகத்தியன் தமிழுரைத்தான் என்ற விடத்துத் தானேதுவாகாமற் புடை பெயர்ச்சியாகிய உரைத்தலென்னுந் தந்தொழில் தோன்றி நிற்றலும், 'அகத்தியனாற் றமிழுரைக்கப்பட்டது' என்றவிடத்துத் தானேதுவாகித் தம்மினாகிய தொழிலாகிய உரைக்கப்படுத லென்னுஞ் செயப்பாட்டு வினை வெளிப்பட்டு நிற்றலுங் காண்க. இங்ஙனஞ் செயப்பாட்டு வினை வெளிப்பட்டு வினைமுத லேதுவாக நின்றபோது செயப்பாட்டு வினைக்குரிய செயப்படு பொருள் எழுவாயாக நிற்றலுங் கண்டு கொள்க.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார்,

**"மூன்றாகுவதே**
**ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைமுதல் கருவி யனைமுதற் றதுவே"**

என ஒடுவுருபொன்றுமே கூறி, அதற்கு வினை முதற் பொருளுங், கருவிப் பொருளுமென விரண்டாகக் கூறிய தென்னெனின்,

**"அதனி னியற லதற்கு கிளவி—யதன்**
**வினைப் படுத லதனி னாத — லதனிற்**
**கோட லதனொடு மயங்க**
**லதனோ டியைந்த வொருவினைக் கிளவி**
**யதனோ டியைந்த வேறுவினைக் கிளவி**
**யதனோ டியைந்த வொப்ப லொப்புரை**
**யின்னா னேது வீங்கென வரூஉ**
**மன்ன பிறவு மதன்பால வென்மனார்"**

எனப்பின்னர்க் கூறிய விச்சூத்திரத்தால் இந்த நான்குருபையும் மூன்று பொருளையும் அவரும் நேர்ந்தாரென்க.

உ—ம்:—

மண்ணானியன்ற குடம் என்பது அதனினியறல்; வாயாற்றக்கது வாச்சி, அறிவானமைந்த சான்றோர் என்பன அதற்றகுகிளவி; நாயாற்கோட்பட்டான் என்பது அதன் வினைப்படுதல்; சாத்தனான் முடியுமிக் கருமம், வாணிகத் தானாயினான் என்பன அதனினாதல்; காணத்தாற் கொண்ட வரிசி என்பது அதனிற்கோடல். இவை யானுருபால் வந்தன. எண்ணொடு விராயவரிசி என்பது அதனொடு மயங்கல், (எண்—எள்ளு மயங்குதல் — கலத்தல்) ஆசிரியனொடு மாணாக்கன் வந்தான் என்பது அதனோடியைந்த வொரு வினைக் கிளவி; மலையொடு பொருதமால் யானை என்பது அதனோடியைந்த வேறுவினைக் கிளவி; பொன்னோடிரும் பனையர் நின்னொடு பிறரே என்பது பொன்னோடிரும் பையுவமித்தலை யொப்பார் நின்னொடு பிறரை யுவமிக்குமிடத்து என வருதலால் ஒப்பலொப்புரை; இவை ஒடு வுருபான் வந்தன. முயற்சியிற் பிறத்தலானொலி நிலையாது என்பது இன், ஆன் என்னுமுருபுகளால் வந்த ஏது; கண்ணாற் கொத்தை, காலான்முடம் இவை சினை விகாரத்தை முதன்மேலேற்றிச் சொல்லப்பட்டன, (கொத்தை பழுது,). மதியோடொக்குமுகம் என்பது ஒப்பு; சூலொடுகழுதை பாரஞ் சுமந்தது என்பது கட்புலனாகா வொருவினை—ஒடு, (கட்புலனாதல்—கண்ணுக்குத்தெரிதல்,) இவை பிற வென்றதனாற் காட்டப்பட்டன. ஆன், ஆலெனவும்; ஒடு, ஓடெனவுந் திரிந்து நின்றன. ஆதலால் நான்குருபும் வந்தன. இனியிக் கருவிப்பொருள் அகக்கருவி, புறக்கருவி ஒற்றுமைக் கருவி என மூவகைப்படு மெனக் கொள்க.

உ—ம்.:—

மனத்தானினைத்தான் என்பது அகக்கருவி. வாளால் வெட்டினான் என்பது புறக்கருவி. அறிவாலறிந்தான் என்பது ஒற்றுமைக் கருவி, எனக் காண்க. இரண்டாம் வேற்றுமைப் பொருளாகிய காரியத்திற்கு வேண்டுங் கருவிப் பொருளைத் தருதலால் இது மூன்றாம் வேற்றுமை யெனப்பட்டது.

**"ஆலு மானு மோடு மொடுவுஞ்
சாலு மூன்றாம் வேற்றுமைத் தனுவே
செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி
யெய்திய தொழின்
முத லியைபுடைத் ததன்பொருள்"**

என்றார் ஆசிரியரகத்தியனாரு மென்க. இதனுள் முதற்காரணத்தைக் காரண மென்றும், ஏவுதற் கருத்தாவைத் தொழின் முதலென்றும் பிரித்துக் கூறினதினாலே பொருள் ஐந்தாயின.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– மூன்றாவதன்** – மூன்றாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளாவன;– ஆல், ஆன், ஒடு, ஓடு – இந்நான்குமாம்; **அதன் பொருள்** – அதனுடைய பொருள்களாவன; **கருவி** – கருவிப் பொருளும், **கருத்தா** – வினைமுதற்பொருளும், **உடனிழ்வு** – உடனிகழ்ச்சிப் பொருளும் (ஆகத் தன்னை ஏற்ற பெயரின்பொருளை வேறுபடுத்துதலாம்).

உ–ம்:– வாளால் வெட்டினான், வாளான் வெட்டினான் – கருவி.
அரசனால் ஆகிய கோவில், அரசனான் ஆகிய கோவில் – கருத்தா
தந்தையோடு மைந்தன்வந்தான், தந்தையொடு மைந்தன் வந்தான் – உடனிகழ்ச்சி

**குறிப்பு:–** இங்ஙனம் பொதுப்படக் கூறினும் **ஏற்புழிக்கோடல்** என்னு முத்தியால் ஆல், ஆன், உருபுகள் – கருவிகருத்தாப் பொருள்களிலும், ஒடு, ஓடு உருபுகள் – உடனிகழ்ச்சிப் பொருளிலும் வருதல் சிறந்ததென்றறிக. கருவியாவது – கருத்தாவின் தொழிலுக்குச் சாதனமாயிருப்பது: 'வாளாற் பகைவரை வெட்டினான்' என்பதில், வெட்டுதல் கருத்தாவின் தொழில். அவ்வெட்டுதலுக்குச் சாதனமாயிருப்பது வாள்; ஆதலால் வாள் கருவிப் பொருளாம்; அக்கருவி முதற்கருவியும், துணைக் கருவியும் என இருவகைப்படும். முதற்கருவியாவது – காரியமாகமாறி அதினின்றுவேறுபடாதது. துணைக்கருவியாவது – முதற்கருவி காரியப்படுமளவுந்துணையாய் நின்று பின்பு நீங்குவது; இவற்றை முறையே வடநூலார் "உபாதாநகாரணம்" எனவும், "ஸஹகாரிகாரணம்" எனவும் கூறுவர்.

உ–ம்:– மண்ணால் குடத்தை வனைந்தான் – (மண் – முதற்வி)
தண்டசக்கரத்தால் குடத்தை வனைந்தான்– (தண்டசக்கரம் – துணைக் கருவி)

இங்கு, கருத்தாவும் இயற்றுதற்கருத்தா ஏவுதற்கருத்தா என இருவகைப்படும்.

உ–ம்:– தச்சனாற் கோயில் கட்டப்பட்டது – (தச்சன்– இயற்றுதற்கருத்தா)

அரசனாற் கோயில் கட்டப்பட்டது. -(அரசன்-
ஏவுதற்கருத்தா)

முதல் வேற்றுமைக் கருத்தாவுக்கும், மூன்றாம் வேற்றுமைக் கருத்தாவுக்கும் உள்ள வேறுபாடு – முதல் வேற்றுமைக்கருத்தா – தன்விகுதி வினையினாலும், மூன்றாம் வேற்றுமைக் கருத்தா – செயப்படுபொருளின் விகுதி வினையினாலும் முடியும்; முதல் வேற்றுமைக் கருத்தாவின் வினை – செய்வினையாயும், மூன்றாம் வேற்றுமைக்கருத்தாவின் வினை – செயப்பாட்டு வினையாயுமிருக்கும்; முதல் வேற்றுமைக்கருத்தாவுக்குச் – செயப்படு பொருள் இரண்டாம் வேற்றுமையாயும், மூன்றாம் வேற்றுமைக்கருத்தாவுக்குச் செயப்படுபொருள் முதல் வேற்றுமையாயுமிருக்கும்.

உ–ம்:– தச்சன் கோயிலைக் கட்டினான் (முதல்வேற்றுமைக்கருத்தா)
தச்சனாற் கோயில் கட்டப்பட்டது. (மூன்றாம்
வேற்றுமைக்கருத்தா)

உடனிகழ்ச்சிப் பொருளாவது – வினை கொண்டு முடிகிற பொருளினது தொழிலைத் தன்னிடத்தும் உடன் (ஒரேகாலத்தில்) நிகழ்கின்றதாக உடையது. 'தந்தையோடு மைந்தன் வந்தான்' என்றதில் – மைந்தன், வினைகொண்டு முடிகிற பொருள்; வருதல் – அப்பொருளினது தொழில்; அப்பொருளைத் தன்னிடத்தும் உடன் நிகழ்கிறதாக உடையபொருள் தந்தை; ஆதலால் அது உடனிகழ்ச்சிப் பொருள்.

ஆல், ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப் பொருளிலும்; ஒடு, ஓடு உருபுகள் கருவிகருத்தாப் பொருள்களிலும் சிறுபான்மை வரும்.

உ–ம்:– "தூங்குகையாலோங்குநடைய" ஆல், ஆன்– உடனிகழ்ச்சிப் பொருள்.

"உறழ்மணியானுயர் மருப்பின" கையால் – கையொடு; மணியான்– மணியொடு

"கொடியோடு துவக்குண்டான்" ஒடு, ஓடு – கருவிப்பொருள்

"ஊசியொடுகுயின்ற தூசும்பட்டும்" கொடியோடு–கொடியால்
ஊசியொடு–ஊசியால்

இன்னுஞ் சிலவிடத்து, ஆல், ஆன் உருபுகள் – தோறும் என்கிற பொருளையும், ஒடு, ஓடு, உருபுகள் அடைமொழிப் பொருளையுந் தரும்.

உ–ம்:– ஊரானொரு கோயில் – ஊரான் ஊர்தோறும்
கோபத்தோடு வந்தான் – கோபம் – வருவதற்கு அடைமொழி

கருவிப் பொருளில் 'கொண்டு' என்பதும், உடனிகழ்ச்சிப் பொருளில் 'உடன்' என்பதும் சொல்லுருபாக வரும்; உ–ம்:– 'வாள் கொண்டு வெட்டினான்'; 'மகனுடன் தந்தை வந்தான்'.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஓடு** – மூன்றாம் வேற்றுமையினுருபு முன்சொல்லப்பட்ட ஆலே யன்றி ஆனும் ஒடும் ஓடுவுமாம், **அதன் பொருள்**–அவ்வுருபுகளின் பொருள்களாவன, **கருவி**–கருவிப் பொருளும், **கருத்தா**–வினைமுதற் பொருளும், **உடனிகழ்வு** – உடனிகழ்ச்சிப் பொருளும் ஆகிய அவ்வுருபுகளை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட மூன்று மாகும்.

இந் நான்குருபுகளுக்கும் மூன்று பொருள்களுமா மெனக் கூட்டிச் சொன்னாராயினும், ஏற்புழிக் கோடலென்னு முத்தியால், அவ்வுருபுகளுள், ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவியும் வினைமுதலும், ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சியுஞ் சிறந்தனவெனக் கொள்க.

**உ–ம்.:**

வாளால் வெட்டினான். . . . . . . . . கருவி.

வாளான் வெட்டினான். . . . . . . . .

அரசனாலாகிய கோயில். . . . . . . . . கருத்தா.

அரசனானாகிய கோயில். . . . . . . . .

மைந்தனோடு தந்தை வந்தான். . . . . . உடனிகழ்ச்சி.

மைந்தனொடு தந்தை வந்தான். . . . . .

கருவியாவது வினைமுதற் றொழிற்பயனைச் செயப்படுபொருளிற் சேர்ப்பது. கருவி, காரணம், ஏது என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ–ம்.:–**

வாளாற் பகைவனை வெட்டினான் என்புழி, வாளைப்பற்றி வீசுதல் வினைமுதலினது தொழில்; பகைவனுடம் பறுதல் அத்தொழிற்குப் பயன்; அப்பயனைப் பகைவனாகிய செயப்படுபொருளிலே சேர்ப்பது வாளாதலால் வாள் கருவிப் பொருள்.

அக் கருவிப்பொருள் முதற்கருவியுந் துணைக்கருவியு மென இருவகைப்படும். அவற்றுள், முதற்கருவியாவது செயப்படு பொருளோ டொற்றுமை யுடையது. முதற்காரணம், ஆதி காரணம், சமவாயிகாரணம் என்பன ஒருபொருட் சொற்கள். துணைக்கருவியாவது முதற் கருவிக்குத் துணையாய் அது காரியப்படுமளவும் உடனிகழ்வது.

**உ– ம்.:–**

மண்ணாற் குடத்தை வனைந்தான் என்புழிக், குடமாகிய காரியத்தோ டொற்றுமை யுடையது மண்ணாதலான் மண் முதற்கருவி.

திரிகையாற் குடத்தை வனைந்தான் என்புழி, மண்ணாகிய முதற்கருவிக்குத் துணையாய் அது குடமாகக்

காரியப்படுமளவும் உடனிகழ்வது திரிகையாதலாற் றிரிகை துணைக்கருவி.

இக் கருவிப்பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக்கருவி என மூன்றாயும் வருமெனக் கொள்க.

**உ—ம்.:—**

மனத்தானினைந்தான்; வாளால் வெட்டினான்; அறிவாலறிந்தான் என வரும்.

வினைமுதல் இன்னதென்பது முன்னே எழுவாய்ச் சூத்திர வுரையிற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வரும் வினைமுதற் பெயர் தன் விகுதி வினையினாலே முடியும்; இம்மூன்றாம் வேற்றுமையில் வரும் வினைமுதற்பெயர் செயப்படுபொருள் விகுதி வினையினாலே முடியும்; இதுவே அவ்விரண்டற்கும் வேறுபாடாம்.

**உ—ம்.:—**

குயவன் குடத்தை வனைந்தான் என்புழிக், குயவனென்னும் எழுவாய்க் கருத்தாத் தனக்குரிய ஆன் விகுதி வினையினாலே முடிந்தது.

குயவனாற் பானை வனையப்பட்டது என்புழிக், குயவ னென்னும் மூன்றனுருபின் கருத்தாத் தனக்குரிய ஆன்விகுதி வினையினாலே முடியாது, செயப்படுபொருட்குரிய துவ்விகுதி வினையினாலே முடிந்தது.

அவ்விரு வகை வினைமுதலும், தனித்தனியே, இயற்றும் வினைமுதலும் ஏவும் வினைமுதலும் என, இருவகைப்படும். அவற்றுள், இயற்றும் வினைமுதலாவது கருவியைத் தொழிற்படுத்துவது. ஏவும் வினைமுதலாவது அவ்வியற்றும் வினைமுதலினது தொழிலை யுண்டாக்குந் தொழிலுடையது.

**உ—ம்.:—**

தச்சன் கோயில் கட்டினான்; தச்சனாற் கோயில் கட்டப்பட்டது என்புழித் தச்சன் இயற்றுதற் கருத்தா.

அரசன் கோயில் கட்டுவித்தான்; அரசனாற் கோயில் கட்டுவிக்கப்பட்டது என்புழி அரசன் ஏவுதற் கருத்தா.

உடனிகழ்ச்சிப் பொருளாவது வினை கொண்டு முடியும் பொருளின் றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக வுடைய பொருளாம்.

**உ—ம்.:—**

மைந்தனோடு தந்தை வந்தான் என்புழித் தந்தை வினை கொண்டு முடியும் பொருள்; வருதல் அப்பொருளின் றொழில்; அவ்வருதற் றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக

வுடைய பொருள் மைந்தனாதலால் மைந்தன் உடனிகழ்ச்சிப் பொருள்.

அவ் வுடனிகழ்ச்சிப்பொருள், தலைமைப்பொருளும், தலைமை யில் பொருளும் என, இருவகைப்படும். அவற்றுள், தலைமைப் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளினுயர் வுடையது. தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளினிழிவுடையது.

**உ–ம்.:–**

'மன்னவனோடு மந்திரி வந்தான்' என்புழி, வினை கொண்டு முடியும் பொருள் மந்திரி; அப்பொருளினுயர்வுடைய பொருள் மன்னவனாதலால், உடனிகழ்ச்சிப்பொருள் தலைமைப் பொருளாயிற்று.

'மாணாக்கனோடாசிரியன் வந்தான்' என்புழி, வினைகொண்டு முடியும் பொருள் ஆசிரியன்; அப்பொருளினிழிவுடைய பொருள் மாணாக்கனாதலால், உடனிகழ்ச்சிப்பொருள் தலைமையில் பொருளாயிற்று.

ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளிலும், ஒடு ஒடு உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருள்களிலும், ஒரோவிடத்து அருகி வரும்.

**உ–ம்.:–**

"தூங்குகையானோங்குநடைய;" "உறழ்மணியானுயர் மருப்பின" என ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது காண்க. இவற்றிற்குத், தூங்குகையோடு என்றும், உறழ்மணி யோடு என்றும், பொருள் கொள்க. தூங்குகை யானோங்குநடைய என்புழி, நடத்தலாகிய வேறிடப்புணர்ச்சி கைக்கும் யானைக்கும் உளதாதலறிக. உறழ்மணியானுயர் மருப்பின என்புழி, யானையினது உடைமை மணிக்கும் மருப்பிற்கும் உளதாதலறிக.

"கொடியொடு துவக்குண்டான்," "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்புழிக், கொடியோடு, ஊசியொடு என்பன கொடியால் ஊசியால் எனப் பொருள்படுதலும் கொடி, ஊசி என்பன முறையே வினைமுதற்பொருள் கருவிப்பொருளாதலுங் காண்க.

சிறுபான்மை ஆல் ஆன் உருபுகள், முதற்பொருண் மேலேற்றிச் சொல்லப்படும் விகாரத்தை யுடைய சினைப் பொருளிலும், தொறுப்பொருளிலும், வரும்.

**உ–ம்.:–**

கண்ணாற் குருடன், காலான் முடவன் என்புழிக், குருடன் முடவன் முதற்பொருள்கள்; அவைகளின் மேலேற்றிச்

சொல்லப்படும் விகாரங் குருட்டுத்தன்மையும் முடத்தன்மையும்; அவ் விகாரத்தை யுடைய சினைப்பொருள்கள் கண்ணுங் காலுமாதல் காண்க.

"ஊரானோர் தேவகுலம்" என்புழி, ஊர்தோறு மொவ்வொரு தேவகுலம் எனப் பொருள் கொள்ளப்படும். தொறுவென்பது தன்னையேற்ற பெயர்ப்பொருளெங்கும் அப் பெயர்ப்பொருளோ டியையும் பொருளிருக்கை.

சிறுபான்மை ஒடு ஓடு உருபுகள், வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருளிலும், வினையில் பொருளிலும், கலப்புறு பொருளிலும், ஒப்புப்பொருளிலும், ஒப்பலொப்புப் பொருளிலும் ஒற்றுமைப் பொருளிலும், அடைமொழிப் பொருளிலும், வரும்.

**உ.–ம்.:–**

"தொடியொடுதொல்கவின் வாடியதோள்" என்புழி, வினை கொண்டு முடியும் பொருள் கவின்; அதனது தொழில் வாடல்; அத்தொழில் நிகழுங்காலையில் நிகழும் வேறுதொழில் சோர்தல்; அதனை யுடையது தொடியாதலால், தொடி வேறுவினை யுடனிகழ்ச்சிப் பொருள்.

"மலையொடு பொருத மால்யானை" என்புழிப், பொருதல் யானைக் கல்லது மலைக்கில்லாமையால், மலை வினையில் பொருள்.

"பாலொடுதேன் கலந்தற்றே" என்புழித் தேனைக் கலக்கப்படுதலாற் பால் கலப்புறுபொருள்.

"மதியொடொக்கு முகம்" என்புழி, முகத்துக்கு உவமானமாகுகையால், மதி ஒப்புப்பொருள்.

"விலங்கொடு மக்களனையர்" என்புழி, ஒப்பல்லாத விலங்கு ஒப்பாகச் சொல்லப்படுதலால், விலங்கு ஒப்பலொப்புப் பொருள்.

"எழுத்தொடு புணர்ந்தசொல்" என்புழி, உருபைத் தொடர்ந்த சொல்லென்னும் பொருளோடு ஒற்றுமை யுடையதாதலால், எழுத்து ஒற்றுமைப்பொருள்.

"கோபத்தோடு வந்தான்" என்புழி, வருதற்கு விசேடணமாதலால், கோபம் அடைமொழிப்பொருள்.

ஆல் ஆன் உருபுகள் நிற்றற்குரிய விடத்துக் கொண் டென்பதும், ஒடு ஓடு உருபுகள் நிற்றற்குரிய விடத்து உடனென்பதும், சொல்லுருபுகளாக வரும்.

**உ.–ம்.:–**

வாள்கொண்டு வெட்டினான், தந்தையுடன் மைந்தன் வந்தான் என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.;– மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஓடு** – மூன்றாம்வேற்றுமையினுருபு முன்சொல்லப்பட்ட ஆலேயன்றி ஆனும ஒடும் ஒடுவுமாம், **அதன்பொருள்** – அவ்வுருபுகளின் பொருள்களாவன, **கருவி** – கருவிப்பொருளும், **கருத்தா** – வினைமுதற்பொருளும், **உடனிகழ்வு** – உடனிகழ்ச்சிப் பொருளும் ஆகிய அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட மூன்றுமாகும். **எ–று.**

இந்நான்குருபுகளுக்கும் மூன்று பொருள்களுமாமெனக் கூட்டிச்சொன்னாராயினும், ஏற்புழிக் கோடலென்னு முத்தியால், அவ்வுருபுகளுள், ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவியும் வினைமுதலும், ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சியுஞ் சிறந்தனவெனக் கொள்க.

(உதாரணம்)

| | |
|---|---|
| வாளால் வெட்டினாள்....................... | |
| வாளான் வெட்டினான்............ | கருவி |
| அரசனாலாகிய கோயில்............... | |
| அரனானாகிய கோயில்.............. | கருத்தா. |
| மைந்தனோடு தந்தைவந்தான்............. | |
| மைந்தனொடு தந்தை வந்தான்........ | உடனிகழ்ச்சி |

கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படு பொருளிற் சேர்ப்பது, கருவி, காரணம், ஏது என்பன ஒரு பொருட்செற்கள்.

உ–ம், வாளாற் பகைவனை வெட்டினான் என்புழி, வாளைப் பற்றிவீசுதல் வினைமுதலினது தொழில்; பகைவனுடம் பறுதல் அத்தொழிற்குப்பயன்; அப்பயனைப் பகைவனாகிய செயப்படுபொருளிலே சேர்ப்பது வாளாதலால் வாள் கருவிப்பொருள்

அக்கருவிப் பொருள் முதற்கருவியுந் துணைக் கருவியுமென இருவகைப்படும். அவற்றுள், முதற்கருவியானது செயப்படுபொருளோ டொற்றுமையுடையது. (இங்கே ஒற்றுமை என்றது முதற்கருவியும் அம்முதற் கருவியாலாகிய செயப்படுபொருளும் வஸ்துவால் வேறாகாமல் ஒன்றாயிருத்தல்) முதற்காரணம், ஆதிகாரணம், சமவாயிகாரணம் என்பன ஒருபொருட்சொற்கள் துணைக் கருவியாவது முதற்கருவிக்குத் துணையாய் அம்முதற்கருவி காரியப்படுமளவும் உடனிகழ்வது.

(1) உ–ம்..:– மண்ணாற் குடத்தைவனைந்தான் என்புழித், குடமாகிய காரியத் தோடொற்றுமையுடைய மண்ணாதலான் மண்முதற்கருவி.

(2) திரிகையாற் குடத்தைவனைந்தான் என்புழி, மண்ணாகிய முதற்கருவிக்கு துணையாய் அம்மண் குடமாகக் காரியப்படுமளவும் உடனிகழ்வது திரிகையாதலாற் திரிகை துணைக்கருவி.

இக்கருவிப் பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக்கருவி என மூன்றாயும் வருமெனக் கொள்க.

உ–ம், மனத்தானினைந்தான்; வாளால்வெட்டினான்;
அறிவாலறிந்தான் என முறையே வரும்.

வினைமுதல் இன்னதென்பது முன்னே எழுவாய்ச் சூத்திரவுரையிற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வரும் வினைமுதற்பெயர் தன் விகுதிவினையினாலே முடியும். இம்மூன்றாம் வேற்றுமையில் வரும் வினை முதற்பெயர் செயப்படுபொருள் விகுதிவினையினாலே முடியும். இதுவே அவ்விரண்டிற்கும் வேறுபாடாம்.

உ–ம்.:–

(1) குயவன் குடத்தை வனைந்தான் என்புழிக்
குயவனென்னும் எழுவாய்க் கருத்தாத் தனக்குரிய
ஆன்விகுதி வினையினாலே முடிந்தது.

(2) குயவனாற் பானை வனையப்பட்டது என்புழித்
குயவனென்னும் மூன்றனுருபின் சருத்தாத் தனக்குரிய
ஆனவிகுதிவினையினால் முடியாது, செயப்படுபொருட்
குரிய அதுவிகுதிவினையினாலே முடிந்தது.

அவ்விருவகை வினைமுதலும், தனித்தனியே, இயற்றும் வினைமுதலும், ஏவும்வினைமுதலும் என இருவகைப்படும். அவற்றுள், இயற்றும் வினை முதலாவது கருவியைத் தொழிற்படுத்துவது. ஏவும் வினை முதலாவது அவ்வியற்றும் வினை முதலினது தொழிலையுண்டாக்குந் தொழிலுடையது.

உ–ம்.:–

(1) தச்சன் கோயில் கட்டினான்; தச்சனாற் கோயில்
கட்டப்பட்டது என்புழித் தச்சன் இயற்றுதற்கருத்தா.

(2) அரசன் கோயில் கட்டுவித்தான். அரசனாற் கோயில்
கட்டுவிக்கப்பட்டது என்புழி அரசன் ஏவுதற்கருத்தா.

உடனிகழ்ச்சிப் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளின்றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாகவுடைய பொருளாம்.

உ–ம் மைந்தனோடு தந்தைவந்தான் என்புழித் தந்தை
வினைகொண்டு முடியும் பொருள். வருதல் அப்பொருளின்
றொழில்; அவ்வருதற்றொழிலைத் தன்னிடத்தும்
உடனிகழ்வதாகவுடைய பொருள் மைந்தனாதலால்
மைந்தன் உடனிகழ்ச்சிப் பொருள்.

அவ்வுடனிகழ்ச்சிப் பொருள் தலைமைப் பொருளும், தலைமையில் பொருளுமென இருவகைப்படும். அவற்றுள், தலைமைப் பொருளாவது வினை கொண்டு முடியும் பொருளினுயர்வுடையது. தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளினிழிவுடையது.

உம்.:–

(1) மன்னவனோடு மந்திரி வந்தான் என்புழி, வினைகொண்டு
முடியும் பொருள் மந்திரி; அப்பொருளி னுயர்வுடையபொருள்

மன்னவனாதலால், உடனிகழ்ச்சிப் பொருள் தலைமைப் பொருளாயிற்று.

(2) மாணாக்கனோடாசிரியன் வந்தான் என்புழி, வினை கொண்டு முடியும்பொருள் ஆசிரியன்; அப்பொருளி னிழிவுடைய பொருள் மாணாக்கனாதலால், உடனிகழ்ச்சிப் பொருள் தலைமையில் பொருளாயிற்று.

ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப் பொருளிலும், ஒடு ஓடு உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருள்களிலும், ஒரோவிடத்து அருகிவரும்.

உ–ம்.:–

(1) "தூங்குகையானோங்குநடைய" "உறழ்மணியானுயர் மருப்பின" என ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது காண்க. இவற்றிற்குத், தூங்குகையோடு என்றும், உறழ் மணியோடு என்றும் பொருள்கொள்க. தூங்குகையா னோங்கு நடைய என்புழி, நடத்தலாகிய வேறிடப் புணர்ச்சி கைக்கும் யானைக்கும் உளதாதலறிக. உறழ்மணியானுயர் மருப்பின என்புழி, யானையினது உடைமை மணிக்கு மருப்பிற்கும் உளதாதலறிக.

(2) "கொடியொடு துவக்குண்டான்", "ஊசியொடு குயின்ற தூசும்பட்டும்" என்புழிக், கொடியொடு, ஊசியொடு என்பன கொடியால், ஊசியால் எனப் பொருள்படுதலும், கொடி, ஊசி என்பன முறையே வினைமுதற்பொருள் கருவிப் பொருளாதலுங்காண்க.

சிறுபான்மை ஆல் ஆன் உருபுகள், முதற்பொருண்மேலேற்றிச் சொல்லப்படும் விகாரத்தையுடைய சினைப்பொருளிலும், தொறுப்பொருளிலும் வரும்.

உ–ம்.:–

(1) கண்ணாற்குருடன்; காலான்முடவன் என்புழிக் குருடன் முடவன் முதற்பொருள்கள்; அவைகளின் மேலெற்றிச் சொல்லப்படும் விகாரங் குருட்டுத்தன்மையும் முடத் தன்மையும், அவ்விகாரத்தையுடைய சினைப்பொருள்கள் கண்ணுங் காலுமாதல் காண்க.

(2) "ஊரானோர் தேவகுலம்" என்புழி, ஊர்தோறு மொவ்வொருதே வகுலம் எனப் பொருள்கொள்ளப்படும். தொறுவென்பது தன்னையேற்ற பெயர்ப்பொருளெங்கும் அப்பெயர்ப்பொருளோடியையும் பொருளிருக்கை, இங்கே தொறு இடப்பன்மையில் வந்தது. ஒவ்வொரு ஊரிலும் தேவகுலமென்பது கருத்து. (குலம் – கோயில்)

சிறுபான்மை ஒடு ஓடு உருபுகள், வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருளிலும், வினையில் பொருளிலும், கலப்புறபொருளிலும், ஒப்புப் பொருளிலும், ஒப்பலொப்புப் பொருளிலும், ஒற்றுமைப்பொருளிலும், அடைமொழிப் பொருளிலும் வரும்.

உ-ம் .:-

(1) "தொடியொடு தொல்கவின்வாடியதோள்" என்புழி வினைகொண்டு முடியும்பொருள் கவின்; அதனது தொழில் வாடல்; அத்தொழில் நிகழுங்காலையில் நிகழும் வேறு தொழில் சோர்தல்; அதனையுடையது தொடியாதலால், தொடி வேறுவினையுடனிக ழ்ச்சிப்பொருள்.

(2) "மலையொடு பொருதமால்யானை" என்புழிப் பொருதல் யானைக்கல்லது மலைக்கில்லாமையால் மலை வினையில் பொருள்.

(3) "பாலொடு தேன்கலந்தற்றே" என்புழித் தேனைக் கலக்கப்படுதலாற் பால் கலப்புறுபொருள்.

(4) மதியொடொக்குமுகம் என்புழி, முகத்துக்கு உவமானமாகையால், மதி ஒப்புப் பொருள்.

(5) "விலங்கொடுமக்களனையர்" என்புழி, ஒப்பல்லாத விலங்கு ஒப்பாகச் சொல்லப்படுதலால், விலங்கு ஒப்பலொப்புப் பொருள்.

(6) "எழுத்தொடுபுணர்ந்தசொல்" என்புழி, உருபைத் தொடர்ந்த சொல்லென்னும் பொருளோடு ஒற்றுமையுடையதாதலால், எழுத்து ஒற்றுமைப் பொருள்.

(7) கோபத்தோடு வந்தான் என்புழி, வருதற்கு விசேடணமாதலால், கோபம் அடைமொழிப் பொருள்.

ஆல் ஆன் உருபுகள் நிற்றற்குரியவிடத்துக் கொண்டென்பதும், ஒடு ஒடு உருபுகள் நிற்றற்குரியவிடத்து உடனென்பதும் சொல்லுருபுகளாக வரும்.

உ-ம்.:-

வாள்கொண்டுவெட்டினான், தந்தையுடன் மைந்தன் வந்தான் என வரும்.

மேலே ஆல் ஒன்றையும் இதற்கு உருபாகச் சொல்லி, இங்கே உருபு நான்கு என்றது மயக்கமெனின்; அங்கே பெயரையும் முறையையும் காட்டுகிற நிமித்தம் வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் வழங்கிவருவதைச் சொன்னார். இங்கே அவ்வேற்றுமைக்கு வரும் உருபுகளையெல்லா மெடுத்துச் சொல்லவேண்டுமாதலால் நான்கெனக் கூறியது மயக்கமன்றென்க. இந்தவினாவிடைகளை மேல்வருவன வற்றிற்கு முரைத்துக் கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ-ள்.:** **மூன்றாவதன்** - மூன்றாம் வேற்றுமையினுடைய, **உருபு**-

உருபுகளாவன, **ஆல் ஆன் ஒடு ஓடு**–(முன்சொல்லப்பட்ட) ஆல் என்பதே யன்றி ஆனும் ஒடும் ஓடுவும் ஆகும்; **அதன்** – அதனுடைய, **பொருள்**–பொருள்களாவன: **கருவி** – கருவியாதலும், **கருத்தா**–வினைமுதலாதலும், **உடன் நிகழ்வு** – உடனிகழ்ச்சியுமாம்; **எ–று.**

இவ்வாறு பொதுப்படக் கூறினாராயினும், **ஏற்புழிக்கோடல்** என்கிற உத்தியால், ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவிப் பொருளும் கருத்தாப் பொருளும், ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சிப்பொருளும் சிறந்தன வென்க.

**உ–ம்.:–**

வாளால் வெட்டினான், வாளான் வெட்டினான்–கருவி.

அரசனா லாக்கப்பட்ட கோயில், அரசனானாக்கப்பட்டகோயில்–கருத்தா.

மகனோடு தந்தை வந்தான், மகனொடு தந்தை வந்தான் – உடனிகழ்ச்சி.

கருவியாவது – கருத்தாவின் தொழிலுக்குச் சாதனமா யிருப்பது. 'வாளாற் பகைவனை வெட்டினான்' என்றதில், வெட்டுதல் கருத்தாவின் தொழில்; அவ்வெட்டுதற்குச் சாதனமா யிருப்பதுவாள்: ஆதலால், அது கருவிப்பொருளாம்; அக்கருவி–முதற் கருவியும், துணைக் கருவியும் என இருவகைப்படும். முதற் கருவியாவது, காரியமாக மாறி அதினின்றும் வேறுபடாதது; துணைக் கருவியாவது, முதற்கருவி காரியப்படுமளவும் அதற்குத் துணையாய் நின்று பின்பு பிரிவது. முதற்கருவி = முதற்காரணம். துணைக்கருவி–துணைக்காரணம்.

**உ–ம்.:–**

மண்ணாற் குடத்தை வனைந்தான். மண் முதற்கருவி.

தண்ட சக்கரங்களாற் குடத்தை வனைந்தான்–தண்டசக்கரம்–துணைக்கருவி.

கருத்தாப்பொருள் இன்னதென்று எழுவாய்ச் சூத்திரவுரையிற் காட்டப்பட்டது. இதுவும் இயற்றுதற் கருத்தா, ஏவுதற் கருத்தா என இருவகை.

**உ–ம்.:–**

தச்சனாற் கோயில் கட்டப்பட்டது–தச்சன்–இயற்றுதற் கருத்தா.

அரசனாற் கோயில் கட்டப்பட்டது–அரசன் ஏவுதற் கருத்தா.

முதல்வேற்றுமைக் கருத்தாவுக்கும் மூன்றாம் வேற்றுமைக் கருத்தாவுக்கும் வேறுபாடு என்னவென்றால், முதல் வேற்றுமைக் கருத்தா, தன்னோடு திணை பால் இடங்களில் ஒத்த செய்வினைப் பயனிலையைக் கொண்டு முடியும். மூன்றாம் வேற்றுமைக் கருத்தா, செயப்படு பொருளோடு திணை பால் இடங்களில் ஒத்த செயப்பாட்டு வினைப்

பயனிலையைக் கொண்டுமுடியும். கருத்தா முதல்வேற்றுமையா யிருக்கும்போது, செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமை யாய் வரும்; கருத்தா மூன்றாம் வேற்றுமையா யிருக்கும்போது; செயப்படுபொருள் முதல்வேற்றுமையாய் வரும்.

**உ–ம்.:–**

தச்சன் கோயிலைக் கட்டினான் – முதல் வேற்றுமைக் கருத்தா இதனை வடநூலார் **கர்த்தரி ப்ரயோகம்** என்பர். தச்சனாற் கோயில் கட்டப்பட்டது–மூன்றாம் வேற்றுமைக் கருத்தா. இதனை வடநூலார் **கர்மணி ப்ரயோகம்** என்பர்.

உடனிகழ்ச்சிப்பொருளாவது, வினை கொண்டு முடிகின்ற பொருளின் தொழிலைத் தன்னிடத்தும் உடன் நிகழ்கிறதாக வுடையது. 'மகனோடு தந்தை வந்தான்' என்றதில், தந்தை – வினைகொண்டு முடிகிற பொருள்; வருதல் – அப்பொருளின் தொழில்; அத்தொழிலைத் தன்னிடத்தும் உடன்நிகழ்கிறதாக வுடைய பொருள் – மகன்; ஆதலால், அது உடனிகழ்ச்சிப் பொருள்.

சிறுபான்மை, ஆல் ஆன் உருபுகள் – உடனிகழ்ச்சிப் பொருளிலும்; ஒடு ஓடு உருபுகள் – கருவிப்பொருள் கருத்தாப் பொருள்களிலும் அருமையாக வரும்.

**உ–ம்.:–**

"தூங்குகையா லோங்குநடைய," "உறழ்மணியா னுயர்மருப்பின" இவற்றில், ஆல் ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தன; கையால் – கையோடு, மணியான் – மணியோடு என்று பொருள்.

"கொடியோடு துவக்குண்டான்," "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" இவற்றில், கொடியோடு என்பதில் ஓடு உருபு கருத்தாப் பொருளிலும், ஊசியொடு என்பதில் ஒடு உருபு கருவிப் பொருளிலும் வந்தன; கொடியோடு–கொடியால், ஊசியொடு – ஊசியால் என்று பொருள்.

இனி, ஒரோவிடத்து, ஆல் ஆன் உருபுகள் தோறும் என்கிற பொருளையும், ஒடு ஓடு உருபுகள் அடைமொழிப் பொருளையும் தரும்.

**உ–ம்.:–**

ஊரானொருகோயில் இது, ஊர்தோறும் எனப் பொருள்படும்.

கோபத்தோடு வந்தான்–கோபம் வருதற்கு விசேஷண மாதலால், அடைமொழிப்பொருள்; கோபமுடையனாய் வந்தா னென்க.

கருவிப்பொருளில் 'கொண்டு' என்பதும், உடனிகழ்ச்சிப் பொருளில் 'உடன்' என்பதும் சொல்லுருபாக வரும்.

**உ–ம்.:** வாள் கொண்டு வெட்டினான், மகனுடன் தந்தை வந்தான்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** மூன்றாவதன் உருபு ஆல் ஆன் ஒடு ஓடு–மூன்றாம் வேற்றுமையினுருபு முன்சொல்லப்பட்ட ஆலேயன்றி ஆனும் ஓடும் ஒடுவுமாம். அதன்பொருள்–அவ்வுருபுகளின் பொருள்களாவன, கருவி–கருவிப்பொருளும், கருத்தா–வினைமுதற்பொருளும், உடனிகழ்வு–உடனிகழ்ச்சிப் பொருளும் (ஆக அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்களை வேறுபடுத்துதலாம்) **எ–று.**

எனவே, (1) கருவிப்பொருளும் (2) கருத்தாப்பொருளும் (3) உடனிகழ்ச்சிப்பொருளும் மூன்றாம் வேற்றுமைக்குரிய ஆல், ஆன், ஒடு, ஓடு, உருபுகளின் பொருள்களாம்.

இந் நான்குருபுகளுக்கும் மூன்றுபொருள்களு மாமெனக் கூட்டிச் சொன்னாராயினும், ஏற்புழிக்கோட லென்னு முத்தியால், அவ்வுருபுகளுள், ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவியும் வினைமுலும், ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சியுஞ் சிறந்தனவெனக் கொள்க.

முன்னர், 'பெயரே ஐ ஆல்' (சூ–292) என ஆல் ஒன்றுமே மூன்றாம் வேற்றுஐமயுருபாகச் சொல்லி இங்கே உருபு நான்கென்ற தென்னையெனின், அங்கே பெயரும் முறையும் காட்டவேண்டிப் பெருவழக்கினதான ஓர் உருபைக் காட்டினார். இது சிறப்புச் சூத்திரமாதலால் இவ் வேற்றுமைக்குரிய நான்குருபுகளையும் கூறினார். பின்னரு மிப்படியே.

**உ–ம்.:–**

வாளால் வெட்டினான்................................
வாளான் வெட்டினான்................................
இரசனாலாகிய கோயில்................................
அரசனானாகிய கோயில்................................
மைந்தனோடு தந்தை வந்தான்................................
மைந்தனொடு தந்தை வந்தான்................................

கருவியாவது கருத்தாவின் தொழிலுக்குச் சாதனமாயிருப்பது. கருவி, காரணம், ஏது என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ–ம்.:–**

'வாளாற் பகைவனை வெட்டினான்' என்புழி, வெட்டுதல் வினைமுதலினது தொழில்; அத் தொழிலுக்குச் சாதனமா யிருப்பது வாளாதலால் வாள் கருவிப்பொருள்.

அக் கருவிப்பொருள் முதற்கருவியுந் துணைக்கருவியுமென

இருவகைப்படும். அவற்றுள், முதற்கருவியாவது முதலிற் காரணமாயிருந்து பிறகு தானே செயப்படு பொருளாக மாறி அதனினின்றும் வேறுபடாதிருப்பது. முதற்கருவி, முதற் காரணம், ஆதிகாரணம், சமவாயிகாரணம் என்பன ஒருபொருட் சொற்கள். துணைக்கருவியாவது முதற் கருவிக்குத் துணையாய் அது காரியப்படுமளவும் உடனிருந்து பின்பு பிரிவது.

**உ–ம்.:–**

(1) 'மண்ணாற் குடத்தை வனைந்தான்' என்புழிக், குடமாகிய காரியத்தோ டொற்றுமையுடையது மண்ணாதலான் 'மண்' முதற் கருவி.

(2) 'திரிகையாற் குடத்தை வனைந்தான்' என்புழி, மண்ணாகிய முதற்கருவிக்குத் துணையாய் அது குடமாகக் காரியப்படுமளவும் உடனிருந்து, பின் பிரிவது திரிகையாதலால் 'திரிகை' துணைக்கருவி.

இக்கருவிப்பொருள் அகக்கருவி புறக்கருவி ஒற்றுமைக்கருவி என மூன்றாயும் வருமெனக் கொள்க.இ

**உ–ம்.:–**

மனத்தால் நினைந்தான், வாளால் வெட்டினான்; அறிவாலறிந்தான்.

கருத்தா இன்னதென்பது முன்னே எழுவாய்ச்சூத்திரவுரையிற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வரும் கருத்தாப்பெயர் தன்னோடு திணை பால் இடங்களில் ஒத்த செயப்பாட்டு வினையினாலே முடியும்; கருத்தா முதல் வேற்றுமையானால் செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமை யாய் வரும்; கருத்தா மூன்றாம் வேற்றுமையானால் செயப்படு பொருள் முதல் வேற்றுமையாய் வரும்.

**உ–ம்.:–**

(1) குயவன் குடத்தை வனைந்தான்–குயவனென்னும் கருத்தா முதல் வேற்றுமையாகித் தனக்குரிய ஆன்விகுதி வினையினாலே முடிந்தது. குடம் என்னும் செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமையாயிற்று.

(2) குயவனாற் பானை வனையப்பட்டது–குயவனென்னும் கருத்தா மூன்றாம் வேற்றுஐமயாகித் தனக்குரிய ஆன்விகுதி வினையினாலே முடியாது, செயப்படுபொருட்குரிய துவ்விகுதி வினையினாலே முடிந்தது. 'பானை' என்னும் செயப்படு பொருள் முதல் வேற்றுமையாயிற்று.

அவ்விருவகைக் கருத்தாவும், தனித்தனியே, இயற்றுதற் கருத்தா ஏவுதற்கருத்தா என இருவகைப்படும். அவற்றுள், இயற்றுதற் கருத்தாவாவது கருவியைத் தொழிற்படுத்துவது.

ஏவுதற்கருத்தாவாவது அவ்வியற்றுதற் கருத்தாவினது தொழிலையுண்டாக்குந் தொழிலுடையது.

உ–ம்.:–

(1) 'தச்சன் கோயில் கட்டினான்;' 'தச்சனாற் கோயில் கட்டப்பட்டது' என்புழித் 'தச்சன்' இயற்றுதற் கருத்தா.

(2) 'அரசன் கோயில் கட்டுவித்தான்;' 'அரசனாற் கோயில் கட்டுவிக்கப்பட்டது' என்புழி 'அரசன்' ஏவுதற்கருத்தா.

உடனிகழ்ச்சிப்பொருளாவது கொண்டுமுடியும் பொருளின் தொழிலைத் தன்னிடத்தும் உடன் பொருளாம். உடனிகழ்ச்சி = கூடவே நடப்பது.

உ–ம்.:–

'மைந்தனோடு தந்தை வந்தான்' என்புழித் தந்தை வினைகொண்டு முடியும் பொருள் வருதல் அப்பொருளின் தொழில்; அவ் வருதற் றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக வுடைய பொருள் மைந்தனாதலால் 'மைந்தன்' உடனிகழ்ச்சிப்பொருள்.

அவ்வுடனிகழ்ச்சிப்பொருள், தலைமைப்பொருளும் தலைமையில் பொருளும் என இருவகைப்படும். அவற்றுள், தலைமைப் பொருளாவது வினைகொண்டுமுடியும் பொருளி னுயர்வுடையது. தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளி னிழிவுடையது.

உ–ம்.:–

(1) 'மன்னவனோடு மந்திரி வந்தான்' என்புழி, வினைகொண்டு முடியும் பொருள் மந்திரி; அப்பொருளி னுயர்வுடைய பொருள் மன்னவனாதலால், உடனிகழ்ச்சிப்பொருள் தலைமைப் பொருளாயிற்று.

(2)'மரணாக்கனோ டாசிரியன் வந்தான்' என்புழி, வினை கொண்டு முடியும் பொருள் ஆசிரியன்; அப்பொருளி னிழிவுடைய பொருள் மாணாக்கனாதலால், உடனிகாச்சிப் பொருள் தலைமையில் பொருளாயிற்று.

'ஆல்' 'ஆன்' உருபுகள் உடனிகழ்ச்சிப்பொருளிலும், 'ஒடு' 'ஒடு' உருபுகள் வினைமுதற்பொருள் கருவிப்பொருள்களிலும், ஒரோவிடத்து அருகி வரும்.

உ–ம்.:–

(1) "தூங்குகையா னோக்கு நடைய;" "உறழ்மணியானுயர் மருபபின." என ஆனுருபு உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது காண்க. இவற்றிற்குத், தூங்குகையோடு என்றும், உறழ்மணி யோடு என்றும பொருள் கொள்க. ஆன், உருபை 'ஆல்' உருபாக்கினும் பொருந்தும்.

(2) ''கொடியொடு துவக்குண்டான்;'' ''ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்'' என்புழிக், கொடியொடு ஊசியொடு என்பன கொடியால் ஊசியால் எனப் பொருள்படுதலும், கொடி ஊசி என்பன முறையே வினைமுதற்பொருள் கருவிப்பொருளாதலுங் காண்க.

சிறுபான்மை 'ஆல்' 'ஆன்' உருபுகள், முதற்பொருண்மே லேற்றிச் சொல்லப்படும் விகாரத்தையுடைய சினைப் பொருளிலும், தொறுப்பொருளிலும், வரும்.

உ–ம்.:–

(1) 'கண்ணாற் குருடன்;' 'காலான் முடவன்' என்புழிக் குருடன் முடவன் முதற்பொருள்கள்; அவைகளின்மே லேற்றிச் சொல்லப்படும் விகாரம் குருட்டுத்தன்மையும் முடத்தன்மையும்; அவ் விகாரத்தையுடைய சினைப்பொருள்கள் கண்ணுங் காலுமாதல் காண்க.

(2) ''ஊரானோர் தேவகுலம்'' என்புழி, 'ஊர்தோறும் ஒவ்வொரு தேவகுலம்' எனப் பொருள் கொள்ளப்படும்.

சிறுபான்மை 'ஓடு' 'ஒடு' உருபுகள், வேறுவினை யுடனிகழ்ச்சிப் பொருளிலும், வினையில்பொருளிலும், கலப்புறு பொருளிலும், ஒப்புப்பொருளிலும், ஒப்பலொப்புப் பொருளிலும், ஒற்றுமைப்பொருளிலும், அடைமொழிப்பொருளிலும் வரும்.

உ–ம்.:–

(1) ''தொடியொடு தொல்கவின் வாடிய தோள்'' என்புழி, வினை கொண்டு முடியும் பொருள் கவின்; அதனது தொழில் வாடல்; அத்தொழில் நிகழுங் காலையில் நிகழும் வேறுதொழில் நழுவல்; அதனை யுடையது தொடியாதலால், 'தொடி' வேறுவினையுடனிகழ்ச்சிப் பொருள்.

(2) ''மலையொடு பொருத மால்யானை'' என்புழிப், பொருதல் யானைக் கல்லது மலைக்கில்லாமையால், 'மலை' வினையில்பொருள்.

(3) ''பாலொடு தேன் கலந்தற்றே'' என்புழித் தேனைக் கலக்கப்படுதலாற் 'பால்' கலப்புறுபொருள்.

(4) 'மதியோடொக்கு முகம்' என்புழி, முகத்துக்கு உவமான மாகுகையால், 'மதி' ஒப்புப்பொருள்.

(5) ''விலங்கொடு மக்களனையர்'' என்புழி, ஒப்பல்லாத விலங்கு ஒப்பாகச் சொல்லப்படுதலால், 'விலங்கு' ஒப்பலொப்புப்பொருள்.

(6) ''எழுத்தொடு புணர்ந்த சொல்'' என்புழிச், சொல்லென்னும் பொருளோடு ஒற்றுமையுடையதாதலால், 'எழுத்து' ஒற்றுமைப் பொருள்.

(7)'கோபத்தோடு வந்தான்' என்புழி, வருதற்கு அடைமொழி யாதலால், 'கோபம்' அடைமொழிப்பொருள்.

'ஆல்' 'ஆன்' உருபுகள் நிற்றற்குரியவிடத்துக் 'கொண்டு' என்பதும், 'ஒடு' 'ஓடு' உருபுகள் நிற்றற்குரியவிடத்து 'உடன்' என்பதும், சொல்லுருபுகளாக வரும்.

**உ–ம்.:–**

வாள்கொண்டு வெட்டினான். தந்தையுடன் மைந்தன் வந்தான்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) மூன்றாவதன் உருபு– மூன்றாம் வேற்றுமையினுடைய உருபுகளாமவை, ஆல் ஆன் ஒடு ஓடு– (முன் சொல்லப்பட்ட) ஆலே யன்றி ஆனும் ஒடும் ஓடுவும் ஆகும்; அதன்பொருள்– அவ்வுருபுகளுடைய பொருள்களானவை, கருவி– கருவிப்பொருளும், கருத்தா– வினைமுதற்பொருளும், உடனிகழ்வு– உடனிகழ்ச்சிப் பொருளும் ஆகிய (அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட) மூன்றுனாகும். (எ–று)

(பொ–ரை) மூன்றாம் வேற்றுமையின் உருபு ஆல், ஆன், ஒடு, ஓடு என்பவைகள்; அவற்றின் பொருள், தம்மையேற்ற பெயர்ப் பொருளைக் கருவியாகவும், ஏதுப் பொருட்டாகிய கருத்தாவாகவும், உடனிகழ்வதாகவும் வேற்றுமை செய்தலாம்.

அது என்பது தொகுதியொருமை.

(உ–ம்)

வாளால்வெட்டினான்.

மண்ணலியன்ற குடம்.

கருவிப்பொருள்.

வாளான் வெட்டினான்.

மண்ணனியன்ற குடம்.

அரசனாலாகிய கோயில்.

தச்சனால் செய்யப்பட்ட தேர். வினைமுதற்பொருள்.
அரசனானாகிய கோயில். தச்சனானாக்கப்பட்ட தேர்.

மைந்தனோடு தந்தை வந்தான். தூணோடு கட்டுண்டான்.
உடனிகழ்ச்சிப் பொரு. மைந்தனொடு தந்தை வந்தான்.
தூணொடு கட்டுண்டான்.

இந்த நான்குருபுகளுக்கும் மூன்று பொருள்களுமாமெனக் கூட்டிச் சொன்னாராயினும், ஏற்புழிக்கோட லென்கிற உத்தியால் அவ்வுருபுகளுள் ஆல், ஆன் உருபுகளுக்கு உடனிகழ்ச்சியும் சிறந்தனவென்று கொள்க.

கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படு பொருள்றி சேர்ப்பது.

வாளால் பபைவனை வெட்டினான்– இங்கு, வாளைப்பற்றி வீசுதல் வினைமுதலினது தொழிலாம், பகைவனுடம்பு அறுதல் அத்தொழிலுக்குப் பயனாம். வாள் அப் பகைவனாகிய செயப்படு பொருளிலே சேர்க்கையால், அது கருவிப் பொருளாகும்.

இன்னும் அக் கருவிப்பொருள் முதற்தருவியும் துணைக் கருவியும் என இருவகைப்படம்.

முதற்கருவியாவது செயப்படுபொருளோ டொற்றுமையுடையது; துணைக்கருவியாவது முதற்கருவிக்குத் துணையாய் அது காரியப்படு மளவும் உடனிகழ்வது.

(உ–ம்.) மண்ணாற் குடத்தை வனைந்தான். மண் குடமாகிய காரியத்தோ டொற்றுமையுடைய தாதலான் முதற் கருவி.

தண்டசக்கரங்களாற் மண்ணாகிய குடத்தை வனைந் தண்டசக்கரங்கள் முதற்கருவிக்குத் துணையாய் அது தான். குடமாகக் காரியமா மளவும் உடனிகழ்வன வாதலால், அவை துணைக்கருவி.

வினைமுதல் இப்படிப்பட்டதென்று முன்னே (151–வது) எழுவாய்ச் சூத்திரவுரையுற் காட்டப்பட்டது. அவ்வெழுவாய் வேற்றுமையில் வருகிற வினைமுதற்பெயர் தன் விகுதி வினையினாலே முடியும், இம் மூன்றாம் வேற்றுமையில் வருகிற வினைமுதற்பெயர் செய்யப்படுபொருள்விகுதி வினையினாலே முடியும். இதுவே இவ்விரண்டற்கும் வேறுபாடாம்மம.

(உ–ம்.) 1. குயவன் குடத்தை வனைந்தான்– குயவனாகிய எழுவாய்க்கருத்தா தனக்குரிய ஆன் விகுதி வினையினாலே முடிந்து.

2. குயவனாற் குடம் வனையப்பட்டது– குயவானாகிய மூன்றனுருபின்கருத்தா தனக்குரிய ஆன் விகுதி விமையி னாலே முடியாது. செய்யப்படுபொருட்குரிய துவ் விகுதி வினையினாலே முடிந்தது.

இன்னும் அவ் வினைமுதற்பொருள் இயற்றும் வினைதலும், ஏவும் வினைமுதலும் என இருவகைப்படும்.

இயற்றும் வினைமுதலாவது கருவியைத் தொழிற்படுத்துவது; ஏவும் வினைமுதலாவது அவ்வியற்றும் வினைமுதலினது தொழிலை உண்டாக்குந் தொழிலை யுடையது.

(உ–ம்.) தச்சனாற் கோயில் கட்டப்பட்டது தச்சன் இயற்றும் வினை முதல். அரசனாற் கோயில் கட்டுவிக்பட்டது அரசன் ஏவும். வினைமுதல்.

உடனிகழ்ச்சிப் பொருளாவது வினைகொண்டு முடிகிற பொருளினது தொழில்போன்ற தொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்கிற தாகவுடையது.

(உ–ம்.) மைந்தனோடு தந்தைவந்தான்– இங்கு, தந்தைவிமை கொண்டு முடிகிற பொருளாம், வருதல் அப் பொருளினது தொழிலாம், அத் தொழில் போன்ற தொழில் வருதலாம், இவ் வருதலைத் தன்னிடத்தும் உடனிகழ்கிறதாகவுடைய பொருள் மைந்தனாதலால், மைந்தன் உடனிகழ்ச்சிப் பொருளாகும்.

அவ்வுடனிகழ்ச்சிப் பொருள் தலைமைப்பொருளும், தலைமையில் பொருளும் என இருவகைப்படும். தலைமைப் பொருளாவது வினைகொண்டு முடிகிற பொருளின் உயர்வுடையது; தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடிகிற பொருளின் இழிவுடையது.

(உ–ம்) மன்னவனோடு மந்திரி வந்தான்– இங்கு, மந்திரி வினை கொண்டு முடியும் பொருள்; மன்னவன் அப் பொருளின் உயர்வுடைய பொருளாதலால், தலைமைப் பொருள்.

மாணாக்கனோடு ஆசிரியன் வந்தான்– இங்கு, ஆசிரியன் வினை கொண்டு முடியும் பொருள்; மாணாக்கன் அப் பொருளின் இழிவுடைய பொருளாதலால், தலைமையில் பொருள்.

சிறுபான்மை ஆல், ஆன் உருபுகள் முதற்பொருளின் மேலேற்றிச் சொல்லப்பட்ட விகாரத்தையுடைய சினைப்பொருளிலும், தோறும் என்கிற பொருளிலும் வரும்.

(உ–ம்.) கண்ணாற் குருடன்; காலான் முடவன்.– இங்கு, குருடன், முடவன் முதற்பொருள்கள்; குருட்டுத் தன்மையும், முடத்தன்மையும் அவைமேலேற்றிச் சொல்லப்படும் விகாதங்கள்; அவ் விகாரங்களையுடைய சிமைப்பொருள்கள் கண்ணும் காலும் ஆதல் காண்க.

ஊரானொரு கோயில்– ஊர்தோறும் ஒவ்வொரு கோயில் எனப் பொருள்படும்.

சிறுபான்மை ஒடு ஒடு உருபுகள் வேறுவினைப்பொருள் முதலாகிய பிறபொருள்களிலும் வரும்.

(உ–ம்.) 'தொடியொடு தொல்கவின் வாடிய தோள்'– தொடிக்குக் கழலுதலாகிய வேறுவிமை யுடனிகழ்தலால், தொடி வேறு வினையுடனிகழச்சிப் பொருளாம்.

'மலையொடு பொருத மால்யானை'– பொருதல் யானைக் கல்லது மலைக்கு இல்லாமையால், மலை வினையில் உடனிகழ்ச்சிப் பொருளாம்.

'பாலொடு தேன் கலந்தற்றே'– தேனைக் கலக்கப்படுதலால்,

பால் கலப்புறு பொருளாம்.

'எழுத்தொடு புணர்ந்தசொல்'– எழுத்து, சொல்லுக்கு முதற் கருவியாதலால், எழுத்து ஒற்றுமைப் பொருளாம்.

'கோபத்தோடு வந்தான்'– வருவதற்கு விசேடமாதலால், கோபம் அடைமொழிப் பொருளாம்.

ஆல், ஆன், ஒடு, ஓடு, இந் நான்கு உருபுகளும் தனித்தன்றி ஏகாரம் பெற்றும் வரும்; அவற்றுள் ஆல், ஆன் உருபுகளிலொன்று நிற்றற்குரிய இடத்தே, கொண்டு என்கிறது முன் ஐகாரம் பெற்றும் பெறாமலும் சொல்லுருபாக வரும். ஒடு, ஓடு உருபுகள் நிற்றற்குரிய இடத்தே உடன் என்கிறது தனித்தும் ஏகாரம் பெற்றும் சொல்லுருபாக வரும்.

(உ–ம்.)

வாளாலே வெட்டினான். வாளைக்கொண்டுவெட்டி

வாளானேனான். வாள்கொண்டு வெட்டினான்.

மகனோடே தந்தை வந்தான். மகனுடன் தந்தை வந்தான்.

## கா. நமச்சிவாய முதலியார்

**மூன்றாவதன்** – மூன்றாம் வேற்றுமையின், **உருபு** – உருபுகளானவை, **ஆல் ஆன் ஒடு ஓடு** – ஆலும் ஆனும் ஒடும் ஓடுவும் ஆகும் ; **அதன்** – அவ்வுருபுகளுடைய, **பொருள்** – பொருள்களானவை, **கருவி** – கருவிப் பொருளும், **கருத்தா** – கருத்தாப் பொருளும், **உடன்நிகழ்வு** – உடன்நிகழ்ச்சிப் பொருளும் ஆகும்.

இந்த நான்கு உருபுகளுக்கும் மூன்று பொருள்களும் ஆகும் எனப் பொதுப்படச் சொன்னாராயினும், 'ஏற்புழிக் கோடல்' என்னும் உத்தியால், அவ்வுருபுகளுள், ஆல் ஆன் உருபுகளுக்குக் கருவிப் பொருளும், கருத்தாப் பொருளும் ; ஒடு ஓடு உருபுகளுக்கு உடனிகழ்ச்சிப் பொருளும் சிறந்தனவெனக் கொள்க.

**உதாரணம்**

| | |
|---|---|
| வாளால் பகைவனை வெட்டினான்<br>வாளான் எதிரியை வெட்டினான் | கருவி |
| அரசனாலாகிய கோயில்<br>அரசனானாகிய கோயில் | கருத்தா |
| மைந்தனோடு தந்தை வந்தான்<br>மைந்தனொடு தந்தை வந்தான் | உடனிகழ்ச்சி |

கருவியாவது, கருத்தாவின் தொழிற்பயனைச் செயப்படு பொருளிற் சேர்ப்பது.

கருவி, காரணம், ஏது என்பன ஒருபொருட் சொற்கள்.

**வாளால் பகைவனை வெட்டினான்** என்னுமிடத்தே – வாளைப் பிடித்து வீசுதல் கருத்தாவின் தொழிலாம் ; பகைவனுடம்பு அறுபடுதல் அத்தொழிற்குப் பயனாம் ; வாள் அப்பயனைப் பகைவனாகிய செயப்படு பொருளிலே சேர்ப்பதனால், அது கருவியாம்.

இன்னும் அக் கருவிப்பொருள், **முதற்கருவியும், துணைக் கருவியும்** என இருவகைப்படும். அவற்றுள், முதற் கருவியாவது, செயப்படுபொருளோடு ஒற்றுமை யுடையது.

**மண்ணாற் குடத்தை வனைந்தான்.**

இதில், மண்ணாகிய முதற்கருவி, செயப்படு பொருளாகிய குடத்தோடு ஒற்றுமை உடையதாதல் காண்க.

துணைக்கருவியாவது, முதற்கருவிக்குத் துணையாய், அது காரியப்படுமளவும் உடனிகழ்வது.

**தண்ட சக்கரங்களாற் குடத்தை வனைந்தான்.**

இதில், தண்டமும் சக்கரமும், செயப்படுபொருளாகிய குடம் ஆகும் வரையிலும் துணையாய் நின்றது காண்க.

எழுவாய் வேற்றுமையில் வரும் கருத்தாவின் பெயர், தன் விகுதிக்கேற்ற வினையினால் முடியும் ; இம்மூன்றாம் வேற்றுமையில் வரும் கருத்தாவின் பெயர், செயப்படுபொருள் விகுதிக்கேற்ற வினையினால் முடியும், இதுவே அவ்விரண்டற்கும் வேறுபாடாம்.

**குயவன் குடத்தை வனைந்தான்** என்னுமிடத்து – குயவன் என்னும் எழுவாய்க் கருத்தா, தனக்குரிய ஆன்விகுதி வினையினால் முடிந்தது. **குயவனால் குடம் வனையப்பட்டது** என்னுமிடத்துக் குயவன் என்னும் மூன்றாம்வேற்றுமைக் கருத்தா, தனக்குரிய ஆன் விகுதி வினையினால் முடியாமல், செயப்படுபொருட்குரிய துவ்விகுதி வினையினால் முடிந்தது.

இன்னும் கர்த்தாவாகிய இவ் வினை முதற்பொருள், **இயற்றுதற் கருத்தாவும் ஏவுதற் கருத்தாவும்** என இருவகைப்படும். அவற்றுள்,

இயற்றுதற் கருத்தாவாவது கருவியைத் தொழிற்படுத்துவது.

**தச்சனால் கோயில் கட்டப்பட்டது** எனவரும்.

ஏவுதற் கருத்தாவாவது அவ்வியற்றுதற் கருத்தாவினது தொழிலை யுண்டாக்குவது ; அஃது,

**அரசனால் கோயில் கட்டுவிக்கப்பட்டது** எனவரும்.

**உடனிகழ்ச்சிப் பொருளாவது,** வினைகொண்டு முடியும் பொருளினது தொழில் போன்ற தொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாக வுடையது.

**மைந்தனோடு தந்தை வந்தான்** என்றவிடத்தே – தந்தை

வினை கொண்டு முடியும் பொருளாம் ; வருதல் அப்பொருளின் தொழிலாம் ; அவ்வருதற்றொழிலைத் தன்னிடத்தும் உடனிகழ்வதாகவுடைய பொருள் மைந்தனாதலால், மைந்தன் உடனிகழ்ச்சிப் பொருளாம்.

அவ்வுடனிகழ்ச்சிப் பொருள் **தலைமைப் பொருளும், தலைமையில் பொருளும்** என இருவகைப்படும். அவற்றுள், தலைமைப் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளின் உயர்வினை உடையது. அது,

**மன்னனோடு மந்திரி வந்தான்**

எனவரும்.

தலைமையில் பொருளாவது வினைகொண்டு முடியும் பொருளின் இழிவினை உடையது. அது,

**மாணாக்கனோடு ஆசிரியன் வந்தான்**

எனவரும்.

சிறுபான்மை ஆல், ஆன் உருபுகள் – உடனிகழ்ச்சிப் பொருளிலும் ; ஓடு ஒடு உருபுகள் – கருத்தாப்பொருள். கருவிப்பொருள் இவ்விரண்டிலும் வரும்.

'தூங்கு கையால் ஓங்கு நடைய'

'உறழ் மணியான் உயர் மருப்பின'

இவற்றில், ஆல், ஆன் உருபுகள் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தன.

(கையால் – கையோடு, மணியான் – மணியோடு என்பன பொருள்.)

'கொடியோடுதுவக்குண்டான்'

'ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்'

இவற்றில், கொடியோடு என்பதில், ஓடு உருபு கருத்தாப் பொருளிலும், ஊசியொடு என்பதில் ஒடு உருபு கருவிப்பொருளிலும் வந்தன.

(கொடியொடு – கொடியால், ஊசியொடு – ஊசியால் என்பன பொருள்.)

ஆல் என்பது, ஒரோ விடத்து, தோறும் என்னும் பொருளையும் தரும். **ஊரால் ஒரு கோயில்** என்னுமிடத்து, ஊர்தோறும் ஒவ்வொரு கோயில் எனப் பொருள்படுதல் காண்க.

ஆல், ஆன் உருபுகளில் ஒன்று நிற்றற்குரிய இடத்தே **கொண்டு** என்பதும், ஓடு, ஒடு உருபுகளில் ஒன்று நிற்றற்குரிய இடத்தே **உடன்** என்பதும் சொல்லுருபுகளாக வரும். அவை

வாளால் வெட்டினான் – வாள் **கொண்டு** வெட்டினான்

மகனோடு தந்தை வந்தான் – மகனுடன் தந்தை வந்தான் எனவரும்.

## மோசசு பொன்னையா

மூன்றாம் வேற்றுமையின் உருபாவன, முன்னர்ச் சொல்லப்பட்ட[1] ஆலே யன்றி, ஆன், ஒடு, ஒடு என்பனவுமாம்; கருவிப் பொருளும், வினைமுதற் பொருளும், உடனிகழ்ச்சியுமே அதன் பொருளாம். எ–று.

முன்னர், பெயரும் முறையும் காட்டுதல் மாத்திரிரையான் ஆல் உருபு ஒன்றையே கூறி, இந்நூற்பாவால் மூன்றாம் வேற்றுமையின் உருபுகள் எனத் தாம் கொண்டவற்றையெல்லாம் தெளிவு கருதி எடுத்துரைத்தார். ஐந்தாவது, ஆறாவது வேற்றுமைகட்கும் இவ்வாறே உரைத்துக் கொள்க. இக்காலத்தில் ஆல், ஆன் என்னும் இரண்டு உருபுகளும் கருவி, கருத்தாப் பொருட்களுக்கும், ஓடு, ஒடு என்னும் உருபுகள் இரண்டும் உடனிகழ்ச்சிப் பொருளுக்கும் பெரும்பாலும் உரிமை பூண்டு வழங்கி வருகின்றன.

எ–டு.;–

1. வாளால் வெட்டினான்–ஆல்
வாளான் வெட்டினான்–ஆன் கருவி
2. அரசனால் கட்டப்பட்ட அணை–ஆல்
அரசனான் எடுக்கப்பட்ட கோயில்–ஆன் கருத்தா
3. தந்தையோடு மைந்தன் வந்தான்
ஆசிரியரொடு மாணாக்கர் வந்தார் உடனிகழ்ச்சி

தொல்காப்பியர்,

**மூன்றா குவதே**
**ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே,[2]**

எனக் கூறியுள்ளதால், வினை முதலாகிய காரணம், வினை முதலுக்குத் துணையாக அமையும் கருவியாகிய காரணம் என்னும் காரண அடிப்படையிலேயே மூன்றாம் வேற்றுமைப் பொருள் அமையும் என்பது தெளிவுறும். அடுத்த நூற்பாவில் 'அதனினியறல்' முதலாக அவர் அமைத்துக் காட்டும் வாய்பாட்டு மரபுகளும் அவ்வேற்றுமையின் பொருள் அதுவே என்பதை வலியுறுத்துகின்றன. காரணமும் கருவியேயாதலின், இவ்வேற்றுமையைக் கருவிப்பொருள் வேற்றுமை எனச் சான்றோர் வழங்கினர் எனக் கொள்க.

---

பாட வேறுபாடு:–

1. தொல்.சொல். 73
2. தொல். சொல். 91

'கொடியொடு துவக்குண்டான்', 'ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்' என இவ்வாறு வழங்கும் வழக்குகளை நோக்குங்கால், ஒடு உருபு வினைமுதல், கருவி என்னும் இருவகைக் காரணப் பொருள்களிலும் பண்டுதொட்டு வழங்கிற்று என்பது போதரும்.

தொல்காப்பியர்,

**ஒருவினை யொடுச்சொல் உயர்பின் வழித்தே,**[2]

என விதித்துள்ளமையால் ஆசிரியனொடு மாணாக்கர் வந்தார்; அரசனோடு அமைச்சர் வந்தார் என இவ்வாறு உயர்ந்தோர் காரணமாக உடன்வினைப்படுவாரையும், மழையொடு இடி வீழ்ந்தது, பயிரொடு களை வளர்ந்தது என இவ்வாறு உயர்ந்தது காரணமாக உடன்வினைப்படுவதையும் மட்டுமே ஒருவினைக் காரணப் பொருளுக்கு உரியனவாகப் பழந்தமிழ் இலக்கிய இலக்கண ஆசிரியர் கொண்டனர்[1] என்பது புலனாகும். இவ்வொருவினை மரபுக்கு உயர்வே அடிப்படை யாக நிற்பதே தமிழ் மரபாக அமைந்து ற்க, வடமொழியில் நேர்மாறாக இழிபொருள் வழியே ஒருவினை மரபு அமைக்கும் முறைமை இருந்தமை[2] கண்டு, பிற்காலப் புலவர், 'வந்த நம்பியைத் தம்பி தன்னொடு'[3] என்பது முதலாக இலக்கிய மரபு அமைக்க, அதுவும் வழக்காயிற்று. எனவே, ஒருவினை ஒடுச்சொல்லின் உயர்வுக் காரணம் கைநழுவ விடப்பட்டு, ஒருவினை மரபு இருவழியும் இயல்வதாயிற்று. இருவழியும் இயன்ற இவ்வழக்கே உடனிகழ்ச்சிப் பொருள் என்னும் புதுப்பொருள் ஒன்றைத் தோற்றுவித்து விட்டது என்ப தறிக.

உடனிகழ்ச்சிப் பொருள் கருவிப் பொருளின் வேறாக வழக்கில் நிலைபெற்றமை கண்ட இலக்கணக்காரர் அதனைக் கருவிப் பொருளில் அமைத்தற்குக் காரணங்கூற வேண்டியநிலை யுண்டாயிற்று. சேனாவரையர், 'ஒடுவும் ஆனும் இரண்டு வேற்றுமையாகற் பால வெனின், அற்றன்று...... ஒரு வேற்றுமை யாகவே யோதினார் என்க,'[4] எனக் கூறியுள்ளமையால் அது

---

**குறிப்புகள் :–**

**1.தெய்வச் சிலையார், வழி என்றது அப்பொருளின் வழியாகிய பொருள் என்று கொள்க. உயர்வு என்பதைச் சிறப்பென்று கொள்க. கொள்ளவே, அத்தொழிற்குச் சிறவாத பொருட்கண் வரும் என்றவாறாம்' (தொல். சொல். 87 உரை) என்றது பொருந்தாது.**

**2. தொல்.சொல்லதிகாரக் குறிப்பு–P.S.S.ப. 90.**

**3. கம்பரா, கையடை 17; 2.**

**4. தொல். சொல். 74 உரை;**

புலனாகும். அறிஞர் கால்டுவெல் இந்நிலையை யுணர்ந்து, உடனிகழ்ச்சிப் பொருள் ஒரு தனி வேற்றுமை எனற்குரியது எனக்கூறி யமைந்தார்.[1]

தொல்காப்பியர்,

**மூன்றா குவதே ஒடுவெனப் பெயரிய**

**வேற்றுமைக் கிளவி.....,'[2]**

எனக் கூறினும்,

**ஓம்படைக் கிளவிக் கையும் ஆனும்**
**தாம்பிரி விலவே தொகைவரு காலை,**

எனவும்

**குஜ ஆனென வரூஉ மிறுதி**
**அவ்வொரு சிவணுஞ் செய்யு ளுள்ளே,**

எனவும் கூறி ஆனுருபின் உண்மையையும் உணர்த்திச் சென்றார். எனினும், அஃது எவ்வேற்றுமைக்கு உரிமைப்பட்டு நிற்கும் எனத் தெளிவுறுத்திச் சென்றாரில்லை. அவர், அதனை இடப்பொருளிலும், கருவிப் பொருளிலும், வழங்கி யுள்ளமையை நோக்குங்கால் ஆனுருபு கருவிப் பொருளுக்கே உரியதெனத் தொல்காப்பியர் காலத்தில் வழங்கிற்றிலது போலும் என எண்ண இடமுண்டு.

ஆலுருபின் தோற்றத்திற்குப் பிறழ்பிரிப்பே காரணமாகலாம். அதன் வழக்கும் பழங்காலத்தே அமைந்த ஒன்றாகும் என்பது,

**ஆலும் ஆனும் மூன்ற னுருபே,**

என்ற அவிநயனார் நூற்பாவாற் போதரும்.

தொல்காப்பியர் ஒடு என்ற ஓர் உருபை எடுத்துக்கூறாது போயினும், உடம்பொடுபுணர்த்திப் பல இடங்களிற் கூறி யுள்ளமையாலும்,

**என்னோ டிருப்பினும் இருக்க இளங்கொடி**
**தன்னோ டெடுப்பினும் தகைக்குந ரில்,**

எனவும்,

**பொன்னார மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்**
**உன்னேனென் றூழுலக்கை பற்றினேற்–கன்றோ**
**புனனாடன் பேரே வரும்,**

எனவும் சான்றோர் ஆண்டுள்ளமையாலும் அதன் பழமை புலனாகும், அக்கால எழுதுகருவி யாகிய எழுத்தாணிக்கு

---

குறிப்புகள் :–

1. Caldwell's Comparative Grammar-p. 278
2. தொல். சொல். 73

ஒகரக் குறில் மேல் ஒற்றிடுவதில் இருந்த இடர்ப்பாடே ஒடு உருபின் பிறப்பிற்குக் காரணமாகலாம் எனக் கொள்வதுஞ் சாலும்.

பிற்கால ஆசிரியர் ஒருவர்,

**ஆலு மானு மோடு மொடுவுஞ்**
**சாலு மூன்றாம் வேற்றுமைத் தனுவே**
**செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி**
**யெய்திய தொழின்முத லியைபுட னதன்பொருள்,5**

என மூன்றாம் வேற்றுமைக்கு அமைத்துக் கூறியுள்ள நூற்பா என்பர்.

இலக்கணம் இவ்வாசிரியரின் இந்நூற்பாவிற்கு வழிகாட்டியாக இருந்திருக்கலாம் என எண்ண இடமுண்டு. பவணந்தியார், செய்வோன், காரணம், செயத்தகு கருவி என்பனவற்றைக் கருவி எனவும், தொழில் முதல் என்பதனைக் கருத்தா எனவும், இயைபு என்பதை உடனிகழ்ச்சி எனவும் மாற்றியமைத்துக் கொண்டுள்ளதன்றிப் பிற வேறுபாடேதும் காணப்படாமையை நோக்குக. தொல்காப்பியர் வழிநின்று மூன்றாம் வேற்றுமையை உணர்த்தப் புகுந்திருப்பின், அவர், அதனினியறல் முதலிய கருவிப் பொருளின் பகுதிகளை மனங்கொண்டு கூறாது அமையார் என்பது துணியப்படும்.

இக்காலத்தில், சிற்பியர் கொண்டு கட்டி முடித்தான், தடிகொண்டு அடித்தான், அரசனுடன் அமைச்சன் வந்தான் என இவ்வாறு கொண்டு, உடன் என்னுஞ் சொற்களே மூன்றாம் வேற்றுமை உருபுகளின் இடத்தில் பெரிதும் வழங்குகின்றன. 'வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுநவும் என்ற தொல்காப்பிய இடையியல் நூற்பா அடிக்குச் சேனாவரையர் 'வேற்றுமைப் பொருளாய் வருவன பிற சொல்லுமுள வாகலின் அவற்றை நீக்குதற்கு 'உருபாகுநவு' மென்றார். பிற சொல்லாவன....... "அனையை யாகன் மாறே", "இயல்புளிக் கோலோச்சு மன்னன்" என மூன்றாம் வேற்றுமைப் பொருட்கண் வருமாறு, உளி என்பனவும், அன்ன பிறவுமாம்' என உரை கூறியவாறே கொண்டு, உடன் என்பனவற்றையும் அமைக்க, தொல்காப்பியர்,

**வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை**
**ஈற்றுநின் றியலும் தொகைவயின் பிரிந்து**
**பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்**
**எல்லாச் சொல்லும் உரிய வென்ப**

என்றதனால் அமைத்தலும் ஒன்று. இவ்வாறே ஐந்தாம் வேற்றுமைப் பொருளில் வரும் நின்று, இருந்து என்பவற்றையும், ஆறாம் வேற்றுமைப் பொருளில் வரும் உடைய என்பதையும்,ஏழாம் வேற்றுமைப் பொருளில் வரும் கண் என்பதனோடு ஒரு சார் பொருளொத்து வழங்கிவரும் அதன்

பரியாயச் சொற்களையும் கொள்க. இவ்வாறு வேற்றுமைப் பொருளை உணர்த்த உபகாரப்பட்டு நிற்கும் உருபல்லாச் சொற்களையெல்லாம் வேற்றுமைப் பொருள் வயின் வரும் சொல்லுருபுகள் எனவும், பொருட்டு அல்லது பொருட்டுருபுகள் எனவும் குறிப்பிடுதல் மரபு எனத் தெரிகிறது.

காரணப் பொருட்டாய் வரும் இவ்வேற்றுமையின் வினை முதற் கருவியாகிய கருத்தா செயப்பாட்டு வினையையும், எழுவாய் வேற்றுமையின் வினைமுதலாகிய கருத்தா செய்வினையும் ஏற்று நிற்கும் என்னும் வேறுபாட்டையும் அறிக.

(40)

**297. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே**
**கொடை பகை நேர்ச்சி தகவது வாதல்**
**பொருட்முறை யாதியி னிதற்கிதெனல் பொருளே.**

**நான்கு ஆவதற்கு உருபு ஆகும் குவ்வே**
**கொடை பகை நேர்ச்சி தகவு அதுவாதல்**
**பொருள்முறை ஆதியின் இதற்கு இது எனல் பொருளே.**

nāṉkāvataūku urupu ākum kuvvē
kotai pakai nērssi ṭakavu aṭu vāṭal
porul̲muūai āṭiyiṉ iṭarku iṭu eṉal porul̲ē.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### The fourth or dative case

Ku is the (only) sign of the 4th Case, which denotes **giving, hating, agreeing, fitness, indispensability** (or one thing being necessary to another), **purpose, relationship** and others like these — the general idea being (the relation implied in the expression) ‘this' for this.

## ஒப்புமைப் பகுதி

**நான்கா குவதே**
**கு எனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**எப்பொரு ளாயினுங் கொள்ளும் அதுவே**

(தொல். சொல்.: 75)

**அதற்குவினை யுடைமையின் அதற்குடம் படுதலின்**
**அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்**

அதற்கியாப் புடைமையின் அதன்பொருட் டாதலின்
நட்பின் பகையின் காதலின் சிறப்பினென்று
அப்பொருட் கிளவியும் அதன்பால என்மனார்

(தொல். சொல்.: 76)

ஓதுங் குகர உருபுநான் காவதஃ
தியாதிடத்தும் ஈ பொருளை ஏற்குமாம்......

(நேமி.: 43 : 1–2)

நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே

(இ.வி.: 201)

குவ்வே நான்கன துருபா கும்மே

(மு.வீ.: 517)

கொடைபகை சிறப்புக் காத றகுதி
அதுவாதன் முறைபொருட் டதன்பய னிலையே

(மு.வீ.: 518)

நான்காவதற்கு உருபு ஆகும் குவ்வே
கொடை பகை நேர்ச்சி தகவு அதுவாதல்
பொருட்டு முறையாதியின் இதற்கிது எனல் பொருளே

(தொ.வி.: 59)

........................ நான்குருபே குவ்வாம்
வடுவில்வினை முதல்கொள்வோன் தான்ஏற் குங்கொடை
முன்வருவினை யுஞ்சிலபெய ரும்முடிபு கூறிடுமே

(சுவாமி.: 42: 3–4)

## மயிலை நாதர்

எ—ன், நிறுத்த முறையானே நான்காம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ—ள்.:— நான்காம் வேற்றுமைக்குக் குவ்வென்பது உருபாம்; கொடையும் பகையும் நேர்ச்சியும் தகவும் அதுவாதலும் பொருட்டும் முறையு முதலான பொருண்மைக்கண் இதற்கிது வென்பதுபட நிற்றல் அதற்குப் பொருளாம், எ—று.

வ–று.:–

தேவர்க்குப் பூசை, சாத்தற்குச் சோறு, "இரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்" (குறள். 232), "இரந்தோர்க்குத் [1]தேர்வீசும் வண்கை யவன்" என்பன கொடை. மக்கட்குப் பகை வெகுளி, பாம்புக்குப் பகை கீரி, "அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" (நான்மணி. 84; மூதுரை, 27; சிலப். 20. இறுதி வெண்பா). "பிணிக்கு மருந்து பிறமன் னணியிழை, தன்னோய்க்குத் தானே மருந்து." (குறள். 1102) என்பன பகை. [2]கற்றோற்கு மகள்நேர்ந்தான், அறத்திற்குப் பொரு ணேர்ந்தான், இறைக்கதுநேரின் [3]நினக்கிது நேருமென்பன நேர்ச்சி. அறத்திற்குத் தக்கது அருள், சாத்தற்குத் தக்காள் கொற்றி, "செல்வர்க்கே செல்வந் தகைத்து" (குறள். 125), "அருங்கல முலகின் மிக்க வரசர்க்கே யுரிய" (சூளா. கல்யாண. 189) என்பன [4]தகுதி; ஆடைக்குநூல், ஆழிக்குப்பொன் என்பன அதுவாதல் "[5]வரிசைக்குவருந்தும்" (புறநா. 47), கூழுக்குக்குற்றேவல் செய்யு மென்பன பொருட்டு; சாத்தற்கு மகன், கொற்றற்கு மகள் என்பன முறை.

'ஆதி' என்றதனால், கரும்பிற்குவேலி, மயிருக்கெண்ணெய், உயிருக்குண்டியென்னும் அதற்கு வினையுடைமையும், சாத்தற்குப் பொருளென்னும் படுபொருளும், கைக்கு யாப்புடையது கடகமென்னும் யாப்புடைமையும், நாய்க்கு நட்புடையனென்னும் நட்புடைமையும், தாய்க்குக் காதலனென்னும் காதலும், [6]வடுகரசர்க்குச் சிறந்தோர் சோழிய வரசரென்னும் சிறப்புடைமையும் கொள்க.

இன்னும் இஃது, ஏனை வேற்றுமைகள் போல அளவுபட்ட பொருண்மைத்தன்றி வரும்; அவையும் இதற்கிஃதென்பதேபட உரைத்துக் கொள்க. அவை அரசர்க்கு அமைச்சன், அவர்க்குத்தமர், [7]நமக்கு நல்லன்,

---

பாட வேறுபாடு:–

1.தேரீயும்
2.சான்றோற்கு
3.எனக்கிது
4.தகவாம்
5.வரிசைக்குழும்
6.வடுகரரசர்க்கு
7. (1)நமர்க்கு; (2)நமனுக்கு

"நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்"

(நான்மணி. 9)

"மனைக்குப்பாழ் வாணுதலின்மை"

(நான்மணி. 20)

"போர்க்குப்புணைமன்"

(பு. வெ. 4:20)

"கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை"

(குறள். 290)

"அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்"

(குறள். 543)

"உண்டி வெய்யோர்க் குறுபிணி யெளிது"

(முதுமொழி. 77)

"பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை"

(யா.வி. 4.மேற்.)

"ஊர்க்கு மணித்தே பொய்கை பொய்கைக்குச்
சேய்த்து மன்றே சிறுகான்யாறே"

(குறுந். 113)

[1]"தனக்குச்சரியென்ப நல்லாடானவற்கீன்ற மைந்தன்"
"மைந்தற்கு மடவாட்கு நிகழ்ந்தகேட்
டஞ்சுமின் கொலை [2]யஞ்சுமின்றீயன"
என்பன முதலாயினவெனக் கொள்க.

"சிறப்புடைப் பொருளைத் தானெடுத்து மொழிதல்" என்பதனால், இதற்குச் சிறந்தன எடுத்தோதி, இவை 'ஆதி' என்பதனால் தழுவ வைத்தாரென்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ—னின், நான்காம் வேற்றுமையது இலக்கணம் உணர்—ற்று.

இ—ள்.: நான்காம் வேற்றுமைக்கு உருபு மேற்கூறிய கு ஒன்றுமேயாம்; அதன்பொருளாவது கொடையும், பகையும், நேர்ச்சியும், தகவும், அதுவாதலும்.

பாட வேறுபாடு:—

1. (1)தனக்குச் சரியென்ப நல்லமானவர்க்கீன்ற
(2)தனகிரியென்ப
2. அஞ்சன் மினன்றியென

பொருட்டும், முறையும் முதலான பொருள்தோன்றப் புணரும் புணர்ச்சிக்கண் இதற்கு இது என அங்ஙனம் வருதற்கு உரிய எப்பொருளினையும் ஏற்றுக் கொள்ளும் பொருளாகத் தன்னை ஏற்ற பெயர்ப் பொருளை வேற்றுமை செய்தலாம், **எ–று.**

**'இதற்கு இது'** என்றமையான், ஏற்றுக்கொள்ளும் பொருள் என்பது பெற்றாம்.

**வ–று.:** "இரப்பார்க்கொன் றீவார்மேல் நிற்கும் புகழ்" என்பது கொடை. "பிணிக்கு மருந்து" என்பது பகை. விளக்கிற்கு எண்ணெய் என்பது நேர்ச்சி. நட்பு என்பதும் இது. [3]"அருங் கலம் உலகின் மிக்க அரசர்க்கே உரிய" என்பது தகுதி. ஆடைக்கு நூல் என்பது அதுவாதல். கூழிற்குக் குற்றேவல் செய்யும் என்பது பொருட்டு. சாத்தற்கு மகன் என்பது முறை.

**'ஆதி'** என்றமையானே கைக்கு யாப்புடையது கடகம் என்னும் யாப்புடைமை முதலியவாய் இதற்கு இது என்பதுபட வருவன எல்லாம் கொள்க. இவற்றுள் ஏற்றுக்கொள்ளும் பொருளாக வேற்றுமை செய்தல் காண்க.

***இவ்வேற்றுக்கோடற்பொருள் கேளாது ஏற்றல், கேட்டே ஏற்றல், ஏலாது ஏற்றல், ஈவோன் ஏற்றல், உயர்ந்தோன் ஏற்றல், இழிந்தோன் ஏற்றல், ஒப்போன் ஏற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் என இவை முதலாகப் பலவுமாம் எனக்கொள்க.***

*உ–ம்:*

*ஆவிற்கு நீர் விட்டான் எனவும்; வறியார்க்கு ஈந்தான் எனவும்; மாணாக்கனுக்கு அறிவைக் கொடுத்தான் எனவும்; தனக்குச் சோறிட்டான், தனக்கு அரிசி கொடுத்தான்,*

*"அருமறை சோரும் அறிவிலான் செய்யும்*
*பெருமிறை தானே தனக்கு"*

*எனவும்; அரனுக்குக் கண்ணலர் கொடுத்தான் அரி எனவும்; அரிக்குச் சக்கரம் கொடுத்தான் அரன் எனவும் ; சோழற்கு விருந்து கொடுத்தான் சேரன் எனவும்; சோற்றிற்கு நெய்விட்டான், நீர்க்கு வாசம் ஊட்டினான், வாளிற்கு உறை வழங்கினான், தண்டிற்குத் தங்கம் கட்டினான், சுவர்க்குச் சித்திரம் எழுதினான் எனவும்; மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தான் ஆசிரியன் எனவும்; கள்ளனுக்குக் கசையடி கொடுத்தான் அரசன் எனவும் முறையே காண்க.*

*முதல் என்றதனால், மருகனுக்கு மகள் கொடுத்தான் என்பது வழக்கு. மகனுக்கு அரசு கொடுத்தான் என்பது*

*உரிமை. அரசர்க்குத் திறை கொடுத்தான் என்பது அச்சம். தந்தைதாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனை எனவும் வரும்.*

ஒருவன் ஓர் காரியத்தை ஒரு கருவியால் செய்தல் அக்காரியம் தனக்கேனும் பிறர்க்கேனும் உதவுதற் பொருட்டன்றி வீண்காரியம் செய்யான் ஆதலின், இஃது இம்முறையானே நான்காம் வேற்றுமை எனப்பட்டது.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** முறையானே நான்காம் வேற்றுமைக்கு இலக்கணம் கூறுகின்றது.

**இ—ள்.: நான்காவதற்கு** – நான்காமெண்ணின் முறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு, **உருபாகும் குவ்வே** – குவ்வென்பது உருபாம், **கொடை பகை நேர்ச்சி** – கொடையும் பகையும் நேர்ச்சியும், **தகவு அதுவாதல்** – தகவும் அதுவாதலும், **பொருட்டு முறை ஆதியின்** – பொருட்டுமுறையின் முதலான பொருண்மைக்கண், **இதற்கு இதெனல் பொருள்** – இதற்கு இது என்பதுபட நிற்றல் அதற்குப் பொருளாம், **எ—று.**

**உ—ம்.:—**

தேவர்க்குப் பூசை, சாத்தற்குச் சோறு, இரப்போர்க்கு ஈந்தான், மாணாக்கனுக்கு உபதேசித்தான் என்பன கொடை.

மக்கட்குப் பகை வெகுளி, பாம்புக்குப் பகை கீரி, "அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" (நான்மணி. 84),

**"பிணிக்கு மருந்து பிற மன் னணியிழைத்**

**தன்னோய்க்குத் தானே மருந்து"** (குறள். 1102)

என்பன பகை.

சான்றோற்கு மகள் நேர்ந்தான், அறத்துக்குப் பொருள் நேர்ந்தான், இறைக்கு அது நேரின் எனக்கு அது நேரும் என்பன நேர்ச்சி. அறத்திற்குத் தக்கது அருள், சாத்தற்குத் தக்காள் கொற்றி, "செல்வர்க்கே செல்வந் தகைத்து" (குறள். 125), "அருங்குல முலகின் மிக்க வரசர்க்கே யுரிய" (சூளா. கல்யாணச். 189) என்பன தகவு. ஆடைக்கு நூல், ஆழிக்குப் பொன் என்பன அதுவாதல். வரிசைக்கு உழும், கூலிக்குக் குற்றேவல் செய்யும் என்பன பொருட்டு. சாத்தற்கு மகன், கொற்றிக்கு மகள்; இது முறை.

**"ஆதி"** என்பதனாற் கரும்புக்கு வேலி, மயிருக்கு எண்ணெய், உயிருக்கு உண்டி என்னும் அதற்கு வினையுடைமையும், கைக்கு யாப்புடையது கடகம் என்னும் யாப்புடைமையும், நாய்க்கு நட்புடையன் என்னும் நட்புடைமையும், தாய்க்குக் காதல் என்னும் காதலும், வடுகரசர்க்குச் சிறந்தார் சோழியவரசர் என்னும் சிறப்பும் இவை முதலானவும் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது**, நான்காம் வேற்றுமைய திலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: நான்காவது**–நான்காம் வேற்றுமைக்கு, **உருபு**–உருபாவது, **குவ்வே யாகும்** – முன் சொல்லப்பட்ட குவ் வொன்றுமே யாகும், **பொருள்**–அவ்வுருபின் பொருள்களாவன, **கொடை** – கொடையும், **பகை** – பகையும், **நேர்ச்சி**–நட்பும், **தகவு**–தகுதியும், **அதுவாதல்**–முதற்காரணமும், **பொருட்டு** – நிமித்த காரணமும், **முறை**–முறையும், **ஆதியின்**–முதலான பொருட் சொற்களின் புணர்ச்சியில், **இதற்கிதெனல்** – இதற்கு இதுவென்கிறதுபட வருகின்றவை யாகிய அவ்வுரு பேற்ற பெயர்ப் பொருள் வேறுபட்ட பலவுமாம், **எ–று.**

(கொடை யெனவே கோடற் பொருளும், பகை நேர்ச்சி யெனவே பகை தொடர்பொருளும், தகுதி யெனவே தகுதியுடைப்பொருளும், அதுவாதலெனவே முதற்காரண காரியப்பொருளும், பொருட்டெனவே நிமித்தகாரண காரியப்பொருளும், முறை யெனவே முறைக்கியை பொருளும், குவ்வுருபின் பொருள்களாமென்பது பெற்றாம்.)

**வ–று.:**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான், இது கோடற்பொருளாம். கோடற்பொருளாவது கொடுத்தற் றொழிலின் செயப்படு பொருளைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாம். இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான், என்கிற விடத்தே கொடுத்தலின் செயப்படுபொருள் பொன்னாம். அதனைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாதலால் இரவலர் கோடற் பொருளாகும். இன்னும், 'மாணாக்கனுக்கறிவைக் கொடுத் தான்' என்கிறவிடத்தே அறிவாகிய செயப்படு பொருள், கொடுப்போன் பொருளாய்க் கொள்வோனிடத்துச் செல்லாமற் போனாலும் அதனைத் தனக்குரிய தாக்கிக் கொள்ளுதலாற் கோடற் பொருளேயாம். அல்லாமலும், மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான் என்கிறவிடத்தே சொல்லுதலின் செயப்படு பொருளாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய மாணாக்கனுங் கோடற் பொருளேயாம். இன்னும், அவர்கொடுத்தற் குடம்பட்டார் என உடம்படுதற்கு விடயமான பொருளும் ஒரு கோடற் பொருளாகவே வரும்.

கோடல் பலவகைப்படும். அவை, 'ஆவிற்கு நீர்விட்டான்' எனக் கேளாதேற்றலும், 'வறியவர்க்கீந்தான்' எனக் கேட்டே யேற்றலும் 'மாணாக்கனுக் கறிவுகொடுத்தான்' என வேலாதேற்றலும், 'தனக்குச் சோறிட்டான்' என ஈவோனேற்றலும், 'அரனுக்குக் கண்ணலர்கொடுத்தா னரி' என வுயர்ந்தோனேற்றலும், 'அரிக்குச் சங்கரங் கொடுத்தா னரன்' என இழிந்தோ னேற்றலும் சோழனுக்கு விருந்திட்டான் சேரன் எனவொப்

போனேற்றலும், சோற்றிற்கு நெய்விட்டான் என வுணர்வின்றி யேற்றலும், மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தா னாசிரியன் என விருப்பாயேற்றலும், கள்ளனுக்குக் கசையடி கொடுத் தானரசன் என வெறுப்பா யேற்றலு முதலியனவாம்.

கொடுத்தலும் பலவகைப்படும். அவை மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என வழக்கத்திற் கொடுத்தலும், மகனுக் கரசுகொடுத்தான் என வுரிமையிற் கொடுத்தலும் அரசனுக்குத் திறை கொடுத்தான் என அச்சத்திற் கொடுத்தலும், தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான் எனப் பாவனையிற் கொடுத்தலுமாம்.

பாம்புக்குப் பகை கருடன் என்பது பகைதொடர்பொருளாம். சாத்தனுக்கு நட்பாளன் கொற்றவன் என்பது நட்புத்தொடர்பொருளாம். கருடனிடத்துள்ள பகை தொடர்தற்குப் பாம்பும் கொற்றனிடத்துள்ள நட்புத் தொடர்தற்குச் சாத்தனும் இடமாதலறிக. அவனுக்கு நல்ல வனிவன், அவனுக்குத் தீயவனிவன் என்கிறவைகளும் அவை போல்வனவாம். அன்றியும், வாழ்த்தி னன்மை தொடர் பொருளும், வைவின் றீமை தொடர்பொருளும் பகை நேர்ச்சிகளில் அடங்குமெனக் கொள்க. அவை நல்லோர்க்குச் செல்வமுண்டாகுக, தீமையோர்க்குக் கேடுண்டாகுக, என வரும்.

'அருங்கால மரசர்க் குறித்து' இது தகுதிப்பொருளாம். தகுதிப்பொருளாவது, ஒருபொருளோடு பொருந்துதற்குத் தகுதியை யுடையதாம். அருங்கலமானது அரசரோடு பொருந்துதற்குத் தகுதியையுடைய பொருளாதல் காண்க. 'குண்டலத்திற்குப் பொன்' இது முதற்காரணகாரியப் பொருள். 'கூலிக்கு வேலைசெய்தான்' இது, நிமித்தகாரண காரியப்பொருள். பொன்னாகிய முதற்காரணத்தாற் குண்டல மாகிய காரியமும் வேலையாகிய் நிமித்தகாரணத்தாற் கூலியாகிய காரியமும் உண்டாதலறிக.

சாத்தனுக்கு மகனிவன் இது முறைக்கியை பொருளாம். முறைக்கியை பொருளாவது, பிறப்பினா லொருபொருளின் முறைக்குத் தானியைந்து நிற்கும் பொருளாம். மகனாதலாகிய முறைக்குச் சாத்தனியைதலறிக. ஆதியென்றதனால் மழைக்கு மின்னல் என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், அவனுக்கிது போதும் எனக் குறைவில்லாமையைக் கொள்வதும் பிறவுங் கொள்க. குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே பொருட்டு நிமித்தம் என்கிற சொல்லுருபுகள் வரும். அவை, 'கூழின் பொருட்டு வேலை செய்தான்' 'கூலியினிமித்தம் வேலை செய்தான்' என வரும். அல்லாமலும், 'கூலிக்காக

வேலைசெய்தான்' எனக் குவ் வுருபிற்குப் பொருட்டுப் பொருளிலே ஆகவென்கிறதுஞ் சொல்லுருபாக அவ்வுருபின் மேல் வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

நான்காம்வேற்றுமை யுருபும் பயனுங் கூறுஞ் சூத்திரம் யாது?

நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறை யாதியி னிதற்கிதெனல் பொருளே.

(நான்காவதற்கு உருபு ஆகும் குவ்வே
கொடை பகை நேர்ச்சி தகவு அது ஆதல்
பொருட்டு முறை ஆதியின் இதற்கு இதுஎனல் பொருளே)

**இ–ள்.:** நான்காம்வேற்றுமைக்குருபு முன் சொல்லப்பட்ட குவ் வொன்றுமேயாம். அவ்வுருபின் பொருள்களாவன கொடையும் பகையும் நட்பும் தகுதியும் முதற்காரணமும் நிமித்தகாரணமும் முறையும் முதலான பொருட்சொற்களின் புணர்ச்சியில் இதற்கு இதுவென்பது படவருவனவாகிய அவ்வுருபேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட பலவுமாம். **எ–று.**

நான்காவதன் உருபு யாது?

"நான்காவதற்கு உருபாகும் குவ்வே"

குவ்வுருபின் பொருள்கள் யாவை?

"கொடை பகை நேர்ச்சி தகவு அதுவாதல்
பொருட்டு முறையாதியின் இதற்குஇதெனல் பொருளே"

கொடையெனவே கோடற்பொருளும், பகை நேர்ச்சியெனவே பகைதொடர்பொருளும் நட்புத்தொடர்பொருளும், தகுதியெனவே தகுதியுடைப் பொருளும், அதுவாதலெனவே முதற்காரண காரியப்பொருளும், பொருட்டெனவே நிமித்தகாரண காரியப்பொருளும், பொருட்டெனவே நிமித்தகாரண காரியப்பொருளும், முறையெனவே முறைக்கியைபொருளும், குவ்வுருபின் பொருள்களாமென்பது பெற்றாம்.

**(உதாரணம்)**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான்–கோடற்பொருள்.

பாம்புக்குப் பகை கருடன்..............................பகை தொடர்பொருள்.

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன்.............................. நட்புத்தொடர்பொருள்.

அரசர்க்குரித் தருங்கலம்.............................. தகுதியுடைப்பொருள்.

குண்டலத்திற்குப் பொன்.............................. முதற்காரண காரியப்பொருள்.

கூலிக்கு வேலை செய்தான்....................................நிமித்தகாரண காரியப்பொருள்.

சாத்தனுக்கு மகன் கொற்றன்..................................முறைக்கியை பொருள்.

கோடற்பொருளாவது கொடுத்தற்றொழிலின் செயப்படுபொருளைத் தனக்குரிய தாக்கிக் கொள்ளு தலையுடைய பொருளாம். கோடற்பொருள், கோளிப்பொருள் என்பன ஒருபொருட்சொற்கள்.

**உ–ம்.:–**

இரவலர்க்குப் பொன்னைக்கொடுத்தான் என்புழிக், கொடுத்தலின் செயப்படுபொருள் பொன்; அதனைத் தனக்குரிய தாக்கிக் கொள்ளுதலையுடையபொருள் இரவலராதலால், இரவலர் கோடற்பொருள்.

இன்னும், மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்புழி, அறிவாகிய செயப்படுபொருள் கொடுப்போன் பொருளாய்க் கொள்வோனிடத்துச் செல்லாமை ஆண்டுத் தோன்றினும் அதனைத் தனக்குரிய தாக்கிக் கொள்ளுதலால், மாணாக்கன் கோடற்பொருள். அன்றியும், மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான் என்புழிச் சொல்லுதலின் செயப்படுபொருளாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய மாணாக்கனுங் கோடற்பொருளேயாம். இன்னும், அவர் கொடுத்தற்குடம்பட்டார் என உடம்படுதற்கு விடயமான பொருளும் ஒருகோட்டற் பொருளாகவே வரும்.

கோடல் பலவகைப்படும்; அவை: கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் முதலியன.

**உ–ம்.:**

ஆவிற்கு நீர் விட்டான் என்பது கேளாதேற்றல். இரந்தார்க் கீந்தான் என்பது கேட்டேயேற்றல். மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்பது ஏலாதேற்றல். தனக்குச் சோறிட்டான் என்பது ஈவோனேற்றல். அரனுக்குக் கண்மலர் கொடுத்தான் அரி என்பது உயர்ந்தோனேற்றல். அரிக்குச் சக்கரங் கொடுத்தான் அரன் என்பது இழிந்தோனேற்றல். சோழனுக்கு விருந்திட்டான் சேரன் என்பது ஒப்போனேற்றல். சோற்றிற்கு நெய்விட்டான் என்பது உணர்வின்றேற்றல். மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தானாசிரியன் என்பது விப்பாயேற்றல். கள்ளனுக்குக் கசையடி கொடுத்தானரசன் என்பது வெறுப்பாயேற்றல். (கசை–குதிரைச்சம்மட்டி.)

கொடுத்தலும் பலவகைப்படும்; அவை: வழக்கத்திற் கொடுத்தல், உரிமையிற் கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல்,

பாவனையிற் கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல், அவலத்திற் கொடுத்தல் முதலியன.

**உ–ம்.:**

மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத்திற்கொடுத்தல், மகனுக் காசுகொடுத்தான் என்பது உரிமையிற் கொடுத்தல். அரசற்குத் திறை கொடுத்தான் என்பது அச்சத்திற்கொடுத்தல். தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனையிற்கொடுத்தல். அவனுக்குப் பரிசு கொடுத்தான் என்பது உவகையிற்கொடுத்தல். அவனுக்குத் தண்டனை கொடுத்தான் என்பது வெகுளியிற்கொடுத்தல். வாய்க்கரிசியிட்டான் என்பது அவலத்திற் கொடுத்தல்.

பகை தொடர் பொருளாவது ஒருபொருளினிடத்துள்ள பகை தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

**உ–ம்.:–**

பாம்புக்குப்பகை கருடன் என்புழிக், கருடனிடத்துள்ள பகை தொடர்தற்கு இடம் பாம்பாதலாற் பாம்பு பகைதொடர் பொருள்.

நட்புத்தொடர்பொருளாவது ஒருபொருளினிடத்துள்ள நட்புத்தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

**உ–ம்.:–**

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன் என்புழிக் கொற்றனிடத்துள்ள நட்புத் தொடர்தற்கு இடஞ் சாத்தனாதலாற் சாத்தன் நட்புத்தொடர்பொருள்.

வைவிற்றீமை தொடர்பொருளும் வாழ்த்தி னன்மைதொடர்பொருளும் பகை நேர்ச்சிகளில் அடங்குமெனக் கொள்க. அவை: தீயோர்க்குக் கேடுண்டாகுக; நல்லோர்க்குச் செல்வமுண்டாகுக என வரும்.

தகுதியுடைப்பொருளாவது தன்னோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருளையுடைய பொருளாம்.

**உ–ம்.:–**

அரசர்க் குரித்தருங்கலம் என்புழி, அரசரோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருள் அருங்கலம்; அப்பொருளையுடைய பொருள் அரசராதலால் அரசர் தகுதியுடைப்பொருள். முதற்காரணகாரியப் பொருளாவது முதற்காரணத்தாலாகும் பொருளாம்.

**உ–ம்.:–**

குண்டலத்திற்குப் பொன் என்புழிப் பொன் முதற்காரணம், அதனாலாகிய காரியங் குண்டலமாதலாற் குண்டலம் முதற்காரணகாரியப்பொருள்.

நிமித்த காரணகாரியப்பொருளாவது நிமித்தகாரணத்தால் ஆகும் பொருளாம்.

**உ–ம்.:–**

கூலிக்கு வேலை செய்தான் என்புழி வேலை நிமித்தகாரணம், அதனாலாகிய காரியங் கூலியாதலாற் கூலி நிமித்தகாரணகாரியப்பொருள்.

முறைக்கியை பொருளாவது பிறப்பினால் ஒரு பொருளின் முறைக்குத் தான் இயைந்து நிற்கும்பொருளாம்.

**உ–ம்.:–**

சாத்தனுக்கு மகன் கொற்றன் என்புழிக் கொற்றனிடத்துள்ள மகனென்னுமுறைக்குத் தானியைந்து நிற்கும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் முறைக்கியை பொருள்.

'ஆதி' என்றதனால், மழைக்கு மின்னல் என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், அவனுக்கிதுபோதும் எனக் குறைவின்மையைக் கொள்வதும், பிறவுங் கொள்க. (உற்பாதம்–மேல்விளையுநன்மை தீமையை யறிவிக்குங் குறி.)

குவ் வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே, பொருட்டு, நிமித்தம் என்பனவும், குவ் வுருபின்மேல் ஆக வென்பதுஞ் சொல்லுருபுகளாக வரும்.

**உ–ம்:–**

கூழின்பொருட்டு வேலை செய்தான்; கூலியினிமித்தம் வேலைசெய்தான்; கூலிக்காக வேலைசெய்தான் என வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** நான்காம் வேற்றுமை யிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.: நான்காவதற் குருபாகுங் குவ்வே**–நான்காம் வேற்றுமைக்கு உருபு மேலே சொல்லப்பட்ட கு ஒன்றுமேயாம், **கொடை**–ஈகையும், **பகை** – பகையும், **நேர்ச்சி**–நட்பும், **தகவு**–தகுதியும், **அதுவாதல்**–அது அதுவாதலும், **பொருட்டு** – நிமித்தமும், **முறை** –உறவுமுறையும், **ஆதியின்**–முதலிய பொருள்தோன்றப் புணரும் புணர்ச்சியில், **இதற்கிதெனல் பொருள்** – இதற்கு இதுவென்பதுபட வருதற்கு உரிய எப்பொருளினையும் ஏற்றுக் கொள்ளும் பொருளாகத் தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்வது இதன் பொருளாம், **எ–று.** இதற்கிது என்றதினாலே ஏற்றுக்கொள்ளும் பொருள் என்பது பெறப்பட்டது.

**வ–று.:–**

இரப்போர்க்கீந்தான் என்பது கொடை; பிணிக்குமருந்து என்பது பகை; விளக்கினுக் கெண்ணெய் என்பது நேர்ச்சி; அவனுக்கு நட்பிவன் என்பதும் அது; அருங்கலம் அரசர்க்கே யுரித்து என்பது தகுதி; அவனுக்குத் தக்கவளிவள் என்பதுமது.

அவலுக்கு நெல் என்பது அது அதுவாதல்; இதனுள், நெல்லென்பது அது அவல் அதுவாதல்; இன்னுமிது உருபேற்குஞ் சொல் உருபேற்கும் பொருள் எனவரு மிரண்டின்றி உருபேற்குஞ் சொல்லே நின்றுஉருபேற்கும் பொருளாக விகாரப் படுவதெனவும் உய்த்துணர்க. ஆடைக்கு நூல் என வரும்; கடி சூத்திரத்திற்குப் பொன்–என்பதுமது; கூழிற்குக் குற்றேவல் செய்தான் என்பது பொருட்டு, கூலிக்கு வேலை செய்தான்–என்பதுமது. சாத்தனுக்கு மகன் என்பது முறை, அவனுக்குஉறவு என்பதுமது. ஆதியென்றதினாலே, கைக்கு யாப்புடையது கடகம் (யாப்பு–பொருத்தம்,) அவனுக்கும் அவளுக்கும் பொருத்தமில்லை, என்பதுமது. இச்சொற்குப் பொருளிது; சுட்டு. அதற்குமுன், இதற்குப்பின் அந்தணர் நூற்கு மறத்திற்குமாதி, இன்றைக்கு வரும், அவ்வூர்க்கு இவ்வூர்காதம் என்பன எல்லை; அவனுக்குச் சிறந்தவனிவன்: சிறப்பு, போர்க்குப் புலியிவன்–வீரம், அரசனுக்குக் கண் அமைச்சன், மனைக்கு விளக்குமனையாட்டி–உவமை. மழைக்கு மின்னல்–ஏதுக்குறிப்பு. உண்டென்பதற்கு அடையாளம், இல்லையென்பதற்கு அடையாளம் என்பதுமது. இவ்வாறு இதற்கிது என்பது படவருவன வெல்லாங் கொள்க.

இவற்றுள் இவ்வுருபு தானடைந்த பெயர்ப்பொருளை ஏற்றுக் கொள்ளும் பொருளாக வேற்றுமை செய்தல் காண்க. ஏற்கும்பொருள். ஏற்றுக் கொள்ளும், பொருள் கோடற்பொருள், கொள்ளுதற் பொருள், கொள்பொருள் என்பன ஒன்று. இனி இந்த ஏற்கும்பொருள் கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் எனப் பலவகைப்படும். உ–ம்: ஆவிற்குநீர்விட்டான் என்பது கேளாதேற்றல், வறியார்க்கீந்தான் என்பது. கேட்டேயேற்றல், மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்பது ஏலாதேற்றல், இது அறிவானது கொடுப்பவனது பொருளாகிக் கொள்வோ னிடத்திற் செல்லாமல் அவன் மனத்துந் தோன்றுதல் ஏலாதேற்றலாயிற்று. (கொள்ளாமற் கொள்ளுதல் பொருள்) தனக்குச் சோறிட்டான் என்பது ஈவோனேற்றல், அரிக்குப் பாற்கடற் றிருவளித்தானரன் என்பது உயர்ந்தோனேற்றல், (பாற்கடற்றிரு – திருப்பாற் கடலிலே பிறந்த இலக்குமி) அரனுக்குக் கங்கையளித்தான் அரி என்பது இழிந்தோனேற்றல், சோழனுக்கு விருந்திட்டான் சேரன் என்பது ஒப்போனேற்றல், சேரற்றிற்கு நெய்விட்டான், நீர்க்கு வாச மூட்டினான், கண்ணுக்குமையிட்டாள், சுவர்க்குச் சித்திர மெழுதினான் என்பன உணர்வின்றேற்றல். மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தானுவாத்தி என்பது விருப்பாயேற்றல்,

கள்ளனுக்குக் கசையடிகொடுத்தான் காவலன் என்பது வெறுப்பாயேற்றல், எனக் காண்க. இனியிந்த ஏற்கும் பொருளாலேற்கப்பட்ட கொடைப்பொருளும் பல வகைப்படுமெனக் கொள்க.

**உ–ம்.:–**

மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத்திற் கொடுத்தல், மகனுக்குஅரசு கொடுத்தான் என்பது உரிமையிற் கொடுத்தல், அரசனுக்குத் திறை கொடுத்தான் என்பது அச்சத்திற் கொடுத்தல், (திறை–வரி) தந்தை தாய்க்குத் திதி கொடுத்தான் என்பது பாவனையிற் கொடுத்தல், அவனுக்குப் பரிசு கொடுத்தான் என்பது உவகை, அவனுக்குத் தண்டனைகொடுத்தான் என்பது வெகுளி, வாய்க்கரிசி யிட்டான் என்பது அவலம், பிறவுங் காண்க. இக்கொடைப் பொருள் தன்பொருள் குறித்த சொல்லாலன்றி, மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான், மாணாக்கனுக்கு அடியூட்டினான் எனப்பிற வாய்பாட்டாற் கூறப்படுதலுங் கொள்க. ஒருவன் ஒருகாரியத்தை யொருகருவியாற் செய்தல் தனக்காயினும் பிறர்க்காயினும் உதவுதற் பொருட்டாதலால் அம்முறை பற்றியிது நான்காம் வேற்றுமை யெனப்பட்டது, இதுவு மிருமுடிபாக முடிந்தது.

**"நான்காகுவதே எனப்பெயரிய வேற்றுமைக் கிளவி**
**யெப்பொரு ளாயினுங் கொள்ளுமதுவே"**

எனவும்,

**"அதற்கு வினை யுடைமையி னதற்குடம் படுதலி**
**னதற்குப்படு பொருளினது வாகுகிளவியி**
**னதற்கியாப் புடைமை யினதற் பொருட் டாகலி**
**னட்பிற் பகையிற் காதலிற் சிறப்பினென்;**
**றப்பொருட் கிளவியு மதன்பால வென்மனார்"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– நான்காவதற்கு** – நான்காம் வேற்றுமைக்கு, **உருபு** – உருபாவது:– குவ்வே ஆகும் – குஒன்றுமேயாம்; **பொருள்** – அதன் பொருள்களாவன:– **கொடை** – கொடுத்தலும், **பகை** – பகையும், **நேர்ச்சி** – நட்பும், **தகவு**– தகுதியும், **அது ஆதல்** – அதுவாதலும், **பொருட்டு** – பொருட்டும், **முறை** – உறவு முறையும், **ஆதியின்** – முதலான பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சியில், **இதற்கு இது எனல்** – இதற்கு இது என்பதுபடத் தன்னை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்தலாம்.

**குறிப்பு:–** 'இதற்கிதெனல்பொருள்' எனவே இவ்வேற்றுமையின் பொருள்

கோடற்பொருள் என்றதாயிற்று. கொடை என்றதனால் – கொள்ளுதற் பொருளும், பகை என்றதனால் – பகை தொடர்பொருளும், நேர்ச்சி என்றதனால் – நட்புத் தொடர்பொருளும், தகுதி என்றதனால் – தகுதியுடைப் பொருளும், 'அது வாத' லென்றனால் –முதற்காரண காரியப்பொருளும், பொருட்டென்றதனால் – நிமித்த காரண காரியப் பொருளும், முறை என்றதனால், முறைக்கியை பொருளும் இவ்வுருபின் பொருள்களாம் என்க.

உதாரணம்

| | |
|---|---|
| இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான் | – கொள்ளுதற்பொருள் |
| பாம்புக்குப் பகைகருடன் | – பகைதொடர்பொருள். |
| இராமனுக்கு நண்பன் குஹன் | – நட்புத்தொடர்பொருள் |
| அரசர்க்கு இவ்வாபரணம் உரியது | – தகுதியுடையபொருள். |
| குண்டலத்திற்குப் பொன் | –முதற்காரணகாரியப்பொருள். |
| கூலிக்கு வேலைசெய்தான் | –நிமித்தகாரணகாரியப்பொருள். |
| அரசனுக்கு மகன் இவன் | – முறைக்கு இயைபொருள். |

இவற்றுள் முதற்காரண காரியப்பொருளாவது – முதற் காரணத்தாலாகும் பொருள் ; 'குண்லத்திற்குப் பொன்' என்றதில் – பொன்னாகிய முதற்காரணத்தால் குண்டலமாகிய காரியம் உண்டாயிற்று. நிமித்த காரணகாரியப் பொருளாவது – நிமித்த காரணத்தாலாகும்பொருள்: கூலிக்கு வேலை' என்றதில் – வேலை ஆகிய நிமித்தகாரணத்தல் கூலியாகிய காரியம் உண்டாயிற்று. 'ஆதி' என்றதனால், 'மயிலைக்கு வடக்குச் சென்னை; 'இராமனுக்குச் சிறந்தவன் கிருஷ்ணன்' என எல்லைப்பொருளில் வருதலுங் கொள்க. இன்னும் 'ஆதி' என்றதனால் 'மழைக்கு மின்னல்' என உற்பாதத்தால் குறிக்கப்படுவதும், 'அவனுக்கு இது போதும்' எனக் குறைவில்லாமையைக் கொள்வதும் பிறவுங் கொள்க.

பொருட்டுப் பொருளில் இவ்வுருபு நிற்றற்கு உரிய சில இடங்களில் 'பொருட்டு', 'நிமித்தம்' என்பவையும்; இவ்வுருபின் மேல் 'ஆக' என்பதும் சொல்லுருபுகளாகவரும். உ–ம் : 'கூழின்பொருட்டு வேலை செய்தான்', 'கூலியினிமித்தம் வேலைசெய்தான்', 'கூலிக்காக வேலைசெய்தான்'.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: நான்காவதற்கு உருபு குவ்வே ஆகும்** – நான்காம் வேற்றுமைக்குருபு முன் சொல்லப்பட்ட குவ் வொன்றுமேயாம், **பொருள்**–அவ் வுருபின் பொருள்களாவன, **கொடை**–கொடையும், **பகை**–பகையும், **நேர்ச்சி**–நட்பும், **தகவு**–தகுதியும், **அது ஆதல்** – முதற்காரணமும், **பொருட்டு**–நிமித்த காரணமும், **முறை ஆதியின்**–முறையும் முதலான பொருட்சொற்களின்

புணர்ச்சியில், **இதற்கு இது எனல்**–இதற்கு இதுவென்பதுபட வருவனவாகிய அவ் வுருபேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட பலவுமாம், **எ–று.**

கொடையெனவே கோடற்பொருளும், பகை நேர்ச்சி யெனவே பகைதொடர் பொருளும் நட்புத்தொடர்பொருளும், தகுதியெனவே தகுதியுடைப் பொருளும், அதுவாதலெனவே முதற்காரண காரியப்பொருளும், பொருட்டெனவே நிமித்த காரணகாரியப்பொருளும், முறை யெனவே முறைக்கியைபொருளும், குவ் வுருபின் பொருள்களாமென்பது பெற்றாம்.

**உ–ம்.:**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான். . . . கோடற்பொருள்.

பாம்புக்குப் பகை கருடன். . . . . . . . . . . . . . . பகைதொடர்பொருள்.

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன். . . . நட்புத்தொடர்பொருள்.

அரசர்க்குரித் தருங்கலம். . . . . . . . . . . . . . . .தகுதியுடைப்பொருள்.

குண்டலத்திற்குப் பொன். . . . . . .. முதற்காரண காரியப் பொருள்.

கூலிக்குவேலை செய்தான். . . . .நிமித்தகாரண காரியப் பொருள்.

சாத்தனுக்கு மகன் கொற்றான் . . . . . முறைக்கியைபொருள்.

கோடற்பொருளாவது கொடுத்தற்றொழிலின் செயப்படு பொருளைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாம். கோடற்பொருள், கோளிப்பொருள் என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ–ம்.:–**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான் என்புழிக் கொடுத்தலின் செயப்படுபொருள் பொன்; அதனைத் தனக்குரிய தாக்கிக் கொள்ளுதலையுடைய பொருள் இரவலராதலால், இரவலர் கோடற்பொருள்.

இன்னும், மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்புழி, அறிவாகிய செயப்படுபொருள் கொடுப்போன் பொருளாய்க் கொள்வோனிடத்துச் செல்லாது ஆண்டுத் தோன்றினும் அதனைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலால், மாணாக்கன் கோடற்பொருள். அன்றியும், மாணாக்கனுக்கு நூற்பொரு ளுரைத்தான் என்புழிச் சொல்லுதலின் செயப்படுபொருளாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய மாணாக்கனுங் கோடற்பொருளேயாம். இன்னும், அவர் கொடுத்தற்குடம் பட்டார் என உடம்படுதற்கு விடயமான பொருளும் ஒரு கோடற்பொருளாகவே வரும்.

கோடல் பலவகைப்படும்; அவை; கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந் தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் முதலியன.

உ–ம்.:–

ஆவிற்கு நீர் விட்டான் என்பது கேளாதேற்றல். வறியார்க்கீந்தான் என்பது கேட்டேயேற்றல். மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்பது ஏலாதேற்றல். தனக்குச் சோறிட்டான் என்பது ஈவோனேற்றல். அரனுக்குக் கண்ணலர் கொடுத்தானரி என்பது உயர்ந்தோனேற்றல். அரிக்குச் சக்கரங் கொடுத்தானரன் என்பது இழிந்தோனேற்றல். சோழனுக்கு விருந்திட்டான் சேரன் என்பது ஒப்போனேற்றல். சோற்றிற்கு நெய்விட்டான் என்பது உணர்வின்றேற்றல். மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தா னாசிரியன் என்பது விருப்பாயேற்றல். கள்ளனுக்குக் கசையடி கொடுத்தானரசன் என்பது வெறுப்பாயேற்றல். (கசை– குதிரைச் சம்மட்டி.)

கொடுத்தலும் பலவகைப்படும்; அவை; வழக்கத்திற் கொடுத்தல், உரிமையிற் கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல், பாவனையிற் கொடுத்தல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல், அவலத்திற் கொடுத்தல் முதலியன.

உ–ம்.:–

மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத்திற் கொடுத்தல். மகனுக் கரசுகொடுத்தான் என்பது உரிமையிற் கொடுத்தல். அரசற்குத் திறை கொடுத்தான் என்பது அச்சத்திற் கொடுத்தல். தந்தைதாய்குத் திதிகொடுத்தான் என்பது பாவனையிற் கொடுத்தல். அவனுக்குப் பரிசுகொடுத்தான் என்பது உவகையிற் கொடுத்தல். அவனுக்குத் தண்டனை கொடுத்தான் என்பது வெகுளியிற் கொடுத்தல். வாய்க்கரிசியிட்டான் என்பது அவலத்திற் கொடுத்தல்.

பகை தொடர் பொருளாவது ஒரு பொருளினிடத்துள்ள பகை தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

உ–ம்.:–

பாம்புக்குப் பகை கருடன் என்புழிக், கருடனிடத்துள்ள பகை தொடர்தற்கு இடம் பாம்பாதலாற் பாம்பு பகை தொடர்பொருள்.

நட்புத்தொடர்பொருளாவது ஒருபொருளினிடத்துள்ள நட்புத்தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

உ–ம்.:–

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன் என்புழிக் கொற்றனிடத் துள்ள நட்புத் தொடர்தற்கு இடம் சாத்தனாதலாற் சாத்தன் நட்புத்தொடர்பொருள்.

வைவின்றீமை தொடர்பொருளும் வாழ்த்தினன்மைதொடர

பொருளும் பகைநேர்ச்சிகளில் அடங்குமெனக் கொள்க. அவை: தீயோர்க்குக் கேடுண்டாகுக, நல்லோர்க்குச் செல்வ முண்டாகுக என வரும்.

தகுதியுடைப்பொருளாவது தன்னோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருளையுடைய பொருளாம்.

**உ–ம்.:–**

அரசர்க் குரித்தருங்கலம் என்புழி, அரசரோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருள் அருங்கலம்; அப் பொருளை யுடைய பொருள் அரசராதலால் அரசர் தகுதியுடைப்பொருள்.

முதற் காரண காரியப் பொருளாவது முதற்காரணத்தா லாகும் பொருளாம்.

**உ–ம்.:–**

குண்டலத்திற்குப் பொன் என்புழிப், பொன் முதற்காரணம்; அதனாலாகிய காரியங் குண்டலமாதலாற் குண்டலம் முதற் காரணகாரியப் பொருள்.

நிமித்த காரண காரியப்பொருளாவது நிமித்த காரணத்தால் ஆகும் பொருளாம்.

**உ–ம்.:–**

கூலிக்கு வேலை செய்தான் என்புழி, வேலை நிமித்தகாரணம்; அதனாலாகிய காரியம் கூலியாதலாற் கூலி நிமித்த காரண காரியப்பொருள்.

முறைக்கியை பொருளாவது பிறப்பினால் ஒருபொருளின் முறைக்குத் தான் இயைந்து நிற்கும் பொருளாம்.

**உ–ம்.:–**

சாத்தனுக்கு மகன் கொற்றன் என்புழிக், கொற்றனிடத்துள்ள மகனென்னு முறைக்குத் தானியைந்து நிற்கும் பொருள் சாத்தனாதலாற் சாத்தான் முறைக்கியை பொருள்.

**'ஆதி'** என்றதனால், மழைக்கு மின்னல் என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், அவனுக்கிதுபோதும் எனக் குறைவின்மையைக் கொள்வதும், பிறவுங் கொள்க. (உற்பாதம் – மேல்விளையு நன்மை தீமையை யறிவிக்குங் குறி.)

குவ் வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே, பொருட்டு நிமித்தம் என்பனவும், குவ் வுருபின்மேல் ஆக வென்பதும் சொல்லுருபுகளாக வரும்.

**உ–ம்.:–**

கூழின்பொருட்டு வேலைசெய்தான்; கூலியினிமித்தம் வேலை செய்தான்; கூலிக்காக வேலை செய்தான் என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். நான்காவதற்கு உருபு குவ்வே ஆகும்** – நான்காம் வேற்றுமைக் குருபு முன் சொல்லப்பட்ட குவ்வொன்றுமேயாம், **பொருள்** – அவ்வுருபின் பொருள்களாவன, **கொடை** – கொடையும், **பகை** – பகையும், **நேர்ச்சி**– நட்பும், **தகவு** – தகுதியும், – **அது ஆதல்** – முதற்காரணமும், **பொருட்டு** – நிமித்தகாரணமும், **முறை ஆதியின்** – முறையும் முதலான பொருட் சொற்களின் புணர்ச்சியில், **இதற்கு இது எனல்** – இதற்கு இதுவென்பது படவருவனவாகிய அவ்வுருபேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட பலவுமாம்.

கொடையெனவே கோடற்பொருளும், பகை நேர்ச்சியெனவே பகை தொடர்பொருளும் நட்புத் தொடர்பொருளும், தகுதியெனவே தகுதியுடைப் பொருளும், அதுவாதலெனவே முதற்காரண காரியப் பொருளும், பொருட்டெனவே நிமித்தகாரண காரியப் பொருளும், முறையெனவே முறைக்கியை பொருளும் குவ்வுருபின் பொருள்களாமென்பது பெற்றாம்.

**(உதாரணம்)**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான் ................ கோடற்பொருள்.

பாம்புக்குப்பகை கருடன் .................. பகை தொடர் பொருள்

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன் ...................... நட்புத் தொடர் பொருள்

அரசர்க் குரித் தருங்கலம் ......................... தகுதியுடைப்பொருள்

குண்டலத்திற்குப் பொன் ........................... முதற்காரணகாரியப் பொருள்.

கூலிக்கு வேலை செய்தான் ............ நிமித்தகாரணகாரியப் பொருள்.

சாத்தனுக்கு மகன் கொற்றன் ................... முறைக்கியைபொருள்.

கோடற்பொருளாவது கொடுத்தற்றொழிலின் செயப்படு பொருளைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாம், கோடற்பொருள் கோளிப் பொருள் என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ–ம்:–**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான் என்புழிக், கொடுத்தலின் செயப்படுபொருள் பொன்; அதனைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருள் இரவலராதலால், இரவலர் கோடற்பொருள்.

இன்னும், மாணாக்னுக்கறிவு கொடுத்தான். என்புழி அறிவாகிய செயப்படுபொருள் கொடுப்போன் பொருளாய்க் கொள் வோனிடத்துச் சொல்லாது ஆண்டுத் தோன்றினும்

அதனைத் தனக்குரிய தாக்கிக் கொள்ளுதலால், மாணாக்கன் கோடற்பொருள். அன்றியும், மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான் என்புழிச், சொல்லுதலின் செயப்படுபொருளாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய மாணாக்கனுங் கோடற்பொருளேயாம். இன்னும், அவர் கொடுத்தற்குடம்பட்டார் என உடம்படுதற்கு விடயமான பொருளும் ஒரு கோடற்பொருளாகவே வரும்.

கோடல் பலவகைப்படும். அவை; கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் முதலியன.

**உ–ம்.:–**

ஆவிற்கு நீர்விட்டான் என்பது கேளாதேற்றல், வறியார்க்கீந்தான் என்பது கேட்டேயேற்றல், மாணாக்கனுக்கறிவுகொடுத்தான் என்பது ஏலாதேற்றல், தனக்குச் சோறிட்டான் என்பது ஈவோனேற்றல், அரனுக்குக் கண்ணலர் கொடுத்தானரி என்பது உயர்ந்தோனேற்றல், அரிக்குச் சக்கரங் கொடுத்தானரன் என்பது இழிந்தோனேற்றல், சோழனுக்கு விருந்திட்டான் சேரன் என்பது ஒப்போனேற்றல். சோற்றிற்கு நெய்விட்டான் என்பது உணர்வின்றேற்றல். மாணாக்கனுக்குக் கசையடி கொடுத்தா னாசிரியன் என்பது விருப்பாயேற்றல். கள்ளுனுக்குந் கசையடி கொடுத்தா னரசன் என்பது வெறுப்பாயேற்றல் (கசை – குதிரைச் சம்மட்டி)

கொடுத்தலும் பலவகைப்படும். அவை; வழக்கத்திற்கொடுத்தல், உரிமையிற்கொடுத்தல், அச்சத்திற்கொடுத்தல், பாவனையிற்கொடுத்தல், உவகையிற்கொடுத்தல், வெகுளியிற்கொடுத்தல், அவலத்திற்கொடுத்தல் முதலியன.

**உ–ம்.:–**

மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத்திற்கொடுத்தல், மகனுக்கரசு கொடுத்தான் என்பது உரிமையிற் கொடுத்தல், அரசற்குத் திறைகொடுத்தான் என்பது அச்சத்திற்கொடுத்தல். தந்தை தாய்க்குத் திதிகொடுத்தான் என்பது பாவனையிற்கொடுத்தல், அவனுக்குப் பரிசு கொடுத்தான் என்பது உவகையிற் கொடுத்தல். அவனுக்குத் தண்டனை கொடுத்தான் என்பது வெகுளியிற் கொடுத்தல். வாய்க்கரிசி யிட்டான் என்பது அவலத்திற்கொடுத்தல்.

பகை தொடர்பொருளாவது ஒரு பொருளினிடத்துள்ள பகை தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

**உ–ம்.:–**

பாம்புக்குப் பகை சுருடன் என்புழிக், சுருடனித்துள்ள பகை

தொடர்தற்கு இடம் பாம்பாதலாற் பாம்பு பகை தொடர்பொருள்.

நட்புத் தொடர் பொருளாவது ஒரு பொருளினிடத்துள்ள நட்புத் தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

உ–ம் சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன் என்புழிக், கொற்றனிடத்துள்ளன தொடர்தற்கு இடஞ் சாத்தனாதலாற் சாத்தன் நட்புத் தொடர் பொருள்.

வைவின்றீமை தொடர்பொருளும் வாழ்த்தினன்மைதொடர் பொருளும் பகைநேர்ச்சிகளில் அடங்குமெனக் கொள்க. அவை: தீயோர்க்கும் கேடுண்டாகுக; நல்லோர்க்குச் செல்வமுண்டாகுக என வரும்.

தகுதியுடையப் பொருளாவது தன்னோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருளையுடைய பொருளாம்.

**உ–ம்.:–**

அரசர்குரித் தருங்கலம் என்புழி, அரசரோடு பொருந்துதற்குத் தகுதியாகியபொருள் அருங்கலம்; அப்பொருளையுடைய பொருள் அரசராதலால் அரசர் தகுதியுடைப் பொருள்.

முதற்காரணகாரியப் பொருளாவது முதற்காரணத்தா லாகும் பொருளாம்.

**உ–ம்.:–**

குண்டலத்திற்குப் பொன் என்புழிப் பொன் முதற்காரணம், அதனாலாகிய காரியங் குண்டலமாதலாற் குண்டலம் முதற்காரணகாரியப் பொருள்.

நிமித்தகாரண காரியப் பொருளாவது நிமித்தகாரணத் தாலாகும் பொருளாம்.

**உ–ம்.:–**

கூலிக்கு வேலைசெய்தான் என்புழி வேலை நிமித்தகாரணம்; அதனாலாகிய காரியங் கூலியாதலாற் கூலி நிமித்தகாரண காரியப் பொருள்.

முறைக்கியை பொருளாவது பிறப்பினால் ஒருபொருளின் முறைக்குத் தான் இயைந்து நிற்கும் பொருளாம்.

**உ–ம்.:–**

சாத்தனுக்கு மகன் கொற்றன் என்புழிக் கொற்றனிடத்துள்ள மகனென்னு முறைக்குத் தான் இயைந்துநிற்கும் பொருள் சாத்தனாதலாற் சாத்தன் முறைக்கியை பொருள்.

ஆதி என்றதானல், மழைக்கு மின்னல் என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், அவனுக்கிது போதும் எனக் குறைவின்மையைக் கொள்வதும், பிறவுங் கொள்க (உற்பாதம் – மேல்விளையுநன்மை தீமையை யறிவிக்குங்குறி).

குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே, பொருட்டு, நிமித்தம் என்பனவும், குவ்வுருபின்மேல் ஆகவென்பதும் சொல்லுருபு காளக வரும்.

**உ–ம்.:–**

கூழின் பொருட்டு வேலைசெய்தான்; கூலியினிமித்தம் வேலைசெய்தான்; கூலிக்காக வேலை செய்தான் எனவரும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: நான்காவதற்கு** – நான்காம் வேற்றுமைக்கு, **உருபு** – உருபாவது, **குவ்வே ஆகும்** – (முன்சொல்லப்பட்ட)கு ஒன்றுமேயாம்; **பொருள்** – அதன் பொருள்களாவன: **கொடை** – கொடுத்தலும், **பகை** – பகையும், **நேர்ச்சி** – நட்பும், **தகவு** – தகுதியும், **அது ஆதல்** – அதுவாதலும், **பொருட்டு** – பொருட்டும், **முறை** – உறவுமுறையும், **ஆதியின்** – முதலான பொருளில், **இதற்கு இது எனல்** – இதற்கு இது வென்பது பட வருதலாம்; **எ–று.** 'இதற்கிதெனல் பொருள்' என்றதனால், நான்காம் வேற்றுமயின் பொருள் ஏற்றுக்கொள்ளுதற் பொருளென்றதாயிற்று.

கொடை யெனவே கொள்ளுதற் பொருளும், பகையெனவே பகைதொடர்பொருளும், நேர்ச்சியெனவே நட்புத் தொடர்பொருளும், தகுதி யெனவே தகுதியுடைப்பொருளும், அதுவாத லெனவே முதற்காரண காரியப்பொருளும், பொருட்டு எனவே நிமித்தகாரண காரியப்பொருளும், முறையெனவே முறைக்கு இயைபொருளும் குவ்வுருபின் பொருள்களா மென்க.

**உ–ம்.:**

யாசகர்க்குப் பொன்னைக் கொடுத்தான் – கொள்ளுதற்பொருள்.

பாம்புக்குப் பகை கருடன் – பகைதொடர்பொருள்.

சாத்தனுக்கு நண்பன் கொற்றன் – நட்புத்தொடர்பொருள்.

அரசர்க்கு இவ்வாபரணம் உரியது – தகுதியுடைப்பொருள்.

குண்டலத்திற்குப் பொன் – முதற்காரணகாரியப்பொருள்.

கூலிக்கு வேலை செய்தான் – நிமித்த காரண காரியப்பொருள்

பொன்னனுக்கு மகன் இவன் – முறைக்கு இயைபொருள்.

'**ஆதி**' என்றதனால், மயிலைக்கு வடக்குத் திருவல்லிக்கேணி, சாத்தனுக்குச் சிறந்தவன் கொற்றன் என எல்லைப்பொருளில் வருதலும், பிறவும் கொள்க.

பொருட்டுப்பொருளில் குவ் வுருபு நிற்றற்கு உரிய சில இடங்களில் பொருட்டு, நிமித்தம் என்பவையும், குவ் வுருபின் மேல் ஆக என்பதும் சொல்லுருபுகளாக வரும்.

**உ–ம்.:**

கூலியின்பொருட்டு வேலைசெய்தான், கூலியினிமித்தம் வேலை செய்தான், கூலிக்காக வேலைசெய்தான்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** நான்காவதற்கு உருபு குவ்வே ஆகும் – நான்காம்வேற்றுமைக் குருபு முன் சொல்லப்பட்ட குவ்வொன்றுமேயாம். பொருள்–அவ்வுருபின் பொருள்களாவன, கொடை–கொடையும், பகை–பகையும், நேர்ச்சி–நட்பும், தகவு–தகுதியும், அது ஆதல்–முதற்காரணமும், பொருட்டு–நிமித்தகாரணமும், முறை–முறையும், ஆதியின்–முதலான (பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சியில்), இதற்கு இது எனல்–இதற்கு இதுவென்பது பட அவ்வுருபேற்ற பெயர்ப்பொருளை வேறுபடுத்துவதாம். **எ–று.**

'கொடை'யெனவே (1) கோடற்பொருளும், 'பகை நேர்ச்சி' யெனவே (2) பகைதொடர்பொருளும் (3) நட்புத்தொடர் பொருளும், 'தகுதி'யெனவே (4) தகுதியுடைப்பொருளும், 'அதுவாத'லெனவே (5) முதற்காரணகாரியப்பொருளும், 'பொருட்' டெனவே (6) நிமித்தகாரணகாரியப்பொருளும், 'முறை' யெனவே (7) முறைக்கியைபொருளும், நான்காம் வேற்றுமைக்குரிய குவ்வுருபின் பொருள்களாம்.

உ–ம்.:–

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான்.... கோடற்பொருள்.

பாம்புக்குப் பகை கருடன்........பகைதொடர்பொருள்.

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன்........நட்புத்தொடர்பொருள்.

அரசர்க் குரித் தருங்கலம்........தகுதியுடைப்பொருள்.

குண்டலத்திற்குப் பொன்........முதற்காரண காரியப்பொருள்.

கூலிக்கு வேலை செய்தான்........நிமித்தகாரண காரியப்பொருள்.

சாத்தனுக்கு மகன் கொற்றன்........முறைக்கியைபொருள்.

(1)கோடற்பொருளாவது கொடுக்கப்படுவதைக் கொள்ளுதலை யுடைய பொருளாம். கோடற்பொருள் கோளிப்பொருள் என்பன ஒருபொருட்சொற்கள்.

உ–ம்.:–

'இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான்' என்புழிக் கொடுக்கப்படுவதாகிய பொன்னைக் கொள்ளுதலையுடைய பொருள் இரவலாதலால் 'இரவலர்' கோடற்பொருள்.

இன்னும், 'மாணாக்கனுக் கறிவு கொடுத்தான்' என்புழிக், கொடுக்கப்படுவதாகிய அறிவு கொடுப்போன் பொருளாய்க் கொள்வோனிடத்துச் செல்லாது ஆண்டுத் தோன்றினும்

அதனைத் தனக்குரியதாக்கிக்கொள்ளுதலால், 'மாணாக்கன்' கோடற்பொருள். அன்றியும், 'மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான்' என்புழிச், சொல்லப்படுவதாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய 'மாணாக்க'னுங் கோடற்பொருளேயாம். இன்னும், 'அவர் கொடுத்தற் குடம்பட்டார்' என உடம்படுதற்கு விடயமான 'கொடுத்தல்' என்னும் பொருளும் ஒரு கோடற்பொருளாகவே வரும்.

கோடல் பலவகைப்படும், அவை : கேளாதேற்றல், கேட்டேயேற்றல், ஏலாதேற்றல், ஈவோனேற்றல், உயர்ந்தோனேற்றல், இழிந்தோனேற்றல், ஒப்போனேற்றல், உணர்வின்றேற்றல், விருப்பாயேற்றல், வெறுப்பாயேற்றல் முதலியன.

உ–ம்.:–

ஆவிற்கு நீர் விட்டான் என்பது கேளாதேற்றல். வறியார்க் கீந்தான் என்பது கேட்டேயேற்றல். மாணாக்கனுக்கறிவு கொடுத்தான் என்பது ஏராதேற்றல் (கொள்ளாமற் கொள்ளுதல்). தனக்குச் சோறிட்டான் என்பது ஈவோனேற்றல். அரசனுக்குக் கனகமாலை கொடுத்தான் அமைச்சன் என்பது உயர்ந்தோனேற்றல். அமைச்சனுக்குச் சண்பகமாலை கொடுத்தா னரசன் என்பது இழிந்தோனேற்றல். சோழனுக்கு விருந்திட்டான் சேரன் என்பது ஒப்போனேற்றல். சோற்றிற்கு நெய் விட்டான் என்பது உணர்வின்றேற்றல். மாணாக்கனுக்குக் கசையடிகொடுத்தானாசிரியன் என்பது விருப்பாயேற்றல். கள்ளனுக்குச் கசையடி கொடுத்தா னரசன் என்பது வெறுப்பாயேற்றல். (கசை – குதிரைச்சம் மட்டி.)

கொடுத்தலும் பலவகைப்படும்; அவை : வழக்கத்திற் கொடுத்தல், உரிமையிற் கொடுத்தல், அச்சத்திற் கொடுத்தல், பாவனையிற் கொடுதததல், உவகையிற் கொடுத்தல், வெகுளியிற் கொடுத்தல், அவலத்திற் கொடுத்தல் முதலியன.

உ–ம்.:–

மருமகனுக்கு மகளைக் கொடுத்தான் என்பது வழக்கத்திற் கொடுத்தல்.

மகனுக் கருசுகொடுத்தான் என்பது உரிமையிற் கொடுத்தல். அரசற்குத் திறை கொடுத்தான் என்பது அச்சத்திற் கொடுத்தல். தந்தை தாய்க்குத் திரி கொடுத்தான் என்பது பாவனையிற் கொடுத்தல். அவனுக்குப் பரிசு கொடுத்தான் என்பது உவகையிற் கொடுத்தல். அவனுக்குத் தண்டனை கொடுததான் என்பது வெகுளியிற் கொடுத்தல். வாய்க்கரிசி யிட்டான் என்பது அவலத்திற் கொடுத்தல்.

(2) பகைதொடர் பொருளாவது ஒரு பொருளினிடத்துள்ள பகை தொடர்தற்கு இடமாகிய பொருள்.

உ–ம்.:–

'பாம்புக்குப் பகை கருடன்' என்புழிக், கருடனிடத்துள்ள பகை தொடர்தற்கு இடம் பாம்பாதலால் 'பாம்பு' பகைதொடர்பொருள்.

(3) நட்புத்தொடர் பொருளாவது ஒருபொருளினிடத்துள்ள நட்புத் தொடர்தற்கு இடமாகிய பொருள்.

உ–ம். 'சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன்' என்புழிக், கொற்றனிடத்துள்ள நட்புத் தொடர்தற்கு இடஞ் சாத்தனாதலால் 'சாத்தன்' நட்புத் தொடர்பொருள்.

வசையின்தீமை தொடர்பொருளும் வாழ்த்தின் நன்மை தொடர் பொருளும் பகைநேர்ச்சிகளில் அடங்குமெனக் கொள்க. அவை : 'தீயோர்க்குக் கேடுண்டாகுக,' 'நல்லோர்க்குச் செல்வ முண்டாகுக' என வரும்.

(4) தகுதியுடைப்பொருளாவது தன்னோடு பொருந்துதற்குச் தகுதியாகிய பொருளையுடைய பொருள்.

உ–ம். 'அரசர்க் குரித் தருங்கலம்' என்புழி, அரசரோடு பொருந்துதற்குத் தகுதியாகிய பொருள் அருங்கலம்; அப்பொருளையுடைய பொருள் அரசராதலால் அரசர் குதியுடைப்பொருள்.

(5) முதற்காரணகாரியப் பொருளாவது முதற்காரணத்தாலாகும் பொருளாகும்.

உ–ம்.:–

'குண்டலத்திற்குப் பொன்' என்புழிப் பொன் முதற்காரணம்; அதனாலாகிய காரியங் குண்டலமாதலாற் 'குண்டலம்' முதற்காரண காரியப்பொருள்.

(6) நிமித்தகாரணகாரியப் பொருளாவது நிமித்தகாரணத்தால் ஆகும் பொருளாம்.

உ–ம்.:–

'கூலிக்கு வேலை செய்தான்' என்புழி வேலை நிமித்தகாரணம்; அதனாலாகிய காரியங் கூலியாதலாற் 'கூலி' நிமித்தகாரணகாரியப்பொருள்.

(7) முறைக்கியை பொருளாவது பிறப்பினால் ஒருபொருளின் முறைக்குத் தான் இயைந்துநிற்கும் பொருளாம்.

உ–ம். 'சாத்தனுக்கு மகன் கொற்றன்' என்புழிக், கொற்றனிடத்துள்ள மகனென்னும் முறைக்குத் தானியைந்து நிற்கும் பொருள் சாத்தனாதலால் 'சாத்தன்' முறைக்கியை பொருள்.

'அதி' என்றதனால், 'மழைக்கு மின்னல்' என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், 'அவனுக் கிது போதும்' எனக்

குறைவின்மையைக் கொள்வதும், பிறவுங் கொள்க. (உற்பாதம்–மேல்விளையும் நன்மை தீமையை யறிவிக்குங் குறி.)

குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே, பொருட்டு நிமித்தம் என்பனவும், குவ்வுருபின்மேல் ஆக வென்பதுவும் சொல்லுருபுகளாக வரும்.

உ–ம். கூழின்பொருட்டு வேலை செய்தான்; கூலியினிமித்தர் வேலைசெய்தான்; கூலிக்காக வேலை செய்தான்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) நான்காவது உருபு– நான்காம் வேற்றுமைக்கு உருபாவது, குவ்வே ஆகும்– (முன் சொல்லப்பட்ட) குவ்வொன் றுமேயாகும்; பொருள்– (அவ்வுருபின்) பொருளாவன, கொடை– பொடையும், பகை– பகையும், நேர்ச்சி– நட்பும், தகவு– தகுதியும், அது ஆதல்– முதற்காரணமும், பொருட்டு– நிமித்தகாரணமும், முறை– முறையும், ஆதியின்– பொருட் சொற்களின் புணர்ச்சியில், இதற்கு இது எனல்– இதற்கு இது என்கிறதுபட வருகின்றவையாகிய அவ்வுருபேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட பலவாம். (எ–று)

(பொ–ரை.) நான்காம் வேற்றுமை உருபு கு என்பதே. அதன் பொருளாவது: கொடையும், பகையும், நேர்ச்சியும் தகவும், அதுவாதலும், பொருட்டும், முறையும் முதலான பொருள் தோன்றப் புணரும் புணர்ச்சிக்கண் இதற்கிதென அங்ஙனம் வருதற்குரிய எப்பொருளினையும் ஏற்றுக்கொள்ளும் பொருளாகத் தன்னை ஏற்ற பெயர்ப் பொருளை வேற்றுமைசெய்தலாம்.

கொடையெனவே கோடற்பொருளும், பகை யெனவே பகைதொடர் பொருளும், நேர்ச்சியெனவே நட்புத்தொடர் பொருளும், தகுதியெனவே தகுதியுடைப் பொருளும், அதுவாத லெனவே முதற் காரணகாரியப் பொருளும், பொருட்டெனவே நிமித்தகாரண காரியப் பொருளும், முறையெனவே முறைக்கியை பொருளும், குவ் வுருபிம்பொருள்களா மென்பது பெற்றாம்.

(உ–ம்.)

இரவலர்க்குப்பொன்னைக் கொடுத்தான். – கோடற் பொருள்.

பாம்புக்குப் பகை கருடன். பகைதொடர் பொருள்.

சாத்தனுக்கு நட்பாளன் நட்புத்தொடர் கொற்றான். பொருள்.

அருங்கலம் அரசர்க்குரித்து. தகுதியுடைப்பொருள்.

குண்டலத்திற்குப் பொன். முதற்காரணகாரியப் பொருள்.

கூலிக்கு வேலைசெய்தான். நிமித்தகாரணகாரியப் பொருள்.

சாத்தனுக்கு மகன் இவன் முறைக்கியை பொருள்.

கோடற்பொருளாவது கொடுத்தற்றொழிலின் செயப்படு பொருளைத் தனக் குரிய தாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாம்.

(உ–ம்.) இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான்.– இங்கு, கொடுத்தலின் செயப்படுபொருள் பொன்னும், அதனைத் தனக்குரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருள் இரவரராதலால், இரவலர் கோடற்பொருளாகும்.

மாணாக்கனுக் கறிவைக் கொடுத்தான்.– இங்கு, அறிவாகிய செயப்படுபொருள், கொடுப்போன் பொருளாய்க் கொள்வோனிடத்துச் செல்லாது ஆண்டுத்தோன்றினும் அதனைத் தனக்குரிய தாக்கிக்கொள்ளுதலால், மாணாக்கன் போடற்பொருளேயாம். அன்றியும், 'மாணாக்கனுக்கு நூற்பொருளுரைத்தான்' என்புழி, சொல்லுதலின் செயப்படுபொருளாகிய நூற்பொருறுரைத்தான்' என்புழி, சொல்லுதலின் செயப்படுபொருளாகிய நூற்பொருளை அறிதலையுடைய பொருளாகிய மாணாக்கனும் கோடற் பொருளேயாம். இன்னும், 'அவர் கொடுத்தற் குடன்பட்டார்' என உடம்படுதற்கு விடயமான பொருளும் ஒருவகைக் கோடற் பொருளேயாம்.

கோடல் பலவகைப்படும்:–

1. ஆவிற்கு நீர்விட்டான்.கேளாதேற்றல்.

2. வறியவர்க் கீந்தான். கேட்டே யேற்றல்.

3. மாணக்கனுக் கறிவுகொடுத்தான் ஏலா தேற்றல்.

4. தனக்குச் சோறிட்டான். ஈவோ னேற்றல்.

5. அரனுக்குக் கண்ணலர் கொடுத்தான்–உயர்ந்தோ னேற்றல். அரி.

6. அரிக்குச் சக்கரங் கொடுத்தான் அரன். இழிந்தோ னேற்றல்.

7. சோழனுக்கு விருந்திட்டான் சேரன். ஒப்போ னேற்றல்.

8. சோற்றிற்கு நெய்விட்டான். உணர்வின்றி யேற்றல்.

9. மாணாக்கனுக்குத் தசையடி கொடுத்தான் ஆசிரியன். விருப்பா யேற்றல்

10. கள்ளனுக்குக் கசையடிகொடுத்தான் அரசன். வெறுப்பா யேற்றல்

கொடுத்தலும் பலவகைப்படும் :-

1. மருமகனுக்கு மகளைக் கொடுத்தான். –வழக்கத்திற் கொடுத்தல்.

2. மகனுக்குக் காசு கொடுத்தான். –உரிமையிற் கொடுத்தல்.

3. அரசனுக்குத் திறை கொடுத்தான். –அச்சத்திற் கொடுத்தல்.

4. தந்தை தாய்க்குத் திதிகொடுத்தான். – பாவனையிற் கொடுத்தல்.

5. அவனுக்குப் பரிசு கொடுத்தான். – உவமையிற் கொடுத்தல்.

6. அவனுக்குத் தண்டனை கொடுத்தான். – வெகுளியிற் கொடுத்தல்.

7. வாய்க்கரிசி கொடுத்தான். –அவலத்திற் கொடுத்தல்.

பகைதொடர் பொருளாவது ஒரு பொருளிளத்துள்ளபகை, தொடர்தற்கு இடமாகிய பொருளாம். இப்படியே ஒரு பொருளிடத்துள்ள நட்பு, தொடர்தற்கு இடமாகிய பொருள் நட்பித் தொடர்பொருளாம்.

'பாம்புக்குப் பகை கருடன்'– பகை தொடர் பொருளாம்.

'சாத்தனுக்கு நட்பாளன் பொற்றன்'– நட்புத் தொடர் பொருளாம்.

கருடனிடத்துள்ளபகை தொடர்தற்குப் பாம்பும், கொற்றனிடத்துள்ள நட்புத் தொடர்தற்குச் சாத்தனும் இடமாதலறிக.

'அவனுக்குத் தீயவன் இவன்,' 'அவனுக்கு நல்லவன் இவன்,' என்கிறவைகளும் அவை போல்வனவாம். அன்றியும், வைவில் தீமை தொடர்பொருளும், வாழ்த்தில் நன்மை தொடர்பொருளும், பகைநேர்ச்சிகளில் அடங்குமெனக்கொள்க. அவை, 'தீயோர்க்குக் கேடுண்டாகுக,' 'நல்லோர்க்குச் செல்வ முண்டாகுக' எனவரும்.

தகுதியுடைப் பொருளாவது ஒரு பொருளோடு பொருந்துதற்குத் தகுதியையுடைய பொருளாம்.

'அருங்கலம் அரசர்குரித்து' என்கிற இடத்து, அருங்கலமானது அரசரோடு பொருந்துதற்குத் தகுதியையுடைய பொருளாதல் காண்க.

(அருங்கலம்– கிரீடம் முதலியன.)

முதற்காரண காரியப் பொருளாவது முதற்காரணத்தாலாகும் பொருளாம். நிமித்தகாரண காரியப் பொருளாவது நிமித்தகாரணத்தாலாகும் பொருளாம்.

'குண்டலத்திற்கு வைத்த பொன்' என்கிறவிடத்துப் பொன்னாகிய முதற்காரணத்தால், 'குண்டலமாகிய காரியமும், கூலிக்கு வேலை' என்கிறவிடத்து வேலையாகிய

நிமித்தகாரணத்தால், கூலியாகிய தானியைந்து நிற்கும் பொரளாம்.

(உ–ம்) 'சாத்தனாக்கு மகன் இவன்' என்கிறவிடத்து மகனாதலாகிய முறைக்குச் சாத்தான் இயைத லறிக.

ஆதியென்றதனால், 'மழைக்கு மின்னல்' என உற்பாதத்தால் குறிக்கப்படுவதும், 'அவனுக்கிதுபோதும்' எனக் குறை வில்லாமையைக் கொள்வதும், பிறவும் கொள்க.

(உற்பாதம் – மேல் விளையும் நன்மை தீமைகளைக் குறிக்கும் குறி.)

குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களிலே பொருட்டு, நிமித்தம் என்கிற சொல்லுருபுகள் வரும். அவை 'கூலியின் பொருட்டு வேலை செய்தான்,' 'கூலியினிமித்தம் வேலை செய்தான்' எனக் குவ்வுரு பிற்குப் பொருட்டுப் பொருளிலே ஆக என்கிறதும் சொல்லுருபாக அவ்வுருபின்மேல் வரும்; அதனைச் சாரியையாகக் கோடல்வேண்டும்.

## கா. நமச்சிவாய முதலியார்

**நான்காவதற்கு** – நான்காம் வேற்றுமைக்கு, **உருபு** – உருபாவது, **குவ்வே ஆகும்** – குவ்வொன்றுமேயாகும் ; **பொருள்** – அவ்வுருபின் பொருள்களாவன, **கொடை** – கொடையும், **பகை** – பகையும், **நேர்ச்சி** – நட்பும், **தகவு** – தகுதியும், **அதுஆதல்** – முதற்காரணமும், **பொருட்டு** – நிமித்தகாரணமும், **முறை** – முறையும், **ஆதியின்** – முதலான பொருள்களில், **இதற்கு இது எனல்** – இதற்கு இதுவென்பதுபட வருவன வாகிய பலவுமாம்.

கொடை யெனவே, கோடற் பொருளும் ; பகையெனவே, பகைதொடர் பொருளும் ; நேர்ச்சி யெனவே நட்புத்தொடர் பொருளும் ; தகுதி யெனவே தகுதியுடைப் பொருளும் ; அதுவாதல் எனவே, முதற்காரணகாரியப் பொருளும் ; பொருட்டு எனவே, நிமித்தகாரணகாரியப் பொருளும் ; முறை யெனவே, முறைக்கு இயை பொருளும் குவ்வுருபின் பொருள்களாம் என்பது பெற்றாம்.

**உதாரணம்**

இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான் – கொடை

பாம்புக்குப் பகை கருடன் – பகை

சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன் – நேர்ச்சி

அரசர்க்கு உரியது அருங்கலம் – தகவு

குண்டலத்திற்குப் பொன் – அது வாதல் (முதற்காரண காரியம்)

கூலிக்கு வேலை செய்தான் – பொருட்டு (நிமித்தகாரண காரியம்)

சாத்தனுக்கு மகன் கொற்றன் – முறை

கோடற்பொருளாவது – கொடுத்தற் றொழிலின் செயப்படு பொருளைத் தனக்கு உரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருளாம்.

**இரவலர்க்குப் பொன்னைக் கொடுத்தான்** என்னும் இடத்தே கொடுத்தலின் செயப்படுபொருள் பொன் ; அதனைத் தனக்கு உரியதாக்கிக் கொள்ளுதலையுடைய பொருள் இரவலராதலால் இரவலர் கோடற்பொருளாகும்.

பகைப் பொருளாவது – ஒரு பொருளினிடத்துள்ள பகை தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

**பாம்பிற்குப் பகை கருடன்** என்னுமிடத்தே – கருடனிடத்துள்ள பகை தொடர்தற்குப் பாம்பு இடமாத லறிக.

நேர்ச்சிப் பொருளாவது – ஒருவனிடத்துள்ள நட்புத் தொடர்தற்கு இடமாகிய பொருளாம்.

**சாத்தனுக்கு நட்பாளன் கொற்றன்** என்னும் இடத்தே கொற்றனிடத்துள்ள நட்புத் தொடர்தற்குச் சாத்தன் இடமாத லறிக.

தகுதிப்பொருளாவது – ஒரு பொருளோடு பொருந்துதற்குத் தகுதியுடைய பொருளாம் ;

**அரசர்க்கு உரியது அருங்கலம்** என்னும் இடத்தே – அருங்கலமானது அரசரோடு பொருந்துதற்குத் தகுதியுடைய பொருளாதல் காண்க.

அதுவாதற் பொருளாவது (முதற்காரணகாரியம்), முதற்காரணத் தாலாகும் பொருளாம்.

**குண்டலத்துக்குப் பொன்** என்னுமிடத்தே – பொன்னாகிய முதற்காரணத்தால், குண்டலமாகிய முதற்காரணகாரியம் உண்டாத லறிக.

பொருட்டுப் பொருளாவது (நிமித்த காரணகாரியம்), நிமித்த காரணத்தால் ஆகும் பொருளாம்.

**கூலிக்கு வேலை செய்தான்** என்னுமிடத்தே – வேலையாகிய நிமித்த காரணத்தால் கூலியாகிய நிமித்த காரணகாரியம் உண்டாத லறிக.

முறைப்பொருளாவது, பிறப்பினால் ஒருபொருளின் முறைக்குத் தான் இயைந்து நிற்கும் பொருளாம்.

**சாத்தனுக்கு மகன் கொற்றன்** என்னுமிடத்தே, மகனாதலாகிய முறைக்குச் சாத்தன் இயைதல் அறிக.

ஆதி யென்றதனால், **மழைக்குமின்னல்** என உற்பாதத்தாற் குறிக்கப்படுவதும், **அவனுக்கு இது போதும்** எனக் குறைவில்லாமையைக் கொள்வதும், பிறவும் கொள்க.

உற்பாதம் – மேல்விளையும் நன்மை தீமையை அறிவிக்கும் குறி.

குவ்வுருபு நிற்றற்குரிய சிலவிடங்களில் பொருட்டு, நிமித்தம் என்னும் சொல்லுருபுகள் வரும். அவை,

கூழின்**பொருட்டு** வேலை செய்தான்
கூலியி**னிமித்தம்** வேலை செய்தான்

என வரும்.

அன்றியும், கூலிக்காக வேலை செய்தான் எனக் குவ்வுருபிற்குப் பொருட்டுப் பொருளிலே **ஆக** என்பதுங் சொல்லுருபாக அவ்வுருபின்மேல் வரும்.

## மோசகூ பொன்னையா

நான்காம் வேற்றுமையின் உருபாவது முன்னர்ச் சொல்லப்பட்ட குவ்வொன்றுமே யாகும்; கொடையும், பகையும், நட்பும், தகுதியும், அதுவாதலும், பொருட்டாதலும், முறையும் முதலிய அடிப்படைகளில் இதற்கு இது ஏற்கும் அல்லது தகும் என்னும் பொருட்டாதல் அதன் பொருளாம். எ–று.

எ–டு.:–

இது இரவலர்க்குக் கொடுக்கும் கொடை–கொடை

கருடன் பாம்பிற்கு ஏற்ற பகையாவான்–பகை

கொற்றன் சாத்தற்கு உற்ற நண்பன்–நேர்ச்சி

ஆட்சி அரசர்க்குத் தக்கது–தகுதி

இது தாலிக்கு எடுத்த பொன்–அதுவாதல்

சாத்தன் கூலிக்குச் செய்வது குற்றேவேல்–பொருட்டு

இவன் சாத்தற்கு மகன்–முறை

இந்நூற்பாவில் இதற்கிதுஎனல் என்பதற்கு ஏற்கும் அல்லது தகும் என்னும் பொருட்டாதல் எனப் பொருளுரைக்கப்பட்டது. எழுவாய்ப் பொருளும் விளிப் பொருளுமல்லாத வேற்றுமைப் பொருளெல்லாம் பெயரை எச்சப்பொருட்டதாக்கி நிறுத்தி முடிக்குஞ் சொல்லோடு முடிந்து நிற்பனவாதலின், இந்நூற்பாவிற்குக் காட்டப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகளுக்கு, இரவலர்க்கேற்ற அல்லது தக்க கொடை; பாம்பிற்கேற்ற அல்லது தக்க பகை; சாத்தற்கேற்ற அல்லது தக்க நண்பன் என இவ்வாறு பொருளுரைத்துக் கொள்க. முறை அடிப்படைக்கு இவ்விளக்கம் பொருந்தாது. அது நான்காம் வேற்றுமைப் பொருளதன்று என்பது போக்கித் தெளிவுறுத்தப்படும்.

---

பாட வேறுபாடு:– **1. தொல் சொல். 75**

தொல்காப்பியர்,

**நான்காகுவதே,**
**குஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**எப்பொரு ளாயினும் கொள்ளு மதுவே,[1]**

என நான்கன் பொருளைக் கூறினாராக, அதன் உரையில் உரைகாரரெல்லாம் 'எப்பொரு ளாயினும் கொள்ளுமதுவே' என்பதற்கு, இறப்பவர் என்பெறினுங் கொள்வர், என்றாங்கு 'ஈவதோர் பொருளையேற்க நிற்பதும் அதுவே'[1] எனவும், 'அது யாதானு மொரு பொருளாயினும் ஏற்று நிற்கும் நிலைமைத்து'[2] எனவும், 'அது யாதானு மொரு பொருளாயினும் அதனையேற்று நிற்கும்'[3] எனவும், 'யாதொரு பொருளை யாயினும் ஒரு பொரு ளீவதோர் பொருளினை யேற்பதாக உணர்த்தி நிற்கும்'[4] எனவும் உரை கூறினர். அவரெல்லாம் அது என்னுஞ் சுட்டுச்சொல் நான்காம் வேற்றுமையின் பொருளைச் சுட்டி நிற்பதாகும் என்பதை மனங் கொண்டிருப்பின், 'கொள்ளும் எப்பொரு ளாயினும் அதுவே' எனக் கூட்டி வினை முடித்து, கொள்ளும் என்பதற்கு ஏற்கும் அல்லது தகும் என்றே பொருளுரைத்திருப்பர். உரை யாசிரியன்மார் காலத்திற்குப் பன்னெடுங்காலத்திற்கு முன்னிருந்தே காட்டப்பட்டு வந்த எடுத்துக்காட்டுகளையே அவர்கள் காட்டினர் ஆதலின், எடுத்துக்காட்டுகள் அனைத்தும் பொருத்தமாக அமைந்துள்ளன. பண்ணுக்குத் தக்கது பாட்டு, பூவிற்குத் தக்கது வண்டு என்பனவாக அவர்கள் காட்டியுள்ள எடுத்துக்காட்டுகள் இவ்வேற்றுமைப் பொருளை நன்கு தெளிவுபடுத்தி நிற்பதைக் காண்க. தாம் கண்ட பொருளுக்கும் காட்டியுள்ள எடுத்துக்காட்டுக்கும் இடையே உள்ள முரண் பாடுகளை நீக்கத் தாம் கண்டவாறே விளக்கங்களும் எழுதிச் சென்றனர். தொல்காப்பியர், ஏற்கும் அல்லது தகும் பொருளை முடித்து நிற்கும் பயனிலையை,

**அதற்குவினை யுடைமையின் அதற்குடம் படுதலின்**
**அதற்குப்படு பொருளின் அதுவாகு கிளவியின்**
**அதற்கியாப் புடைமையின் அதன்பொருட் டாதலின்**

---

பாட வேறுபாடு:-

1. இளம்பூரணர்
2. தெய்வச் சிலையார்
3. சேனாவரையரும் நச்சினார்க்கினியரும்
4. கல்லாடர்

**நட்பின் பகையின் காதலின் சிறப்பினென்**
**றப்பொருட் கிளவியு மதன்பால என்மனார்,**[1]

என வாய்பாட்டு வகையான் விதந்தோதினார். அதன்கண் அமைந்த வினை என்பதற்கு 'உபகாரப்படத்க்க' எனவும், உடம்படுதல் என்பதற்கு 'ஏற்றுக்கொள்ளும்' எனவும். படு என்பதற்குத் 'தக்க' எனவும், ஆகுதல் என்பதற்குத் தகுதி வாய்ந்த எனவும் யாப்பு என்பதற்குத் தக்க எனவும், பொருட்டு என்பதற்குத் 'தக்க' எனவும், நட்பு, பகை, காதல், சிறப்பு என்பவற்றிற்கு இசை எச்சமாக 'ஏற்ற' என்பதையுங் கூட்டிப் பொருள்காணுமாறே உரைகாரர்களின் விளக்கங்களும் எடுத்துக்காட்டுகளும் அமைந்துள்ளமையைக் கூர்ந்து நோக்குவாருக்கு யான் கூறிய பொருள் ஏற்புடையதாகக் காணப்படும் என்பதில் ஐயமில்லை. கொள்ளும் என்னுஞ் சொல் இக்காலத்தில் கொள்ளாம் என நாஞ்சிற்பகுதியில் வழங்கி வருவதை யறிந்தோர் என் கருத்தை விரைந் தேற்பர்.

தொல்காப்பிய உரையாசிரியர்களும், 'ஓதுங்குகர உருபு நான் காவதஃ, தியாதிடத்தும் ஈபொருளை ஏற்குமாம்'[2] என உரைத்த நேமிநாதமுடையாரும் மயங்கியாங்கு மயங்காது, இதற்கி தெனல் பொருளே என இவ்வாசிரியர் மரபறிந்து உரைத்தார் என அறிக.

இவ்வாசிரியர், இதற்கிது எனலாக முறையும் வரும் என ஓதி, அதனையும் நான்காம் வேற்றுமைப் பொருளுள் அடக்கினார். தொல்காப்பியர்,

**அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்**
**அதுவென் உருபுகெடக் குகரம் வருமே,**[3]

எனவும்,

**குத்தொக வரூஉங் கொடையெதிர் கிளவி**[4]

**அப்பொருள் ஆறற் குரித்து மாகும்,**[5]

எனவும் கூறி, முறையே எனக்கு மகன், நினக்கு மகன் என வழங்குவனவும், ஆறாம் வேற்றுமைப் பொருளுடையன

---

குறிப்புகள்:–

1.தொல், சொல். 76
2. நேமி, 43
3. தொல்.சொல். 94
4. பலி
5.தொல். சொல். 96

வாயினும் குவ்வுருபே ஆண்டு விரிந்துந் தொக்கும் நிற்றற்கு உரியது என மயக்கவிதி கூறினார். மேலும்,

குஜ ஆனென வரூஉ மிறுதி
*அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே,*[1]

எனவும்,

**அ எனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்**
**குவ்வும் ஐயும் இல்லென மொழிப**[2]

எனவும் குவ்வுருபு அகரம் பெற்றுநிற்கும் எனக் கூறியக் கண்ணும், அக்குவ்வுருபை உயர்திணைக்கே உரித்தாக்கியும், 'கடிநிலை யின்றே யாகிரி யற்க'[3] என உடம்பொடு புணர்த்திக் கூறியும் தெளிவுபடுத்தியுள்ளார்.

இனி, நின்ன கண்ணியும்[4], அவர...கயம்[5], என கைகள் தன செவியும் என இவ்வாறு வரும் அடைகளின் ஈற்றில் வரும் அகரம் மிகப் பழங்காலத்தில் தமிழ் மொழியில் வழங்கிய அன் என்னும் ஆறாம் வேற்றுமையின் திரிந்த வடிவம் எனவும், அவ் வேற்றுமை உருபின் ஆற்றலை மிகுக்கவே அவ்வகரத் தோடு குவ்வும் இணைந்து நின்று வழங்குவதாயிற்கு எனவும் கருதுவார் உளர்[6] என்பது ஈண்டு நோக்கத்தக்கது.

ஏற்கும் அல்லது தகும் (கொள்ளும்) பொருளோடு ஒருபுடை ஒத்து வழங்கும் சிறப்பாலும் உறவாலும் தக்கனவாய உரிமைகளுக்கும், நிலவரையறை, இடவரையறை, பண்பு வரையறை, கால வரையறை, ஆதியாக வழங்கும் வரையறைப் பொருட்களுக்கும் குவ்வுருபு உரிமைபூண்டு, மதுரைக்குக் கிழக்கு, வரிசைக்கு வாழ்க்கை, மறத்திற்குக் கொற்றம், தாய்க்குப் பிள்ளை, ஆறுக்கு மூன்று, கருமைக்குக் களாம்பழம், ஆடிக்காடி, வாழ்வுக்கு முழுக்கு, தமருக்குத் தீர்வு என இவ்வாறு பண்டு தொட்டு வழங்கினமை கண்டு தொல்காப்பியர்,

**இதன திதுவிற் றென்னும் கிளவியும்**
**அதனைக் கொள்ளும் பெயர்வயி னானும்**
**அதனாற் செயப்படற் கொத்த கிளவியும்**

---

குறிப்புகள்:–

1.தொல், சொல். 108
2.தொல், சொல். 109
3.தொல், எழு. 390
4. புறம். 45
4. புறம். 15
4.A History of the Tamil Langage, T.P.M. p. 100.
6.தொல். சொல். 62

**முறைகொண் டெழுந்த பெயர்ச்சொற் கிளவியும்**
**பால்வரை கிளவியும் பண்பி னாக்கமும்**
**காலத்தி னறியும் வேற்றுமைக் கிளவியும்**
**பற்றுவிடு கிளவியும் தீர்ந்துமொழிக் கிளவியும்**
**அன்னபிறவும் நான்க னுருபில்**
**தொன்னெறி மரபின தோன்ற லாறே**

என அமைதி கூறினார். இவ்வழக்குடைமையைக் கூர்ந்து நோக்கின், சிறப்புரிமை, உறவு உரிமை முதலிய தனி உரிமைகளையும், நில, இட, பண்பு, கால, வரையறையாதி உரிமைகளையும் தெளிவாக உணர்த்தும் தனிவேற்றுமை ஒன்று வகுக்கப்படாமலே குவ்வுருபு அதற்கு உரிமை செய்யப்பட்டுள்ளது என்பது புலனாகும்.

மொழிகளில் வேற்றுமைகள் அவ்வக்கால வழக்கு நிலைக்கேற்ப அமைவனவேயன்றி இத்தனை தான் உண்டு என வரையறுத்துக் கூறப்படுவதற்கு உரியன அல்ல என்பது மொழிநூலர் கோள்.[1] மிகப் பண்பட்ட மொழிகளிலும் பெயர்ப்பொருள் அடையும் வேறுபாடுகளையெல்லாம் உணர்த்த வல்ல வேற்றுமைகள் குறைவற அமைந்துள்ளன என முடிவாகக் கூறமுடியாது என்றே மொழியியல் வல்லார் கருதுகின்றனர் [2] எனவே மொழியியல் வல்ல தொல்காப்பியர் இவ்வாறு தாம் கண்ட குறையை ஓராற்றான் வேற்றுமை மயங்கியலில் நிறைவு செய்துள்ளார் எனக் கொள்க.

**(41)**

---

குறிப்புகள்.:–

1. **The number of cases to be recognised in a language (at one particular stage of its development) must be decided by the forms found in that language, case distinctions are not national or logical, but exclusively grammatical categories - *The system of Grammar***

   **- *Jesperson p.25.***

2. **Even in the highly inflected ancient languages there were not enough cases (enoughcase forms) to go round, to do all the required jobs, to show all the various relations that men wished to show. The result, even in these highly inflected languages, was that the same case (case form) had to be used to do several different jobs to express different relations.**

   **– *The understanding of Syntax. H.R. Stoke p. 229.***

298. ஐந்தா வதனுரு [1]பின்னு மில்லும்
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.

ஐந்தாவதன் உருபு இன்னும் இல்லும்
நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப் பொருள் ஏ.

aiṇṭāvaṭan̲ urupu in̲n̲um illum
nīṅkal oppu ellai ēṭupporuḻ ē.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### The fifth case

The Signs of the 5th Case are il and in; it signifies separation, comparison, limit and reason.

## ஒப்புமைப் பகுதி

ஐந்தா குவதே
இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
இதனின் இற்றிது வென்னு மதுவே

(தொல். சொல்.: 77)

வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்றா
முதுமை யிளமை சிறத்த லிழித்தல்
புதுமை பழமை ஆக்க மென்றா
இன்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்று
அன்ன பிறவும் அதன்பால என்மனார்

(தொல். சொல்.: 78)

...................... கோதிலா
தின்னுருபைந் தாவ திதனினித் தன்மைத்தி
தென்னு மொருநான் கிடத்து

(நேமி.: 43: 3–4)

---

பாட வேறுபாடு :–

1. இல்லுமின்னும்

ஐந்தா வதற்குரு பின்னு மில்லு
நீங்கலொப் பெல்லை யேதுப் பொருள்வயி
னிதனினிற் றிதுவென வரலதன் பொருளே

(இ.வி.: 202)

இல்லு மின்னுமைந் தாவத னுருபே

(மு.வீ.: 519)

அச்ச மாக்க மதனொடு தீர்தல்
பற்றுவிட னீங்க லொப்பில்லை யேது
பிறவு மதன்பொரு ணிலையா கும்மே

(மு.வீ.: 520)

ஐந்தாவது னுருபு இல்லு மின்னும்
நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப் பொருளே

(தொ.வி.: 60)

கூறும் ஐந் தாமுருபு இல்இன்னாம் ஏதுஎல்லை
கொளுநீக்கம் உவமைஏற் பதுவினைபேர் முடிவாம்

(சுவாமி.: 43:1)

## மயிலை நாதர்

எ–ன், நிறுத்தமுறையானே ஐந்தாம் வேற்றுமையாமாறு [1]உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: ஐந்தாம்வேற்றுமைக்கு இன்னென்பது எனவும் இல்லென்பது எனவும் உருபாம்; நீங்கிநிற்றலும், உவமையும், எல்லையும், சுருவியும் [2]பொருளாம், எ – று.

வ – று.:

ஊரினீங்கினான், தமரிற்றீர்ந்தான், வரையின் வீழருவி,

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை" (குறள். 964)

எனவருமிவை நீக்கம்.

"திறல்வே னுதியிற் பூத்த கேணி" (சிறுபாண். 172)

"நெய்த்தோர் மீமிசை நிணத்திற் பரக்கும்" (அகநா. 9)

---

பாட வேறுபாடு:–

1. தொகுத்துணர்த்துதல்
2. அதற்குப் பொருளாம்

**“பொன்னிற் பிதிர்ந்த பொறிச் சுணங் கிளமுலை.”**

இவை ஒப்பு; இதனினெடிது, இதனினினிது, இதனினன்று, இதனிற்றண்ணிது, இதனின்மெல்லிது என்பன நீக்கந் தழுவிநிற்கும் போலி; கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு, வையையாற்றின் வடக்கு, [1]மருதயாற்றின் தெற்கு எனவரு மிவை எல்லை. முயற்சியிற் பிறத்தலான் ஒலி நிலையாது, புகையுண்மையின் எரியுள்ளது, பொன்னினாய குடம்,

**“கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்”**

(பொருந. 163),

**‘அறிவிற்பெரியன்’** எனவருமிவை [2]கருவி; இல்லொடும் ஒட்டுக.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ – னின்,** ஐந்தாம் வேற்றுமையது இலக்கணம் **உணர்–ற்று.**

**இ – ள்.:** ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் மேற்கூறிய இன்னுமாம்; அவற்றின் பொருளாவன நீங்கற் பொருளாகவும் உவமைப் பொருளாகவும் எல்லைப்பொருளாகவும் ஏதுப்பொருளாகவும், தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமைசெய்தலாம், எ – று.

ஏதுப்பொருள் மூன்றாம் வேற்றுமைக்கு அன்றி இதற்கு அத்துணைச் சிறப்பின்மையின் பிற் கூறப்பட்டது.

**வ–று.:–**

தமரின் தீர்ந்தான் இவன், வரையின் வீழருவி,

**“தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்**
**நிலையின் இழிந்தக் கடை”**

எனவும்; அரசரிற் பெரியர் அந்தணர், ஆவின் இழிந்தது மேதி எனவும் வருவழி இன்னுருபு நீங்குதற் பொருளவாக வேற்றுமை செய்தது. பாலின் வெளிது கொக்கு, காக்கையின்கரிது களம் பழம், **“நாயிற் கடைப்பட்ட நம்மை”** என்பனவும் ஒப்புமை கருதாது உயர்வும் தாழ்வும் கருதியவழி நீங்குதற் பொருளவாம்.

***இந் நீக்கப்பொருள் நிலைத்திணை இயங்குதிணை பண்பாதியின் வரும் எனவும் கொள்க. அவையாவன மலையின் இழிந்தான் எனவும், யானையின் இழிந்தான் எனவும், சிறுமையின் நீங்கிய எனவும் வரும். ஆதி***

---

பாட வேறுபாடு:–

1.மருதையாற்றின்

2.ஏது

*என்றதனால், "குடிப்பிறந்து குற்றத்தின் நீங்கி" "ஐயத்தின் நீங்கி" எனவரும் எனவும் கொள்க. இவ் விலக்கணத்தான் முன்னர்க் காட்டிய உதாரணங் களையும் உய்த்துணர்ந்து கொள்க.* "திறல்வேனுதியின் பூத்த கேணி" "பொன்னின் பிதிர்ந்த பொறிசுணங் கிளமுலை" என்புழி உவமைப்பொருளாக வேற்றுமை செய்தது. கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்குச் சோணாடு என்புழி எல்லைப்பொருளாக வேற்றுமை செய்தது. "கோட்டின்செய்த கொடிஞ்சி நெடுந்தேர்" அறிவிற்பெரியன் என்புழி ஏதுப்பொருளாக வேற்றுமை செய்தது. இல்லுருபினையும் இவ்வாறே ஒட்டிக் காண்க.

இங்ஙனம் கூறவே எல்லாப் பொருளையும் இதனின் இற்று இது என விகற்பித்து உணர்தற்கு வருவன இவ்வுருபு என்ப தாயிற்று. ஆகவே நான்காம் வேற்றுமைப் பொருளாகிய கொள்வோனையும் கொடைப்பொருளினையும் இவ்வாறு விகற்பித்து உணர்ந்தல்லது கொடுத்தல் கூடாமையின் இஃது ஐந்தாம் வேற்றுமை எனப்பட்டது.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** ஐந்தாம் வேற்றுமைக்கு இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.: ஐந்தாவதற்கு** – ஐந்தாமெண்ணின் முறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு, **உருபு இல்லும் இன்னும்** – இல்லென்பதும் இன்னென்பதும் உருபாம்; **நீங்கல் ஒப்பு எல்லை** – நீங்கி நிற்றலும் உவமையும் எல்லையும், **ஏதுப்பொருள்** – கருவியும் அதற்குப் பொருளாம், **எ–று.**

**உ–ம்.:–**

ஊரினீங்கினான்,

"தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை"
(குறள். 964)

என நீக்கம். "பொன்னிற் பிதிர்ந்த பொறிசுணங் கிளமுலை" இவை ஒப்பு.

அதனின் மெல்லிது, அதனிற் பெரிது, அவனிற் பெரியன் சாத்தன் என இவை ஒப்பொடு நீக்கல்.

கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு, வைகையாற்றின் தெற்கு, மருதையாற்றின் வடக்கு இவை எல்லை.

பொன்னினாய குடம், **"கோட்டிற் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்"** (பொருந. 163), அறிவிற் பெரியன் என இவை ஏது.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ஐந்தாம் வேற்றுமைய திலக்கண முணர்த்துகின்றது.

**இ—ள்.: ஐந்தாவதன்** – ஐந்தாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளானவை, **இல்லுமின்னும்** – இல்லும் முன்சொல்லப்பட்ட வின்னுமாம், **பொருள்**—அவ்வுருபுகளின் பொருள்களாவன, **நீங்கல்** – நீக்கப்பொருளும், **ஒப்பு** – ஒப்புப் பொருளும், **எல்லை**—எல்லைப்பொருளும், **ஏது** – ஏதுப்பொருளுமாகிய அவ்வுருபுகளை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட விந்நான்குமாம், **எ—று.**

**வ—று.:**

மலையின்வீழருவி இது நீக்கப்பொருளாம். நீக்கப் பொருளாவது பிரிவை யுண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவை மட்டுந் தன்னிடத்திலுடைய பொருளாம். மலையின்வீழருவி யென்கிற விடத்தே அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்குந் தொழிலாம், அது தன்னிடத்தில்லாமற் பிரிவொன்றையே தன்னிடத்துடைய தாதலால் மலைநீக்கப் பொருளாமெனக் கொள்க. காக்கையிற்கரிது களம்பழம், இது ஒப்புப்பொருளாம். ஒப்புப்பொருளாவது புகழ்பொருளிலுந் தன்னிலுமிருக்கின்ற பொதுத்தன்மையால் உபமானமாகிற பொருளாம்; காக்கையிற் கரிது. களம்பழம், என்கிற விடத்தே, களம்பழம் புகழ் பொருளாம். புகழ்பொருளிலுந் தன்னிலுமுள்ள பொதுத்தன்மை கருமையாம். அதனாலுபமானமாகிய பொருள் காக்கை யாதலறிக. மதுரையின் வடக்குச் சிதம்பரம் இது எல்லைப் பொருளாம். எல்லைப் பொருளாவது, ஒரு பொருளினது திசையளவைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம். மதுரையின் வடக்குச் சிதம்பரம், என்கிறவிடத்தே அறியப்படாத பொருளாகிய சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு அறியப்பட்ட பொருளாகிய மதுரை எல்லைப்பொருளானமை யறிக. இன்னும் கச்சியிற் றிருத்தணிகை முக்காவதம். என வழியளவிலும் அவனிலிவனிரண்டாண்டு மூத்தவன் எனக் காலவளவிலும் எல்லைப்பொருள் வருமெனக் கொள்க. அல்லாமலும் அரசரிற் பெயரிய ரந்தணர், ஆவினிழிந்தது மேதி, என்றாற்போல வுயர்வு தாழ்வுகளைப் பற்றியும் எல்லைப் பொருள் வரும். இவற்றுள் அந்தணரது பெருமைக்கு அரசரும் மேதியினிழிவிற்கு ஆவும் எல்லைகளாதல் காண்க. இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப் பொருளென்பாரு முளர். கல்வியிற் பெரியன் கம்பன் இது ஏதுப் பொருளாம், கம்பன் பெரியனாதற்குக் கல்வி ஏதுவாதலறிக. இன்னும் கடவுளிற் றோன்றிய துலகம் என முதற் காரணப் பொருளாகுகை முதலானவையுங் கொள்க.

இன்னும், மண்ணுலகின்வேறு விண்ணுலகம், தீவினையின் வெறுக்கின்றான், எனவிப்படி இதனினிற்றிது, என்பதுபட

வருவன வெல்லாங் கொள்க. இல் இன் உருபுகள் சிலவிடங் களிலே உம்மை பெற்றும் வரும். அவை அவனிலும் பெரியவ னிவன் இவனினுஞ் சிறியனவன் என வருதல் காண்க. நீக்கப் பொருளிலே இல், இன், உருபுகளின் மேல்நின்று இருந்து என்னப்பட்டவை தனித்தாவது உம் பெற்றாவது ஒரோவிடத்துச் சொல்லுருபுகளாக வரும். ஊரினின்று நீங்கினான், ஊரி லிருந்து போனான், ஊரினின்றும் வந்தான், ஊரிலிருந்தும் போனான், என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஐந்தாம் வேற்றுமை யுருபும் பயனுங் கூறுஞ் சூத்திரம் யாது?

ஐந்தா வதனுரு பில்லு மின்னு

நீங்கலொப் பெல்லை யேதுப் பொருளே.

(ஐந்தாவதன் உருபு இல்லும் இன்னும்

நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப் பொருளே.)

**இ–ள்.:** ஐந்தாம்வேற்றுமையின் உருபாவன இல்லும் இன்னுமாம்; அவ்வுருபுகளின் பொருள்களாவன நீக்கப்பொருளும் ஒப்புப் பொருளும் எல்லைப்பொருளும் ஏதுப்பொருளுமாகிய அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இன்னான்குமாம், **எ–று.**

ஐந்தாம் வேற்றுமையுருபுகள் யாவை?

"ஐந்தாவதன் உருபு இல்லும் இன்னும்"

73. ஐந்தாம் வேற்றுமை யுருபுகளின் பொருள் யாவை?

"நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப்பொருளே"

மலையின் வீழருவி..............................நீக்கப்பொருள்.

காக்கையிற்கரிது களம்பழம்..................ஒப்புப்பொருள்.

மதுரையின் வடக்குச் சிதம்பரம்.......................எல்லைப்பொருள்.

கல்வியிற் பெரியன் கம்பன்.............................ஏதுப்பொருள்.

நீக்கப்பொருளாவது பிரிவையுண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவை மாத்திரந் தன்னிடத்துடைய பொருளாம்.

**உ–ம்.** மலையின் வீழருவி என்புழி, அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்குந் தொழில்; அது தன்னிடத்தில்லாமல் அவ்வீழ்ச்சி யாலாகிய பிரிவொன்றையே தன்னிடத்துடையது மலை யாதலால், மலை நீக்கப்பொருள்.

ஒப்புப்பொருளாவது உவமேயப்பொருளிலுந் தன்னிலு மிருக்கின்ற பொதுத்தன்மையால் உவமானமாகும் பொருளாம். உவமேயம், புகழ்பொருள் என்பன ஒருபொருட்சொற்கள்.

**உ-ம்.** காக்கையிற்கரிது களம்பழம் என்புழிக் களம்பழம் உவமேயம்; உவமேயத்திலுந் தன்னிலுமுள்ள பொதுத்தன்மை கருமை; இதனால் உவமானமாகிய பொருள் காக்கையாதலாற் காக்கை ஒப்புப்பொருள்.

எல்லைப்பொருளாவது அறியப்படாத பொருளினது திசையளவு வழியளவு காலவளவு பண்பு முதலியவற்றைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

**உ-ம்.** (1) 'மதுரையின் வடக்குச் சிதம்பரம்' என்புழி, அறியப்படாத சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்டபொருளாகிய மதுரை யாதலால், மதுரை எல்லைப்பொருள்.

(2) 'கச்சியிற் றிருத்தணிகை முக்காவதம்' என்புழி, அறியப்படாத திருத்தணிகையினது வழியளவை அறிவித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்டபொருளாகியகச்சியாதலாற் கச்சி எல்லைப்பொருள்.

(3) 'சாத்தனிலிரடாண்டு மூத்தவன் கொற்றன் என்புழி, அறியப்படாத கொற்றனுடைய பிராயத்தைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள் அறியப்பட்ட சாத்தனாதலாற் சாத்தன் எல்லைப்பொருள்.

(4) 'அரசரிற் பெரியரந்தணர்'; 'ஆவினிழிந்தது மேதி' என்புழி, அறியப்படாத அந்தணரும் மேதியுமாகிய பொருள்களின் உயர்வு தாழ்வுகளைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள்கள் அறியப்பட்ட அரசரும் ஆவுமாதலால், அரசரும் ஆவும் எல்லைப்பொருள்கள். இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப்பொருளென்பாருமுளர்.

ஏதுப்பொருளாவது ஒருபொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருளாம்.

**உ-ம்.** கல்வியிற் பெரியன் கம்பன் என்புழிக், கம்பனுடைய பெருமைக்கு ஏதுக் கல்வியாதலாற் கல்வி ஏதுப்பொருள்.

இன்னும், மாயையிற் றோன்றியதுலகம் என முதற்காரணப்பொருளிலும், மண்ணுலகின் வேறு விண்ணுலகம் என வேற்றுமைக் கெதிர்ப்பொருளிலும், பாவத்தின் வெறுக்கின்றான் என விடயப்பொருளிலும், ஐந்தனுருபு வருமெனக் கொள்க.

நீக்கப்பொருளிலும், எல்லைப்பொருளிலும், இன் இல் உருபுகளின் மேல், நின்று, இருந்து என்பவை, உம்பெற்றும் பெறா துஞ் சொல்லுருபுகளாக வரும்.

**உ-ம்.** (1) ஊரினின்றும் போயினான்; ஊரினின்று போயினான்; ஊரிலிருந்தும் போயினான். இவை நீக்கப்பொருள்.

(2) காட்டினின்றுமூர்காவதம், காட்டினின்றூர்காவதம்; காட்டிலிருந்துமூர்காவதம், காட்டிலிருந் தூர்சாவதம் இவை எல்லைப்பொருள்.

## முகவை இராமானுச கவிராயர்

இது, ஐந்தாம் வேற்றுமை யிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.: ஐந்தாவதனுருபு**–ஐந்தாம்வேற்றுமையின் உருபாவன, **இன்னுமில்லும்** – மேற்கூறிய இன்னேயன்றி இல்லுமாம், **பொருள்**–அவற்றின் பொருளாவன, **நீங்கல்** – நீக்கப் பொருளாகவும், **ஒப்பு**–உவமைப் பொருளாகவும், **எல்லை** – எல்லைப் பொருளாகவும், **ஏது** – ஏதுப் பொருளாகவும் தம்மை யேற்ற பெயர்ப் பொருளை வேற்றுமை செய்தலாம், **எ–று.**

ஒப்பு உவமப்பொருவும், உறழ்பொருவு மென விருவகைப்படும். அவற்றுள், உறழ்பொருவு உயர்வு தாழ்வுகளை யுணர்த்துவது. உறழ்தல்–ஒன்றினொன்று மிக்குச் சமமாகாது மாறுபடல், ஏதுவும் காரகவேது, ஞாபகவேது என விருவகைப்படும். இனி யுருபேற்ற சொல்லையும் உருபு நோக்கிய சொல்லையும் நீக்கப்பொருள் நீங்கப்படுபொருள். உவமப்பொருள் உவமிக்கப்படுபொருள், எல்லைப்பொருள் எல்லைப்படுபொருள், ஏதுப்பொருள் காரியப்படுபொருள் எனப் பகுத்துக் காண்க. இவற்றுள், உவமப்பொருள் முதலிய மூன்றிலும் உருபு நோக்கிய சொல் செயப்பாட்டுப்பொருளில் வரும்; நீங்கப் பொருளொன்றும் உருபேற்ற சொல்லே செயப்பாட்டுப் பொருளாக நிற்கும்; நீக்கம் – வீழ்தல், இழிதல், தீர்தல், நீங்கல், பற்றுவிடல் முதலியவற்றிலும்; இருவகைப்பொருவும்: பண்பு முதலியபற்றி இதனின் இற்றிது வென்னும் வாய்பாட்டிலும்; ஏது. காரணகாரியத் தொடர்பிலும், எல்லை இடவரையறையிலும் அளவுகுறித்தால் பொருளாதி ஆறிலும் வரும்.

**வ–று.:–**

மலையின்வீழருவி, “தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்” தமரில் தீர்ந்தான், ஊரில் நீங்கினான், காமத்திற் பற்றுவிட்டான் என வரும். முதலிய வென்றதினால், அரசரிற் பெரியர் அந்தணர், ஆவின் இழிந்தது மேதி என உயர்வுதாழ்வுகளிலும், இந்த நீக்கப் பொருள்வரும். இவற்றுள், உருபேற்ற சொல். மலை, தலை, முதலியன. உருபு நோக்கிய சொல். அருவி மயிர் முதலியன. இந்த அருவி முதலியன. அவற்றை விட்டு நீங்க, மலை முதலியன நீங்கப்படுபொருளாய் நிற்றல் காண்க. ‘ஆவினிழிந்தது மேதி’ என்பதில் இழிந்தது மேதி; அவ்விழிவு நீங்கப்படுபொருள், ஆடுவெனக் காண்க. இவை போல்வன வெல்லாம் நீக்கப் பொருள். காக்கையிற் கரிது களம்பழம், பாலின் வெளிது கொக்கு என்றாற் போல்வன வண்ணம். அதனின்வட்டமிது வடிவு. அதனிற்பெரிதிது, அதனிற் சிறிது இது அளவு. அதனில் தீவிது இது. (தீவிது–இனியது) சுவை, இவற்றுள் உவமப்பொருள். காக்கை, பால் முதலியன. இவற்றை. உவமை எனவும் உவமானமெனவு முக்கியப்

பொருளெனவுஞ் சொல்லப்படும். களம்பழம், கொக்கு முதலியன. உவமிக்கப்படுபொருள். இவற்றை உவமேய மெனவும் புகழ்பொருள் எனவும் பொருள் எனவும் சொல்லப் படும். இந்த இரண்டிற்கும் பொதுப்பட நின்ற குணம், வண்ணம், வடிவு முதலியன. இவற்றிற்கு இருவகைப் பொருவும் விரித்துக் கொள்க. எவ்வாறெனின், காக்கைபோல், அதுபோல் கரிது, பெரிது, சிறிது என வருவன உவப்பொருவும்; காக்கையைக் காட்டிலும், அதைக் காட்டிலும் கரிது, பெரிது, சிறிதென உயர்வு தாழ்வு குறித்து வருவன உறழ்பொருவுமாமென்க. பண்பு முதலிய வென்றதினால் இவனின் இலன் இவன், இவனின் உடையன் இவன், இதனின் நாறுமிது இதனிற் பல இவை, இதனில் தூரமிது என வருவனவெல்லாங் கொள்க. இவற்றுள், இதனினென்பது காக்கையினென்பது, இற்றென்பது கரிதென்பது, இதுவென்பது களம்பழம் என்பது, இலன், உடையன் என்பனவும் இவ்வாய்பாட்டுள் அடங்கும். இந்த உறழ்பொருவை நீக்கப் பொருளென்பாரு முண்டு. இவை யனைத்தும் ஒப்பு. கருவூரின்கிழக்கு, மருவூரின் மேற்குச் சோணாடு என்பது எல்லைப்பொருள்; இதனில் கருவூரின் மருவூரின் என இட வரையறை யெல்லை உருபேற்ற சொல்லில் வருதலால் அவற்றை எல்லைப்பொருளெனவும், அதனிற் கிழக்கு மேற்கு எனத் திசையளவு குறித்து வைக்க, அந்த எல்லையைக் கொண்டது சோணாடு ஆதலால், உருபுநோக்கிய சொல்லை எல்லைப்படுபொருளெனபுங் காண்க. இன்னுங்,

**குணகடல் குமரி குடகம் வேங்கட**
**மெனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடல்**

என்னுமிடத்துக் குணகடல் முதலிய நான்கும் எல்லைப்பொருளாகவும் அந்நான்கு எல்லையையுங் கொண்டது தமிழ்க் கடலாதலால் – தமிழ்க்கடல் எல்லைப்படுபொருளாகவும் நின்றவாறுங் காண்க. இனி அம்மலையின் இம்மலை பெரிது, அவ்வூரில் இவ்வூர் சிறிது, அவன் வாழ்நாளில் இவன் வாழ்நாள் பெரிது, அவன் கண்ணில் இவன் கண்பெரிது, அவனழகில் இவனழகு பெரிது, அவன்தொழிலில் இவன் தொழில்பெரிது எனப் பெருமை, சிறுமை முதலிய அளவு குறித்தற்குப் பொருளாதி ஆறும் எல்லைகளாய் நின்றமையுங் காண்க. இவை அளவு குறியாது அம்மலையைப் போலக், காட்டிலும், எனவரின் இருவகைப் பொருவுள் அடங்கும். இவையெல்லாம் எல்லைப்பொருள், கள்ளரின் அஞ்சினான், வாணிகத்தின் ஆயினான், இகழ்ச்சியிற்கெட்டான், மகிழ்ச்சியின் மைந்துற்றான் (மைந்து–வலி,) கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தேர் (கோடு – யானைத்தந்தம், கொடிஞ்சி–தேர்மொட்டு,) என்றாற்

போல்வன காரகஏது; அறிவினாகியகாட்சி, கண்ணினாகிய காட்சி எனவரின் ஞாபகவேது; இவற்றுள் உருபு நோக்கிய சொல் காரியப்படு பொருளாய் நிற்றல் காண்க. எவ்வாறெனின் கள்ளரும் வாணிகமும் இகழ்ச்சியும் முதலியன ஏதுவாக, அச்சமும் ஆக்கமும் கேடும் முதலிய காரியங்கள் தோன்ற அவற்றைக் கொண்டு நிற்றலால் உருபு நோக்கிய சொல் காரியப்படுபொருளென்க. இவையெல்லாம் ஏது. பிறவுமன்ன. இவற்றுள் இல்லுருபு வந்த இடத்தில் இன்னுருபையும், இன்னுருபு வந்த இடத்தில் இல்லுருபையும் ஒட்டுக. இவ்வாறு கூறவே எல்லாப்பொருளையும் இதனின் இற்று இதுவென விகற்பித்து அறிதற்கு வருவது இந்த உருபென்பதாயிற்று. ஆகவே, நான்காம் வேற்றுமைப் பொருளாகிய கொள்வோனையுங் கொடைப் பொருளையும் இதனின் இத்தன்மைத்து இந்தக்கொடைப் பொருள் என இவ்வாறு விகற்பித்து உணர்ந்தால் அல்லது கொடுத்தல் கூடாததினாலே இது ஐந்தாம் வேற்றுமை யெனப்பட்டது.

"ஐந்தாகுவதே
இன்னென்னப் பெயரிய வேற்றுமைக் கிளவி
யிதனி னிற்றிது வென்னு மதுவே"

எனவும்,

"வண்ணம் வடிவே யளவே சுவையே,
தண்மை வெம்மை யச்ச மென்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மென்மை கடுமை யென்றா
முதுமை யிளமை சிறத்த லிழித்தல்
புதுமை பழமை யாக்க மென்றா
வின்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவு மதன்பால வென்மனார்"

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஐந்தாவதன்** – ஐந்தாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளாவன:– **இன்னும் இல்லும்** – இன் என்பதும் இல் என்பதுமாம்; பொருள் – அதன் பொருள்களாவன;– **நீங்கல்** – நீக்கப் பொருளும், **ஒப்பு** – ஒப்புப்பொருளும், **எல்லை** – எல்லைப்பொருளும், **ஏது** – ஏதுப்பொருளுமாகத் தன்னை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்துதலாம்.

உ–ம்:– மலையின் வீழருவி — நீக்கப் பொருள்

காக்கையின் கரிதுகளம்பழம் – ஒப்புப் பொருள்

மதுரையின் வடக்குச் சிதம்பரம் – எல்லைப்பொருள்

கல்வியின் பெரியர் கம்பர் – ஏதுப்பொருள்

**குறிப்பு:–**

எல்லைப்பொருள் – 'மதுரையின் வடக்குச் சிதம்பரம்' எனத் திசையளவும், 'கச்சியில் திருத்தணிகை முக்காவதம்' என வழியளவும், 'இராமனில் இரண்டாண்டு மூத்தவன் குஹன்' எனக் காலவளவும், 'அரசரிற்பெரியர் அந்தணர்' எனப் பண்பளவும் முதலியபற்றி வரும்.

'காக்கையிற் கரிது' என்பதில் காக்கைபோல் எனக்கொண்டால் ஒப்புப்பொருளாம். 'காக்கையைக் காட்டிலும்' எனக் கொண்டால் எல்லைப் பொருளாம். இவற்றை முறையே 'உவமைப்பொருவு' எனவும், உறழ்பொருவு' எனவுங் கூறுவர்.

நீக்கப்பொருளிலும், எல்லைப் பொருளிலும் இன், இல் உருபுகளின்மேல், நின்று இருந்து என்பவை சொல்லுருபுகளாகச் சிலவிடத்து வரும். உ–ம்:– ஊரினின்று நீங்கினான்; ஊரிலிருந்து போனான்; காட்டினின்று ஊர் காதம்; காட்டிலிருந்து ஊர் காதம்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஐந்தாவதன் உருபு இல்லும் இன்னும்** – ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் முன் சொல்லப்பட்ட இன்னுமாம், **பொருள்** – அவ்வுருபுகளின் பொருள்களாவன, **நீங்கல்** – நீக்கப்பொருளும், **ஒப்பு** – ஒப்புப்பொருளும், **எல்லை** – எல்லைப் பொருளும், **ஏது** – ஏதுப்பொருளுமாகிய அவ் வுருபுகளை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இந் நான்குமாம், **எ–று.**

**உ–ம்.:**

மலையின் வீழருவி.................... நீக்கப்பொருள்.

காக்கையிற்கரிது களம்பழம்............ ஒப்புப்பொருள்.

மதுரையின் வடக்குச் சிதம்பரம்............ எல்லைப்பொருள்.

கல்வியிற் பெரியவன் கம்பன்................ ஏதுப்பொருள்.

நீக்கப்பொருளாவது பிரிவை யுண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவை மாத்திரந் தன்னிடத்துடைய பொருளாம்.

**உ–ம்.:** மலையின் வீழருவி என்புழி, அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்குந் தொழில்; அது தன்னிடத்தில்லாமல் அவ் வீழ்ச்சியாலாகிய பிரிவொன்றையே தன்னிடத்துடையது மலையாதலால், மலை நீக்கப்பொருள்.

ஒப்புப் பொருளாவது உவமேயப் பொருளிலும் தன்னிலு மிருக்கின்ற பொதுத் தன்மையால் உவமானமாகும் பொருளாம். உவமேயம், புகழ்பொருள் என்பன ஒருபொருட் சொற்கள்.

**உ–ம்.:** காக்கையிற்கரிது களம்பழம் என்புழிக், களம்பழம் உவமேயம்; உவமேயத்திலுந் தன்னிலுமுள்ள பொதுத்தன்மை கருமை; அதனால் உவமானமாகிய பொருள் காக்கையாதலாற் காக்கை ஒப்புப்பொருள்.

எல்லைப் பொருளாவது அறியப்படாத பொருளினது திசை யளவு வழி யளவு கால வளவு பண்பு முதலியவற்றைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

**உ – ம்.:** 'மதுரையின் வடக்குச் சிதம்பரம்' என்புழி, அறியப்படாத சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்ட பொருளாகிய மதுரை யாதலால், மதுரை எல்லைப்பொருள்.

'கச்சியிற் றிருத்தணிகை முக் காவதம்' என்புழி, அறியப்படாத திருத்தணிகையினது வழி யளவை அறிவித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்ட பொருளாகிய கச்சியாதலாற் கச்சி எல்லைப்பொருள்.

'சாத்தனிலிரண்டாண்டு மூத்தவன் கொற்றன்' என்புழி, அறியப்படாத கொற்றனுடைய பிராயத்தைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள் அறியப்பட்ட சாத்தனாதலாற் சாத்தன் எல்லைப்பொருள்.

'அரசரிற்பெரிய ரந்தணர்'; 'ஆவினிழிந்தது மேதி' என்புழி, அறியப்படாத அந்தணரும் மேதியுமாகிய பொருள்களின் உயர்வு தாழ்வுகளைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள்கள் அறியப்பட்ட அரசரும் ஆவுமாதலால், அரசரும் ஆவும் எல்லைப்பொருள்கள். இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப்பொருளென்பாருமுளர்.

ஏதுப்பொருளாவது ஒருபொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருளாம்.

**உ–ம்.:** 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்புழிக், கம்பனுடைய பெருமைக்கு ஏதுக் கல்வியாதலாற் கல்வி ஏதுப்பொருள்.

இன்னும், 'மாயையிற் றோன்றிய துலகம்' என முதற்காரணப் பொருளிலும், 'மண்ணுலகின் வேறு விண்ணுலகம்' என வேற்றுமைக் கெதிர்ப்பொருளிலும், 'பாவத்தின் வெறுக்கின்றான்' என விடயப்பொருளிலும், ஐந்தனுருபு வருமெனக் கொள்க.

நீக்கப்பொருளிலும், எல்லைப்பொருளிலும், இன் இல் உருபுகளின்மேல், நின்று, இருந்து என்பவை, உம், பெற்றும் பெறாதுஞ் சொல்லுருபுகளாக வரும்.

**உ-ம்.:** ஊரினின்றும் போயினான், ஊரினின்று போயினான், ஊரிலிருந்தும் போயினான், ஊரிலிருந்து போயினான். இவை நீக்கப்பொருள்.

காட்டினின்றுமூர்காவதம், காட்டினின்றூர்காவதம்; காட்டிலிருந்து மூர்காவதம், காட்டிலிருந்தூர்காவதம். இவை எல்லைப்பொருள்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ-ள். ஐந்தாவ தன் உருபு இல்லும் இன்னும்** – ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் முன்சொல்லப்பட்ட இன்னுமாம், – **பொருள்** – அவ்வுருபுகளின் பொருள்களாவன, – **நீங்கல்** – நீங்கப் பொருளும், **ஒப்பு** – ஒப்புப் பொருளும், – **எல்லை** – எல்லைப்பொருளும், – ஏது – ஏதுப்பொருளுமாகிய அவ்வுருபுகளையேற்ற பெயர்ப் பொருள்கள் வேறுபட்ட இந்நான்குமாம்.

**(உதாரணம்)**

மலையின்வீழருவி ........................ நீர்கப் பொருள்

காக்கையிற்கரிது களம்பழம் ............... ஒப்புப் பொருள்

மதுரையின் வடக்குச் சிதம்பரம் .......... எல்லைப் பொருள்

கல்வியிற்பெரியன் கம்பன் .......... ஏதுப்பொருள்.

நீக்கப் பொருளாவது பிரிவையுண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவை மாந்திரந் தன்னிடத்துடைய பொருளாம். உ-ம். மலையின் வீழருவி என்புழி அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்குந் தொழில்; அது தன்னிடத்தில்லாமல் அவ்வீழ்ச்சியாலாகிய பிரிவொன்றையே தன்னிடத்துடையது மலையாதலால் மலை நீக்கப் பொருள். (அருவி வீழ்தற்கு மலையின் சரிவு காரணமாயினும் அதனையொழித்து அருவிமீது வைத்துப் பலரும் வழங்கினாரென்பது உற்றுநோக்கியறிக).

ஒப்புப் பொருளாவது உவமேயப் பொருளிலுந் தன்னிலு மிருக்கின்ற பொதுத் தன்மையால் உவமானமாகும் பொருள். உவமேயம் புகழ்பொருள் என்பன ஒரு பொருட் சொற்கள்.

உ-ம்.;-

காக்கையிற்கரிது களம்பழம் என்புழிக் களம்பழம் உவமேயம்; உவமேயத்திலுந் தன்னிலுமுள்ள பொதுத் தன்மை கருமை; அதனால் உவமானமாகிய பொருள் காக்கையாதலாற் காக்கை ஒப்புப்பொருள்.

எல்லைப் பொருளாவது அறியப்படாத பொருளின் திசையளவு

வழியளவு காலவளவு பண்பு முதலியவற்றைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

உ–ம்.;–

(1) மதுரையின் வடக்கு சிதம்பரம் என்புழி, அறியப்படாத சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்டபொருளாகிய மதுரையாதலால், மதுரை எல்லைப் பொருள்.

(2)கச்சியிற் றிருந்தணிகை முக்காவதம் என்புழி, அறியப்படாத திருத்தணிகையினது வழியளவை அறிவித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்ட பொருளாகிய கச்சியாதலாற் கச்சி எல்லைப் பொருள்.

(3)சாத்தனிலிரண்டாண்டு மூத்தவன், கொற்றன் என்புழி, அறியப்படாத கொற்றனுடைய பிராயத்தைக் குறிப்பித்தற்கு எலையாக நிற்கும் பொருள் அறியப்பட்ட சாத்தனாதலாற் சாத்தன் எல்லைப் பொருள்.

(4)அரசரிற்பெரியாந்தணர்; ஆவினிழிந்ததுமேதி என்புழி, அறியப்படாத அந்தணரும் மேதியுமாகிய பொருள்களின் உயர்வு தாழ்வுகளைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள்கள் அறியப்பட்ட அரசரும் ஆவுமாதலால், அரசரும் ஆவும் எல்லைப் பொருள்கள். இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப் பொருளென்பாருமுளர். உறழ்பொருள் என்பாருமுளர்.

ஏதுப்பொருளாவது ஒருபொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருளாம்.

உ–ம்.:–

கல்வியிற்பெரியன் கம்பன். என்புழிக், கம்பனுடைய பெருமைக்கு ஏதுக் கல்வியாதலாற் கல்வி ஏதுப்பொருள்.

இன்னும், மாயையிற்றோன்றியதுலகம் என முதற்காரணப் பொருளிலும், மண்ணுலகின் வேறு விண்ணுலகம் என வேற்றுமைக் கெதிர்ப்பொருளிலும், பாவத்தின் வெறுக்கின்றான் என விடயப்பொருளிலும், ஐந்தனுருபு வருமெனக் கொள்க.

நீக்கப் பொருளிலும், எல்லைப் பொருளிலும், இன் இல் உருபுகளின் மேல், நின்று, இருந்து என்பவை, உம் பெற்றும் பெறாதுஞ் சொல்லுருபுகளாக வரும்.

உ–ம்.:–

(1)ஊரினின்றும் போயினான்; ஊரினின்று போயினான். ஊரிலிருந்தும் போயினான்; ஊரிலிருந்து போயினான் இவை நீக்கப் பொருள்.

(2)காட்டினின்று மூர்காவதம், காட்டினின்றூர்காவதம்; காட்டிலிருந்து மூர்காவதம், காட்டிலிருந்தூர்காவதம் இவை எல்லைப் பொருள்.

நீக்கப்பொருளை அபாதானமென்பர் வடநூலார். அது சலாபாதானம், அசலாபாதானமென இருவகைப்படும்.

குதிரையினின்று மிறங்கினான் என்பது சலாபாதானம், சலம் என்பது இயங்கியற்பொருள். மலையினின்றுமிறங்கினான் என்பது அசலாபாதானம். அசலம் என்பது நிலையிற்பொருள்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஐந்தாவதன்** – ஐந்தாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளாவன, **இன்னும் இல்லும்** – (முன் சொல்லப்பட்ட) இன் என்பதே யன்றி இல் என்பதும் ஆகும்; **பொருள்** – அதன் பொருள்களாவன, **நீங்கல்** – நீங்குதற் பொருளும், **ஒப்பு** – உவமைப் பொருளும், **எல்லை** – எல்லைப் பொருளும், **ஏது** – ஏதுப் பொருளும் ஆகத் தன்னை ஏற்ற பெயரின் பொருளை வேறுபடுத்தல்; **எ–று.**

**உ–ம்.:**

மலையின் வீழருவி – நீக்கப் பொருள்.

காக்கையிற் கரிது களம்பழம் – ஒப்புப் பொருள்.

மதுரையின் வடக்குச் சிதம்பரம் – எல்லைப் பொருள்.

கல்வியிற் பெரியன் கம்பன் – ஏதுப் பொருள்.

எல்லைப்பொருள் – மதுரையின் வடக்குச் சிதம்பரம் எனத் திசையளவும், 'கச்சியில் திருத்தணிகை முக்காவதம்' என வழியளவும், சாத்தனில் இரண்டு ஆண்டு மூத்தவன் கொற்றன் எனக் காலவளவும், 'அரசரிற் பெரியர் அந்தணர்' எனப் பண்பளவும் முதலியன பற்றி வரும்.

'காக்கையிற் கரிது களம்பழம்' என உபமானமும் உபமேயமுமாக வருமிடத்தில், காக்கையின் – காக்கை போல எனப் பொருள்கொண்டால், ஒப்புப்பொருள்; இதனை உவமைப்பொரு வென்பர்; காக்கையின் – காக்கையைக் காட்டிலும் எனப் பொருள் கொண்டால், எல்லைப்பொருளாம்; இதனை உறழ்பொருவென்பர்.

நீக்கப்பொருளிலும், எல்லைப்பொருளிலும் – இன், இல் உருபுகளின் மேல் நின்று, இருந்து என்பவை சில இடத்துச் சொல்லுருபுகளாக வரும்.

**உ–ம்.:** ஊரினின்று நீங்கினான், ஊரிலிருந்து போனான், காட்டினின்று ஊர் காதம், காட்டிலிருந்து ஊர் காதம்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** ஐந்தாவதன் உருபு இல்லும் இன்னும்–ஐந்தாம் வேற்றுமையின் உருபாவன இல்லும் முன் சொல்லப்பட்ட இன்னுமாம். பொருள்–அவ்வுருபுகளின் பொருளாவன, நீக்கல்–நீக்கப்பொருளும்ய, ஒப்பு –ஒப்புப்பொருளும், எல்லை–எல்லைப்பொருளும், ஏது–ஏதுப்பொருளுமாகி அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்களை வேறுபடுத்துவதாம். **எ–று.**

எனவே, (1) நீக்கப்பொருளும் (2) ஒப்புப்பொருளும் (3) எல்லைப்பொருளும் (4) ஏதுப்பொருளும் ஐந்தாம் வேற்றுமைக்குரிய இல், இன் என்னும் உருபுகளின் பொருள்களாம்.

உ–ம்.:–

மலையின் வீழருவி....................... நீக்கப்பொருள்.

காக்கையிற் கரிது களம்பழம்.......................ஒப்புப்பொருள.

மதுரையின் வடக்குச் சிதம்பரம்.......................எல்லைப்பொருள்.

கல்வியிற் பெரியன் கம்பன்.......................ஏதுப்பொருள்.

(1) நீக்கப்பொருளாவது பிரிவையுண்டாக்குந் தொழிலின்றிப் பிரிவைமாத்திரந் தன்னிடத்துடைய பொருளாம்.

உ–ம்.:– 'மலையின் வீழருவி' என்புழி, அருவியின் வீழ்ச்சி பிரிவையுண்டாக்குந் தொழில்; அது தன்னிடத்தில்லாமல் அவ் வீழ்ச்சியாலாகிய பிரிவொன்றையே தன்னிடத்துடையது மலையாதலால், 'மலை' நீக்கப்பொருள்.

(2)ஒப்புப்பொருளாவது உவமேயப்பொருளிலுந் தன்னிலு மிருக்கின்ற பொதுத்தன்மையால் உவமானமாகும் பொருளாம். உவமேயம் புகழ்பொருள் என்பன ஒருபொருட்சொற்கள்.

உ–ம்.:– 'காக்கையிற் கரிது களம்பழம்' என்புழிக், களம்பழம் உவமேயம்; உவமேயத்திலுந் தன்னிலுமுள்ள பொதுத்தன்மை கருமை; அதனால் உவமானமாகிய பொருள் காக்கையாதலாற் 'காக்கை' ஒப்புப் பொருள். (காக்கையின் = காக்கைபோல).

(3) எல்லைப்பொருளாவது அறியப்படாத பொருளினது திசையளவு வழியளவு காலவளவு பண்பு முதலியவற்றைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

உ–ம்.:– (1) 'மதுரையின் வடக்குச் சிதம்பரம்' என்புழி, அறியப்படாத சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்பது அறியப்பட்ட பொருளாகிய மதுரையாதலால், 'மதுரை' எல்லைப்பொருள்.

(2) 'கச்சியிற் றிருத்தணிகை முக்காவதம்' என்புழி, அறியப்படாத கொற்றனுடைய பிராயத்தைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள் அறியப்பட்ட சாத்தனாதலால், 'சாத்தன்' எல்லைப்பொருள்.

(4) 'அரசரிற் பெரிய ரந்தணர்;' 'ஆவினிழிந்தது மேதி' என்புழ, அறியப்படாத அந்தணரும் மேதியுமாகிய பொருள்களின் உயர்வு தாழ்வுகளைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருள்கள் அறியப்பட்ட அரசரும் ஆவுமாதலால், 'அரசரும் ஆவும்' எல்லைப்பொருள்கள். இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப்பொரு ளென்பாரு முளர்.

(4) ஏதுப்பொருளாவது ஒருபொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருளாம்.

உ–ம்.:– 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்புழிக், கம்பனுடைய பெருமைக்கு ஏக் கல்வியாதலால், 'கல்வி' ஏதுப்பொருள்.

இன்னும் 'மாயையிற் றோன்றியதுலகம்' என முதற்காரணப் பொருளிலும், 'மண்ணுலரகின் வேறு விண்ணுலகம்' என வேற்றுமைக் கெதிர்ப்பொருளிலும், 'பாவத்தின் வெறுக் கின்றான்' என விடயப்பொருளிலும் ஐந்தனுருபு வருமெனக் கொள்க.

நீக்கப்பொருளிலும், எல்லைபொருளிலும், இன் இல் உருபு களின்மேல், நின்று இருந்து என்பவை, 'உம்' பெற்றும் பெறாதும் சொல்லுருபுகளாக வரும்.

உ–ம்.:– (1) ஊரினின்றும் போயினான்; ஊரினின்று போயினான்; ஊரிலிருந்தும் கோயினான், ஊரிலிருந்து கோயினான். – இவை நீக்கப்பொருள்.

(2) காட்டினின்று மூர் காவதம், மூர் காவதம், காட்டினின் றூர் காவதம்; காட்டிலிருந்து மூர்காவதம், காட்டிலிருந்தூர் காவதம்.–இவை எல்லைப்பொருள்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்) ஐந்தாவதன உருபு– ஐந்தாம் வேற்றுமையினுடைய உருபுகளானவை இல்லும் இன்னும் – இல்லும் (முன் சொல்லப்பட்ட) இன்னுமாம்;பொருள்– அவ்வுருபுகளின் பொருள்களாவன, நீங்கல்–நீக்கல் பொருளும், ஒப்பு–ஒப்புப்பொருளும், எல்லை–எல்லைப் பொருளும், ஏது–ஏதுப் பொருளுமாகிய, (அவ்வுருபுகளை ஏற்ற பெயர்ப் பொருள்கள் வேறுபட்ட) இந் நான்குமாம். (எ–று)

(பொ–ரை.) ஐந்தாம் வேற்றுமையினது உருபு இல், இன் என்பவைகளேயாம்; அவற்றின் பொருளாவன: நீங்கற் பொருளாகவும், ஏதுப் பொருளாகவும், தம்மை ஏற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம்.

(உ–ம்) மலையின் வீழருவி
நிக்கப்பொருள்.

காக்கையிற் கரிது களம்பழம்
ஒப்புப்பொருள்.

மதுரையின் வடக்குச் சிதம்பரம்
எல்லைப்பொருள்.

கல்வியிற் பெரியன் கம்பன்
ஏதுப்பொருள்.

நிக்கப்பொருளாவது பிரிவையுண்டாக்குத் தொழிலின்றிப் பிரிவைமட்டும் தன்னிடத்திலுடைய பொருளாம்.

'மலையின் வீழருவி' என்கிறவிடத்தே, அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்குந் தொழிலாம், அது தன்னிடத்தில்லாமல் பிரிவொன்றையே தன்னிடத்துடைய தாதலால், மலை நீக்கப் பொருளாமெனக் கொள்க.

ஒப்புப்பொருளாவது புகழ்பொருளிலும் தன்னிலு மிருக்கின்ற பொதுத்தன்மையால், உபமானமாகிற பொருளாம்.

'காக்கையிற் கரிது களம்பழம்' என்கிறவிடத்தே, களம்பழம் புகழ்பொருளாம், புகழ்பொருளிலும் தன்னிலுமுள்ள பொதுத் தன்மை கருமையாம், அதனால் உபமானமாகிய பொருள் காக்கை யாதலறிக. (புகர்பொருள்–உபமேயம்.)

எல்லைப்பொருளாவது ஒரு பொருளினது திசையளவைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

'மதுரையின் வடக்குச் சிதம்பரம்' என்கிறவிடத்தே, அறியப்படாத பொருளாகிய சிதம்பரத்தினது திசையைக் குறிப்பித்தற்கு அறியப்பட்ட பொருளாகிய மதுரை எல்லைப்பொரளான்மையறிக.

இன்னும் 'கச்சியிற் றிருத்தணிகை முக்காலதம்' என வழியளவிலும், 'அவனிலிவ னிரண்டாண்டு மூத்தவன்' எனக் கால அளவிலும் எல்லைப்பொருள் வருமெனக் கொள்க. அல்லாமலும் 'அரசரிற் பெரிய ரந்தணர்,' 'ஆவினிழிந்தது மேதி' என்றாற்போல உயர்வு தாழ்வுகளைப் பற்றியும் எல்லைப்பொருள் வரும். இவற்றுள் அந்தணரது பெருமைக்கு அரசரும், மேதியினிழிவிற்கு ஆவும் எல்லைகளாதல் காண்க. இவ்வுயர்வுதாழ்வுகளை நீக்கப் பொருளென்பாரு முளர்.

ஏதுப்பொருளாவது ஒரு பொருளின் பெருமை முதலியவற்றிற்கு ஏதுவாகும் பொருளாம்.

'கல்வியிற் பெரியன் கம்பன்' என்பதில் கம்பன் பெரிய னாதற்குக் கல்வி ஏதுவாத லறிக.

இன்னும் 'கடவுளிற்றோன்றிய துலகம்' என் முதற்காரணப் பொருளாகுகை முதலானவையும் கொள்க.

இன்னும், 'மண்ணுலகின் வேறு விண்ணுலகம்', 'தீவினையின் வெறுக்கின்றன' என இப்படி வேற்றுமைக் கெதிர்பொருளிலும், விளயப்பொருளிலும் வருவனவெல்லாம் கொள்க.

இல், இன் உருபுகள் சிலவிடங்களிலே உம்மை பெற்றும் வரும். அவை 'அவனிலும் பெரியன் இவன், 'இவனினும் சிறியன் அவன்' என வருதல் காண்க.

நிக்கப் பொருளிலும், எல்லைப் பொருளிலும், இன் இல் உருபுகளின்மேல், நின்று, இருந்து என்பவை, உம் பெற்றதும் பெறாதும் சொல்லுருபுகளாக வரும்.

(உ–ம்) (1) ஊரினின்றும் போயினான்; ஊரினின்று போயினான். ஊரிலிருந்தும் போயினான்; ஊரிலிருந்து போயினான். இவை நீக்கப்பொருள்.

(2) காட்டினின்றும் ஊர் காவதம்; காட்டினின்று ஊர் காவதம்.

காட்டிலிருந்தும் ஊர் காவதம்; காட்டிலிருந்து ஊர் காவதம். இவை எல்லைப்பொருள்.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஐந்தாவதன்** – ஐந்தாம் வேற்றுமையின், **உருபு** – உருபுகளானவை, **இல்லும் இன்னும்** – இல்லும் இன்னுமாம், **பொருள்** – அவ்வுருபுகளின் பொருள்களாவன, **நீங்கல்** – நீக்கப் பொருளும், **ஒப்பு** – ஒப்புப் பொருளும், **எல்லை** – எல்லைப் பொருளும், **ஏது** – ஏதுப்பொருளுமாகிய இந்நான்குமாம்.

**உதாரணம்**

மலையின் வீழருவி – நீக்கப்பொருள்.
காக்கையிற்கரிது களம்பழம் – ஒப்புப்பொருள்.
மதுரையின் வடக்குச் சிதம்பரம் – எல்லைப்பொருள்.
கல்வியிற் பெரியன் கம்பன் – ஏதுப்பொருள்.

நீக்கப்பொருளாவது, பிரிவை யுண்டாக்கும் தொழிலின் பிரிவை மட்டும் தன்னிடத்திலுடைய பொருளாம்.

**மலையின் வீழருவி** என்னுமிடத்தே – அருவியின் வீழ்ச்சி பிரிவை யுண்டாக்கும் தொழிலாம். அது தன்னிடத்தில்லாமல் அவ்வீழ்ச்சியாலாகிய பிரிவொன்றையே தன்னிடத்துடையது மலையாதலால், மலை நீக்கப்பொருளாம்.

ஒப்புப்பொருளாவது, உவமேயப் பொருளிலும் தன்னிலும் இருக்கும் பொதுத் தன்மையால் உபமானமாகும் பொருளாம்.

**காக்கையிற் கரிது களம்பழம்** என்னும் இடத்தே – உவமேயப்பொருளிலும் தன்னிலுமுள்ள பொதுத்தன்மை கருமையாம் ; அதனால், உவமானப் பொருளாகிய காக்கை ஒப்புப்பொருளாம்.

'காக்கையிற் கரிது களம்பழம்' என உபமானமும் உபமேயமுமாக வருமிடத்தில், காக்கையின் – காக்கைபோல எனப் பொருள் கொண்டால் ஒப்புப்பொருள் ; காக்கையின் – காக்கையைக்

காட்டிலும் எனப் பொருள்கொண்டால் எல்லைப் பொருளாம் ; இதனை உறழ்பொருள் என்றும் கூறுவர்.

எல்லைப் பொருளாவது, ஒருபொருளினது திசையளவைக் குறிப்பித்தற்கு எல்லையாக நிற்கும் பொருளாம்.

**மதுரையின் வடக்குச் சிதம்பரம்** என்னும் இடத்தே – அறியப்படாத பொருளாகிய சிதம்பரத்தில் திசையைக் குறிப்பித்தற்கு அறியப்பட்ட பொருளாகிய மதுரை எல்லைப் பொருளாம்.

இன்னும், **கச்சியின் தணிகை முக்காவதம்** என வழியளவிலும், **அவனின் இவன் இரண்டாண்டு மூத்தவன்** எனக் காலவளவிலும் எல்லைப்பொருள் வருமெனக் கொள்க. அன்றியும், **அரசரிற் பெரியர் அந்தணர். ஆவின் இழிந்தது எருமை** என்றாற்போல உயர்வு தாழ்வுகளைப் பற்றியும் எல்லைப்பொருள் வரும். இவற்றுள், அந்தணரது பெருமைக்கு அரசரும் ; எருமையின் இழிவிற்கு ஆவும் எல்லைகளாதல் காண்க. இவ்வுயர்வு தாழ்வுகளை நீக்கப்பொருள் என்பாரும் உளர்.

ஏதுப்பொருளாவது, ஒரு பொருளின் சிறப்புக்கு ஏதுவாகும் பொருளாம்.

**கல்வியிற் பெரியன் கம்பன்** என்னுமிடத்தே – கம்பன் பெரியனாதற்குக் கல்வி ஏதுவாத லறிக. இன்னும், **கடவுளிற் றோன்றியது உலகம்,** என முதற்காரணப் பொருளாகுதல் முதலானவையும் கொள்க.

இல், இன் – உருபுகள் சில இடங்களிலே உம்மைபெற்றும் வரும். அவை,

அவனிலும் பெரியவன் இவன், இவனினும் சிறியவன் அவன் என வருதல் காண்க.

நீக்கப் பொருளிலே இல், இன் – உருபுகளின்மேல், **நின்று, இருந்து** என்பவை ஒரோவிடத்துச் சொல்லுருபுகளாக வரும்.

ஊரி**னின்று** நீங்கினான், ஊரி**லிருந்து** போனான்,

## மோசகு பொன்னையா

ஐந்தாம் வேற்றுமையின் உருபுகள் முன்னர்ச் சொல்லப்பட்ட3 இன் என்பதனோடு இல் என்னும் ஒன்றுமாக இரண்டாகும்; நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது என்னும் நான்கும் அதன் பொருள்களாம் எ–று.

| | | |
|---|---|---|
| மலையின் வீழ்வது அருவி, | – | நீக்கம் |
| காக்கையின் கரிது களம்பழம் | – | ஒப்பு |
| நெல்லையின் வடக்கு செப்பறை | – | எல்லை |
| கல்வியிற் பெயரிவர் கம்பர் | – | ஏது |

–இவ்வாறு எடுத்துக்காட்டுவர்.

ஐந்தாம் வேற்றுமை பற்றித் தொல்காப்பியர்,

ஐந்தா குவதே

இன்னெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி

இதனின் இற்றிது வென்னு மதுவே

எனவும்,

வண்ணம் வடிவே யளவே சுவையே
தண்மை வெம்மை அச்சம் என்றா
நன்மை தீமை சிறுமை பெருமை
வன்மை மேன்மை கடுமை யென்றா
முதுமை இளமை சிறத்தல் இழித்தல்
புதுமை பழமை ஆக்க மென்றா
இன்மை யுடைமை நாற்றந் தீர்தல்
பன்மை சின்மை பற்று விடுதலென்
றன்ன பிறவும் அதன்பால வென்மனார்,

எனவும் கூறியுள்ள நூற்பாக்களின் வழிநின்று நச்சினார்க்கினியர், 'இதனின் என்பது காக்கை; இற்று என்பது கரிது; இது என்பது களம்பழம்' எனப் பொருத்தமுற இதனின் இற்றிது என்னும் வாய்பாட்டிற்கு விரிவு காட்டியதற்கேற்ப வண்ணம் முதல் பற்று விடுதல் ஈறாக அமைத்துக் கூறப்பட்டவற்றை விரித்துக் காணின், பொருவுப்பொருள் ஒன்றேயன்றி வேறு பொருளேதுங் காணற்கு இடமில்லை. அவ்வாறாகவும், ஐந்தாம் வேற்றுமைக்குப் பொருவுப்பொருளோடு எல்லை. ஏது, நீங்கற் பொருள்களை இளம்பூரணர், சேனாவரையர் நச்சினார்க்கினியர், கல்லாடர் முதலியோர் கூட்டிக் கூறினர்; தெய்வச்சிலையார் அவற்றுள் எல்லைப்பொருளை விடுத்து ஏனை மூன்றையுங் கூறினார். அவர்கள் எல்லை, ஏது, நீக்கப் பொருட்களுக்குக் காட்டியுள்ள எடுத்துக்காட்டுகள் 'இதனின் இற்றிது' எனத் தொல்காப்பியர் அமைத்துக் காட்டிய வாய்பாட்டின்வழி அமையவில்லை என்பது வெளிப்படை.

சேனாவரையர், 'எல்லைப்பொருள் கருவூரின் கிழக்கு, இதனின் ஊங்கு எனவரும். கிழக்கு ஊங்கு என்பன வினைக்

குறிப்பல்லவேனும், இற்றென்னும் பொருள்பட நிற்றலின், இற்றென்றலே யாம்', எனக் கூறித் தாம் வலிந்து பொருள் கண்டுள்ளமையை ஓராற்றன் புலப்படுத்தியுள்ளமையை அறிக.

தொல்காப்பியர், சிறப்பு, உறவு உரிமைகள்; நில, இட, பண்பு, கால வரையறைகள் ஆதியாகக் குவ்வுருபு பண்டு தொட்டு வழங்கி வந்தமை கண்டு 'இதனதிது விற்று' என்னும் நூற்பாவால் அவ்வழக்கைத் தழீஇக் கொண்டார் என்பதும், அதன்கண் அமைந்த பற்றுவிடு கிளவியும், தீர்தல் கிளவியும்

பெயர்ச் சொற்கள் குவ்வுருபேற்று நீக்கற் பொருளில் வருவதையே உணர்த்தின என்பதும், எட்டென வரையறுத்த வேற்றுமை வழக்குகள் உள்ளமை கண்டு அவற்றை ஓராற்றான் அமைக்கவே அவை பற்றி வேற்றுமை மயங்கியலிற் கூறினார் என்பதும் முந்தின நூற்பாவின் உரையில் விளங்கக் கூறப்பட்டன. எனவே, இந்நூற்பாவில் வரும் தீர்தல், பற்றுவிடுதல் என்பவற்றிற்கு 'இதனின் இற்றிது' என்னும் வாய்பாட்டு மரபுக்கேற்ப எமக்கு இளமையிலேயே முதுமையிற் றீர்ந்தது இன்பம் எனவும், மாரிகாலத்தும் கோடையிற் புலர்ந்தது ஈரம் எனவும் இவ்வாறு எடுத்துக்காட்டுத் தந்து விளக்குவதே பொருந்துமே யல்லாமல், நீக்கப் பொருள் புகுத்தி வெறெவ்வாறு எடுத்துக்காட்டுத் தருவதும் பொருந்தாது எனக்கொள்க. இவ்வாறே காரணமாகிய கருவிப் பொருளில் ஆக்கம் பற்றி, 'வினையே வினைக்குறிப்பு' அடிப்படையில் இன், ஆன் என்னும் இரு உருபுகளை ஒருங்கே பெற்றும், தனித்தனியே அவற்றுள் ஒன்றைப் பெற்றும் வாணிகத்தின்னான் ஆயினான், வாணிகத் தான் ஆயினான், வாணிகத்தின் ஆயினான் என இவ்வாறு வருவனவற்றை,

**மூன்றனும் ஐந்தனும் தோன்றக் கூறிய**
**ஆகமொடு புணர்ந்த ஏதுக் கிளவி**
**நோக்கோ ரனைய என்மனார் புலவர்,**

எனக் கூறி அது மூன்றாம் வேற்றுமைப் பொருளில் வரும் உருபு மயக்கமே என்பதை ஏதுக்கிளவி என்பதனாற் புலப்படுத்தி நூற்பா செய்தார். ஐந்தாம் வேற்றுமைப் பொருளை உரைக்கும் நூற்பாவில் ஆக்கம், அச்சம் என்னுஞ் சொற்கள் வருதல் கண்டு அவற்றிற்கு 'இதனின் இற்றிது' என்னும் வாய்பாட்டுப் பொருள் மரபிற்கேற்ப, கடலிற் பெருகிற்று காமம், பூனையின் அஞ்சிற்று புலி என இவ்வாறு எடுத்துக்காட்டிப் பொருவுப் பொருள் விரிப்பதே ஏற்பயுடையதாதால் அறியாது, வாணிகத்தின் ஆயினான், புலியின் அஞ்சும் என எடுத்துக்காட்டுத் தந்து ஏதுப்பொருள் காண முயல்வது எவ்வாற்றனும் பொருந்தாமை அறிக. உரையாசிரியர்கள் இவ்வாறு பொருவுப் பொருள் அல்லாப் பிற பொருள்களை ஐந்தாம் வேற்றுமைக்கண் ஏற்றிக் காண முயன்றுள்ளவாறே நேமினாத ஆசிரியர்,

**இன்னுருபைந் தாவ திதனினித் தன்மைத்தி**
**தென்னு மொருநான் கிடத்து,1**

என்றாராக, அதன் உரைகாரர் 'இன் உருபு ஐந்தாம் வேற்றுமை; அதுதான் இதனின் இத்தன்மைத்து இது என்னும் உவமம்,

குறிப்பு:–

1. நேமி. 43

நீக்கம், எல்லை, ஏது என்னும் நான்கிடத்தும் வரும்' என உரைத்தார். இவையே இவ்வாசிரியர் இவ்வாறு நூற்பா செய்தமைக்குக் காரணமாம் எனக் கொள்க. உரையாசிரியன் மாரும், பிற்கால இலக்கண நூலாரும் வாழ்ந்த காலத்தில் வடமொழி பெற்றிருந்த செல்வாக்கே, அவர்கள் இவ்வாறு வடமொழி இலக்கண மரபுகளைத் தமிழ் இலக்கண மரபுகளிடைப் புகுத்திக் காண முற்பட்டதற்குக் காரணம் எனலாம். இவ்வாறே இலத்தீன் மொழி செல்வாக்குப் பெற்றிருந்த காலத்தில் பிற ஐரோப்பிய மொழிகளின் இலக்கண மரபுகளில் இலத்தீன் இலக்கண மரபுகளைப் புகுத்துவதில் இலத்தீன் வல்ல ஆசிரியர் முனைந்திருந்தனர் என்பதை யெசு பெர்சன் கூறுவதால்[1] அறிகிறோம்.இவ்வாற்றான், ஐந்தாம் வேற்றுமைக்குப் பொருள் பொருவு ஒன்றே என்பது போதரும். ஒன்றெனப்பட்ட குணப்பண்போ,தொழிற்பண்போ பெற்றுள்ள இரு வேறு பொருட்களைப் பொருவி (பொருத்தி)க் காட்டி நிற்பதே பொருவுப் பொருளாகும் என்பது தொல்காப்பிய நூற்பாக்களாற் புலனாகின்றது.[2] எனவே, இரு வேறு பொருள்களிடை ஒருபுடை ஒத்தும், ஒவ்வாதும் வினை, பயன், மெய், உரு என்னும் நான்கன் அடிப்படையில் ஒப்பிற்போலியாக ஒப்ப உரைக்கப்படும் உவமை போலல்லாது[3], பொருவுங்கால் முழுதும் ஒத்துநிற்கும் நிலையும், மிக்கோ குறைந்தோ எச்சப்பட்டு நிற்கும் நிலையுமாகிய தன்மைகளைத் திட்டவட்டமாக உரைப்பது பொருவுப் பொருளுக்கு இன்றியமை யாததாகும்[4] என்பது போதரும். சான்றோர் செய்யுட்களில், மிக்கும் குறைந்தும் எச்சப்பட்டு நிற்கும் நிலையில் பொருவுப் பொருளுக்குரிய இன்னுருபோடு எச்சப்பொருள் உணர்த்தும் உம்மையும் சேர்த்து,

**நின்னினு நல்ல னன்றே**
**கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**
**மிகப்புக ழுலக மெய்திப்**
**புறப்புண் ணானி வடக்கிருந் தோனே,**[5]

எனவும்,

**ஆர்ப்பெழு கடலினும் பெரிதே**'[6] எனவும்,

---

குறிப்புகள்:–

1. Language etc. p. 23.
2. தொல். சொல். 77, 78
3. தொல், உவம. 1
4.தொல்.சொல், 414, நச்சர் உரை
5.புறம். 66
6.புறம்; 6.

**நீரினு மினிய சாயல்,**[1]

எனவும் வழங்கியுள்ள மரபே காணப்படுவதால், இன்னுருபாற் குறிக்கப்படும் பொருவுப் பொருள் முழுதும் ஒத்தலேயாம் எனக் கொள்க. பிற்காலத்தல் ஆவினிழிந்தது மேதி என இவ்வாறு உம்மை இன்றி வழங்குவனவும் உண்டாயின. கல்லாடர் நீங்கலாக ஏனைய தொல்காப்பிய உரைகாரர் அனைவரும் முழுதும் ஒத்தலை உவமப்பொருவு எனவும், மிக்கும் குறைந்தும் எஞ்சி நிற்றலை உறழ்பொருவு எனவும் குறிப்பிட்டனர். கல்லாடர் உறழ்பொருளே பொருவுப் பொருள் என்னும் கருத்தினர் என்பது அவர் உரையாற் புலனாகின்றது.

இந்நூற்பாவிற்கு யாம் காட்டிய எடுத்துக்காட்டுகள் நூலாசிரியரின் நூற்பா விளக்கத்திற்காகக் காட்டப்பட்டவை. நீங்கல், எல்லை, ஏதுப்பொருட்கள் ஐந்தன் பொருளிலும் வேறானவை என்பதும் ஏழாம் வேற்றுமை பற்றிய ஆராய்ச்சி யுரையில் விளக்கப்படும்; ஆண்டுக் கண்டுகொள்க.

(42)

**299. ஆற னொருமைக் கதுவு மாதுவும்**
**பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்**
**பொன்றன் கூட்டம் பலவி னீட்டம்**
**திரிபி னாக்க மாந்தற் கிழமையும்**
**பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.**

ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்
பன்மைக்கு அவ்வும் உருபுஆம் பண்பு உறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆம் தற்கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

---

பாட வேறுபாடு:–

1. புறம். 105.

ārai̱ orumaikku aṭuvum āṭuvum
pai̱maikku avvum urupuām paṇpu uūuppu
oi̱ūai̱ kūttam palavii̱ īttam
ṭiripii̱ ākkam ām ṭai̱ kiḷamaiyum
piūiṭii̱ kiḷamaiyum pēṇuṭal poruḻē.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### The sixth or genitive case

The signs of the 6th case are atu and atu afor singular (property) and a for the plural; it signifies the possession of natural properties such as 'quality' and 'member' and 'collection of the same or of different kinds (of things);— and of the various kinds) accidental properties.

## ஒப்புமைப் பகுதி

ஆறா குவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் இதனது இதுவெனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே

(தொல். சொல்.: 79)

இயற்கையின் உடைமையின் முறைமையின் கிழமையின்
செயற்கையின் முதுமையின் வினையி னென்றா
கருவியின் துணையின் கலத்தின் முதலின்
ஒருவழி யுறுப்பின் குழவி னென்றா
தெரிந்து மொழிச் செய்தியின் நிலையின் வாழ்ச்சியின்
திரிந்துவேறு படூஉம் பிறவு மன்ன
கூறிய மருங்கில் தோன்றுங் கிளவி
ஆறன் பால என்மனார் புலவர்

(தொல். சொல்.: 80)

அது என்பது தாறாம் உருபாம் இதன
திதுவென் கிழமையிரண் டெய்தும்...

(நேமி.: 44:.1–2)

ஆறனொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டம்
திரிபி னாக்க மாந்தற் கிழமையிற்
பொருளிடங் காலமாம் பிறிதின் கிழமையி
னிதனதிது வெனவரூஉ மதனது பொருளே

(இ.வி.: 203)

ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்
பன்மைக்கு அவ்வும் உருபுஆம் பண்பு உறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் சேர்ந்த தற்கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே

(தொ.வி.: 61)

ஒருமைக் கதுவு மாதுவும் பன்மைக்
கவ்வு மாறா வதற்குரு பாகும்

(மு.வீ.: 52)

அதன்பொருள் குணமுறுப் பொன்றன் கூட்டந்
திரிபி னாக்கமொடு பலவி னீட்டம்
ஆந்தற் கிழமையும் பிறிதின் கிழமையும்
ஆகு மென்மனா ரறிந்திசி னோரே

(மு.வீ.: 522)

ஆறு அது ஆது அவ்வுடைய உருபு ஏற்குங் கருத்தன்
அவற்றினிற்றற் கிழமைசினை குணம் தொழிலாய்ப் பிறிதின்
பெறுபொருள் இடம் கால மாய்ச்சம் மந்தப்போர்
பெற்று முடித் திடும்............

(சுவாமி.: 43: 2–3)

## மயிலை நாதர்

எ–ன், நிறுத்த முறையானே ஆறாம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:** ஆறாம் வேற்றுமையின் [1]ஒருமைப் பொருண்மைக்கு [2]அதுவும் ஆதுவும், பன்மைப் பொருண்மைக்கு அவ்வும் உருபாம். பண்பும் உறுப்பும் ஒருபொருட்டிரட்சியும் பலபொருட்டிரட்சியும் ஒன்று திரிந்து ஒன்றாதலுமாகும் [3]ஐந்து தற்கிழமையும் பிறிதின் கிழமையும் போற்றுதல் அதற்குப் பொருளாம், **எ—று.**

"ஆற னுருபே [4]யதுவா தவ்வும்
வேறொன் றுரியதைத் தனக்குரியதையென
விருபாற் கிழமையின் [5]மருவுற வருமே
ஐம்பாலுரிமையு மதன்றற் கிழமை"

என்றார், அகத்தியனார்.

**வ—று.:—**

சாத்தனது இயல்பு; இளமை, வன்மை, குறுமை, உண்மை, நன்மை, நிறம், உணர்வு, கல்வி, கேள்வி என்பவை பண்புத் தற்கிழமை; சாத்தனது செலவு; நிலை, இருக்கை, உணவு, செய்கை [6]என்றற் றொடக்கத்து வினைகளும் ஈண்டுத் தொழிற்பண்பாயடங்கு மெனக் கொள்க. சாத்தனது கை, யானையது கோடு, வாழையது பழம், [7]தேரது தட்டு, செய்யுளதடி என்பன உறுப்புத் தற்கிழமை; நெல்லது குப்பை, எள்ளது ஈட்டம், கொள்ளதுகுழாம், ஆனையதுதொகை, மாந்தரது தொகுதி யென்பன ஒன்றன் கூட்டத் தற்கிழமை; படையது தொகை, விலங்கினது ஈட்டம், மரத்தது குழாமென்பவை [8]பலவினீட்டத் தற்கிழமை; கொள்ளதுநூறு, எள்ளது சாந்து, நெல்லதுசோறு, பயற்றது கும்மாயமென்பவை திரிபுத்தற் கிழமை; சாத்தனது ஆடை, அரசனது ஆழி, ஆவினது கன்று, கபிலரது பாட்டு என்பவை பிறிதின்கிழமை. [9]எனாதுகை, தனாதுதாள், நினாதுநிறம் எனவும், எனாதெயில்,

---

பாட வேறுபாடு:—

1. ஒருமைக்கு
2. அதுவென்பதுவும் ஆதென்பதுவும்
3. இந்த ஐந்து
4. அதுவும்ஆதுவும் வேறொன் றுடையதை
5. பொருளுற்றுவருமே
6. என்றற் றொடக்கத்தன
7. தேரதுசெதிள், தட்டு, தடி
8. (1) பலகுழீஇய தற்கிழமை; (2) பலவியற்றற்கிழமை
9. எனது, எனாது. . . . .

நினாதுநிலம், தனாதுதரை எனவும் இருகிழமைக்கண்ணும் அதுவும் ஆதுவும் வந்தவாறு. எனகைகள், நினதோள்கள், தனதாள்கள் எனவும், எனயானைகள், நினநிரைகள், தனதானைகள்,

"உய்த்துச், சொரியினும் போகா தம"

(குறள். 376)

எனவும் இரு கிழமைக்கண்ணும் அகரவுருபு வந்தவாறு.

## சங்கரநமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ **–னின்,** ஆறாம் வேற்றுமையது இலக்கணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:** ஆறாம் வேற்றுமையினது ஒருமைப் பொருண்மைக்கு மேற்கூறிய அது என்பதே யன்றி ஆது என்பதும் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம்; அவற்றின் பொருளாவன குணமும் தொழிலுமாய பண்பும் சினையும் ஒருபொருட் கூட்டமும் பலபொருட் கூட்டமும் ஒன்று திரிந்து ஒன்றானதுமாகிய ஐந்து தற்கிழமைப் பொருளினையும் பிறிதின்கிழமைப் பொருளினையும் உடையதாகத் தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தலாம் **எ – று.**

கிழமை என்பது ஆகுபெயர்.

**வ–று.:**

***நிலத்ததகலம்***, சாத்தனதியல்பு, சாத்தனது நன்மை, சாத்தனதிருக்கை, சாத்தனது நிலை, சாத்தனது வரவு, கபிலரது பாட்டு எனவும்; சாத்தனது கை, சாத்தனது கால் எனவும்; மாந்தரது தொகுதி, நெல்லது குப்பை எனவும்; படையது தொகை, விலங்கினதீட்டம் எனவும்; நெல்லினது பொரி, கோட்டது நூறு எனவும் ஐவகைத் தற்கிழமையும் முறையே வந்தன. ஒன்றன்கூட்டத் தற்கிழமை மாறிக் குப்பையது நெல் என வரின் உறுப்புத் தற்கிழமை. பலவினீட்டம் மாறி நிற்பினும் அது. சாத்தனது ஆடை, சாத்தனது பிள்ளை எனப் பிறிதின்கிழமை வந்தன. பாட்டு என்பது வரிவடிவை நோக்கிய காலத்துப் பிறிதின்கிழமையாம். எனாது கை, தனாது தாள், எனாது நிலம், தனாது எயில் என ஆதுருபோடும் என கைகள், தன தாள்கள், என யானைகள், தன தானைகள் என அகரவுருபோடும் ஒட்டுக.

சாத்தனது ஆடை என்புழிச் சாத்தனது கை என்றாற் போலாது ஆடைக்குச் சாத்தன் பிறிதாதலின் அப்பிறிதினது கிழமை பிறிதின்கிழமை எனப்பட்டது.

அஃறிணை ஒருமை பன்மைகட்கு இயைந்த உருபு இங்ஙனம் கூறவே, உயர்திணை ஒருமை பன்மையாகிய கிழமைப் பொருட்கு இவ்வுருபுகள் ஏலா என்பது பெற்றாம். அவை

வருங்கால் அவனுடைய விறலி, அவனுடைய விறலியர் என மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாய் முன்னது எழுவாய்ச் சந்தியும் பின்னது பெயரெச்சக் குறிப்புச் சந்தியுமாம் என்க. அவன் விறலி என்புழி உடைய என்பது இசையெச்சம். சாத்தனுடைய இயல்பு, சாத்தனுடைய கை என்றற் றொடக்கத் தனவும் அன்ன. இவற்றை ஆறாம் வேற்றுமைச்சந்தி என்றும், உடைய என்பதனைச் சொல்லுருபு என்றும் கூறுவாரும் உளர். ஆசிரியர் தொல்காப்பியனாரும் உயர்திணையொருமை பன்மைகட்கு இவ்வுருபுகள் ஏலா என்பது கருதி.

**"அதுவென் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின்**
**அதுவென் உருபுகெடக் குகரம் வருமே"**

என்றார்.

ம்இவ்வாறாம் வேற்றுமைப்பொருளாகிய குறைப்பொருள் ஒற்றுமை வேற்றுமையென உரைக்கப்படும் எனவும்; அவற்றுள் ஒற்றுமையாவது ஓர் பொருளேயாகும் எனவும்; வேற்றுமை யாவது ஒன்றாய்த் தோன்றல், உரிமையாய்த் தோன்றல், வேறாய்த் தோன்றல் என மூவகைப்படும் எனவும்; அம்மூவகை யுள் ஒன்றாய்த் தோன்றல் ஒன்றன் கூட்டம், பலவின் ஈட்டம், திரிபின் ஆக்கம் சினை, குணம் தொழில் என அறுவகைப்படும் எனவும்; உரிமையாய்த் தோன்றல் பொருள், இடம், காலம், இருவகை நூல் என ஐவகைப்படும் எனவும்; வேறாய்த் தோன்றல் வேறிடத்தும் செலும் நிலைமையில் உடைமைகள் பலவுமாகும் எனவும் கொள்ளப்படும்.

உ – ம்:– என்னுயிர், இராகுத்தலை என்றாற்போல்வன ஒற்றுமை. வேற்றுமை வகையுள் ஒன்றாய்த் தோன்றலுக்கு உதாரணம் முன்னர் ஐவகைத் தற்கிழமைக்குக் காட்டியனவேயாம்.

***உரிமையாய்த் தோன்றலுக்கு உதாரணம்: முருகனது வேல், முருகன்து குறிஞ்சி, வெள்ளியதாட்சி, சம்பந்தனது தமிழ், சம்பந்தனது பிள்ளைத்தமிழ் என முறையே காண்க. வேறாய்த் தோன்றலுக்கு உதாரணம்: சாத்தனது பசு, சாத்தனது சோறு, சாத்தனது பொன் என வரும். இவை முன்னொருவர்க்கு உரிமையாயும் பின் வேறொருவர்க்கு உரிமையாயும் வருதலின் நிலைமையிலுடைமையாயின. இம் மூவகை வேற்றுமையை வடநூலார் நூற்றொருபேதம் ஆக்குவர்.***

மேற்போந்த கொள்வோனையும் கொடைப்பொருளினையும் இதனின் இற்று இது என விகற்பித்து உணர்ந்து கொடுத்தல் இவ்விருகிழமைப் பொருளுடையோர் செயல் என்பது தோன்ற இஃது ஆறாம்வேற்றுமை எனப்பட்டது.

“ஆறன் உருபே அதுவா தவ்வும் வேறொன் றுடையதைத்
தனக்குரி யதைஎன இருபாற் கிழமையின் மருவுற வருமே”

என்றார் ஆசிரியர் **அகத்தியனாரும்** என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** ஆறாம் வேற்றுமை இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.: ஆறன் ஒருமைக்கு** – ஆறாம் வேற்றுமை ஒருமைப் பொருண்மைக்கு, **அதுவும் ஆதுவும்** – அதுவென்பதும் ஆதுவென்பதும், **பன்மைக்கு அவ்வும் உருபாம்**–பன்மைப் பொருண்மைக்கு அவ்வும் உருபாம், **பண்பு உறுப்பு ஒன்றன் கூட்டம்** – பண்பும் உறுப்பும் ஒருபொருட்டிரட்சியும், **பலவின் ஈட்டம் திரிபின் ஆக்கம்** – பல பொருட்டிரட்சியும் ஒன்று பிரிந்து ஒன்றாதலும், **ஆம் தற்கிழமையும்** – ஆகும் இவ்வைந்து தற்கிழமையும், **பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே** – பிறிதின் கிழமையும் போற்றுதல் அதற்குப் பொருளாம், **எ–று.**

**உ–ம்.:–**

எனது முகம், எனது உயிர், எனாது உயிர் என ஒருமைக்கண் அதுவுருபும் ஆதுருபும் வந்தன. தன தானைகள், என விழிகள், நின சீறடிகள் எனப் பன்மைப் பொருண்மைக்கண் அகர உயிர் வந்தன. சாத்தனது இயல்பு, இளமை, வன்மை, குறுமை, நன்மை, நிறம், கல்வி, கேள்வி, உணர்வு என இவை பண்புத் தற்கிழமை. சாத்தனது செலவு, நிலை, இருக்கை, உணர்வு, செய்கை என்பனவும் ஈண்டுத் தொழிற்பண்பாய் அடங்கும் என்ப. சாத்தனது கை, யானையது கோடு, வாழையது பழம், தேரது தட்டு, செய்யுளது அடி என்பன உறுப்புத் தற்கிழமை, நெல்லது கூட்டம், எள்ளது ஈட்டம், கொள்ளது குழாம், யானையது தொகை, மாந்தரது தொகுதி; இவை ஒன்றன் கூட்டத்தற்கிழமை, படையது தொகை, விலங்கினது ஈட்டம், மரப் பெயர்த் தொகுதி. இது பலவியற் றற்கிழமை, கொள்ளது நூறு, எள்ளது சாந்து, நெல்லது சோறு, அரிசியது சோறு, பயற்றது கும்மாயம் என இவை திரிபுத் தற்கிழமை.

சாத்தனது ஆடை, அரசனது ஆழி, ஆவினது கன்று, கபிலரது பாட்டு என இவை பிறிதின் கிழமை. ஒழிந்த உருபினும் இவ்வாறே ஒட்டுக.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ஆறாம் வேற்றுமைய திலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: ஆறன்**–ஆறாம் வேற்றுமையினது, **ஒருமைக்கு**–வருமொழியி னொருமைப் பொருண்மைக்கு, **அதுவு மாதுவும்** – முன் சொல்லப்பட்ட அதுவே யன்றி ஆதுவுமாம், **பன்மைக்கு**–வருமொழியின் பன்மைப் பொருண்மைக்கு, **அவ்வும்** – அகரமும், **உருபாம்** – உருபுகளாகும், **பொருள்**–அவற்றின்

பொருள்களாவன, **பண்பு**–குணமும், **உறுப்பு**–அவயவமும், **ஒன்றன் கூட்டம்**–ஒருபொருட் கூட்டமும், **பலவினீட்டம்** – பலபொருட் கூட்டமும், **திரிபினாக்கம்**–ஒன்று திரிந்தொன்றாதலும், **ஆந்தற்கிழமையும்** – ஆகிய வைந்து தற்கிழமைப் பொருள்களையும், **பிறிதின் கிழமையும்** –அவையல்லாத பிறிதின் கிழமைப் பொருள்களையும், **பேணுதல்**–உடையனவாக அவ்வுருபுகளை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விருவகைச் சம்பந்தப்பொருள்களுமாகும், **எ–று.**

(தற்கிழமைப் பொருளாவது தன்னோடொற்று மையுடையது. பிறிதின்கிழமைப் பொருளாவது தன்னின்வேறாயது. தற்கிழமைப் பொருளிவையெனவே இவை யல்லாத பொருளுமிடமுங் காலமுமாகிய மூன்றும் பிறிதின்கிழமைப் பொருளென்றாகும், ஆகவே, இப்படிப் பலவகையாலும் வருகின்ற சம்பந்தப்பொருளே இடவேற்றுமை யுருபுகளின் பொருளென்ப தாயிற்று.)

தற்கிழமைப்பொருளுக்கு உதாரணம் சாத்தனது கருமை எனக் குணம் பற்றியும் சாத்தனது வரவு எனத் தொழில் பற்றியும் வருகின்றவை பண்பு. சாத்தனதுகை, புலியதுவால் – உறுப்பு. மாந்தரதுதொகுதி, நெல்லதுகுப்பை – ஒன்றன்கூட்டம். படைகளதுதொகுதி, பறவைகளதுகூட்டம் – பலவின்கூட்டம். நெல்லினது பொரி, மஞ்சளதுபொடி – ஒன்றுதிரிந்த தொன்றாயது, என ஐவகைத் தற்கிழமையுங் காண்க.

பிறிதின்கிழமைப் பொருளுக்கு உதாரணம் சாத்தனதுபசு முருகனதுவேல் – பொருள். சாத்தனதுவீடு, முருகனது குறிஞ்சி – இடம், சாத்தனது நாள், மாரனது வேனில் – காலம் என மூவகைப் பிறிதின் கிழமையுங் காண்க. இன்னுஞ் சிறுபான்மை, எனதுயிர் எனவுடையதும் உடைமைப்பொருளும் வேறாகாத வொற்றுமைப் பொருளில் வருதலுங் கொள்க.

ஆதுருபு, எனாதுகை, நினாதுசெவி எனவும், அகரவுருபு, எனகைகள், நினகைகள், எனவும், வருதல்காண்க. உயர்திணைப் பெயர் வரும்போது, சாத்தனுக்குமகன், எனக் குவ் வுருபு வருமென்றறிக. சிறுபான்மை, அரனதுதோழன் என உயர்திணையொருமைப் பொருண்மைக்கும், நினதடியாரோ டல்லால், எனது கைகள் என இருதிணைப்பன்மைப் பொருண்மைக்கும், அது வுருபும் வரும், ஒரோவிடத்து, இவ்வீடிவனது என்றாற்போல உருபைத் தொடருஞ் சொல்லின்றி வருதலுங் கொள்க.

இவ்வாறன் உருபுகளிலொன்று நிற்றற்குரிய விடத்தே உடையவென்கிறது சொல்லுருபாக வரும் அது என்னுடைய வீடு, என்னுடைய தம்பி, என வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஆறாம்வேற்றுமை யுருபும் பயனுங் கூறுஞ் சூத்திரம் யாது?

ஆற னொருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்
பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னாக்க மாந்தற் கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.

(ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதவும்
பன்மைக்கு அவ்வும் உருபு ஆம் பண்பு உறுப்பு
ஒன்றன் கூட்டம் பலவின் ஈட்டம்
திரிபின் ஆக்கம் ஆக் தற்கிழமையும்
பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே.)

**இ–ள்.**: ஆறாம்வேற்றுமையினது வருமொழியினொருமைப் பொருண்மைக்கு முன் சொல்லப்பட்ட அதுவேயன்றி ஆதவும் வருமொழியின் பன்மைப்பொருண்மைக்கு அகரமும் உருபாம்; அவற்றின் பொருள்களாவன குணமுந் தொழிலுமாகிய பண்பும், அவயமும், ஒருபொருட்கூட்டமும், பலபொருட்கூட்டமும், ஒன்று திரிந்தொன்றாதலும் ஆகிய ஐந்துதற்கிழமைப் பொருள்களையும், அவையல்லாத பிறிதின்கிழமைப்பொருள்களையும், உடையனவாக அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விருவகைச் சம்பந்தப்பொருள்களுமாம், எ–று.

ஆறாம் வேற்றுமை யுருபுகள் யாவை?

"ஆறனொருமைக் கதுவுமாதுவும் பன்மைக்கவ்வுமுருபாம்"

ஆறாம் வேற்றுமை ஒருமையுருபுகள் யாவை?

ஆறனொருமைக்கு அதுவும் ஆதுவும்..உருபாம்"

ஆறாம் வேற்றுமைப் பன்மை யுருபு யாவை?

"ஆறன்...பன்மைக்கு அவ்வு முருபாம்"

ஆறாம் வேற்றுமைப் பொருள் யாவை?

"பண்பு உறுப்பு ஒன்றன் கூட்டம் பலவின் கூட்டம் திரிபின் ஆக்கம் ஆம் தற் கிழமையும் பிறிதின் கிழமையும் பேணுதல் பொருளே"

சுருக்கிக்கூறின் ஆறாம் வேற்றுமைக்குப் பொருள் எத்தனை?

கிழமைப்பொருள் ஒன்றே.

அக்கிழமை எத்தனைவகைப்படும்?

தற்கிழமை பிறிதின் கிழமை என இரண்டு.

தற்கிழமை எத்தனைவகைப்படும்?

"பண்பு உறுப்பு ஒன்றன் கூட்டம் பலவினீட்டம் திரிபினாக்கம் என ஐந்துவகைப்படும்.

பிறிதின் கிழமை எத்தனை வகைப்படும்?

பொருளிடம் காலம் என மூவகைப்படும்.

தற்கிழமையை வகைப்படுத்துக்கூறிப் பிறிதின் கிழமையை வகைப்படுத்துக் கூறாததென்னை?

ஆறாம்வேற்றுமைக்குப் பொருண்முடிவு பொருளிடங்காலம் சினை குணந்தொழில் என்னும் அறுவகைப் பெயரேயாதலால், அவற்றுள், சினை குணந் தொழில் என்னும் மூவகையிலும் தற்கிழமைப்பேதம் ஐந்துமடங்க் எஞ்சுவன பொருளிடங் காலம் என்னு மூன்று மென்பதுதானே பெறப்படுதலின் கூறாது விடப்பட்டது.

கிழமையாவது யாது?

கிழமையாவது இதனுடையது இது என்பதுபடவரும் உடைமை.

தற்கிழமைப்பொருளாவது தன்னோடொற்றுமையுடையது. பிறிதின்கிழமைப் பொருளாவது தன்னின் வேறாயது. இப்படிப் பலவகையாலும் வருஞ் சம்பந்தப்பொருளே இவ்வேற்றுமை யுருபுகளின் பொருளென்பதாயிற்று.

உ–ம். 1. தற்கிழமை

சாத்தனது கருமை.....(குணம்) – பண்புத்தற்கிழமை

சாத்தனது வரவு..........(தொழில்) – ,,

சாத்தனது கை............ – உறுப்புத்தற்கிழமை.

புலியது வால்............... – ,,

மாந்தரது தொகுதி............ – ஒன்றன் கூட்டத் தற்கிழமை.

நெல்லது குப்பை.............. – ,,

படைகளது தொகுதி........ – பலவின் கூட்டத் தற்கிழமை.

பறவைகளது கூட்டம்.............. – ,,

நெல்லினது பொரி.................. – ஒன்றுதிரிந்தொன்றாயதன்றற் கிழமை.

மஞ்சளது பொடி....................... – ,,

2. பிறிதின்கிழமை

சாத்தனது பசு.........................பொருட்பிறிதின்கிழமை

முருகனது வேல்..................... ,,

சாத்தனது வீடு......................... இடப்பிறிதின்கிழமை.

முருகனது குறிஞ்சி.................. ,,

சாத்தனது நாள்........................ காலப்பிறிதின்கிழமை.

மாரனது வேனில்...................... ,,

எனாது கை, நினாது தலை, தனாது புறம்...............ஆதுருபு.

என கைகள், தனதாள்கள்....................அகரவுருபு.

அஃறிணை யொருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகள்

இங்ஙனங் கூறவே, உயர்திணையொருமை பன்மையாகிய கிழமைப்பொருளுக்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். உயர்திணைப் பெயர் வரும்போது, சாத்தனுக்குமகன் எனக் குவ்வுருபு வருமென்றறிக. சிறுபான்மை, "அரனது தோழன்;" "குன்றவர்தமது செம்மல்" என உயர்திணை யொருமைப் பொருண்மைக்கும், "நின்தடியாரொடல்லால்" என உயர் திணைப் பன்மைப்பொருண்மைக்கும், எனது கைகள் என அஃறிணைப்பன்மைக்கும் அதுவுருபும் வரும்.

இவ்வாறனுருபுகளுள் ஒன்று நிற்றற்குரியவிடத்தே உடைய என்பது சொல்லுருபாக வரும்.

**உ–ம்.:–**

சாத்தனுடைய புதல்வன், சாத்தனுடைய புதல்வர்; சாத்தனுடைய வீடு, சாத்தனுடைய வீடுகள் என வரும்.

மற்றை வேற்றுமைகள்போல ஆறாம் வேற்றுமையுருபும் இடையிலும் கடையிலும் பொருள் வேறுபடாமல் நிற்குமா?

நிலத்தைக் கடந்தான், கடந்தான் நிலத்தை எனவும், வாளால் வெட்டினான், வெட்டினான் வாளால் எனவும், அரசனுக் கீந்தான், ஈந்தான் அரசனுக்கு எனவும், அரசனின் வலியன், வலியன் அரசனின் எனவும் மலைக்கணிருந்தான், இருந்தான் மலைக்கண் எனவும், மற்றை வேற்றுமை யுருபுகளெல்லாம் இடையிலுங் கடையிலும் வரும். ஆறாம் வேற்றுமையுருபு சாத்தனது கை என இடையில்மாத்திரம் வரும். கை சாத்தனது, இவ்வீடெனது, அத்தோட்டமவனது என வருவனவற்றில், சாத்தனது, எனது, அவனது என்பன, துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று நின்ற குறிப்புவினை முற்று. எனது போயிற்று, அவனதை வாங்கினேன் என வருவனவற்றில், எனது, அவனது என்பன, மேற்கூறியபடி வந்த குறிப்புவினையாலணையும்பெயர். ஆதலால் இவ்விடங் களில் வரும் அது என்பது ஆறாம்வேற்றுமை யுருபன்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ஆறாம் வேற்றுமை யிலக்கண முணர்த்திற்று.

**இ–ள்.: ஆற னொருமைக் கதுவு மாதுவும்** – ஆறாம் வேற்றுமையின் ஒருமைப் பொருட்கு மேற்சொல்லிய அது என்பதன்றி ஆதுவும், **பன்மைக் கவ்வு முருபாம்**–பன்மைப் பொருட்கு அகரமும் உருபாம், **பொருள்** – அவற்றின் பொருளாவன, **பண்பு** – குணமுந் தொழிலுமாகிய பண்பும், **உறுப்பு** – அவயவமும், **ஒன்றன் கூட்டம்**–ஒருபொருட் கூட்டமும், **பலவினீட்டம்** – பலபொருட் கூட்டமும், **திரிபினாக்கம்** – ஒன்று விகாரப்பட்டு மற்றொன்று ஆனதும், **ஆந் தற்கிழமையும்** – ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருளையும், **பிறிதின் கிழமையும்** – பிறிதின் கிழமைப் பொருளையும், **பேணுதல்**–உடையனவாகித் தம்மை யேற்ற பெயர்ப்பொருளை வேற்றுமை செய்வனவாகப் போற்றுதலாம், **எ–று.**

கிழமைப்பொருளைக் கிழமை யென்றது ஆகுபெயர்; தற்கிழமையாவது தன்னோடு ஒற்றுமையுடைய பொருளின் சம்பந்தம், அது சாத்தனது. கால், கை என்றாற் போல்வது. பிறிதின் கிழமையாவது தன்னின் வேறாகிய பொருளின் சம்பந்தம், அது சாத்தனது தோட்டம், வீடு என்றாற் போல்வது. கிழமை, உரிமை, சம்பந்தம், சொந்தம் என்பனவெல்லாமொன்று,

வ—று.:

நிலத்தது அகலம், சாத்தனது இயல்பு, சாத்தனது நன்மை, சாத்தனது இருக்கை, சாத்தனது நிலை, சாத்தனதுவரவு சாத்தனது பாட்டு. இவை குணமுந் தொழிலுமாகிய பண்புத் தற்கிழமை, சாத்தனதுகை, சாத்தனதுகண் இவை உறுப்புத் தற்கிழமை. மக்களது தொகுதி, நெல்லினது குப்பை. இவை ஒன்று பல கூடிய ஒன்றன் கூட்டத் தற்கிழமை; படையது தொகுதி, விலங்கினது கூட்டம்—இவை வேறுபல கூடிய பலவின் ஈட்டத்தற்கிழமை, (விலக்கு—மிருகம்,) நெல்லினது பொரி, கோட்டது நூறு இவை திரிபினாக்கத் தற்கிழமை, (கோடு—சங்கு, நூறு—சுண்ணாம்பு,) இவையெல்லாம் ஐவகைத்தற் கிழமை, இவற்றுள், ஒன்றன் கூட்டம் மாறிக்குப்பையதுநெல் எனவரின் உறுப்புத் தற்கிழமையாம். பலவினீட்ட மாறினும் அதுவாம். இங்கே சொல்லப்பட்ட சினை குணந் தொழில்களைத் தற்கிழமை யெனவே, பொருளிடங் காலங்கள் மூன்றும் பிறிதின்கிழமை யென்பதாயிற்று. சாத்தனது வில் சாத்தனது ஆடை—இவை பொருட் பிறிதின்கிழமை. முருகனது பிள்ளைத்தமிழ், இது முருகன் பாடிய பிள்ளைத்தமிழ், முருகன் மேற் பாடிய பிள்ளைத்தமிழ் என நிற்றலால், இருவகைச் செய்யுட் பிறிதின்கிழமை, இதுவும் பொருட் பிறிதின்கிழமையோம். சாத்தனதுதோட்டம், சாத்தனது நிலம், இவை இடப்பிறிதின்கிழமை. சாத்தனதுநாள், சாத்தனது வாழ்நாள் இவை காலப்பிறிதின்கிழமை. இவை யெல்லாம் பிறிதின்கிழமை. இவற்றுள்—சாத்தனது பாட் டென்னும் வினைத்தற்கிழமையானது வரிவடிவை நோக்கிய காலத்துச் செய்யுட் பிறிதின்கிழமையாம். எனாதுகை, தனாதுதாள் என ஆதுஉருபோடும்; என கைகள் தனதாள்கள் எனயானைகள் என அகரஉருபோடும்—ஒட்டுக. அஃறிணை யொருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகளை யிங்கே சொல்லவே உயர்திணை யொருமை பன்மையாகிய கிழமைப் பொருள்களுக்கு இந்த மூன்றுருபுகளும் வாராவென்பதாயிற்று. வரின், அவனுடைய மனைவி என மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாய் முன்னது எழுவாய்ச் சந்தியும்— பின்னது பெயரெச்சக் குறிப்புச் சந்தியுமா மென்க. அவன் மனைவி என்ற இடத்து உடைய என்பது குறைந்து நின்றது. இவற்றை ஆறாம் வேற்றுமைச் சந்தியென்றும் உடைய

என்பதைச் சொல்லுருபென்றுங் கூறுவாருமுண்டு.

ஆசிரியர் தொல்காப்பியனார் உயர்திணை யொருமை பன்மைகளுக்கு இந்த உருபுகள் வாரா வென்பது நோக்கி,

"அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி

னதுவெ னுருபுகெடக் குகரம் வருமே"

என்றார் எனக் காண்க. இவ்வாறாம் வேற்றுமைப் பொருளைக் குறைப் பொருளென்றும் வழங்குவர். இனி இந்த ஆறாம் வேற்றுமைப் பொருள் ஒற்றுமை வேற்றுமை யென இருவகைப்படு மெனவும்; அவற்றுள், ஒற்றுமையாவது ஒருபொருளே யாமெனவும், வேற்றுமை யாவது ஒன்றாய்த் தோன்றல், உரிமையாய்த் தோன்றல், வேறாய்த் தோன்றல், என மூவகைப்படு மெனவும்; அம்மூவகையுள் ஒன்றாய்த் தோன்றல், ஒன்றன் கூட்டம் பலவினீட்டந் திரிபினாக்கஞ், சினை குணந் தொழிலென அறுவகைப்படு மெனவும்; உரிமையாய்த் தோன்றல் பொருளிடங் கால மிருவகைநூலென ஐவகைப்படு மெனவும், வேறாய்த் தோன்றல் வெறிடத்துஞ் செல்லும் நிலைமையில் லுடைமைகள் பலவுமா மெனவுங் கொள்ளப்படும்.

உ–ம்.: என்னுயிர், இராகுத்தலை என்பன ஒற்றுமை. இவற்றுள் யான் என்பதும் உயிர் என்பதும் ஒருபொருள், இராகு என்பதுந் தலை என்பதும் ஒருபொருள். வேற்றுமை வகையுள் ஒன்றாய்த் தோன்றலுக்கு உதாரணம் ஐவகைத் தற்கிழமைப் பொருளுக்கும் மேலே காட்டியனவும், உரிமையாய்த் தோன்றலுக்கு உதாரணம் மூவகைப் பிறிதின் கிழமைக்குக் காட்டியனவுமேயாம். வேறாய்த்தோன்றலுக்கு உதாரணம் சாத்தனது பசு, சாத்தனது நெல், சாத்தனது பொன் எனவரும். இவை முன் ஒருவருக்கு உரிமையாகியும் பின்வேறொருவருக்கு உரிமையாகியும் வருதலால் நிலைமையில் லுடைமையாயின. இந்த மூவகை வேற்றுமையை வடநூலார் நூற்றொரு பேதமாக்குவர். மேற்சொல்லிய கொள்வோனையுங் கொடைப் பொருளையும் இதனின் இற்று இதுவென விகற்பித்துணர்ந்து கொடுத்தல் இந்த இருகிழமைப் பொருளுடையோர் செயலென்பது தோன்ற இது ஆறாம் வேற்றுமை யெனப்பட்டது.

"ஆற னுருபே யதுவா தவ்வே
வேறொன் றுடையதைத் தனக்குரி யதையென
விருபாற் கிழமையின் மருவுறத் தோன்றும்
ஐம்பா லுரிமை மன்றதற் கிழமை
பொருளிடங் காலமாம் பிறிதின் கிழமை"

என்றார் ஆசிரியர் அகத்தியனாரும்.

"ஆறாகுவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினு மிதனதிதுவெனு
மன்ன கிளவிக் கிழமைத் ததுவே"

எனவும்

"இயற்கையி னுடைமையின் முறைமையிற் கிழமையிற்
செயற்கையின் முதுமையின் வினையி னென்றா
கருவியிற் றுணையிற் காலத்தின் முதலி
னொரு வழி யுறுப்பிற்குழுவி னென்றா
தெரிந்து மொழிச் செய்தியி னிலையின் வாழ்ச்சியிற்
றிரிந்து வேறுபடூஉம் பிறவு மன்ன
கூறிய மருங்கிற் றோன் றுங்கிளவி
யாறன் பால வென்மனார் புலவர்"

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங்காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஆறன் ஒருமைக்கு** – ஒருமையாகிய வருமொழியையுடைய ஆறாம் வேற்றுமைக்கு, **அதுவும் ஆதுவும்** – ஆது என்பதும் அது என்பதும், **பன்மைக்கு** – பன்மையாகிய வருமொழியையுடைய ஆறாம் வேற்றமைக்கு, **அவ்வும்** – அ என்பதும், **உருபாம்** – உருபுகளாகும்; **பொருள்** – அதன் பொருளாவன;– பண்பு – (குணமுந்தொழிலுமாகிய) பண்பும், **உறுப்பு** – அவையவமும், **ஒன்றன் கூட்டம்** – ஒருபொருட் கூட்டமும், **பலவின் ஈட்டம்** – பல பொருட் கூட்டமும், **திரிபின் ஆக்கம்** – ஒன்று திரிந்து மற்றொன்றாதலும், **ஆம்** – ஆகிய **தற்கிழமையும்** – ஐந்து தற்கிழமைப் பொருளையும், **பிறிதின் கிழமையும்** – (அவையல்லாத பொருள் இடம் காலம் ஆகிய) பிறிதின் கிழமைப் பொருளையும், **பேணுதல்** – உடையனவாகத் தன்னையேற்ற பெயரின் பொருளை வேறுபடுத்துதலாம்.

**குறிப்பு:–** 'தற்கிழமை' என்பது – தன்னோடு ஒற்றுமைப்பட்ட பொருளின் சம்பந்தம். 'பிறிதின்கிழமை' என்பது – தன்னின் வேறுபட்ட பொருளின் சம்பந்தம். பண்பு முதலிய ஐந்தும் 'தற்கிழமை' எனவே, இவையல்லாத பொருள் இடம் காலம் ஆகிய மூன்றும் 'பிறிதின்கிழமை என்பது பெறப்பட்டது. (இதனால் ஆறாம் வேற்றுமையின் பொருள் சம்பந்தப்பொருள் என்றதாயிற்று).

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| 1. | இராமனது கருமை | – | குணப்பண்புத் தற்கிழமை |
| | இராமனது வரவு | – | தொழிற்பண்புத் தற்கிழமை |
| | இராமனது கை | – | உறுப்புத் தற்கிழமை |

| | | |
|---|---|---|
| | மாந்தரது தொகுதி | – ஒன்றன்கூட்டத் தற்கிழமை |
| | பறவைகளது கூட்டம் | – பலவினீட்டத் தற்கிழமை |
| | நெல்லினது பொரி | – திரிபினாக்கத் தற்கிழமை |
| 2. | இராமனது பசு– | பொருட்பிறிதின்கிழமை |
| | இராமனது வீடு | – இடப்பிறிதின்கிழமை |
| | இராமனது வீடு | – காலப்பிறிதின் கிழமை |

'ஆது' உருபு 'எனாதுகை' எனத் தன்மைப் பெயரோடும், 'நினாது வரவு' என முன்னிலைப் பெயரோடும் 'தனாது பொருள்' எனத் 'தான்' என்னும் பொதுப்பெயரோடும் வருவது பெருவழக்கென்க. அகர வுருபு – 'என கைகள்', 'நினவீடுகள்', 'தனபொருள்கள்', 'சாத்தன பொருள்கள்' என வரும்.

இவ்விருகிழமையுமன்றி 'ஒற்றுமைக்கிழமை' என மற்றொரு கிழமையும் இவ்வேற்றுமைக்கு உண்டு. அது: 'எனது உயிர்', 'இராகுவினதுதலை' என வரும்; 'யான்' என்னும் உடையதும் 'உயிர்' என்னும் உடைமையும், 'இராகு' என்னும் உடையதும், 'தலை' என்னும் உடைமையும் ஒரு பொருளே யாதலால் 'ஒற்றுமைக் கிழமை' என்றது.

அஃறிணை யொருமைக்குரிய 'அது', 'ஆது' 'உருபுகள்' எனது கைகள் என அஃறிணைப் பன்மையிலும், 'அரசனது தோழன்', 'நினது அடியார்' என உயர்திணை யொருமை பன்மைகளிலும் சிறுபான்மைவருவதும் அறிக. இவ்வேற்றுமைக்கு 'உடைய' என்பது சொல்லுருபாக வரும்.

உ–ம்:– 'என்னுடைய வீடு', 'அவனுடைய தம்பி', இனி, இவ்வேற்றுமைக்குச் 'செய்யுட்கிழமை' என ஒன்றுங் கூறுவர். அது பொருட்பிறிதின் கிழமையில் அடங்குதல் அறிக. உ–ம்:– 'முருகனது பிள்ளைத்தமிழ்'.

## ஆறுமுக நாவலர்

இ–ள்.: **ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்** – ஆறாம் வேற்றுமையினது வருமொழியினொருமைப் பொருண்மைக்கு முன் சொல்லப்பட்ட அதுவே யன்றி ஆதுவும், **பன்மைக்கு அவ்வும் உருபு ஆம்** – வருமொழியின் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம், **பொருள்** – அவற்றின் பொருள்களாவன, **பண்பு** – குணமுந் தொழிலுமாகிய பண்பும், **உறுப்பு** – அவயவமும், **ஒன்றன் கூட்டம்** – ஒருபொருட் கூட்டமும், **பலவின் ஈட்டம்** – பலபொருட் கூட்டமும், **திரிபின் ஆக்கம்** – ஒன்று திரிந்தொன்றாதலும், **ஆம் தற்கிழமையும்** – ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருள்களையும், **பிறிதின் கிழமையும்** – அவையல்லாத பிறிதின்கிழமைப் பொருள்களையும், **பேணுதல்**– உடையனவாக அவ்வுருபுகளை யேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விருவகைச் சம்பந்தப் பொருள்களுமாம், **எ–று.**

தற்கிழமைப்பொருளாவது தன்னோடொற்றுமையுடையது. பிறிதின் கிழமைப் பொருளாவது தன்னின் வேறாயது. தற்கிழமைப் பொருள் இவையெனவே, இவையல்லாத பொருளும் இடமுங் காலமுமாகிய மூன்றும் பிறிதின் கிழமைப் பொருளென்றாகும். ஆகவே, இப்படிப் பலவகையாலும் வருஞ் சம்பந்தப் பொருளே இவ் வேற்றுமை யுருபுகளின் பொருளென்பதாயிற்று.

**உ—ம்.:** தற்கிழமை.

| | |
|---|---|
| சாத்தனது கருமை. (குணம்) | |
| சாத்தனது வரவு—(தொழில்) | பண்புத் தற்கிழமை. |
| சாத்தனது கை. . . . | உறுப்புத் தற்கிழமை. |
| புலியது வால் . . . . . | |
| மாந்தரது தொகுதி | ஒன்றன் கூட்டத் தற்கிழமை. |
| நெல்லது குப்பை | |
| படைகளது தொகுதி | பலவின் கூட்டத் தற்கிழமை. |
| பறவைகளது கூட்டம் | |
| நெல்லினது பொரி | ஒன்றுதிரிந் தொன்றாயதன்றற் கிழமை. |
| மஞ்சளது பொடி. . . . . . . . | பிறிதின் கிழமை |
| சாத்தனது பசு. . . . . . . . | பொருட்பிறிதின்கிழமை. |
| முருகனது வேல். . . . . . . . . . . | |
| சாத்தனது வீடு. . . . . . . . . . . . | இடப்பிறிதின்கிழமை. |
| முருகனது குறிஞ்சி. . . . . . . . . | |
| சாத்தனது நாள். . . . . . . . . . . . | காலப்பிறிதின்கிழமை. |
| மாரனது வேனில். . . . . . . . . . . . | |
| எனாது கை, நினாது தலை, தனாது புறம். . . | ஆதுருபு. |
| என கைகள், தனதாள்கள். . . . . . . . . . . . | அகரவுருபு. |

இராகுவினது தலை, எனதுயிர் என ஆறனுருபு, உடையதும் உடைமைப்பொருளும் வேறாகாத ஒற்றுமைப்பொருளில் வருதலுங் கொள்க. இராகுவே தலையாதலாலும், நானெனப் பட்டது உயிரேயாதலாலும், ஒற்றுமைப்பொருளாயின. ஒற்றுமை யென்பது அபேதம்.

அஃறிணை யொருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகள் இங்ஙனங் கூறவே, உயர்திணை யொருமை பன்மையாகிய கிழமைப் பொருளுக்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். உயர்திணைப்பெயர் வரும்போது சாத்தனுக்கு மகன் எனக் குவ் வுருபு வருமென்றறிக. சிறுபான்மை, "அரனது தோழன்" "குன்றவர்தமது செம்மல்" என உயர்திணை யொருமைப் பொருண்மைக்கும், "நினதடியாரொடல்லால்" என உயர்

திணைப் பன்மைப் பொருண்மைக்கும், எனது கைகள் என அஃறிணைப் பன்மைப் பொருண்மைக்கும் அதுவுருபும் வரும்.

இவ்வாறனுருபுகளுள் ஒன்று நிற்றற்குரியவிடத்தே உடைய என்பது சொல்லுருபாக வரும்.

**உ–ம்.:** சாத்தனுடைய புதல்வன், சாத்தனுடைய புதல்வர்; சாத்தனுடைய வீடு, சாத்தனுடைய வீடுகள் என வரும்.

இவ்வீடெனது, அத்தோட்டமவனது என வருவனவற்றில், எனது, அவனது என்பன, துவ் விகுதியும் அகரச் சாரியையும் பெற்று நின்ற குறிப்புவினைமுற்று. எனது போயிற்று, அவனதை வாங்கினேன் என வருவனவற்றில், எனது, அவனது என்பன, மேற்கூறியபடி வந்த குறிப்பு வினையாலணையும் பெயர். இங்ஙனமன்றி, இவ்விடங்களில் வரும் அது என்பது ஆறாம் வேற்றுமையுருபன்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்** – ஆறாம் வேற்றுமையினது வருமொழியினொருமைப் பொருண்மைக்கு முன்சொல்லப்பட்ட அதுவேயன்றி ஆதுவும் – **பன்மைக்கு அவ்வும் உருபு ஆர்** – வருமொழியின் பன்மைப் பொருண்மைக்கு அகரமும் உருபாம், **பொருள்** – அவற்றின் பொருள்களாவன, **பண்பு, குணமுந்** தொழிலுமாகிய பண்பும், – **உறுப்பு** – அவயவமும், **ஒன்றன் கூட்டம்** – ஒருபொருட் கூட்டமும், **பலவின் ஈட்டம்** – பலபொருட் கூட்டமும், **திரிபின் ஆக்கம்** – ஒன்றுதிரிந்தொன்றாதலும், **ஆம் தற்கிழமையும்** – ஆகிய ஐந்துதற்கிழமைப் பொருள்களையும், **பிறிதின் கிழமையும்** – அவையல்லாத பிறிதின் கிழமைப் பொருள்களையும், **பேணுதல்** – உடையனவாக அவ்வருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விருவகைச் சம்பந்தப் பொருள்களுமாம். **எ–று.**

தற்கிழமைப் பொருளாவது தன்னோடொற்றுமையுடைய்து. பிறிதின் கிழமைப் பொருளாவது தன்னின் வேறாயது. தற்கிழமைப் பொருள் இவையெனவே, இவையல்லாத பொருளும் இடமுங் காலமுமாகிய மூன்றும் பிறிதின் கிழமைப் பொருளென்றாகும். ஆகவே, இப்படிப் பலவகையாலும் வருஞ் சம்பந்தப்பொருள் இவ்வேற்றுமையுருபுகளின் பொருளென்பதாயிற்று.

**1. தற்கிழமை**

உ–ம்.

சாத்தனதுகருமை(குணம்)

சாத்தனது வரவு.... (தொழில்) பண்புத் தற்கிழமை

சாத்தனதுகை...........

புலியது வால் .......... உறுப்புத்தற்கிழமை

மாந்தரது தொகுதி .........நெல்லது குப்பை ..........

ஒன்றன்கூட்டத்தற் கிழமை

படைகளதுதொகுதி............

பறவைகளது கூட்டம் ........... பலவின் கூட்டத்தற்கிழமை,

நெல்லினது பொரி ............மஞ்சளது பொடி ...............

ஒன்றுதிரிந் தொன்றாயதன்றத் கிழமை

**2. பிறிதின்கிழமை**

சாத்தனதுபசு..........முருகனது வேல் ....... பொருட்பிறிதின்கிழமை

சாத்தனதுவீடு ........ முருகனது குறிஞ்சி இடப்பிறிதின் கிழமை

சாத்தனதுநாள் ........மாரனது வேனில் ..... காலப் பிறிதின்கிழமை

எனாதுகை, நினாதுதலை, தனாது புறம் ........ ஆதுருபு என கைகள், தனதாள்கள் ............. ........... அகரவுருபு.

இராகுவினது தலை, எனதுயிர் என ஆறனுருபு, உடையதும் உடைமைப் பொருளும் வேறாகாத ஒற்றுமைப் பொருளில் வருதலுங் கொள்க. இராகுவே தலையாதலாலும், நானெனப்பட்டது உயிரேயாதலாலும், ஒற்றுமைப் பொருளாயின. ஒற்றுமையென்பது அபேதம்.

அஃறிணையொருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகள் இங்ஙனங் கூறவே, உயர்திணையொருமை பன்மையாகிய கிழமைப் பொருளுக்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். தொல்காப்பியர், "அதுவென்வேற்றுமையுயர் திணைத் தொகையின், அதுவெனுருபுகெடக் குகரம்வருமே" என்றா ராதலின் உயர்திணைப் பெயர் வரும்போது, சாத்தனுக்கு மகன் எனக் குவ்வுருபு வருமென்றறிக. ஆயினும் சிறுபான்மை "அரனது தோழன்" "குன்றவர்தமது செம்மல்" என உயர்திணைப் பன்மைப் பொருண்மைக்கும், எனதுகைகள், "எனதுயிரசுவாழ்வென்பயாவையும்" என அஃறிணைப் பன்மைப் பொருண்மைக்கும் அதுவுருபும் வரும்.

இவ்வாறனுருபுகளுள் ஒன்று நிற்றற்குரியவிடத்தே உடைய என்பது சொல்லுருபாக வரும்.

உ-ம்;- சாத்தனுடைய புதல்வன், சாத்தனுடைய புதல்வர்; சாத்தனுடைய வீடு, சாத்தனுடைய வீடுகள் என வரும்.

இவ்வீடெனது, அத்தோட்டமவனது என வருவனவற்றில், எனது, அவனது என்பன, துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்ற நின்ற குறிப்புவினைமுற்று. எனது போயிற்று, அவனதை வாங்கினேன் என வருவனவற்றில், எனது, அவனது என்பன மேற்கூறியபடி வந்த குறிப்புவினை யாலணையும் பெயர். இங்ஙனமன்றி, இவ்விடங்களில் வரும் அது என்பது ஆறாம் வேற்றுமையுருபன்று.

சூத்திரம். ஆறனுருபேயதுவாதவ்வே, வேறொன்றுடையதைத்

தனக்குரியதையென, விருபாற்கிழமையின் மருவுத்தோன்றும்,
ஐம்பாலுரிமை மன்றதற்கிழமை, பொருளிடங்காலமாம்
பிறிதின்கிழமை என்றார் ஆசிரியர் அகத்தியனார்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஆறன் ஒருமைக்கு** – ஒருமையாகிய வருமொழியை யுடைய் ஆறாம் வேற்றுமைக்கு, **அதுவும் ஆதுவும்** – (முன்சொல்லப்பட்ட) அது என்பதே யன்றி ஆது என்பதும், **பன்மைக்கு** – பன்மையாகிய வருமொழியை யுடைய ஆறாம் வேற்றுமைக்கு, **அவ்வும்** – அ என்பதும், **உருபு ஆம்** – உருபுகளாகும்; **பொருள்** – (அதன்) பொருள்களாவன, **பண்பு** – (குணமும் தொழிலுமாகிய) பண்பும், **உறுப்பு** – அவயவமும், **ஒன்றன் கூட்டம்** – ஒரு பொருட்கூட்டமும், **பலவின் ஈட்டம்** – பலபொருட்டிரட்சியும், **திரிபின் ஆக்கம்** – ஒன்று திரிந்து மற்றொன்றாதலும், **ஆம்** – ஆகிய, **தற்கிழமையும்** – (ஐந்து) தற்கிழமைப் பொருள்களையும், **பிறிதின் கிழமையும்** – (அவையல்லாத பொருள் இடம் காலம் ஆகிய மூன்று) பிறிதின் கிழமைப் பொருள்களையும், **பேணுதல்** – உடையதாய் வருதலாம்; **எ–று.**

தற்கிழமையாவது – தன்னோடு ஒற்றுமையுடைய பொருளின் சம்பந்தம். பிறிதின் கிழமையாவது – தன்னின் வேறாகிய பொருளின் சம்பந்தம். பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்ற ஆறனுள், குணம் தொழில் என்ற இரண்டும் 'பண்பு' என்ற ஒன்றில் அடக்கப்பட்டன. அவ்வாறனுள் பிந்தின மூன்றும் தற்கிழமைப்பொருள் எனவே, இவையல்லாத பொருள் இடம் காலம் ஆகிய மூன்றும் பிறிதின் கிழமைப் பொருளென்பது பெறப்பட்டது. ஆகவே, இப்படி பலவகையாலும் வருகிற சம்பந்தப்பொருளே ஆறாம் வேற்றுமையின் பொருளென்றதாயிற்று.

**உ–ம்.:** சாத்தனது கருமை – (குணப்)

சாத்தனது வரவு – (தொழிற்) பண்புத்தற்கிழமை.

| | | |
|---|---|---|
| சாத்தனது கை | – | உறுப்புத் தற்கிழமை. |
| மாந்தரது தொகுதி | – | ஒன்றன்கூட்டத் தற்கிழமை. |
| பறவைகளது கூட்டம் | – | பலவினீட்டத் தற்கிழமை |
| நெல்லினது பொரி | – | திரிபினாக்கத் தற்கிழமை |
| சாத்தனது பசு | – | பொருட்பிறிதின் கிழமை |
| சாத்தனது வீடு | – | இடப் பிறிதின் கிழமை |
| சாத்தனது நாள் | – | காலப் பிறிதின் கிழமை |

எனாது கை, நினாது வரவு, தனாது பொருள் – ஆது உருபு.

என கைகள், நின வீடுகள், தன பொருள்கள் – அகர உருபு.

ஆறனுருபு – 'எனது உயிர்', 'இராகுவினது தலை', பூமியினது தலம்' என உடையதும் உடைமைப் பொருளும் வேறாகாத

ஒற்றுமைக் கிழமைப் பொருளிலும் வரும்; யான் என்பதும் உயிர் என்பதும், இராகு என்பதும், தலை என்பதும், பூமி என்பதும். தலம் என்பதும் ஒரு பொருளே யாதலால், இவை ஒற்றுமைக்கிழமை.

சிறுபான்மை 'அது' உருபு 'நினது அடியார்', 'எனது கைகள்' என வருமொழி பன்மையாயிருக்கும்பொழுது வரும்; பிற உருபுகளும் மாறிவருதலு முண்டு.

இவ்வேற்றுமைக்கு 'உடைய' என்பது சொல்லுருபாக வரும்.

**உ–ம்.:** என்னுடைய வீடு; அவனுடைய தம்பி.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** ஆறன் ஒருமைக்கு அதுவும் ஆதுவும்–ஆறாம்வேற்றுமையினது வருமொழியி னொருமைப்பொருண்மைக்கு முன்சொல்லப்பட்ட அதுவேயன்றி ஆதுவும், பன்மைக்கு அவ்வும் உருபு ஆம்–வருமொழியின் பன்மைப்பொருண்மைக்கு அகரமும் உருபாம். பொருள்–அவற்றின் பொருள்களாவன, பண்பு–குணமுந் தொழிலுமாகிய பண்பும், உறுப்பு–அவயவமும், ஒன்றன் கூட்டம்–ஒருபொருட் கூட்டமும், பலவின் ஈட்டம்–பலபொருட் கூட்டமும், திரிபின் ஆக்கம்–ஒன்று திரிந்தொன்றாதலும், ஆம்–ஆகிய, தற்கிழமையும்–ஆகிய (ஐந்து) தற்கிழமைப் பொருள்களையும், பிறிதின் கிழமையும்–அவையல்லாத பிறிதின் கழிமைப் பொருள்களையும் பேணுதல்–உடையனவாக அவ்வுருபுகளையேற்ற பெயர்ப்பொருள்கள் வேறுபட்ட இவ்விருவகைச் சம்பந்தப் பொருள்களுமாம். **எ–று.**

எனவே, ஆறாம் வேற்றுமைக்கு உருபு, வருமொழி ஒருமையானால் அது ஆது என்பனவும், வருமொழி பன்மையானால் அகரமுமாம் என்பதும்; பொருள்,–குணமும் தொழிலுமாகிய பண்பு, உறுப்பு, ஒன்றன் கூட்டம், பலவினீட்டம், திரிபினாக்கம் என இவற்றானாய (1) தற்கிழமையும்; பொருள், இடம், காலம் என இவற்றானாய (2) பிறிதின்கிழமையுமாம் என்பதும் பெறப்பட்டன.

தற்கிழமைப்பொருளாவது தன்னோ டொற்றுமையுடையது. பிறிதின்கிழமைப்பொருளாவது தன்னின் வேறாயது. தற்கிழமைப்பொருள் இவையெனவே, இவையல்லாத பொருளும் இடமுங் காலமுமாகிய மூன்றும் பிறிதின்கிழமைப் பொருளென்றாகும். ஆகவே, இப்படிப் பலவகையாலும் வரும் சம்பந்தப்பொருளே இவ் வேற்றுமை யுருபுகளின் பொரு ளென்பதாயிற்று.

1. தற்கிழமை.

உ–ம். சாத்தனது கருமை. (குணம்.)

சாத்தனது வரவு.........(தொழில்.) – பண்புத் தற்கிழமை.

சாத்தனது கை.................

புலியது வால்.............. – உறுப்புத் தற்கிழமை.

மாந்தரது தொகுதி..............

நெல்லது குப்பை.............. – ஒன்றன் கூட்டத் தற்கிழமை.

படைகளது தொகுதி..............

பறவைகளது கூட்டம்.............. – பலவின் கூட்டத் தற்கிழமை.

நெல்லினது பொரி..............

மஞ்சளது பொடி............... – ஒன்றுதிரிந் தொன்றாயதன் தற்கிழமை.

2. பிறிதின் கிழமை.

சாத்தனது பசு..............

முருகனது வேல்.............. – பொருட் பிறிதின் கிழமை.

சாத்தனது வீடு..............

முருகனது குறிஞ்சி.............. – இடப் பிறிதின்கிழமை.

சாத்தனது நாள்..............

மாரனது வேனில்.............. – காலப் பிறிதின் கிழமை.

எனது கை, நினாது தலை, தனாது புறம்..........ஆதுருபு.

என கைகள், தனதாள்கள்..............அகரவுருபு.

இராகுவினது தலை எனதுயிர் என ஆறனுருபு, உடையதும் உடைமைப் பொருளும் வேறாகாத ஒற்றுமைப்பொருளில் வருதலுங் கொள்க. இராகுவே தலையாதலாலும், நானெனப்பட்டது உயிரேயாதலாலும், ஒற்றுமைப் பொருளாயின. ஒற்றுமையென்பது அபேதம்.

அஃறிணை ஒருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகள் இங்ஙனங் கூறவே, உணர்திணையொருமை பன்மையாகிய கிழமைப்பொருளுக்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம். உணர்திணைப்பெயர் வரும்போது, சாத்தனுக்கு மகன் எனக் குவ்வுருபு வருமென்றறிக. சிறுபான்மை, "அரனது தோழன்;" "குன்றவர் தமது செம்மல்" என உயர்திணை யொருமைப்பொருண்மைக்கும், "நினதடியாரொடல்லால்" என ணர்திணைப் பன்மைப்பொருண்மைக்கும், எனது கைகள் என அஃறிணைப் பன்மைப்பொருண்மைக்கும் அது வுருபும் வரும்.

இவ்வாறனுருபுகளுள் ஒன்று நிற்றற்குரியவிடத்தே உடைய என்பது சொல்லுருபாக வரும். உ–ம். சாத்தனுடைய புதல்வன், சாத்தனுடைய புதல்வர்; சாத்தனுடைய வீடு சாத்தனுடைய வீடுகள்.

'இவ்வீடெனது', 'அத்தோட்டமவனது' என வருவனவற்றில், எனது அவனது' என்பன, துவ்விகுதியும் அகரச்சாரியையும்

பெற்று நின்ற குறிப்பு வினைமுற்று. 'எனது' போயிற்று, 'அவனதை வாங்கினேன்' என வருவனவற்றில், எனது, அவனது என்பன, மேற்கூறியபடி வந்த குறிப்பு வினையாலணையும் பெயர். இங்ஙனமன்றி, இவ்விடங்களில் வரும் அது என்பது ஆறாம்வேற்றுமை யுருபன்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) ஆறன் ஒருமைக்கு – ஆறாம் வேற்றுமையில் (வருமொழியின்) ஒருமைப் பொருண்மைக்கு, அதுவும் ஆதுவும்–(முன் சொல்லப்பட்ட) அதுவேயன்றி ஆதுவும், பன்மைக்கு – (வருமொழியின்) பன்மைப் பொருண்மைக்கு, அவ்வும் – அகரமும், உருபாம் – உருபுகளாகும்; பொருள் – (அவற்றின்) பொருள்களாவன, பண்பு – குணமும், உறுப்பு – அவயவமும், ஒன்றன் கூட்டம் – ஒரு பொருட்கூட்டமும், பலவினீட்டம் – பல பொருட் கூட்டமும், திரிபினாக்கம் – ஒன்று திரிந்து ஒன்றாதலும், ஆம் தற்கிழமையும் – ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருள்களையும், பிறிதின் கிழமையும்– (அவையல்லாத) பிறிதின்கிழமைப் பொருள்களையும், பேணுதல் – உடையனவாக (அவ்வுருபுகளை ஏற்ற பெயர்ப்பொருள்கள் வேறு பட்ட இவ்விருவகைச்) சம்பந்தப் பொருள்களுமாகும். (எ–று)

(பொ–ரை.) ஆறாம் வேற்றுமையின் ஒருமைக்கு அதுவும், ஆதுவும், பன்மைக்கு அவ்வும் உருபாம்; அவற்றின் பொருள்களாவன: குணமும், தொழிலுமாகிய பண்பும், சினையும், ஒரு பொருட்கூட்டமும், பலபொருட்கூட்டமும், ஒன்று திரிந்து ஒன்றானதும் ஆகிய ஐந்துதற்கிழமைப் பொருளினையும், பிறதின்கிழமைப் பொருறினையும் உடையதாத் தம்மை ஏற்ற பெயர்ப் பொருளை வேற்றுமை செய்தலாம்.

தற்கிழமைப்பொருளாவது தன்னோ:டொற்றுமை யுடையது. பிறிதின்கிழமைப்பொருளாவத தன்னின் வேறுபது.

தற்கிழமைப்பொருளிவை எனவே, இவை யல்லாத பொருளும் இடமும் ஆகிய மூன்றும் பிறிதின்கிழமைப் பொருளென்றாகும். ஆகவே, இப்படிப் பலவகையாலும் வருகின்ற சம்பந்தப் பொருளே இவ்வேற்றுமையுருபுகள்ன் பொருளென்பதாயிற்று

1. தற்கிழமை.

(அதுவுருபு.)

(உ–ம்.) சாத்தனது கருமை. (குணம்) பண்பு.

சாத்தனது வரவு. (தொழில்)

சாத்தனது கை. புலியது வால். உறுப்பு.

மாந்தரது தொகுதி. நெல்லகு குப்பை. ஒன்றன் கூட்டம்.

படைகளது தொகுதி. பறவைகளது கூட்டம். பலவினீட்டம்.

நெல்லினது பொரி. மஞ்சளது பொடி. திரிபினாக்கம்.

2. பிறிதின் கிழமை

(அதுவுருபு.)

சாத்தனது பசு. முருகனது வேல். பொருள்.

சாத்தனது வீடு. முருகனது குறிஞ்சி. இடம்.

சாத்தனது நாள். மாரனது வேனில். காலம்.

(ஆதுவுருபு.)

எனாதுகை. நினாதுதலை. தனாது செவி.

(அதரவுருபு.)

உறுப்புத்தற்கிழமை

எனகைகள்.

நின கைகள்.

தன தாள்கள்.

'இராகுவினது தலை,' 'எனது உயிர்' உன ஆறனுருபு, உடையதும் உடைமைப்பொருளும் வேறகாத ஒற்றுமைப் பொருளில் வருதலும் கொள்க. இராகுவே தலையாதலாலும், நானெனப் பட்டது உயிரே யாதலாலும் ஒற்றுமைப் பொருளாயின.

(ஒற்றுமை–அபேதம்.)

அஃறிணை ஒருமை பன்மைகளுக்கு இயைந்த உருபுகள் இங்ஙனம் கூறவே, உயர்திணை ஒருமை பன்மையாகிய கிழமைப் பொருளுக்கு இவ்வுருபுகள் ஏலாவென்பது பெற்றாம்.

உயர்திணைப்பெயர் வரும்போது, 'சாத்தனுக்கு மகன்' எனக் குவ்வுருபு வரும். சிறுபான்மை அரனது தோழன் என உயர்திணை ஒருமைப் பொருண்மைக்கும், 'நினதடியாரோ டல்லால்' என உயர்திணை பன்மைப் பொருண்மைக்கும், 'எனது கைகள்' என அஃறிணைப் பன்மைப் பொருண்மைக்கும் அது உருபும் வரும்.

இவ்வீடு இவனது என்புழி, இவனது, என்பது துவ்விகுதியும், அகரச்சாரியையும் பெற்று நின்ற குறிப்பு வினைமுற்று. இவனது போயிற்று, அவனது வாங்கினேன் என வருவனவற்றில் இவனது, அவனது என்பன மேற்கூறியபடி வந்த குறிப்பு வினையாலணையும் பெயர்.

இங்ஙனமன்றி இவ்விடங்களில் வரும் அது என்பகு ஆறாம் வேற்றுமை யுருபன்று. இவ்வாறனுருபுகளில் ஒன்று நிற்றற்குரிய இடத்தே உடைய என்பது சொல்லுருபாகவரும்; அது 'என்னுடைய தம்பி' எனவரும்.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஆறன்** – ஆறாம் வேற்றுமையின், **ஒருமைக்கு** – வருமொழியின் ஒருமைப் பொருண்மைக்கு, **அதுவும் ஆதுவும்** – அது என்பதும் ஆது என்பதும், **புன்மைக்கு** – வருமொழியின் பன்மைப் பொருண்மைக்கு, **அவ்வும்** – அகரமும், **உருபாம்** – உருபுகளாகும் ; **பொருள்** – அவற்றின் பொருள்களாவன, **பண்பு** – குணமும், **உறுப்பு** – அவயவமும், **ஒன்றன் கூட்டம்** – ஒருபொருட்கூட்டமும், **பலவின் ஈட்டம்** – பல பொருட்கூட்டமும், **திரிபின் ஆக்கம்** – ஒன்றுதிரிந்து ஒன்றாதலும், **ஆம் தற்கிழமையும்** – ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருள்களையும், **பிறிதின்கிழமையும்** – அவை யல்லாத பிறிதின் கிழமைப் பொருள்களையும், **பேணுதல்** – உடையனவாகக் கொள்ளுதலாகிய இருவகைச் சம்பந்தப் பொருள்களாம்.

தற்கிழமைப் பொருளாவது – தன்னைவிட்டு நீங்காத உரிமையுடையது ; எனது கை என்பது போல்வன.

பிறிதின் கிழமைப் பொருளாவது – தன்னின்வேறாய் உரிமை யுடையது ; எனது புத்தகம் என்பது போல்வன.

மேற்கூறிய ஐந்தும் தற்கிழமைப் பொருளெனவே, இவையல்லாத பொருளும் இடமும் காலமுமாகிய மூன்றும் பிறிதின் கிழமைப்பொருள் என்றாகும். ஆகவே, இப்படிப் பலவகையாலும் வருகின்ற சம்பந்தப் பொருளே இவ்வேற்றுமையுருபுகளின் பொருள் என்பதாயிற்று.

**உதாரணம்**

1. **தற்கிழமை :**

சாத்தனது கருமை– குணப்பண்புத் தற்கிழமை
சாத்தனது வரவு – தொழிற்பண்புத் தற்கிழமை
சாத்தனது கை – உறுப்புத் தற்கிழமை.

மாந்தரதுதொகுதி நெல்லது குப்பை –
ஒன்றன் கூட்டத் தற்கிழமை.

படைகளதுதொகுதி பறவைகளது கூட்டம்
–பலவினீட்டத் தற்கிழமை.

நெல்லினது பொரி
மஞ்சளது பொடி – திரிபினாக்கத்
தற்கிழமை.

2. பிறிதின்கிழமை :

சாத்தனது பசு
முருகனது வேல் –
பொருட்பிறிதின்கிழமை.

சாத்தனது வீடு
முருகனது குறிஞ்சி

இடப்பிறிதின்கிழமை.

சாத்தனது நாள்
மாரனது வேனில் – காலப்பிறிதின்கிழமை.

இன்னும் சிறுபான்மையாக எனது உயிர் என உடையதும் உடைமைப்பொருளும் வேறாகாத ஒற்றுமைப் பொருளில் வருதலும் கொள்க.

ஆது உருபு – **எனாது கை, நினாது செவி** எனவரும்.

அகரவுருபு – **என கைகள், நின கைகள்** என வருதல் காண்க. அஃறிணை ஒருமை பன்மைகளுக்கு இவ்வுருபுகள் வருமெனவே, உயர்திணைப் பெயர்களுக்கு இவ்வுருபுகள் வாரா என்பது பெற்றாம். உயர்திணைப்பெயர் வரும்போது **சாத்தனுக்கு மகன்** எனக் குவ்வுருபு வருமென்றறிக ; சிறுபான்மை, **அரசனது தோழன்** என உயர்திணை யொருமைப் பொருண்மைக்கும், **நினது அடியாரோடல்லாமல், எனது கைகள்** என இருதிணைப் பன்மைப் பொருண்மைக்கு அது உருபும் வரும்.

ஆறன் உருபுகளில் ஒன்று நிற்றற்கு உரிய இடத்தே **உடைய** என்பது சொல்லுருபாக வரும்.

என்**னுடைய** வீடு, என்னுடைய தம்பி என்பன காண்க.

**இவ்வீடு எனது ; அத்தோட்டம் அவனது** என வருவனவற்றில், எனது, அவனது என்பன துவ்விகுதியும் அகரச்சாரியையும் பெற்று நின்ற குறிப்பு வினைமுற்றுக்கள். **எனது போயிற்று, அவனதை வாங்கினேன்** என வருவனவற்றில், எனது, அவனது என்பன மேற்கூறியபடி வந்த குறிப்பு வினையாலணையும் பெயர்கள் ; இவற்றை ஆறனுருபெனக் கொள்ள லாகாது.

மோசசு பொன்னையா

ஆறாம் வேற்றுமையின் முடிக்குஞ்சொல் ஒருமைப் பொருளதாயின், முன்னர்ச் சொல்லப்பட்ட அதுவேயன்றி ஆதுவும் உருபாகும்; முடிக்குஞ்சொல் பன்மைப் பொருளதாயின் அ ஒன்றும் உருபாகும்; குணமுந் தொழிலுமாகிய பண்பும், உறுப்பும், ஒரு பொருட் கூட்டமும், பலபொருட்டிரட்சியும், ஒன்று திரிந்து மற்றொன்றதாலும் ஆகிய ஐந்து தற்கிழமைப் பொருள்களையும், அவையல்லாத பிறிதின் கிழமைப் பொருள்களையும் உடையதாய்ப் பெயர்ப்பொருளை வேற்றுமை செய்தல் இவ்வேற்றுமையின் பொருளாம் எ–று.

எ–டு

1. எனது கை, நினது தலை – அது
எனாது கை, நினாது தலை – ஆது

என கைகள், தன செவிகள் – அ

2. சாத்தனது கருமை (குணம்)

சாத்தனது வரவு (தொழில்) பண்புத் தற்கிழமை

சாத்தனது தலை

புலியது வால் உறுப்புத் தற்கிழமை

மாந்தரது தொகுதி

நெல்லது குப்பை ஒன்றன் கூட்டத் தற்கிழமை

படைகளது தொகுதி

பறவைகளது கூட்டம் பலவின் ஈட்டத் தற்கிழமை

நெல்லினது பொரி

மஞ்சளது பொடி திரிபினாக்கத் தற்கிழமை

2. சாத்தனது பசு (பொருள்)

சாத்தனது வீடு (இடம்)

சாத்தனது நாள் (காலம்) பிறிதின் கிழமை

இந்நூற்பாவில் ஆறாம் வேற்றுமைப் பொருளுக்கு இவ்வாசிரியர் தந்துள்ள விளக்கம், இளம்பூரணர் 'தற்கிழமை ஐந்து வகைப்படும், ஒன்று பல குழீஇய தற்கிழமையும், வேறு பல குழீஇய தற்கிழமையும், ஒன்றியற்கிழமையும், உறுப்பின் கிழமையும், மெய்திரிந்தாய கிழமையும் என' எனவும், 'பிறிதின் கிழமை இதுபோலப் பகுதிப்படாது' எனவும் கூறியுள்ள விளக்கதோடு ஒன்றியமைந்துள்ளது.1

நின்ன கண்ணி, என கைகள், தன செவிகள் என இடப்பெயர்களும், அவர காப்புடைக் கயம், அவள அணி, அவன வீடு எனச் சுட்டுப் பெயர்களும்; சுனைய தேரை, யானைய

நாடு, புரவியதேர் என இயற்பெயர்களும் ஈற்றில் அகரம் பெற்றுப் பெயரடைகளாக அமைவதும், அகரத்தோடு குகரத்தையும் பெற்று நினக்குக்கண்ணி, எனக்குக்கண்ணி என இவ்வாறும், குகரத்தினோடு ஒரு அகரத்தையும் பெற்று யானைக்க நாடு/கோடு, புரவிக்க தேர்/கால் என இவ்வாறும், அகர குகரங்களோடு மேலுமொரு அகரத்தையும் பெற்று எனக்க வீடு/நாடு/ஆடு, நினக்க தவறு/வெற்றி/தலை என இவ்வாறும் பெயரடையாக வழங்குவது இயல்பு. இடப்பெயர்கள் அகரம் பெறாமல் குவ்வொன்றையே பெற்று ஊர்க்குக் கிழக்கு, நாட்டுக்கு நன்மை, மதுரைக்கு வடக்கு, குமரிக்குத் தெற்கு என இவ்வாறு பெயரடைகளாக அமைவதும் இயல்பேயாம். இப்பெயரடைகளெல்லாம் பெயருக்கு உறவு, உரிமை,

உடைமையாதி பண்புகளை உரிமைப்படுத்தி நிற்பனவேயாம். இலக்கணவாசிரியர்கள் இவ்வாறு வழங்கும் அடைவழக்குப் பற்றித் தெள்ளத்தெளிய இலக்கணமுரைத்தாரில்லை.

இஃதிவ்வாறாக, கரிது, கரிய என்பன போன்ற குறிப்புப் பெயர்கள் (இவற்றைக் குறிப்பு வினையாலணையும் பெயர் எனவுங் கூறுப) பெயர்களின் முன்னர் அமைந்து, தாம் குறிக்கும் பண்புப்பொருளை அவ்வப் பெயர்களுக்கு உரிமைப்படுத்தி அடைகளாக அமையுங்கால், கரிது குதிரை, கரிய குதிரை என இவ்வாறு தொகாநிலைப்பட்டோ, கருங்குதிரை, கருங்குதிரைகள் என இவ்வாறு தொகைநிலைப்பட்டோ வழங்குவதும் மரபேயாகும். தொகாநிலையில் மட்டும் இவ்வடைகளின் ஒருமை, பன்மை வேறுபாடு வெளிப்பட்டு நிற்குமென்பதும், தொகை நிலையில் பான்மைப் பண்பை விளக்கும் கிளவிகளின்றி நிற்குமென்பதும் ஈண்டைக்கு அறியத்தக்கவையாம்.

ஒரு பெயரின் பொருளை தன்னது இது, பிறிதினிது இது என்னும் வாய்ப்பாட்டுக் கிழமைப் பொருளதாகப் பயனிலைக்குச் சேர்த்து நிற்பதே ஆறாம் வேற்றுமைப் பொருளாம் என்பதும், அதற்கு அது என்பது ஒன்றே உருபாகும் என்பதும்,

ஆறா குவதே
அதுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
தன்னினும் பிறிதினும் இதன திதுவெனும்
அன்ன கிளவிக் கிழமைத் ததுவே,

என இலக்கணங் கூறி, அடுத்த நூற்பாவில் அதன் பொருளுக்கு அடிப்படையாவன இவை எனத் தொல்காப்பியர் கூறியுள்ளவாற்றால் புலனாகும். சான்றோர் செய்யுட்களில், 'பாரியது பறம்பே', 'நினதுஇரு திருவடி', 'உனது அடியார் மனம்' என இவ்வாறு முடிக்கும் பயனிலையாய பெயரின் பன்மை ஒருமை வேறுபாடு கருதப்படாமல் அது என்னும் உருபு ஒன்றே அமைந்து வழங்குவதால், அது என்னும் உருபு ஒன்றே ஏனை வேற்றுமை உருபுகளேபோல் தனக்கெனத் தனிப்பொருளின்றி ஆறன் உருபாக வழங்குகிறது என்பது போதரும். நேமிநாதமுடையார்,

அதுவென்ப தாறாம் உருபாம் இதன
திதுவென் கிழமையிரண் டெய்தும்,

என நூற்பா அமைந்துள்ளதால், அவர் காலத்திலும் அது வென்ற ஓர் உருபே ஆறன் பொருளை உணர்த்தும் குறியாய் வழங்கிற்று என்பது தெளிவுறும். இவ்வாசிரியர், நின்ன கண்ணி, அவரகயம், சுனையதேரை என இவ்வாறு வழங்கும்

பெயரடைகளை ஆறாம் வேற்றுமை உருபேற்ற பெயர்கள் எனப் பிறழ உணர்ந்து ஆறாம் வேற்றுமைக்கு அகரம் பன்மை உருபாகும் என்றார் போலும்5

ஆது என்னும் ஓர் உருபையும் இவ்வாசிரியர் புதுமையாக ஆறாம் வேற்றுமைக்கு உரிமைப்படுத்தியுள்ளார்.

வடாஅது பனிபடு நெடுவரை வடக்கும்
தெனாஅ துருகெழு குமரியின் றெக்கும்
குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்
குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்
கீழது, முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழு மேல
தானிலை யுலகத் தானும்...,

என அமைந்துள்ள புறநானூற்றுச் செய்யுளிலும், பிற சங்கச் செய்யுட்களிலும் ஆது என வரும் சொல் வடிவங்கண்டு அதனையும் ஆறாம் வேற்றுமை உருபென்றார் என்க வடாஅது என்பது இச்செய்யுளில் 'வடக்கின் கண்ணது' என்னும் பொருளில் அமைந்துள்ளது என்பது பழைய உரையாாற் புலனாவதால், வட+அது என்பது உடம்படுமெய் பெறாது புணரும் பழைய முறைப்படி வடாஅது என உயிர்நீண்டு புணர்ந்தது என்பது முன்னர் 'இசைகெடின்'7 என்ற நூற்பாவின் உரையில் விளக்கப்பட்டது. உயிர்மிகவரு புணர்ச்சியை இவர் இந்நூலுள் கூறாமல் விட்டதும், பனை +அட்டு=பனாட்டு எனப் புணர்த்தித்8, தொல்காப்பியர்,

பனையின் முன்னர் அட்டுவரு காலை
நிலையின் றாகும் ஐயென் உயிரே
ஆகாரம் வருதல் ஆவயி னான,1

எனக்கூறிய நூற்பாவோடு மாறுகொளக் கூறியுள்ளமையும், உடம்படுமெய் பெறாது உயிரீற்றுமொழிகள் புணரும் பழைய முறையை இவர் உடன்படாததால் விளைந்த தவறுகளேயாம். ஆறாம் வேற்றுமைக்கு ஆது என்ற ஓர் உருபைப் படைத்து மொழிதற்கும் அதுவே காரணமாயிற்று எனலாம். கீழது, மேலது என்ற முடிவுகளும் வடாஅது, தெனாஅது, குணாஅது, குடாஅது என்பவற்றில் அதுவுருபே நிற்பதை உணர்த்தி நிற்கின்றன. எனாது, தனாது என்பன இவ்வாறு மயங்கியோர் தம் படைப்பேயாகும்.

ஆறாம் வேற்றுமைக்கு இவ்வாசிரியரே போல் விளக்க முனைத்தார் பிறரும் உளர் என்பது,

ஆற னுருபே யதுவா தவ்வும்
வேறொன் றுடையதைத் தனக்குரி யதையென
இருபாற் கிழமையின் மருவுற வருமே,

என்ற நூற்பாவாற் புலனாகும். இக்காலத்தில் ஆறாம் வேற்றுமைப் பொருளில் என்மகன், என்கை, இராமன், தம்பி, முருகன் வேல் என உயர்திணையில் உருபின்றி வழங்குதலும்; அஃறிணையில் ஆட்டுக்கால், மரக்கிளை, யானைப்பல் என இவ்வாறு உருபின்றியும், ஆட்டின் கால், மரத்தின் இலை, யானையின் பல் என இவ்வாறு இன்பெற்று வழங்குதலுமே பெருவழக்காம் என அறிக.

(43)

**300. ஏழ னுருபு கண்ணாதி யாகும்**
**பொருண்முத லாறு மோரிரு கிழமையின்**
**இடனாய் நிற்ற லிதன்பொரு ளென்ப.**

**ஏழன் உருபு கண் ஆதி ஆகும்**
**பொருள் முதல் ஆறும் ஓர் இரு கிழமையின்**
**இடன்ஆய் நிற்றல் இதன் பொருள் என்ப.**

ēḷan̲ urupu kaṇ āti ākum
poruḷ mutal āūum ōr iru kiḻamaiyin̲
itan̲āy niūūal itan̲ poruḷ en̲pa.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The seventh or locative case**

The 7th case is denoted by the signs beginning with 'kan' and the (the learned) say that this case effects a natural or accidental relation of 'locality' between itself and any of the six names of 'objects', &c.

## ஒப்புமைப் பகுதி

**ஏழா குவதே**
**கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்**
**அனைவகைக் குறிப்பின் தோன்றும் அதுவே**

(தொல். சொல்.: 81)

**-------- விதிமுறையாற்**
**கண்ணென்ப தேழாம் உருபாகுங் காலநில**
**நண்ணும் வினையிடத்து நன்கு**

(நேமி.: 44: 2–4)

## மயிலை நாதர்

**எ–ன்,** நிறுத்த முறையானே ஏழாம் வேற்றுமையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** ஏழாம் வேற்றுமைக்கு உருபு கண்ணென்பது முதலானவையாம். பொருளாதி யாறும் தற்கிழமையானும் பிறதின் கிழமையானும் ஒன்றற்கிடனாய் நிற்றல் இதன்பொருளென்று சொல்லுவர் புலவர், **எ – று.**

**வ–று.:–**

மணியின்கணொளி, மலையின்கண் ஒக்கம் எனவும், பனையின்கண் அன்றில், தினையின்கட் கிள்ளை எனவும் இரு கிழமையானும் பொருள் [1]இடனாயிற்று, ஊரின்கண் இல்லம், கடலின்கட்டிரை எனவும், ஆகாயத்தின்கட் பறவை, குடக்கின்கட் குன்று எனவும் இடம் இடனாயிற்று, யாண்டின் கண் இருது, நாளின்கணாழிகை எனவும், வேனிற்கட்பாதிரி, காரின்கட்கொன்றை எனவும், காலம் இடனாயிற்று. கையின்கண் விரல், மலரின்க ணாற்றம் எனவும் கையின்கட் கடகம், மலரின்கண் வண்டு எனவும், இளமைகட் செல்வம், வளமைக்கண் விருந்து எனவும் பண்பு இடனாயிற்று. ஆடற்கணழகு, பாடற்கட்பணிவு எனவும், ஆடற்கட்பாட்டு, பாடற்கண்யாழ் எனவும் தொழிற்பெயர் இடனாயிற்று.

இதனுள், 'பொருண்முதலாறும்' என்றாராயினும் வினை வேற்றுமை யேலாமையின், ஈண்டுத் தொழிற்பெயரே கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ–னின்,** ஏழாம் வேற்றுமையது இலக்கணம் **உணர்–ற்று.**

**இ–ள்.:** ஏழாம் வேற்றுமையின் உருபு மேற்கூறிய கண்ணே யன்றி அஃது ஆதியாய பிறவுமாம்; இவற்றின் பொருளாவன தம்மையேற்ற பெயர்ப்பொருளாகிய பொருளாதியாறும் மேற்போந்த இருகிழமைப் பொருட்கும் இடமாகி நிற்க அவற்றினை வேற்றுமை செய்தலாம் என்று சொல்லுவர் புலவர், **எ – று.**

---

**பாட வேறுபாடு:–**

**1. இடமாயிற்று**

இடப்பொருளே யன்றி ஏனை ஐந்து பொருளும் ஈண்டு இடனாய் நிற்றலின் பொருள்முதல் ஆறும் என்றும், வினை வரினும் அவ் வினைமுதல் இவ்விரு கிழமையின்பாற்படுமாதலின் கிழமையினிடன் என்றும் கூறினார்.

ஈண்டு இது என்றதூஉம் தொகுதி ஒருமை.

**வ–று.:–**

மணியின்கண் ஒளி, மணியின்கண் இருந்ததொளி எனவும்; பனையின்கண் அன்றில், பனையின்கண் இருந்தது அன்றில் எனவும் இருகிழமைக்கும் பொருள் இடமாயிற்று. ஊரின்கண் இல்லம், ஊரின்கண் இருந்தது இல்லம் எனவும்; ஆகாயத்தின்கண் பருந்து, ஆகாயத்தின்கண் பறந்தது பருந்து எனவும் இடம் இடமாயிற்று. நாளின்கண் நாழிகை, நாளின்கண் வந்தது நாழிகை எனவும்; வேனிற்கண் பாதிரி, வேனிற்கண் பூத்தது பாதிரி எனவும்; காலம் இடமாயிற்று. கையின்கண் விரல், கையின்கண் இருந்தது விரல் எனவும்; கையின்கண் கடகம் கையின்கண் கிடந்தது கடகம் எனவும் சினை இடமாயிற்று. கறுப்பின்கண் அழகு, கறுப்பின்கண் இருந்தது அழகு எனவும்; இளமையின்கண் செல்வம், இளமையின்கண் இருந்தது செல்வம் எனவும் குணம் இடமாயிற்று. ஆடற்கண் சதி, ஆடற்கண் நிகழ்ந்தது சதி எனவும்; ஆடற்கண் பாட்டு, ஆடற்கண் பாடப்பட்டது பாட்டு எனவும் தொழில் இடமாயிற்று.

**'ஆதி'** என்றமையான் வரும் உருபுகள் வரும் சூத்திரத்தால் கூறுப ஆகலின் அவை அங்ஙனம் காட்டுதும்.

இது பெயர்ப்பொருளை மேற்போந்த இருகிழமைப் பொருள்கட்கும் இடமாக வேற்றுமை செய்தலின் ஏழாம் வேற்றுமை எனப்பட்டது.

***இவ்விட வேற்றுமைப்பொருள் உரிமை, இருவகை, ஓரிடம், எங்கும் என நான்கு என்றே சிலர் இயம்புவர். அவற்றிற்கு உதாரணம்: நிலத்தின்கண் தேரோடுகின்றது, கடற்கண் நாவாய் ஓடுகின்றது, ஆகாயத்தின்கண் பருந்து பறந்தது, காட்டின்கண் புலி வாழ்ந்தது எனவும்; மதிக்கண் மறு, கையின்கண் விரல், குன்றின்கண் குவடு, நெற்றியின்கண் விழி, ஆண்டின்கண் இருது, நாளின்கண் வைகறை எனவும்; ஊர்க்கண் இருந்தான், தேர்க்கண் இருந்தான் எனவும்; மணியின்கண் ஒளி, உயிரின்கண் உணர்வு, பாலின்கண் சுவை நெய், தீயின்கண் சூடு, நீரின்கண் சீதம் எனவும் முறையே*** காண்க. இவையெல்லாம் முற்கூறியவற்றுள் அடங்கும்.

***இனி இடமல்லா இடம் மூவகைப்படும்; கூட்டிப்பிரித்தல், பிரித்துக்கூட்டல், இருவரின்முடியும் ஒருவினைத்தொழிற்***

*பெயர் என. அவையாவன [1]"உடையான் அரசருளேறு" "அவற்றுள், அ இ உ எ ஒக்குறில்" எனவும், [2]"வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்" [3]"மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்" எனவும், [4] "புல்லிவிடாஅப் புலவியுள் தோன்றும்" தட்டுப்புடைக்கண் வந்தான், புல்லுதற்கண் வேர்வை வந்தது, பொருதற்கண் மழைபெய்தது, சூதாடற்கண் தூக்கம் வந்தது எனவும் முறையே காண்க.*

## விசாகப் பெருமாளையர்

**இது,** ஏழாம் வேற்றுமைய திலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: ஏழன்** – ஏழாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளானவை, **கண்ணாதி யாகும்** – முன் சொல்லப்பட்ட கண்ணே யன்றி அது முதலாகிய பிறவுமாம், **இதன்** – இவ் வுருபுகளுடைய, **பொருள்** – பொருளாவது, **பொருண் முதல்** – பொருளாதியாகிய, **ஆறும்** – ஆறும், **ஓரிரு கிழமையின்** – ஆறாம் வேற்றுமைச் சூத்திரத்திலே சொல்லப்பட்ட இருகிழமைப் பொருள்களுக்கு, **இடனாய் நிற்றல்** – இடமாய் நிற்கிற வுருபேற்ற பெயர்ப் பொருள் வேறுபட்ட அவ்விடப் பொருளாம், **என்ப** – என்று சொல்லுவர் புலவர், **எ–று.**

மணியின்கணிருக்கின்றதொளி – தற்கிழமை, பனையின் கண் வாழ்கின்றதன்றில், பிறிதின்கிழமை:– பொருளிடமாயிற்று. ஊரின்கணிருக்குமில்லம் – தற்கிழமை; ஆகாயத்தின்கட் பறக்கின்றது பருந்து – பிறிதின் கிழமை:– இடமிடமாயிற்று. நாளின்கணாழிகை யுள்ளது தற்கிழமை வேனிற் கட் பாதிரி பூக்கும் பிறிதின்கிழமை காலமிடமாயிற்று. கையின்கணுள்ளது விரல் – தற்கிழமை. கையின்கண் விளங்குகின்றது கடகம் – பிறிதின்கிழமை–சினையிடமாயிற்று. கறுப்பின்கண் மிக்க தழகு, தற்கிழமை, இளமையின்கண் வாய்த்தது செல்வம் பிறிதின் கிழமை. குணமிடமாயிற்று. ஆடற்கணுள்ளது சதி – தற்கிழமை, ஆடற்கட்பாடப்பட்டது, பாட்டு – பிறிதின் – கிழமை, தொழிலிடமாயிற்று.

இடப்பொருளாவது, வினைமுதற் றொழிற்காயினுஞ் செயப்படுபொருட்காயினும் இடமாகிய பொருளாம். மணியின் கணிருக்கின்ற தொளி என்கிறவிடத்தே, ஒளிவினை முதலாம் இருத்தல் அதன் வினையாம், மணி அத்தொழிலுக்கிடமாம். ஆகலால் அது இடப்பொருளாமென்றறிக. கழுவின்கட் கள்ளனை யேற்றினா னென்கிறவிடத்தே கள்ளன் செயப்படு பொருளாம் அவனுயிர்ப்பிரிவு அதன்பயனாம், கழு அப்பயனுக்கிடமாம், ஆதலால் அது விடப்பொருளாமென்றறிக.

அவ்விடப்பொருள் ஊர்க்கணிருந்தான் எனத் தன்னிற் சிறிதிடமாவதும் தீயின் கண்ணுள்ளது சூடு, தான் முழுதுமிடமாவதும், கல்வியின்கணாசை வைத்தான், என விடயமாவதும், ஆக மூன்று வகைப்படும், இன்னு

மிவ்வுருபுகளுக்குக், குறிலைந்தனுள் அ இ உ இம் மூன்றுஞ் சுட்டு, அவர்களுளிவன் வல்லவன், எனக் கூட்டிப் பிரிக்கு மெல்லைப் பொருளும், கல்வியறி வில்லாதவனை விலங்னுள்வைத் தெண்ணுவார்கள், என வருகிற பிரித்துக் கூட்டுங் கூட்டப் பொருளும், பால்கறக்கையில் வந்தான் என வருகிற ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிலும், சிறுபான்மை பொருள்களாகும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஏழாம் வேற்றுமையுருபும் பொருளுங் கூறுஞ் சூத்திரம் யாது?

ஏழ னுருபுகண் ணாதி யாகும்
பொருண்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்ற லதன்பொரு ளென்ப.
(ஏழன் உருபு கண் ஆதி ஆகும்
பொருள் முதல் ஆறும் ஓரிருகிழமையின்
இடம் ஆய் நிற்றல் அதன் பொருள் என்ப.)

**இ–ள்.:** ஏழாம்வேற்றுமையினுருபு முன் சொல்லப்பட்ட கண்ணேயாம். இடமாகிய பொருள்முதலாறும் ஆறாம்வேற்றுமைச் சூத்திரத்திலே சொல்லப்பட்ட இருகிழமைப்பொருள்களுக்கும் இடமாய்நிற்றல் அதன் பொருளாம் என்று சொல்லுவர் புலவர். **என்றவாறு.** ஆதி என்பதற்கு இங்கே இடமெனப் பொருள்கொள்க.

(உதாரணம்)

மணியின் கணிருக்கின்றதொளி..................தற்கிழமை பொருளிடமாயிற்று.

பனையின்கண் வாழ்கின்றதன்றில். பிறிதின்கிழமை. – ,,

ஊரின் கணிருக்குமில்லம்..........................................தற். – இடமிடமாயிற்று.

ஆகாயத்தின்கட்பறக்கின்றது பருந்து................பிறி. ,,

நாளின்கணாழிகையுள்ளது..................................தற். – காலமிடமாயிற்று.

வேனிற்கட்பாதிரி பூக்கும்..........................................பிறி. ,,

கையின்கணுள்ள துவிரல்................................தற். – சினையிடமாயிற்று.

கையின்கண்விளங்குகின்றதுகடகம்...................பிறி ,,

கறுப்பின்கண்மிக்குள்ளதழகு...........................தற்.– குணமிடமாயிற்று.

இளமையின்கண் வாய்த்ததுசெல்வம்................பிறி – ,,

ஆடற்கணுள்ளது சதி.........................................தற் – தொழிலிடமாயிற்று.

ஆடற்கட்பாடப்பட்டதுபாட்டு...........................பிறி. ,,

இடப்பொருளாவது யாது?

வினைமுதல்வழியாக வினைமுதற்றொழிற்காயினும், செயப்படுபொருள் வழியாகச் செயப்படுபொருளிலிருக்கின்ற பயனுக்காயினும் இடமாகும் பொருள் இடப்பொருளென்பர் வடநூலார்.

உ–ம்.

(1) மணியின் கணிருக்கின்றதொளி என்புழி, ஒளியென்னும் வினைமுதலின் வழியாக அதனது இருத்தற்றொழிற்கு மணி இடமாயிற்று.

(2)கழுவின் கட்கள்வனை யேற்றினான் என்புழிக், கள்வனென்னுஞ் செயப்படுபொருளின் வழியாக அச்செயப்படு பொருளிலிருக்கின்ற உயிர்ப்பிரிவாகிய பயனுக்குக் கழு இடமாயிற்று.

இடப்பொருள் எத்தனைவகைப்படும்?

இடப்பொருள் தன்னிற்சிறிதிடமாவதும், தான்முழுதுமிட மாவதும், விடயமாவதும் என மூவகைப்படும்.

உ–ம்.

(1) ஊர்க்கணிருந்தான், பாயிலிருக்கின்றான். ஒரோவழி மேவல்.

(2) மணியின்கணொளி, உயிரின்கணுணர்வு, பாலின்கட்சுவை, தீயின்கட் சூடு, நீரின்கட் சீதம் எங்கும் வியாபகம்.

(3) கல்வியின்கணாசை வைத்தான், குருவின்கணன்பு செய்தான். விடயம்.

சிறுபான்மை ஏழனுருபுகள், கூட்டிப் பிரித்தற்கெல்லையாகும் பொருளிலும், பிரித்துக்கூட்டலிற் குழுவாகும் பொருளிலும், ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிதுதொழிலாகும் பொருளிலும் வரும்.

உ–ம்.

(1) மக்களுள் உயர்ந்தோரந்தணர்; குறிலைந்தனுள் அ இ உ இம்மூன்றும் சுட்டு. கூட்டிப்பிரிக்குமெல்லைப்பொருள்.

(2) அறஞ்செயுமகன் றேவருள் வைக்கப்படுவான்; கல்வியறிவில்லாதவன் விலங்கினுள் வைத்தெண்ணப்ப டுவான். பிரித்துக்கூட்டுங் குழூஉப்பொருள்.

(3) பால்கறக்கையில் வந்தான்; பொருதற்கண் மழை பெய்தது. ஒருதொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழில்.

ஆதியாகும் பொருண்முதலாறும் என்றது இடப்பொருளேயன்றி ஏனைய ஐந்துபொருளும் ஈண்டிடனாய் நிற்றலினென்க.

ஏழனுருபு கண்ணாதியாகும் என்பதற்கு ஏழாம்வேற்றுமையுருபு கண்; முதலியனவாமெனப் பொருள் கூறலாகாதோ?

கூறலாகாது. கண் என்பதொன்றுமே அதற்குரிய வுருபாம். இதன்பொருள் என்புழி இதுவென்னு பொருமைச்சுட்டு ஒன்றேயென வலியுறுத்தலாலும், மேல்வருஞ் சூத்திரத்திற் கூறப்படும் உருபுகளெல்லாம் இடப்பொருளுருபெனப் பட்டதுவே யன்றி ஏழனுருபெனப்படாமையாலும், உரு பென்பது ஆசிரியர் கருத்தாயின் கூறியது கூறலாய்க் கண்ணென்பதை மீட்டுங் கூறாராகலானும், புறம் அகம் வலம் என்பன, ஊர்ப்புறத்திருந்தான் ஊரகத்திருந்தான் கை வலத்துள்ளது என அத்துச்சாரியை பெறுதலின் உருபாயின் அத்துப்பெறுதல் பொருந்தாமையானும், அவ்வுரை பொருந்தாதென்க. சேனாவரையரும் வைத்தியநாத நாவலரும் இக்கருத்தேபற்றி உரையிட்டார்களன்றோ.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ஏழாம் வேற்றுமையிலக்கணமுணர்த்திற்று.

**இ–ள்.: ஏழனுருபு கண்ணாதி யாகும்** – ஏழாம் வேற்றுமையுருபு மேற்கூறிய கண்ணேயன்றி அது முதலிய பிறவுமாம், **பொருண் முதலாறும்** – தம்மை யேற்ற பெயர்ப்பொருளாகிய பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்கின்ற ஆறும், (சினை – அவயவம்) **ஓரிருகிழமையின்** – மேற்சொல்லிய இருகிழமைப் பொருட்கும், **இடனாய் நிற்றல்** – இடமாகி நிற்க வேற்றுமை செய்தல், **இதன் பொருளென்ப** – இந்த வேற்றுமை யுருபுகளின் பொருளென்று சொல்லுவர் புலவர், **எ–று.**

**வ–று.:–**

மணியின்கண் ஒளி, மணியின்கண் இருந்தது ஒளி என இது தற்கிழமை. பனையின்கண் அன்றில், பனையின்கண் இருந்தது அன்றில் என இது பிறிதின் கிழமை. இவை யிரண்டிலும் பொருள் இடனாயிற்று. ஊரின்கண் இல்லம் – இது தற்கிழமை. ஆகாயத்தின் கட்பருந்து என இது பிறிதின் கிழமை. இவை யிரண்டிலும் இடம் இடமாயிற்று. நாளின் கண் நாழிகை என இது தற்கிழமை, வேனிற்கட்பாதிரி (வேனில் – காலம், பாதிரி – மரம்) என இது பிறிதின் கிழமை. இவை இரண்டிலும் காலம் இடமாயிற்று. கையின் கண்விரல், தற்கிழமை – கையின்கண்வளை என இது பிறிதின் கிழமை. இவை இரண்டிலும் சினை யிடனாயிற்று. கறுப்பின்கண் அழகு என இது தற்கிழமை; இளமையின்கட் செல்வம் என இது பிறிதின் கிழமை. இவை இரண்டிலும், குணம் இடனாயிற்று. ஆடற்கட்சதி என இது தற்கிழமை. (சதி–தாளம்,) ஆடற்கட்பாட்டு என இது பிறிதின் கிழமை. இவை இரண்டிலும் தொழிலிடனாயிற்று. ஆடற்கட்பாடப்பட்டது பாட்டு என்பதுபோல இடையிலே நின்றனவற்றிற்கும் வினை

வருவித்துரைத்துக் கொள்க. ஆதி யென்றதினால் வரும் உருபுகள் வருஞ் சூத்திரத்தாற் கூறுவர். இனி இந்த இடவேற்றுமைப்பொருள் இருவகை யுரிமையும் ஓரிடமும் எங்கும் என நான்கென்றே சிலர் சொல்லுவர். அவற்றிற்கு உதாரணம் நிலத்தின் கண் தேரோடுகின்றது, கடலின்கண் நாவாய் ஓடுகின்றது (நாவாய் – தோணி,)

ஆகாயத்தின் கண் பருந்து பறந்தது, காட்டின்கண் புலி வாழ்ந்தது – இவை பிறிதின் கிழமை. மதியின்கண்மறு, கையின் கண்விரல், குன்றின் கண்குவடு (குவடு – மலையுச்சி), நெற்றியின்கண் விழி, ஆண்டின்கண் இருது (இருது – பருவம்), நாளின் கண்வைகறை (வைகறை – விடியற்காலம்,) இவை தற்கிழமை. ஊர்க்கண் இருந்தான், தேர்க்கண் இருந்தான், இவை ஓரிடம். மணியின் கண் ஒளி, உயிரின் கண் உணர்வு, பாலின்கண் சுவை, நெய்யின்கண் சூடு, நீரின்கண் குளிர்ச்சி – இவை எங்கும். இந்த விகற்ப மெல்லாம் மேற்கூறியவற்று ளடங்கும். இனி இடமல்லாத இடம் மூவகைப்படும். கூட்டிப் பிரித்தலும் பிரித்துக் கூட்டலும் இருவரால் முடியும் ஒருவினைத் தொழிற் பெயரும் என. 'உடையானரசருள் ஏறு'. 'அவற்றுள் அ, இ உ எ ஒக் குறில்' என வருமிவை கூட்டிப் பிரித்தல். அரசரை யெல்லாங் கூட்டி உடையானென ஒருவனையும், எழுத்தை யெல்லாங் கூட்டி ஐந்து குறிலையும் பிரித்ததினாலே யெனக் காண்க.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப் படும்

மற்றையான் செத்தாருள் வைக்கப்படும் என வருமிவை ஒருவனை யெடுத்து ஒரு கூட்டத்துள்ளே சேர்க்கப்படுதலாற் பிரித்துக் கூட்டலெனக் காண்க. புல்லுதற் கண் வேர்வை வந்தது, பொருதற்கண் மழை பெய்தது, சூதாடற்கண்ணே தூக்கம் வந்தது (புல்லுதல் – ஆண் பெண் கலத்தல்) இவை யிருவரால் முடியுமொரு வினைத் தொழிற்பெயர். பல்லுதல், பொருதல், சூதாடல் என்பன தொழிற்பெயர் உருபேற்று நின்றன, இந்த உருபு பெயர்ப் பொருளை மேற்சொல்லிய இருகிழமைப் பொருள்களுக்கும் இடமாக வேற்றுமை செய்தலால் ஏழாம் வேற்றுமையெனப் பட்டது.

"ஏழாகுவதே
கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினையிடத்தினிலத்திற் காலத்தி
னனை வகைக் குறிப்பிற்றோன் மதுவே"

எனவும்,

"கண்கால் புறமக முள்ளுழை கீழ் மேல் – பின்

சார்பயல் புடைதேவகையெனா அ – முன்னி
டைகடை தலைவலமிட மெனா அ –
வன்னபிறவும தன்பாலவென் மனார்"

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஏழன்** – ஏழாம் வேற்றுமையின், **உருபு** – உருபுகளாவன:– **கண் ஆதி ஆகும்** – கண் முதலியவும் பிறவுமாம்; **இதன்** – இதனுடைய, **பொருள்** – பொருளாவது – **பொருள் முதல் ஆறும்** – தன்னை ஏற்றபொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் ஆறுவகைப் பெயர்களும், **ஓர் இருகிழமையின்** – தற்கிழமை பிறிதின்கிழமை என்னுமிரண்டு பொருள்களுக்குக்கும், **இடன் ஆய் நின்றல்** – இடமாகி நிற்க அதன்பொருளை வேறுபடுத்து வதாம், **என்ப** – என்று சொல்லுவர் (புலவர்)

**குறிப்பு:**– எனவே, இவ்வேற்றுமையின் பொருள் இடப்பொருள் என்றதாயிற்று. 'ஆதி' என்றதனாற் குறித்த உருபுகளை வருஞ் சூத்திரத்திற் காண்க.

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| மணியின்கண் ஒளி | – | தற்கிழமை | பொருள் இடமாயிற்று |
| மரத்தின்கண் பறவை | – | பிறிதின்கிழமை | |
| ஊரின்கண் வீடு | – | தற்கிழமை | இடம் இடமாயிற்று |
| ஆகாயத்தின்கண் பருந்து | – | பிறிதின்கிழமை | |
| நாளின்கண் நாழிகை | – | தற்கிழமை | காலம்இடமாயிற்று |
| வேனிலின்கண் பதிரி | – | பிறிதின்கிழமை | |
| கையின்கண் விரல் | – | தற்கிழமை | சினை இடமாயிற்று |
| விரலின்கண் மோதிரம் | – | பிறிதின்கிழமை | |
| கறுப்பின்கண் அழகு | – | தற்கிழமை | குணம் இடமாயிற்று |
| இளமையின்கண் செல்வம் | – | பிறிதின்கிழமை | |
| ஆட்டத்தின்கண் அபிநயம் | – | தற்கிழமை | தொழில் இடமாயிற்று. |
| ஆட்டத்தின்கண் பாட்டு | – | பிறிதின்கிழமை | |

## ஆறுமுகநாவலர்

**இ–ள்.: ஏழன் உருபு கண் ஆதி ஆகும்** – ஏழாம் வேற்றுமையினுருபு முன் சொல்லப்பட்ட கண்ணே யன்றி அது முதலாகிய பிறவுமாம், **இதன் பொருள்** – இவ்வுருபுகளின் பொருளாவது, **பொருள் முதல் ஆறும் ஓரிரு கிழமையின் இடன் ஆய் நிற்றல் என்ப** – பொருளாதியாகிய ஆறும் ஆறாம் வேற்றுமைச்

சூத்திரத்திலே சொல்லப்பட்ட இருகிழமைப் பொருள்களுக்கும் இடமாய் நிற்கும் உருபேற்ற பெயர்ப்பொருள் வேறுபட்ட அவ்விடப்பொருளாம் என்று சொல்லுவர் புலவர், எ—று.

**உ—ம்.:**

மணியின் கணிருக்கின்றதொளி – தற்

பனையின் கண்வாழ்கின்றதன்றில் – பிறி (பொருளிடமாயிற்று)

ஊரின்கணிருக்கு மில்லம் – தற்

ஆகாயத்தின்கட் பறக்கின்றது பருந்து – பிறி (இடமிடமாயிற்று)

நாளின்கணாழிகையுள்ளது – தற்

வேனிற்கட்பாதிரிபூக்கும் – பிறி ( காலமிடமாயிற்று)

கையின்கணுள்ளது விரல் – தற்

கையின் கண்விளங்குகின்றது கடகம் – பிறி (சினையிடமாயிற்று)

கறுப்பின்கண் மிக்குள்ளதழகு – தற்

இளமையின்கண் வாய்த்தது செல்வம் – பிறி (குணமிடமாயிற்று)

ஆடற்கணுள்ளது சதி – தற்

ஆடற்கட்பாடப்பட்டது பாட்டு – பிறி (தொழிலிடமாயிற்று)

வினை முதல்வழியாக வினைமுதற்றொழிற்காயினும், செயப்படுபொருள் வழியாகச் செயப்படுபொருளிலிருக்கின்ற பயனுக்காயினும் இடமாகும் பொருள் இடப்பொருளென்பர் வடநூலார்.

**உ—ம்.:**

(1) மணியின்கணிருக்கின்ற தொளி என்புழி, ஒளியென்னும் வினைமுதலின் வழியாக அதனது இருத்தற் றொழிற்கு மணி இடமாயிற்று.

(2) கழுவின்கட் கள்ளனை யேற்றினான் என்புழிக், கள்ளனென்னுஞ் செயப்படுபொருளின் வழியாக அச் செயப்படுபொருளி லிருக்கின்ற உயிர்ப்பிரிவாகிய பயனுக்குக் கழு இடமாயிற்று.

இடப்பொருள் தன்னிற் சிறிதிடமாவதும், தான் முழுதுமிடமாவதும், விடயமாவதும் என மூவகைப்படும்.

**உ—ம்.:** ஊர்க்கணிருந்தான், பாயிலிருக்கின்றான், ஒரோவழி மேவல்.

(2) மணியின்க ணொளி, உயிரின்கணுணர்வு, பாலின்கட் சுவை, தீயின்கட் சூடு, நீரின்கட் சீதம். எங்கும் வியாபகம்.

(3) கல்வியின்கணாசை வைத்தான், குருவின்கணன்பு செய்தான். விடயம்.

சிறுபான்மை ஏழனுருபுகள், கூட்டிப் பிரித்தற் கெல்லை யாகும்

பொருளிலும், பிரித்துக் கூட்டலிற் குழூவாகும் பொருளிலும், ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிலாகும் பொருளிலும், வரும்.

**உ–ம்.:** (1) மக்களிலுயர்ந்தோரந்தணர் ; குறிலைந்தனுள் அ இ உ இம் மூன்றும் சுட்டு, கூட்டிப்பிரிக்குமெல்லைப் பொருள்.

(2) அறன்செயுமகன் றேவருள் வைக்கப்படுவான்; கல்வி யறிவில்லாதவன் விலங்கினுள் வைத்தெண்ணப்படுவான். பிரித்துக் கூட்டுங் குழுப்பொருள்.

(3) பால் கறக்கையில் வந்தான்; பொருதற்கண் மழைபெய்தது. ஒருதொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழில்.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **ஏழன் உருபு கண் ஆதி ஆகும்** – ஏழாம் வேற்றுமையினுருபு முன் சொல்லப்பட்ட கண்ணேயன்றி அதுமுதலாகிய பிறவுமாம், – **இதன் பொருள்** – இவ்வுருபுகளின் பொருளாவது – **பொருள் முதல் ஆறும் ஓரிருகிழமையின் இடன் ஆய் நிற்றல் என்ப** – பொருளாதியாகிய ஆறம் ஆறாம் வேற்றுமைச் சூத்திரத்திலே சொல்லப்பட்ட இருகிழமைப் பொருள்களுக்கும் இடமாய்நிற்கும் உருபேற்ற பெயர்ப் பொருள் வேறுபட்ட அவ்விடப் பொருளாம் என்று சொல்லுவர் புலவர்.

**(உதாரணம்)**

| | | |
|---|---|---|
| மணியின் கணிருக்கின்றதொளி......... | தற் | |
| பனையின் கண்வாழ்கின்றதன்றில்..... | பிறி | பொருளிடமாயிற்று |
| ஊரின் கணிருக்குமில்லம் ........ | தற் | |
| ஆகாயத்தின்கட் பறக்கின்றது பருந்து.... | பிறி | இடமிடமாயிற்று. |
| நாளின்கணாழிகையுள்ளது..... | தற் | |
| வேனிற்கட்பாதிரிபூக்கும் .......... | பிறி | காலமிடமாயிற்று |
| கையின்கணுள்ளது விரல் ........ | தற் | |
| கையின் கண்விளங்குகின்றது.... | பிறி | சினையிடமாயிற்று |
| கறுப்பின்கண்மிக்குள்ளதழகு . . . | தற் | |
| இளமையின்கண்வாய்ந்தது செல்வம்.... | பிறி | குணமிடமாயிற்று |
| ஆடற்கணுள்ளது சதி ............. | தற் | |
| ஆடற்கட் பாடப்பட்டது பாட்டு ..... | பிறி.. | தொழிலிடமாயிற்று. |

வினைமுதல்வழியாக வினைமுதற்றொழிற்காயினும், செயப்படுபொருள் வழியாகச் செயப்படுபொருளிலிருக்கின்ற பயனுக்காயினும் இடமாகும் பொருள் இடப்பொருளென்பர் வடநூலார்.

உ–ம் (1) மணியின்கணிருக்கின்ற தொலி என்புழி, ஒளியென்னும் வினைமுதலின் வழியாக அதனது இருத்தற்றொழிற்கு மணியிடமாயிற்று.

(2) கழுவின் கட்கள்ளனையேற்றினான் என்புழிக்,

கள்ளனென்னுஞ் செயப்படுபொருளின் வழியாக அச்செயப்படுபொருளி லிருக்கின்ற உயிர்ப்பிரிவாகிய பயனுக்குக் கழு இடமாயிற்று.

இடப்பொருள் தன்னிற் சிறிதிடமாவதும், தான் முழுதுமிடவாதும் விடயமாவதும் என மூவகைப்படும்.

உ–ம்

(1)ஊர்க்கணிருந்தான், பாயிலிருக்கின்றான். சிறிதிடம் (ஊர் முழுவதிலும் பாய்முழுவதிலும் ஒருவனிராமல் சிறிது பாகத்தில் மாத்திரமிருத்தலால்)

(2)மணியின்கணொளி, உயிரின்கணுணர்வு, பாலின்கட் சுவை, தீயின்கட்சூடு, நீரின்கட்சீதம் முழுதுமிடம். (ஒளிமணியில் எங்கும் வியாபகமாதலின்) மற்றவைகளும் அப்படியேயாம்.

(3)கல்வியின் கணாசைவைத்தான், குருவின்கணன்பு செய்தான். விடயம்.

சிறுபான்மை ஏழனுருபுகள், கூட்டிப் பிரித்தற் கெல்லையாகும். பொருளிலும், பிரித்துக்கூட்டலிற் குழுவாகும் பொருளிலும், ஒரு தொழிற்காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிலாகும் பொருளிலும் வரும்.

உம்

(1)மக்களிலுயர்ந்தோரந்தணர்; குறிலைந்தனுள் அஇஉ இம்மூன்றும் சுட்டு– கூட்டிப் பிரிக்குமெல்லைப் பொருள்.

(2)அறஞ்செயுமகன் றேவருள்வைக்கப்படுவான்; கல்வியறி வில்லாதவன் விலங்கினுள்வைத் தெண்ணப் படுவான்– பிரித்துக்கூட்டுங் குழுப்பொருள்.

(3)பால்கறக்கையில்வந்தான்; பொருதற்கண் மழைபெய்தது. ஒரு தொழிற்காலத்தைக் குறிக்கும் பிறிது தொழில்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஏழன்** – ஏழாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளாவன, **கண் ஆதி ஆகும்** – (முன் சொல்லப்பட்ட கண் என்பதேயன்றி) அக்கண் முதலிய பிறவுமாம்; **இதன்** – இதனுடைய, **பொருள்** – பொருளாவது: **பொருள் முதல் ஆறும்** – (தன்னை ஏற்ற) பொருள் இடம் காலம் சினை குணம் தொழில் என்னும் ஆறுவகைப்பெயர்களும், **ஓர் இரு கிழமையின்** – தற்கிழமை பிறிதின்கிழமை என்னும் இரண்டு பொருள்களுக்கும், **இடன் ஆய் நிற்றல்** – இடமாய் நிற்றலாம், **என்ப** – என்று சொல்வர் புலவர், **எ–று.**

எனவே, இடப்பொருள் ஏழாம் வேற்றுமையின் பொருளென்றதாயிற்று.

**'ஆதி'** என்றதனாற் குறித்த உருபுகள், வருஞ் சூத்திரத்திற் கூறப்படும்.

**உ–ம்.:**

மணியின்கண் இருக்கின்றது ஒளி – தற்கிழமை

மரத்தின்கண் வாழ்கின்றது பறவை – பிறிதின் கிழமை (பொருள் இடமாயிற்று)

ஊரின்கண் உள்ளது வீடு – தற்கிழமை

ஆகாயத்தின்கண் பறக்கின்றது பருந்து – பிறிதின் கிழமை (இடம் இடமாயிற்று)

நாளின்கண் நாழிகை உள்ளது – தற்கிழமை

வேனிலின்கண் பாதிரி பூக்கும் – பிறிதின் கிழமை (காலம் இடமாயிற்று)

கையின்கண் உள்ளது விரல் – தற்கிழமை

கையின்கண் விளங்குகின்றது வளை – பிறிதின் கிழமை (சினை இடமாயிற்று)

நிறத்தின்கண் உள்ளது அழகு – தற்கிழமை

இளமையின்கண் வாய்த்தது செல்வம் – பிறிதின்கிழமை (குணம் இடமாயிற்று)

ஆட்டத்தின்கண் உள்ளது அபிநயம் – தற்கிழமை;

ஆட்டத்தின்கண் பாடப்பட்டது பாட்டு – பிறிதின் கிழமை

தொழில் இடமாயிற்று.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** ஏழன் உருபு கண் ஆதி ஆகும்–ஏழாம் வேற்றுமையினுருபு முன் சொல்லப்பட்ட கண்ணேயன்றி அது முதலாகிய பிறவுமாம். இதன் பொருள்–இவ்வுருபுகளின் பொருளாவது, பொருள் முதல் ஆறும் ஓரிருகிழமையின் இடன் ஆய் நிற்றல் என்ப–பொருளாதியாகிய ஆறும் (ஆறாம் வேற்றுமைச் சூத்திரத்திலே சொல்லப்பட்ட) இருகிழமைப் பொருள்களுக்கும் இடமாய் நிற்க உருபேற்ற பெயர்ப்பொருளை வேறுபடுத்தலாம் என்று சொல்லுவர் புலவர். **எ–று.**

எனவே, ஏழாம் வேற்றுஜமக்குப் பொருள் பொருளாதியாறும் இடமாகத் தற்கிழமை பிறிதின்கிழமை இரண்டினும் வரும் இடப்பொருள் என்பதாயிற்று.

'கண் ஆதி' எனத் தொகுத்துக் கூறப்பட்ட உருபுகள் வருஞ் சூத்திரத்தால் விரித்துக் கூறப்படும்.

உ–ம்.:–

மணியின்க ணிருக்கின்ற தொளி..............தற்.

பனையின்கண் வாழ்கின்ற தன்றில்..............பிறி. – பொருளிடமாயிற்று.

ஊரின்க ணிருக்கு மில்லம்..............தற்

ஆகாயத்தின்கட் பறக்கின்றது பருந்து..............பிறி. – இடமிடமாயிற்று.

நாளின்க ணாழிகை யுள்ளது..............தற்.

வேனிற்கட் பாதிரி பூக்கும்..............பிறி. – காலமிடமாயிற்று

கையின்கணுள்ளது விரல்..............தற்.

கையின்கண் விளங்குகின்றது கடகம்..............பிறி.– சினையிடமாயிற்று.

கறுப்பின்கண் மிக்குள்ள தழகு..............தற்.

இளமையின்கண் வாய்த்தது செல்வம்..............பிறி. – குணமிடமாயிற்று.

ஆடற்க ணுள்ளது அபிநயம்...............தற்.

ஆடற்கட் பாடப்பட்டது பாட்டு..............பிறி. – தொழிலிடமாயிற்று.

வினைமுதல்வழியாக வினைமுதற் றொழிற்காயினும், செயப்படுபொருள் வழியாகச் செயப்படுபொருளிலிருக்கின்ற பயனுக்காயினும் இடமாகும் பொருள் இடப்பொருளென்பர் வடநூலார்.

உ–ம்.:–

(1) 'மணியின்கணிருக்கின்ற தொளி' என்புழி, ஒளியென்னும் வினைமுதலின் வழியாக அதனது இருத்தற்றொழிற்கு மணி இடமாயிற்று.

(2) 'கழுவின்கட் கள்ளனை யேற்றினான்' என்புழிக், கள்ளனென்னுஞ் செயப்படுபொருளின் வழியாக அச்செயப்படுபொருளி லிருக்கின்ற உயிர்ப்பிரிவாகிய பயனுக்குக் கழு இடமாயிற்று,

இடப்பொருள் தன்னிற் சிறிதிடமாவதும், தான் முழுது மிடமாவதும், விடயமாவதும் என மூவகைப்படும்.

உ–ம். (1) 'ஊர்க்கணிருந்தான்', 'பாயிலிருக்கின்றான்' – சிறிதிடம்.

(2)'மணியின்கணொளி', 'உயிரின்கணுணர்வு', 'பாலின்கட் சுவை', 'தீயின்கட் சூடு', 'நீரின்கட் சீதம்' – முழுதிடம்.

(3) 'கல்வியின்க ணாசை வைத்தான்', 'சுருவின்க ணன்பு செய்தான்' – விடயம்.

சிறுபான்மை ஏழனுருபுகள், கூட்டிப் பிரித்தற்கெல்லையாகும் பொருளிலும், பிரித்துக் கூட்டலிற் குழுவாகும் பொருளிலும், ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிலாகும் பொருளிலும் வரும்.

உ–ம். (1) 'மக்களி லுயர்ந்தோ ரறிஞர்'; 'குறிலைந்தனுள் அ இ உ இம் மூன்றும சுட்டு' – கூட்டிப்பிரிக்கு மெல்லைப் பொருள்.

(2) 'அறஞ்செயு மகன் றேவருள் வைக்கப்படுவான்'; 'கல்வி யறிவில்லாதவன் விலங்கினுள்வைத் தெண்ணப்படுவான்'. – 'பிரித்துக்கூட்டுங் குழுப்பொருள்',

(3) 'பால் கறக்கையில் வந்தான்'; 'பொருதற்கண் மழை பெய்தது', – ஒருதொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிதுதொழில்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) ஏழன் உருபு – ஏழாம் வேற்றுமையினுடைய உருபுகளானவை, கண் ஆதி ஆகும் – (முன் சொல்லப்பட்ட கண்ணேயன்றி) அது முதலாகிய

பிறவுமாம்; இதன் பொருள் – இவ்வுருபுகளுடைய பொருளாவது, பொருள் முதல் ஆறும்– பொருளாதியாகிய ஆறும், இடமாய் நிற்கிற உருபேற்ற பெயர்ப் பொருள் வேறுபட்ட அவ்விடப் பொருளாம், என்ப – என்றுசொல்லுவர் புலவர். (எ–று)

(பொ–ரை.) ஏழாம் வேற்றுமையின் உருபு கண் முதலிய வாம்; இவற்றின் பொருளாவன: தம்மை யேற்ற பெயர்ப்பொருளாகிய பொருள் முதலிய ஆறும் இரண்டு கிழமைப் பொருன்களுக்கும் இடமாய் நிற்க, அவற்றை வேறு படுத்தலாம் என்று புலவர் சொல்லுவர்.

(உ–ம்.) மணியின்கண் இருக்கின்றது ஒளி – தற்கிழமை பனையின்கண் வாழ்கின்றது அன்றில் – பிறிதின்கிழமை

பொருள் இடமாயிற்று.

ஊரின்கண் இருக்கும் இல்லம் – தற்கிழமை ஆகாயத்தின்கண் கறக்கின்றது பருந்து – பிறிதின்கிழமை

இடம் இடமாயிற்று.

நாளின்கண் நாழிகையுள்ளது – தற்கிழமை வேனிற்கண் பாதிரி பூக்கும் – பிறிதின்கிழமை

காலம் இடமாயிற்று.

கையின்கண் உள்ளது விரல் – தற்கிழமை கையின்கண் விளங்குகின்றது கடகம் – பிறிதின் கிழமை

சினை இடமாயிற்று.

கறுப்பின்கண் மிக்க தழகு – தற்கிழமை இளமையின்கண் வாய்த்தது செல்வம் – பிறிதின் கிழமை

குணம் இடமாயிற்று.

ஆடள்கண் உள்ளது சதி– தற்கிழமை ஆடற்கண் பாடப்பட்டது பாட்டு – பிறதின்கிழமை

தொழில் இடமாயிற்று.

இடப்பொருளாவது வினைமுதற்றொழிற்காயினும், செய்யப்படு பொருட்காயினும் இடமாகிய பொருளாம்.

'மணியின்கண் இருக்கின்ற தொளி' என்றவிடத்தே கள்ளன் செயப்படு பொலுளாம், அவனுயிர்ப்பிரிவு அதன் பயனும், கழு அப் பயனுக்கு இடமாம். ஆதலால், அது இடப் பொருளாமென்றறிக.

இடப்பொருள் தன்னில் சிறிதிடமாவதும், முழுவதும் இடமாவதும், விடயமாதும், விடயமாவதுமென மூவகைப்படும்.

(உ–ம்.) 1. ஊர்க்கணிருந்தான். தேரிலிருந்தான்.
சிறிதிடம்.

2. தீயின்கண் உள்ளது சூடு. பாலின்கட் சுவை.
முழுதும் இடம்.

3. கல்வியின்கண் ஆசை. குடிகளின்கண் இரக்கம்.
விஷயம்.

சிறுபான்மை சூழனுருபுகள் கூட்டிப்பிரிக்கும் எல்லைப் பொருளிலும், பிரித்துக் கூட்டும் கூட்டப் பொருளிலும், ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழிலாகும் பொருளிலும் வரும்.

(உ-ம்.)

1. குறில் ஐந்தனுள் அ, இ, உ இம் மூன்றும் சுட்டு. அவர்களில் இவன் வல்லவன்.

கூட்டிப் பிரிக்கும் எல்லைப்பொருள்.

2. கல்வி யறிவிலான் விலங்கினுள் வைத்தெண்ணப்படுவான். மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்.

பிரித்துக்கூட்டும் கூட்டப் பொருள்.

3. மழை பெய்கையிற் சென்றான். பால் கறக்கையில் வந்தான்.

ஒரு தொழிற் காலத்தைக் குறிக்கும் பிறிது தொழில்.

(ஏழாம் வேற்றுமை உருபுகள்.)

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**ஏழன்** – ஏழாம் வேற்றுமையின், **உருபு** – உருபுகளானவை, **கண் ஆதியாகும்** – கண் முதலாகிய பிறவுமாம், **இதன்** – இவ்வுருபுகளுடைய, **பொருள்** – பொருளாவது, **பொருள் முதல்** – பொருளாதியாகிய, **ஆறும்** – ஆறும், **ஓர் இரு கிழமையின்** – (ஆறாம் வேற்றுமைச் சூத்திரத்தில் சொல்லப்பட்ட) இருகிழமைப் பொருள்களுக்கும், **இடன் ஆய் நிற்றல்** – இடமாய் நிற்கின்ற இடப் பொருளாம், **என்ப** – என்று சொல்லுவர் புலவர்.

**உதாரணம்**

மணியின்கண் இருக்கின்றது ஒளி – தற்கிழமை பொருள்

பனையின்கண் வாழ்கின்றது அன்றில் – பிறிதின்கிழமை இடமாயிற்று

ஊரின்கண் இருக்கும் இல்லம் – தற்கிழமைஇடமாயிற்று

ஆகாயத்தின்கட் பறக்கின்றது பருந்து – பிறிதின்கிழமை இடமாயிற்று

நாளின்கண் நாழிகை யுள்ளது – தற்கிழமை காலம்
வேனிற்கட் பாதிரி பூக்கும் – பிறிதின்கிழமை
இடமாயிற்றுகையின்கண் உள்ளது விரல் – தற்கிழமை சினை
கையின்கண் விளங்குகின்றது கடகம் – பிறிதின்கிழமை இடமாயிற்று

கறுப்பின்கண் மிக்கது அழகு – தற்கிழமை குணம்

| | |
|---|---|
| இளமையின்கண் வாய்த்தது செல்வம் | – பிறிதின்கிழமை இடமாயிற்று |
| ஆடற்கண் உள்ளது அபிநயம் | –தற்கிழமைதொழில் |
| ஆடற்கட் பாடப்பட்டது பாட்டு | –பிறிதின்கிழமை இடமாயிற்று |

இடப்பொருளாவது வினைமுதலின் தொழிற்காயினும் செயப்படு பொருட் பயனுக்காயினும் இடமாகிய பொருளாம்.

**மணியின்கண் இருக்கின்றது ஒளி** என்னுமிடத்தே ஒளி வினை முதலாம் ; இருத்தல் அதன் தொழிலாம் ; மணி அத்தொழிலுக்கு இடமாம். ஆதலால், அது இடப்பொருளாமென் றறிக. **கழுவின்கட் கள்ளனை யேற்றினான்** என்னுமிடத்தே, கள்ளன் செயப்படுபொருளாம்; அவன் உயிர்ப்பிரிவு அதன் பயனாம்; கழு அப்பயனுக் கிடமாம் ; ஆதலால், அது இடப்பொருளாமென்று அறிக.

அவ்விடப்பொருள் ஊர்க்கண் இருந்தான் எனச் **சிறிது இடமாவதும்,** தீயின்கண் உள்ளது சூடு என **முழுதுமிடமாவதும்** உண்டு.

## மோசசு பொன்னையா

ஏழாம் வேற்றுமையின் உருபுகள் முன்னர்ச் சொல்லப்பட்ட கண்ணும் பிறவுமாம்; பொருள், இடம், காலம், சினை,குணம். தொழில் என்னும் அறுவகைப் பெயர்களும் தற்கிழமை, பிறிதின்கிழமை ஆகிய இரு கிழமைகளின் பொருளுக்கும் இடனாய் நிற்றல் இதன் பொருள் என்பர் எ–று.

ஆதி என்றதனாற் கொண்டவற்றை வரும் நூற்பாவால் தொகுத்துரைத்தார்.

எ–டு.:–

| | | | |
|---|---|---|---|
| 1. மணியின் கண் உள்ளது ஒலி | – | தற் | பொருள் |
| பனையின்கண் உள்ளது அன்றில் | – | பிறி | |
| 2. ஊரின்கண் உள்ளது இல்லம் | – | தற் | |
| ஆகாயத்தின்கண் பறப்பது பறவை | – | பிறி | இடம் |
| 3. நாளின்கண் உள்ளது நாழிகை | – | தற் | காலம் |
| வேனிற்கண் பூப்பது பாதிரி | – | பிறி | |
| 4. கையின்கண் உள்ளது விரல் | – | தற் | |
| விரலின்கண் உள்ளது கணையாழி | – | பிறி | சினை |
| 5. கறுப்பின்கண் உள்ளது அழகு | – | தற் | |
| இளமையின்கண் உள்ளது எழில் | – | பிறி | குணம் |

6. ஆட்டத்தின்கண் அமைந்தது அபிநயம் – தற்
ஆட்டத்தின்கண் கேட்டது பாட்டு –பிறி தொழில்

தொல்காப்பியர்,

**ஏழா குவதே**
**கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி**
**வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்**
**அனைவகைக் குறிப்பின் தோன்று மதுவே,**[1]

எனவும்,

**கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்**
**பின்சார் அயல்புடை தேவகை யெனாஅ**
**முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ**
**அன்ன பிறவும் அதன்பால என்மனார்,**[2]

எனவும் கூறி ஏழாம் வேற்றுமைப் பொருளை விளக்கியுள்ளார்

இவ்விரு நூற்பாக்களுள் முன்னதில் அமைந்துள்ள,

**வினைசெய் இடத்தின் நிலத்தின் காலத்தின்**
**அனைவகைக் குறிப்பின் தோன்று மதுவே**

என்னும் பகுதிக்கு இளம்பூரணர், 'வினைசெய்யிடமும், நிலமும், காலமும் என்பன மூன்று பொருட்கண்ணும் வரும் அது' எனவும், சேனாவரையர், 'அது வினைசெய்யா நிற்றலாகிய இடத்தின்கண்ணும், நிலமாகிய இடத்தின்கண்ணு காலமாகிய இடத்தின் கண்ணுமென அம்வகைக் குறிப்பின்கண்ணுந் தோன்றும்' எனவும், நச்சினார்க்கினியர், 'அது வினை செய்யா நிற்றலாகிய இடத்தின் கண்ணும், வினை நிகழாது வரையறையுடையதோர் நலமாகிய இடத்தின் கண்ணும், வினை நிகழாது வரையறைப்பட்டு நிற்கும் காலமாகிய இடத்தின் கண்ணு மென மூவகைக் குறிப்பின்கண்ணும் தோன்றும்' எனவும் உரை கூறி அம்மூவகை இடத்திற்கும் முறையே தட்டுப்புடைக்கண்[3] வந்தான், மாடத்தின்கண் வந்தான், கூதிர்க்கண் வந்தான் என்பவற்றை எடுத்துக்காட்டிச் சென்றனர். தெய்வச்சிலையார் இப்பகுதிக்கு 'அதுவினைநிகழுமிடத்து நிலத்தினும், காலத்தினும் அவ்விருவகைக் குறிப்பினுந் தோன்றும்' என உரை கூறி, 'எனவே, தொழில் நிகழாதவழி நிலமும் காலமும் ஏழாம் வேற்றுமையாகா என்றவாறாம்' என விளக்கம் எழுதி,

குறிப்புகள்:–

1. தொல். சொல். 81
2. தொல், சொல். 82
3.கிளித்தட்டு என்னும் விளையாட்டு

'அரங்கின்கண் வந்தான், மாடத்தின்கண் இருந்தான் இவை நிலம்; காலைக்கண்வனைந்தான், மாலைக்கண் வனைந்தான் இவை காலம்' என எடுத்துக்காட்டிச் சென்றார்.

இவ்வுரைகளைக் கூர்ந்து நோக்கின், தொல்காப்பிய நூற்பாவின், 'வினைசெய் யிடத்தின் நிலத்தின் காலத்தின் என்ற பகுதியில் வரும் வினை என்பதை இளம்பூரணர் முதலியோர் செய்யிடம் என்ற ஒன்றிற்கே கொண்டு, நிலம், காலம் என்பவற்றோடு அவற்றைக் கூட்டியுரைக்காமல் உரைகண்டனர் என்பதும், தெய்வச்சிலையார் வினை செய் நில இடம், வினை செய் கால இடம் எனக் கொண்டுகூட்டி வினை செய்யிடம் என்ற தொடரை நிலம் காலம் என்னும் இரண்டனுடனும் கூட்டி முடித்து உரை கூறினார் என்பதும் நன்கு புலனாகும். வினைசெய் நில இடக்குறிப்பும், வினைசெய் கால இடக்குறிப்பும் ஆகிய அவ்விரண்டின் அடிப்படையில் தோன்றுமதுவே ஏழா குவதாகிய கண்ணெனப் பெயரிய வேற்றுமைக் கிளவியாகும் என்பதே அவர் கருத்து எனத் தெரிகிறது. எனவே, ஏழாம் வேற்றுமையை முடித்தற்கு இட, கால இடப் பொருளுணர்த்தும் பெயரும் தொழிற் குறிப்பைப் புலப்படுத்தும் வினையும் இன்றியமையாதவை என்பது போதரும். இளம்பூரணர் முதலியோர் உரைகளால் இந்நுட்பம் புலப்படவில்லை.

வீரசோழியம் ஏழாம் வேற்றுமையை ஆதாரக்காரகம்[1] எனக் குறிப்பிடுகின்றது. அதன் உரையின், 'யாதொன்று ஒரு தொழில் செய்தற்கு இடமாயிற்று, அஃதாதாரக் காரகம்' எனக் காணப்படுகின்றது.

நேமிநாதமுடையார்,

**கண்ணென்ப தேழாம் உருபாகுங் காலநில**
**நண்ணும் வினையிடத்து நன்கு.[2]**

என உரைப்பதால் அவர் தெய்வச்சிலையாரோடு ஒத்த கொள்கையரே என்பது போதரும். அதன் உரைகாரர். 'ஏழாம் வேற்றுமை உருபு கண் என்றராயினும், பலவும் இடப்பொருளைப் பற்றி வரும். அவை: கண், கால், புறம்.... வலம், இடம், இவை முதலியன, அவை வருமாறு. ஊர்க்கண் இருந்தான்.... பூசலிடத்து வென்றான் இவை இடத்தில் வந்தன. மாரியுள் வந்தான் என்பது காலம் பற்றி வந்தது. வாசினையில் வந்தான் என்பது வினையிடம் பற்றி வந்தது' என விளக்கங் கூறுவதால்

---

**பாட வேறுபாடு:–**

**1. வீரசோ, 38**
**2. நேமி 44**

அவர் நூலாசிரியரின் கொள்கையின் வேறுபட்ட கருத்தினராகி இளம்பூரணர் முதலியோர் கருத்தை ஆதரிப்பவர் எனத் தெரிகிறது.

இவ்வாசிரியர்,

**எல்லை இன்னும் அதுவும் பெயர்கொளும்**
**அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்**
**புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்,**[1]

என நூற்பா செய்துள்ளமையால் இருவகை இடப் பொருளுக்கும் வினையை இன்றியமையாத தாக்கி ஏழன் பயனிலையாகப் பெயரையும் வினையையும் அமைத்தார் என்பது புலனாகின்றது. எனவே, அவர் கண் கால் முதலியவற்றை 'இடப்பொருளுருபே'[2] என்றாலும் கண் கால் முதலியவற்றை இடப்பொருள் முற்றி நிற்கும் இடப்பொருள் பயனிலைகள் எனவே கொண்டார் என்பதே கருத்தாகும். ஈண்டு அவர் உருபென்றது முடிக்குஞ் சொல்லை எனக் கொள்வதே ஏற்புடைத்தாம். அவ்வாறின்றிக் கண் கால் முதலியன உருபுகளே எனக் கொண்டார் எனின், 'நான் கேழ் இருமையும் புல்லும் பெரும்பாலும்' என்பது பிழை 'நான்கேழ் இருமையும் புல்லும் பெரும்பாலும்' என்பது பிழை பட்டு நிற்கும். அன்றியும், கண் கால் முதலியன பெயர்ச் சொற்களே யன்றி இடைச் சொற்களில்லை என்பதும், பெயர்ச் சொல் உருபாம் எனல் பொருந்தாது என்பதும் ஈண்டு உன்னத்தக்கனவாம்.

கண் முதலியவற்றை, பின்னோர் முடிக்கும் பெயர்ச் சொல்லாகக் கொள்ளாமல் உருபென்று கொண்டமைக்குத் தொல்காப்பியர்,

**அவைதாம்,**
**பெயர் ஐ ஒடுகு**
**இன் அது கண்விளி யென்று மீற்ற,**[3]

எனக் கூறிக் கண் என்பதே ஏழன் பெயராகும் எனவும்,

**ஐஒடு குஇன் அதுகண் ணென்னும்**
**அவ்வா றென்ப வேற்றுமை யுருபே,**[4]

எனக் கூறிக் கண் என்பதே ஏழன் உருபாகும் எனவும் குறிப்பிட்டுள்ளமையே காரணமாகும் எனலாம்.

இன் உருபு, பழியின் அஞ்சும் (பழியை அஞ்சும்–

---

பாட வேறுபாடு:–

1. நன். 319
2. நன், 302
3. தொல். சொல். 64
4. தொல். சொல். 114

செயப்படுபொருள்), அம்பின் ஆட்டுதும்[1] (அம்பால் ஆட்டுவதும்–கருவிப்பொருள்); காக்கையிற்கரிது களம்பழம் (பொருவுப் பொருள்), காட்டின் யானை (காட்டது யானை–கிழமைப்பொருள்) வீட்டின் உள் (இடப்பொருள்) எனப் பல்வேறு வேற்றுமைகட்கும் உரிமைப்பட்டுவரினும் பொருவுப்பொருள் ஒன்றிற்கே சிறப்பால் உரிமைப்படுத்தப்பட்டு ஐந்தாவதன் குறியீடாகவும், உருபாகவும் பண்டையோரால் வழங்கப்பட்டமை போன்றே, கண் என்பது ஏழன் குறியீடாகப் பண்டையோரால் வழங்கப்பட்டது. முடிக்குஞ் சொல்லாகப் பெயரும் வினையும் வரற்குரிய ஏழாம் வேற்றுமையில், முடிக்குஞ்சொல்லாக வரும் பெயர்ச்சொற்களின் சிறப்பு நோக்கிக் கண் என்பது உருபெனக் கூறப்பட்டதாகலாம். அஃது உருபெனப்பட்ட நிலையில் இன் உருபைச் சாரியை என வழங்கும் நிலையுந் தோன்றியிருக்கலாம்.

இக்காலத்தில் பெயர்களோடு கண் முதலிய பெயர்கள் சேர்ந்து ஏழன் தொகைநிலை வழக்கிலேயே பெரும்பாலும் தொடர்கள் அமைகின்றன. அவற்றிடை இன்னுருபு தோன்றி நிற்பின் அதனைச் சாரியை என்பது வழக்குவழிப்பட்ட மரபாகிவிட்டது.

இனி, இன் உருபும் இடவரையறைப் பொருளில் வரும் குவ்வுருபும் கூடி வீடு+இன்+குழுவீட்டிற்கு; நாடு+இன்+குழுநாட்டிற்கு எனப் புணர்ந்துநிற்க அவற்றோடு அண் என்ற பெயர் புணருங்கால் வீட்டிற்கண், நாட்டிற்கண் என நிற்குமன்றே, அவற்றின் ஈற்றில் வரும் கண் என்பதே தனியே ஏழாவதன் உருபெனப்பட்டது எனக்கருதிக் கண் என்னும் உருபு கு+அண் என்னும் இரண்டன்சேர்க்கை என்பார் சூல்சுபிளாக்[2]. வழக்கில் வீட்டின் கண், நாட்டின்கண் என வழங்காமையின் அவ்வாறு கோடல் ஏற்புடையதாகாது எனலாம். இவ்வாசிரியர் அடுத்துக் கூறும் கண்கால் இடை முதலியவற்றுள் இல் என்ற ஒன்றைச் சேர்த்துக் கொள்வதால் கண் முதலியவற்றை இல் போன்ற நிலையில்வைத்து உருபுகளெனவே கொண்டார் என்பதும், தொல்காப்பியர் கண் முதலியனவாகக் கூறிய முடிக்குஞ் சொற்களுள்[3] இல் என்ற ஒன்றைக் கொள்ளாததும் இவண் நோக்கத் தக்கன. இல் என்பதும் இன் என்பதும் ஒரே உருபின் மாற்று வடிவங்கள்; மொழிநூலார் மாற்றுப் பொருளசை[4] என்பர்.

---

குறிப்புகள்:–

1. கம்பரா. பால. 28
2. *Quoted in A History of The Tamil Language p. 100)*
   *- Jules Block*
3. தொல், சொல்–82
4. *Allomorph.*

இவ்வாசிரியர்,

பொருள்முத லாறு மோரிரு கிழமையின்
இடனாய் நிற்றல் இதன்பொரு ளென்ப

என நூற்பா செய்தது தாஅ னாட்டித் தனாது நிறுப்பாம் என்க.

(44)

301. கண்கால் [1]கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட மேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முழைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே.

கண் கால் கடை இடை தலை வாய் திசைவயின்
முன் சார் வலம் இடம் மேல் கீழ் புடை முதல்
பின் பாடு அளை தேம் உழை விழி உழி உளி
உள் அகம் புறம் இல் இடப்பொருள் உருபு ஏ.

kaṇ kāl katai itai ṭalai vāy ṭisai vayiṉ
muṉ sār valam itam mēl kīḷ putai muṭal
piṉ pātu aḻai ṭēm uḷai viḷi uḷi uḻi
uḻ akam puṻam il itapporuḻ urupu ē

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### The signs of the seventh cases

The following are the (twenty-eight) signs of the 7th or **Locative case:** kan, kal, katai, itai, talai, vay, ticai, vayin, mun, Car, valam, idam, mel, kir, pudai, mutal, pin, padu, alai, tem, urai, uri, u, i, ul, akam, puram, and il.

## ஒப்புமைப் பகுதி

கண்கால் புறமகம் உள்ளுழை கீழ்மேல்
பின்சார் அயல்புடை தேவகை யெனஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ

பாட வேறுபாடு:–

1. தலையிடைகடை

அன்ன பிறவும் அதன்பால என்மனார்

(தொல். சொல்.: 82)

கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சார யல்புடை தேவகை யெனாஅ
முன்னூ லிடைகடை வலமிட மெனாஅ
அன்ன பிறவு மதன்பால வென்மனார்

(மு.வீ.: 525)

ஏழ னுருபு கண்ணே யதன்பொருள்
வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தி
னனைவகைக் குறிப்பிற் றோன்றலா மன்றியுங்
கணகால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ
வன்ன பிறவும் மதன்பால வென்மனார்

(இ.வி.: 204)

ஏழன் உருபுகண் ஆதி யாகும்
பொருள் முதலாறும் ஓரிரு கிழமையின்
இடனாய் நிற்றலின் இதன்பொ ருளென்ப

(தொ.வி.: 62)

கண்முத லியனவே ழனதுரு பாகும்

(மு.வீ.: 523)

அதன்பொருள் பொருண்முத லாறிரு கிழமையின்
இடனாய் நிற்ப தென்மனார் புலவர்

(மு.வீ.: 524)

............ ஏழன் உருபுகண் அப்பெயராம்
ஏறுபொருண் முதலறுபேர் கருத்தன் இட னாகி
ஏற்கும்வினை பெயர்முடிவாம்............

(சுவாமி.: 43 : 3–4)

## மயிலை நாதர்

**எ—ன்,** ஏழாம் வேற்றுமைக்குக் கண் முதலானவை உருபென்றார், அவை இவை யென்பதுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: கண் முதலாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப் பொருளைக் காட்டும் உருபுகளாம், எ – று.

வ –று.:

"நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே"

(குறள். 408)

"ஊர்க்கா னிவந்த [1]பொதும்பருள்"

(கலி. 56)

"ஈத லியையாக்கடை"

(குறள். 230)

"நல்லாரிடைப்புக்கு"

(நாலடி. 314)

"நனந்தலை வந்த நல்லோர்"

"புன்னைநன்னீழற் புலவுத்திரைவாய்"

"தென்றிசையா [2]அய் குடியின் றாயின்"

(புறநா. 132)

"அவர் [3]வயினிடைச் செல்வாய்"

"கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்"

(நான்மணி, 8)

"காட்டுச்சாரோடுங் குறுமுயால்"

"காழ்வரைநில்லாக் [4]களிறவன்
கைவலத்தியாழ்வரை நின்றது"

"இல்லிடப்பரத்தை"

"தன்மேற் கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்"

(பு. வெ. 1:11)

"பேரிணர்க்கொத்தினொர் பிண்டிநிழற்கீழ்"

"கடைப்புடைக்கொள்ளிய நீர்"

"[5]சுரன் முதல்வந்த வுரன்மாய் மாலை"

(நற். 3)

---

பாட வேறுபாடு:–

1. உயர்நிலைமாடம்
2. ஆயுயர்குடி
3. வயின்கட்
4. கடுங்களிறு கைவலத்து
5. கான்முதல் வந்த

"காதலிபின்சென்றதம்ம"

(நாலடி. 395)

"நம்பா டணையாத நாள்"

"கல்லளைச்சுனைநீர் கையிலுண்டமையான்"

"தோழிக்குரியவை கோடாய் தேஎத்து"

(இறை. 14)

"அவனுழையிருந்த தண்டமிழ்ச்சாத்தன்"

(சிலப். பதி. 10)

"நின்றதோர் நறவேங்கை நிழல்வழி [1]யசைந்தனளே"
"உறைப்புழி யோலை போல"

(புறநா. 290)

"குயில்சேர் குளிர்கா வுளிசேர் புறையும்"

"மூலையங் குவட்டுள் வாழும்"

(சீவக. 122)

"பயன்சாராப் பண்பில்சொற் பல்லா ரகத்து"

(குறள். 194)

"செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை"

(கலி. 148)

'ஊரிலிருந்தார், நீரில்விழுந்தார்'

எனவரும்.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

எ–னின், மேல் '**கண்ணாதி**' (301) ஆகும் என்றார், அவை இவை என்பது **உணர்–ற்று.**

இ–ள்.: இங்ஙனம் கண் முதலாக இல் ஈறாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம், **எ–று.**

தொடர்புதோன்றக் கண்ணுருபை ஈண்டும் அநுவதித்தார்.

**வ–று.:**

"ஊர்க்கால்நிவந்த பொதும்பருள்" "வேலின் கடைமணிபோல் திண்ணியான்" "நல்லாரிடைப் புக்கு" "வலைத்தலை மானன்ன நோக்கியர்" "குரைகடல்வாய் அமுதென்கோ"

---

பாட வேறுபாடு:–

1. அசைந்தனன்.

"தேர்த்திசை இருந்தான்" "அவர்வயின் செல்லாய்" "கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம்" "காட்டுச் சாரோடும் குறுமுயால்" "காழ்வரை நில்லாக் களிறன்னான் கைவலத்து யாழ்வரை நின்றது" "இல்லிடப்பரத்தை" "தன்மேல் கடுவரை நீரிற் கடுத்துவரக்கண்டும்" "பிண்டிக்கண் ஆர் நிழற்கீழ் எந்தமடிகள்" "கடைப்புடை கொள்ளியநீர்" "சுரன்முதல் வந்த உரன்மாய் மாலை" "காதலிபின் சென்றதம்ம" "நம்பாடணை யாத நாள்" "கல்லளைச்சுனைநீர் கையில் உண்மையான்" "தோழிக்கு உரியவை கோடாய் தேத்து" அவனுழை வந்தான், "நின்றதோர் நறவேங்கை நிழல்வழி அசைந்தன்ன" "உறைப்புழி ஓலைபோல" "குயில்சேர் குளிர்கா வுளிசேர் புறையும்" "மூலையங்கு வட்டுள் வாழும்" பண்பில்சொல் பல்லா ரகத்து" "செல்லு மென் உயிர்ப்புறத் திறுத்தந்த மருண் மாலை" ஊரில் இருந்தார் என இவை பலதிறத்தன போலுமேனும் அவையாகாது ஒரு திறத்தனவாய்க் கண்ணுருபின் பரியாயவுருபாய் வருதல் காண்க.

இனிக் கண் கால் முதலியன இடவிகற்பங்களை உணர்த்தின் ஒருதிறத்தவாகிய உருபாகாது பலதிறத்தவாகிய இடங்களை உணர்த்தும் பெயராகிக், "கண்ணகன் ஞாலம்" "கடைநாட் கங்குல்" "இடைச்சுரம்" "தலையாயார்" "தென்றிசை" என்றற் றொடக்கத்தனவாய் வருதல் காண்க.

மணியின்கண் ஒளி என்புழிக் கண் என்பது பெயராயின் மணியின திடத்து ஒளி என்பது பொருளாய் மூன்று சொல்லாய் இரண்டு சந்தியாம் என்க. ஏனையவும் அன்ன.

*இனிப் பெயர் முதலாகக் கூறிய ஏழுருபுகளும் தமக்கு உரிய பொருளல்லனவற்றையும் உணர்த்தும் எனக் கொள்வர். அவையாவன மாடம் செயப்பட்டது என்புழி வினைமுதலன்றிச் செயப்படுபொருள் உணர்த்திற்று. வீட்டை விரும்பினான் என்புழிச் செயப்படுபொருளை யன்றி வேறுபொருளை விளக்கிற்று. மலையொடு பொருத மால்யானை, "தொடியொடு தொல்கவின் வாடியதோள்" "பாலொடு தேன்கலந்தற்றே" "மதியொடு ஒக்குமுகம்" "விலங்கொடு மக்களனையர்" "எழுத்தொடு புணர்ந்தசொல்" என்புழிக் கருவி கருத்தா உடனிகழ்வதன்றி, வினையின்மை, வேறுவினை, மயக்கம், ஒப்பு, ஒப்பலொப்பு, ஒற்றுமை எனப் பல பொருளும் உணர்த்தின. சோற்றிற்கரிசி, கூழிற்குக் குற்றேவல், பூவிற்குப் போனான், உணற்கு வந்தான், "பிணிக்கு மருந்து" உணற்குக் கருவி கை என்புழிக் கொள்வோனை விட்டு ஆதிகாரண காரியம், நிமித்தகாரண காரியம், இருவகைப் பெயர்ப்பின் வினையெச்சம், இருவகைப்*

*பெயர்ப்பின் பெயரெச்சம் எனப் பலபொருளும் உணர்த்தின. பித்தரின் பேதையாரில், வேங்கடத்தின் தெற்கு, குமரியின் வடக்கு, வாணிகத்தி னாயினான், காக்கையின் கரிது களம்பழம் என்புழி ஒப்பு எல்லை ஏது ஒப்பின்மை எனப் பலபொருளுமுணர்த்தின. வாளது வெட்டு என்புழிக் குறையே யன்றி வேறுபொருளும் உணர்த்திற்று. அறிவின்கண் திரிபு என்புழி இடமேயன்றி வேறுபொருளும் உணர்த்திற்று எனக் கூறுவர். அவையெல்லாம் இவ்வாசிரியர் கூறியவற்றுள் சில வருமாறும் ஏனையவற்றை இலக்கியங்களுள்ளும் காண்க.*

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** ஏழாம் வேற்றுமைக்குக் கண் முதலானவை உருபு என்றார்; அவை இவையெனக் கூறுகின்றது.

**இ—ள்.: கண் –** "நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே, கல்லார்கட்பட்ட திரு" (குறள். 408), **கால் –** "ஊர்க்கா னிவந்த பொதும் பரின்" (கலி. 56), **கடை –** "ஈதலியை யாக்கடை" (குறள். 230), **இடை –** "நல்லாரி டைப்புக்கு" (நாலடி. 314), **தலை –** "நனந்தலை வந்த நல்லோர்", **வாய் –** "புன்னைநன்னீழற் புலவுத்திரைவாய்", **திசை –** "ஊர்த்திசை யோசை", **வயின் –** "அவர்வயினிடைச் செல்வாய்", **முன் –** "கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்" (நான்மணி. 8), சார் – "காட்டுச்சா ரோடுங் குறு முயால்", **வலம் –** "ஊர்வலம் வந்தான்", **இடம் –** "இல்லிடப்பரத்தை", **மேல் –** "தன்மேற் கடுவரை" (பு.வெ. 11), **கீழ் –** "பிண்டி நிழற் கீழ்", **புடை –** "கடைபுடைக் கொள்ளியநீர்", முதல் – "கான்முதல் வந்த வுரன்மாலை" (நற். 3), **பின் –** "காதலி பின்சென்ற தம்ம" (நாலடி. 395), **பாடு –** "நம்பா டணையாத நாள்", **அளை –** "கல்லளைச் சுனைநீர்", **தேம் –** "தோழிக்குரியவை கோடாய் தேஎத்து" (இறை. 14), **உழை –** அவனுழை வந்த சாத்தன், **வழி –** "நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தனனே", **உழி –** "உறைப்புழி யோலை போல" (புறம். 290), **உளி –** "காவுளிச் சேர்ந்துறையுங் கிளிகாள்", **உள் –** "மூலையங் குவட்டுள் வாழும்" (சீவக. 1232), **அகம் –** "பயன் சாராப், பண்பில்சொற் பல்லாரகத்து" (குறள். 194), **புறம் –** "செல்லுமென்னுயிர்ப்புறத் திறுத்தற்றே" (கலி. 148), **இல் –** "ஊரிலிருந்தார்", **இடப் பொருள் உருபே –** இவ்விருபத்தெட்டும் இடப் பொருளைக் காட்டும் உருபாம்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன்சூத்திரத்திலே கண்ணாதியாகுமென்றார் அவை இவையென்கிறதை உணர்த்துகின்றது.

**இ—ள்.: கண்... இல் –** கண் முதலாக இல்லீறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும், **இடப் பொருளுருபு –** தம்மை யேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமைச் செய்கின்ற வுருபுகளாம், **எ—று.**

கண்ணல்லாத வுருபுகளுக்கு உதாரணம்: ஊர்க்கானிவந்த பொதும்பர் – கால். வேலின்கடைமணிபோற் றிண்ணியான்–கடை. நல்லாரிடைப்புக்கு இடை வலைத்தலைமானன்ன நோக்கியர்–தலை. குரைகடல்வாயமுதென்கோ–வாய். தேர்த்திசையிருந்தான்–திசை. அவர்வயிற்செல்லாய்–வயின். கற்றார் முற்றோன்றாகழிவிரக்கம்–முன், காட்டுச்சாரோடுங் குறுமுயால்–சார். கை வலத்துள்ளது கொடுக்கும். வலம். இல்லிடப் பரத்தை–இடம். தன்மேற்கடுவரை நீரிற்கடுத்து வரக்கண்டும்–மேல். பிண்டிக்கண்ணார் நிழற்கீழ்–கீழ். எயிற்புடை நின்றான்–புடை. சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை–முதல். காதலிபின் சென்றதம்ம–பின். நம்பாடணை யாதநாள்–பாடு. கல்லளைச் சுனைநீர்–அளை. தோழிக் குரியவை கோடாய் தேத்து–தேம். அவனுழைவந்தான்–உழை. நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன–வழி. உறையுழியோலைபோல–உழி. குயில்சேர் குளிர்காவுளி சேர்ந்துறையும்–உளி. முல்லையங்குவட்டுள் வாழும் – உள். பயன்சாராப் பண்பில்சொல் பல்லாரகத்து–அகம். செல்லுமென்னுயிர்ப் புறத்திறுத்த மருண்மாலை–புறம். ஊரிலிருந்தார் – இல் என வரும். (இனிக் கண் கான் முதலானவை இடவேறுபாடுகளை யுணர்த்தும்போது, பலவகைப்பட்ட விடப்பெயர்களாம். அவை:– கண்ணகன் ஞாலம், அகத்திலிருந்தான், வீட்டின்புறத்திலிருந்தான், மேலிடத்திலிருந்தான்,முன்னிருந்தான்,அயற்கண்ணிருந்தான், இடைச்சுரம், தென்றிசை என வரும்.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

இடப்பொருளுருபாக வருவன இவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

கண்கால் கடையிடை தலைவாய் திசைவயின்
முன்சார் வலமிட வேல்கீழ் புடைமுதல்
பின்பா டளைதே முழைவழி யுழியுளி
உள்ளகம் புறமில் லிடப்பொரு ளுருபே.

(கண் கால் கடை இடை தலை வாய் திசை வயின்
முன் சார் வலம் இடம் மேல் கீழ் புடை முதல்
பின் பாடு அளை தேம் உழை வழி உழி உளி.
உள் அகம் புறம் இல் இடப்பொருள் உருபே.)

**இ–ள்.**: கண் முதலாக இல்லீறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும் இடப்பொருளுருபுகளாம்.

கண்ணுருபிற்கும் இவைகளுக்கும் தம்முள் வேற்றுமை யாது?

ஐ ஆல் கு இன் அது என்பன இடைச்சொன்மாத்திரையாய் நின்று தம்மையேற்ற பெயர்ப்பொருளை வேறுபடுத்துவதுபோலக் கண்ணுருபும்

இடைச்சொன் மாத்திரையாய்த் தன்னையேற்ற பெயர்ப்பொருளை வேறுபடுத்துவது. கண்கால்முதலியனவோ வேறு வேறுபட்ட இடப்பொருளாகிய பெயராய்க் கண்ணுருபு நிற்றற்குரியவிடத்து நின்று அதன் பொருளை யுணர்த்துவன. இவையே தம்முள் வேற்றுமையாம்.

உ–ம்.:–

கண்–கண்ணெதிரேநின்று சொன்னவனைப் பார்த்து "என் கண்ணின் றிவைசொல்லற்பாலையல்லை" என்னுமிடத்துக் கண் இடப்பொருளுருபு.

கால் – "ஊர்க்கானிவந்த பொதும்பர்."

கடை – "வேலின்கடை மணிபோற்றிண்ணியான்."

இடை – "நல்லாரிடைப்புக்கு"

தலை – "வலைத்தலை மானன்ன நோக்கியர்."

வாய் – "குரைகடல்வாயமுதென்கோ"

திசை – " தேர்த்திசையிருந்தான்."

வயின் – "அவர்வயிற்செல்வாய்."

முன் – "கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம்."

சார் – "காட்டுச்சாரோடுங் குறுமுயால்."

வலம் – "கைவலத்துள்ளது கொடுக்கும்."

இடம் – "இல்லிடப்பரத்தை."

மேல் – "தன்மேற்கடுவரைநீரிற்கடுத்து வரக் கண்டும்." (கடுப்பு–விரைவு.)

கீழ் – "பிண்டிக் கண்ணார்நிழற்கீ ழெந்தமடிகள்"

புடை – "எயிற்புடை நின்றான்."

முதல் – "சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை" (சுரன்–பாலை நிலம்.)

பின் – "காதலிபின் சென்றதம்ம."

பாடு – "கம்பா டணையாத நான்."

அளை – "கல்லளைச்சுனைநீர்."

சேம – "கோழிக்குரியவை சோடாய்தேத்து." (சோடாய்–கைத்தாய்)

உழை – "அவனுழைவந்தான்."

வழி – "நின்றதோர்நறவேங்கைநிழல்வழியசைந்தன்ன."

உழி – "உறையுழியோலைபோல." (உறை – வாழ்நாள்.)

உளி – "குயில்சேர்குளிர்காவுளிசேர்புறையும்."

உள் – "முல்லையங்குவட்டுள் வாழும்."

அகம் – "பயன்சாராப் பண்பில்சொற்பல்லாரகத்து."

புறம் – "செல்லுமென்னுயிர்ப்புறத்திறுத்த மருண்மாலை."

இல் – "ஊரிலிருந்தார்."

இனிக் கண் கான் முதலியன, இடவேறுபாடுகளை யுணர்த்தும்போது ஒருதிறத்தனவாகிய உருபாகாது, பலதிறத்தனவாகிய இடங்களையுணர்த்தும் பெயர்களாம்.

உ–ம். கண்ணகன் ஞாலம், அகத்திலிருந்தான், வீட்டின் புறத்திலிருந்தான், மேலிடத்திருந்தான், முன்னிருந்தான், கடைநாள், இடைச்சுரம், தலையாயார், தென்றிசை என வரும். பிறவு மன்ன.

## முகவை இராமானுச கவிராயர்

இது, மேலே கண்ணாதி யென்ற உருபுகள் இவை யென உணர்த்திற்று.

இ–ள்.: இங்கே கண் முதலாக இல் முடிவாக எண்ணப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம்,எ – று.

இங்கேயுங் கண்ணுருனுபைக் கூட்டிச் சொன்னது தொடர்ச்சி தோன்றவெனக் காண்க.

வ–று.:

ஊர்க்கால் நிவந்தபொதும்பர்–(நிவப்பு–உயர்வு) கால், வேலின் கடைமணி போல் திண்ணியான், (திண்மை–உறுதி) கடை, நல்லாரிடைப்புக்கு–இடை, வலைத்தலை மானன்னநோக்கியர்– தலை, குரைகடல்வாய் அமுதென்கோ–வாய், தேர்த் திசையிருந்தான்–திசை, அவர்வயிற்சென்றான்–வயின், கற்றார்முன் தோன்றா கழிவிரக்கம்–முன், காட்டுச் சாரோடுங் குறுமுயால்–சார், கைவலத்துயாழ்வரை நின்றது–வலம், இல்லிடப்பரத்தை–இடம், தன்மேற் கடுத்து வந்தான்– (கடுப்பு– வேகம்,) மேல், நிழற் கீழிருந்தான்–கீழ், கடைப்புடைக் கொண்டநீர் (என்பது–சலப்பிரளையம்) புடை, சுரன்முதல்வந்த (சுரம்–பாலை), முதல், காதலி பின்சென்றது–பின், நம்பாடு அணையாத நாள்–பாடு, கல்லளைச் சுனைநீர்–அளை, கோடாய்தேத்து (கோடாய்–கைத்தாய்,) தேம், அவனுழைவந்தான் – உழை, நிழல்வழியசைந்தது–வழி, உறையுழி யோலைபோல் (உறை–வாழ்நாள்,) உழி, குளிர்காவு ளிசேர்ந்துறையும்–(கா–சோலை,) உளி, குவட்டுள் வாழும்– (குவடு–மலையுச்சி,) உள், பல்லராகத்து–அகம், உயிர்ப்புறத்து இறுத்த–(இறுத்தல்–தங்குதல்,) புறம், ஊரிலிருந்தான்–இல், என வருமிவையெல்லாம் பலதிறத்தன போல நிற்பினும் ஒருதிறத்தனவாகிய கண்ணுருபின் பரியாய நாமங்களாய்

வருதல் காண்க. இனிக் கண் கால் முதலியன இட விகற்பங்களை யுணர்த்துமாயின், ஒருதிறத்தவாகிய உருபாகாது பல திறத்தனவாகிய இடங்களை யுணர்த்தும் பெயராகி கண்ணகன் ஞாலம், கடைநாள், இடைச்சுரம், தலையாயார், தென்திசை, என்றாற் போல்வனவாய் வருதலுங் காண்க. மணியின்கண்ணொளி என்னுமிடத்து, கண் என்பது பெயராயின், மணியினது இடத்து ஒளி என்பது பொருளாகி மூன்றுசொல்லாகிய இரண்டு சந்தியாகும் எனக் காண்க. பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– கண் ––––––– இல்** – கண் முதலிய இவ்விருபத்தெட்டும், **இடப்பொருள் உருபு** – (தம்மை ஏற்றபெயரின் பொருளை) இடப்பொருளாக வேற்றுமை செய்கின்ற ஏழாம்வேற்றுமையின் உருபுகளாம். (இங்கும் கண் உருபைக் கூட்டிக் கூறியது தொடர்ச்சி தோன்ற).

**உதாரணம்**

| | | |
|---|---|---|
| 'ஊர்க்கால்' – கால் | 'கைவலம்' – வலம் | 'கோடாய்தேத்து' – தேம் |
| 'வேலின்கடை'–கடை | 'இல்லிடம்'–இடம் | 'அவனுழை' – உழை |
| 'நல்லாரிடை' – இடை | 'தன்மேல்' – மேல் | 'நிழல்வழி' – வழி |
| 'வலைத்தலை'–தலை | 'நிழற்கீழ்'–கீழ் | 'உரையுழி' – உழி |
| 'கடல்வாய்' – வாய் | 'எயிற்புடை' – புடை | 'காவுளி' – உளி |
| 'தேர்த்திசை'–திசை | 'சுரன்முதல்'–முதல் | 'குவட்டுள்' – உள் |
| 'அவர்வயின்'–வயின் | 'காதலிபின்'–பின் | 'பல்லாரகத்து' – அகம் |
| 'கற்றார் முன்'–முன் | 'நம்பாடு' – பாடு | 'உயிர்ப்புறத்து' – புறம் |
| 'காட்டுச்சார்'–சார் | 'கல்லளை'–அளை. | 'ஊரில்' – இல் |

**குறிப்பு:–**

இன்னும் முன் சூத்திரத்து 'ஆதி' என்றதனால் – பக்கல், பாங்கர், முகம், மாடு, பால், இன் முதலானவைகளும் உருபுகளாகவரும்.

உ–ம்:– இராமன் பக்கல், காட்டுப்பாங்கர், போர்முகத்து, யாவர்மாட்டும், அவன்பால், நாட்டின்.

இனி, 'கண்' முதலியன உருபாகாமல் இடவேறுபாடுகளை உணர்த்தும் சொற்களாகவும் வரும். உ–ம்:– அகத்திலிருந்தான், புறத்திற்போனான், மேற்சென்றான், கண்ணகன்ஞாலம் எனவரும்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: கண்.... இல்**– கண் முதலாக இல்லீறாகச் செல்லப்பட்ட

இவ்விருபத்தெட்டும், **இடப்பொருள் உருபு** – தம்மையேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம், **எ–று.**

(கண்ணொழிந்த உருபுகளுக்கு உதாரணம்)

கால் – "ஊர்க்கானிவந்த பொதும்பர்"

கடை – "வேலின்கடை மணிபோற்றிண்ணியான்"

இடை – "நல்லாரிடைப் புக்கு"

தலை – "வலைத்தலை மானன்ன நோக்கியர்."

வாய் – "குரைகடல் வாயமுதென்கோ."

திசை – "தேர்த்திசை யிருந்தான்."

வயின் – "அவர்வயிற் செல்லாய்"

முன் – "கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம்"

சார் – "காட்டுச்சாரோடுங் குறுமுயால்"

வலம் – "கைவலத்துள்ளது கொடுக்கும்"

இடம் – "இல்லிடப் பரத்தை"

மேல் – "தன்மேற்கடுவரை நீரிற்கடுத்து வரக் கண்டும்" (கடுப்பு–விரைவு.)

கீழ் – "பிண்டிக் கண்ணார் நிழற்கீ ழெந்தமடிகள்."

புடை – "எயிற்புடை நின்றான்."

முதல் – "சுரன்முதல் வந்த வுரன்மாய் மாலை" (சுரன்–பாலை நிலம்.)

பின் – "காதலிபின் சென்றதம்ம."

பாடு – "நம்பாடணையாத நாள்."

அளை – "கல்லளைச் சுனைநீர்."

தேம் – "தோழக்குரியவை கோடாய் தேத்து." (கோடாய்–கைத்தாய்.)

உழை – "அவனுழை வந்தான்"

வழி – "நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன."

உழி – "உரப்புழி யோலைபோல."

உளி – "குயில்சேர் குளிர்காவுளிசேர்புறையும்."

உள் – "முல்லையங்குவட்டுள் வாழும்."

அகம் – "பயன்சாராப் பண்பில் சொற் பல்லாரகத்து"

புறம் – "செல்லுமென்னுயிர்ப் புறத்திறுத்த மருண் மாலை."

இல் – ஊரிலிருந்தார்.இனிக், கண் கால் முதலியன, இடவேறுபாடுகளை யுணர்த்தும் போது ஒருதிறத்தனவாகிய உருபாகாது, பலதிறத்தனவாகிய இடங்களை யுணர்த்தும் பெயர்களாம்.

**உ–ம்.:** கண்ணகன் ஞாலம், அகத்திலிருந்தான், வீட்டின் புறத்திலிருந்தான், மேலிடத்திருந்தான், முன்னிருந்தான், கடைநாள், இடைச்சுரம், தலையாயார், தென்றிசை என வரும். பிறவுமன்ன.

## வ. குமாரசாமிப்புலவர்

இ–ள்.:– கண்–இல் – கண் முதலாக இல்லீறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும், இடப்பொருள் உருபு – தம்மையேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமைசெய்யும் உருபுகளாம். எ–று.

(கண்ணொழிந்த உருபுகளுக்கு உதாரணம்)

கால் – "ஊர்க்கானிவந்த பொதும்பர்".

கடை – "வேலின் கடைமணிபோற்றிண்ணியான்". (வேலினிடத்தென்பது பொருள்)

இடை – "நல்லாரிடைப்புக்கரு".

தலை – "வலைத்தலைமானன்னநோக்கியர்".

வாய் – "குரைகடல்வாயமுதென்கோ".

திசை – "தேர்த்திசையிருந்தான்".

வயின் – "அவர்வயிற்செல்லாய்".

முன் – "கற்றார்முற்றோன்றாகழிவிரக்கம்"

சார் – "காட்டுச் சாரோடுங்குறுமுயால்"

வலம் – "கைவலத்துள்ளதுகொடுக்கும்"

இடம் – "இல்லிடப்பரத்தை".

மேல் – "தன்மேற்கடுவரை நீரிற்கடுத்துவரக்கண்டும்". (கடுப்பு – விரைவு)

கீழ் – "பிண்டிக்கண்ணார்நிழற்கீழெந்தமடிகள்".

புடை – "எயிற்புடைநின்றான்"

முதல் – "சுரன்முதல்வந்தவுரன்மாய்மாலை" (சுரன் – பாலைநிலம்) சுரத்தி (னிடத்துவந்த என்பது பொருள்).

பின் – "காதலிபின் சென்றதம்ம".

பாடு – "நம்பாடணையாதநாள்".

அளை – "கல்லளைச்சுனை நீர்". (கல்லளை – கல்லிடத்து)

தேம் – "தோழிக்குரியவை கோடாய்தேய்த்து". (கோடாய் – கைத்தாய்).

உழை – "அவனுழைவந்தான்".

வழி – "நின்றதோர்நறவேங்கைநிழல்வழியசைந்தன்ன".

உழி – "உறையுழியோலை போல". (உறை – வாழ்நாள்).

உளி – "குயில்சேர்குளிர்காவுளி சேர்புறையும்"

உள் – "முல்லையங்குவட்டுள் வாழும்"

அகம் – "பயன்சாராப்பண்பில்சொற்பல்லாரகத்து".

புறம் – "செல்லுமென்னுயிர்ப்புறத்திறுத்தமருண்மாலை"

இல் – "ஊரிலிருந்தார்".

இனிக், கண் கால் முதலியன இடவேறுபாடுகளை யுணர்த்தும் போது ஒருதிறத்தனவாகிய உருபாகாது, பலதிறந்தனவாகிய இடங்களையுணர்ந்தும் பெயர்களாம்.

உ–ம்.: கண்ணகன்ஞாலம் அகத்திருந்தான், வீட்டின்புறத் திருந்தான். மேலிடத்திருந்தான். முன்னிருந்தான், கடைநாள், இடைச்சரம், தலையாயார், தென்றிசை எனவரும் பிறவுமன்ன.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: கண் .... இல்** – இவ்விருபத்தெட்டும், **இடப்பொருள் உருபு** – இடப்பொருளுக்கு உரிய ஏழாம் வேற்றுமையின் உருபுகளாம், **எ–று.**

இங்கேயும் 'கண்' உருபைக் கூட்டிச் சொன்னது, தொடர்ச்சி தோன்ற.

**உ–ம்.:**

| | | |
|---|---|---|
| கால் | – | 'ஊர்க்கால்' |
| கடை | – | 'வேலின் கடை' |
| இடை | – | 'நல்லாரிடை' |
| தலை | – | 'வலைத்தலை' |
| வாய் | – | 'கடல்வாய்' |
| திசை | – | 'தேர்த்திசை' |
| வயின் | – | 'அவர் வயின்' |
| முன் | – | 'கற்றார்முன்' |
| சார் | – | 'காட்டுச்சார்' |
| வலம் | – | 'கை வலம்' |
| இடம் | – | 'இல்லிடம்' |
| மேல் | – | 'தன் மேல்' |
| கீழ் | – | 'நிழற்கீழ்' |

| | | |
|---|---|---|
| புடை | – | 'எயிற்புடை' |
| முதல் | – | 'சுரன்முதல்' |
| பின் | – | 'காதலி பின்' |
| பாடு | – | 'நம்பாடு' |
| அளை | – | 'கல்லளை' |
| தேம் | – | 'கோடாய்தேத்து' |
| உழை | – | 'அவனுழை' |
| வழி | – | 'நிழல்வழி' |
| உழி | – | 'உறையுழி' |
| உளி | – | 'காவுளி' |
| உள் | – | 'குவட்டுள்' |
| அகம் | – | 'பல்லாரகத்து' |
| புறம் | – | 'உயிர்ப்புறத்து' |
| இல் | – | 'ஊரில்' |

(இல் – வீடு. எயில் – மதில். சுரன் – பாலைநிலம். காதலி – மனைவி. கோடாய் – செவிலித்தாய். கா– சோலை. குவடு – மலையுச்சி)

இன்னும், முன்சூத்திரத்து 'ஆதி' என்றதனால் – பக்கல், பாங்கர், முகம், மாடு, பால், இன் முதலானவைகளும் உருபுகளாக வரும்;

**உ–ம்.:** சாத்தன் பக்கல், காட்டுப்பாங்கர், போர் முகத்து, யாவர் மாட்டும், அவன்பால், நாட்டின்.

இனி, கண் கால் முதலானவை – உருபாகாமல் இடவேறுபாடுகளை யுணர்த்தும் சொற்களாயும் வரும்;

**உ–ம்.:** கண்ணகலுலகம், அகத்திலிருந்தான், புறத்திற் போனான், மேல் நின்றான் என இவ்வாறு காண்க.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** கண் இல்–கண் முதலாக இல்லீறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும், இடப்பொருள் உருபு–தம்மை யேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமைசெய்யும் (ஏழாம் வேற்றுமையின்) உருபுகளாம். **எ–று.**

இங்கேயும் கண் உருபைக் கூட்டிக் கூறியது தொடர்பு தோன்ற என்க.

கண் உருபிற் குதாரணம் முன்சூத்திர உரையிற் காட்டப்பட்டன.

(கண்ணொழிந்த உருபுகளுக்கு உதாரணம் :)

கால் – "ஊர்க்கா னிவந்த பொதும்பர்."

கடை – "வேலின்கடை மணிபோற் றிண்ணியான்."

இடை – "நல்லாரிடைப் புக்கு."

தலை – "வலைத்தலை மானன்ன நோக்கியர்."

வாய் – "குரைகடல்வா யமுதென்கோ,"

திசை "தேர்த்திசை யிருந்தான்."

வயின் – "அவர்வயிற் செல்லாய்."

முன் – "கற்றார்முற் றோன்றா கழிவிரக்கம்."

சார் – "காட்டுச்சா ரோடுங் குறுமுயால்."

வலம் – "கைவலத் துள்ளது கொடுக்கும்."

இடம் – "இல்லிடப்பதுமை."

மேல் – "தன்மேற் கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டும்." (கடுப்பு–விரைவு).

கீழ் – "பிண்டிக்கண்ணார் நிழற்கீ ழெந்தமடிகள்."

புடை – "எயிற்புடை நின்றான்."

முதல் – "சுரன் முதல் வந்த புரன்மாய் மாலை." (சுரன் பாலைநிலம்.)

பின் – "காதலிபின் சென்றதம்ம."

பாடு – "நம்பா டணையாத நாள்."

அளை – "கல்லவளைச் சுனைநீர்."

தேம் – "தோழிக்குரியவை கோடாய்தேத்து." (கோடாய்–கைத்தாய்.)

உழை – "அவனுழை வந்தான்."

வழி – "நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன."

உழி – "உறைப்புழி யோலைபோல."

உளி – "குயில்சேர்குளிர்காவுளி சேர்புறையும்."

உள் – "முற்லையங்குவட்டுள் வாழும்."

அகம் – "பயன்சாராப் பண்பில்சொற் பல்லாரகத்து."

புறம் – "செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்த மருண்மாலை."

இல் – "ஊரி லிருந்தார்."

இனிக், கண் கால் முதலியன, இடவேறுபாடுகளை யுர்த்தும் போது ஒரு திறத்தனவாகிய உருபாகாது, பலதிறத்தனவாகிய இடங்களை யுர்த்தும் பெயர்களாம்.

உ–ம். கண்ணகன் ஞாலம், அகத்திலிருந்தான், வீட்டின்

புறத்திலிருந்தான், மேலிடத்திருந்தான், முயீனனிருந்தான்,
கடைநாள், இடைச்சுரம்; தலையாயார், தென்றிசை பிறவுமன்ன.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) கண் இல் – கண் முதலாக இல் ஈறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும், இடப்பொருள் உருபு – (தம்மையேற்ற பெயர்ப்பொருளை) இடப் பொருளாக வேற்றுமை செய்கின்ற உருபுகளாம். (எ–று)

(பொ–ரை.) கண் முதலாக இல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டும் தம்மை யேற்றப் பெயர்ப் பொருளை இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம்.

(கண்ணல்லாக உருபுகளுக்கு உதாரணம்)

(உ–ம்) ஊர்க்கானிவந்த பொதும்பர் கால்

வேலின்கடைமணிபோற் றிண்ணியான் கடை.

நல்லாரிடைப்புக்கு இடை.

வலைத்தலைமானன்ன நோக்கியர் தலை.

குரைகடல்வாயமுதென்கோ வாய்.

தேர்த்திசை யிருந்தான் திசை.

அவர்வயிற் செல்லாய் வயின்.

கற்றார்முற்றோன்றா கழிவிரக்கம் முன்.

காட்டுச்சாரோடுங் குறுமுயால் சார்.

கைவலத்துள்ளது கொடுக்கும் வலம்.

இல்லிடப்பரத்தை இடம்.

தன்மேற்கடுவரை நீரிற்கடுத்துவரக்கண்டும மேல்.

பிண்டிக்கண்ணார் நிழற்கீழ் கீழ்.

எயிற்புடை நின்றான் புடை.

சுரன்முதல்வந்த வுரன்மாய்மாலை முதல்.

காதலியின் சென்றதம்ம பின்.

நம்பாடணையாதநாள் பாடு.

கல்லளைச் சுனைநீர் அளை.

தோழிக்குரியவை கோடாய்தேத்து தேம்.

அவனுழை வந்தான் உழை.

நின்றதோர் நறவேங்கை நிழல்வழியசைந்தன வழி.

உறையுழி யோலைபோல உழி.

குயில்சேர் குளிர்காவுளி சேர்ந்துறையும் உளி.

முல்லையங் குவட்டுள்வாழும்உள்.

பயன்சாராப் பண்பில்சொல் பல்லாரகத்து அகம்.

செல்லுமென்னுயிர்ப் புறத்திறுத்தமருண்மாலை புறம்.

ஊரிலிருந்தான் இல்.

இனி, கண் கால் முதலானவை இடவேறுபாடுகளை யுணர்த்தும்போது பலவகைப்பட்ட இடப்பெயர்களாம்.

(உ-ம்.) கண்ணகன் ஞாலம்.

அகத்திலிருந்தான்.

வீட்டின்புறத்திலிருந்தான்.

மேலிடத்திருந்தான்.

முன்னிருந்தான்.

அயற்கண்ணிருந்தான்.

இடைச்சுரம்.

தென்றிசை.

## கா. நமச்சிவாய முதலியார்

கண் ..... இல் கண் முதலாக இல் ஈறாகச் சொல்லப்பட்ட இவ்விருபத்தெட்டும், இடப்பொருள் உருபு – தம்மை யேற்ற பெயர்ப்பொருளை இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம்.

**உதாரணம்**

ஊர்க்**கண்** இருந்தான் – கண்.

ஊர்க்**கால்** நிவந்த பொதும்பர் – கால்.

கோயிற்**கடைச்** சென்றான் – கடை.

நல்லா**ரிடைப்** புக்கு– இடை.

வலைத்**தலை** மானன்ன நோக்கியர் – தலை.

குரைகடல்**வாய்** அமுதென்கோ – வாய்.

தேர்த்**திசை** இருந்தான் – திசை.

அவர்**வயின்** செல்லாய் – வயின்.

கற்றார்**முன்** தோன்றா கழிவிரக்கம் – முன்.

காட்டுச்**சார்** ஓடுங் குறுமுயால் – சார்.

கை**வலத்**துள்ளது கொடுக்கும் – வலம்.

இல்**லிடப்** பரத்தை – இடம்.

தன்**மேல்** கடுவரைநீரிற் கடுத்துவரக்கண்டும் – மேல்.

பிண்டிக்கண் ணார்நிழற்**கீழ்** – கீழ்.

எயில்**புடை** நின்றான் – புடை.

சுரன்முதல்வந்த வுரன்மாய் மாலை – முதல்.
காதலிபின் சென்ற தம்ம – பின்.
நம்பாடு அணையாத நாள் – பாடு.
கல்லளைச் சுனைநீர் – அளை.
தோழிக்குரியவை கோடாய் தேத்து – தேம்.
அவனுழை வந்தான் – உழை.
நின்றதோர் நறவேங்கை நிழல்வழி யசைந்தன்ன– வழி.
உறையுழி யோலைபோல – உழி.
குயில்சேர் குளிர் காவுளி சேர்ந்துறையும் – உளி.
முல்லையங் குவட்டுள் வாழும் – உள்.
பயன்சாராப் பண்பில்சொல் பல்லா ரகத்து – அகம்.
செல்லுமென்னுயிர்ப்புறத் திறுத்த மருண்மாலை– புறம்.
ஊரிலிருந்தார் – இல்.

இனி, கண் – கால் முதலானவை இடவேறுபாடுகளை யுணர்த்தும்போது உருபாகாது பலவகைப்பட்ட இடப்பெயர்களாம்.

கண்ணகன் ஞாலம் – கண்.
அகத்திலிருந்தான் – அகம்.
வீட்டின் புறத்திலிருந்தான் – புறம்.
மேலிடத்திருந்தான் – இடம்.
முன்னிருந்தான் – முன்.
அயற்கண்ணிருந்தான் – அயல்.
இடைச்சுரம் – இடை.
தென்றிசை – திசை.

என்பவைகளில் கண், அகம் முதலியவை இடப்பெயர்ச் சொல்லாதல் அறிக.

## மோசகு பொன்னையா

கண் முதலாக இல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டும் இடப்பொருள் வேற்றுமை உருபுகளாம் எ–று.

இவ்வாசிரியர் கண் முதலியவற்றை இடப்பொருள் உருபே என்றாலும், அவற்றின் உண்மைநிலை முந்திய நூற்பா உரையிற் கூறப்பட்டபடி முடிக்கும் பெயர்ச்சொற்களாம்

நிலையே எனக் கொள்க. இன் உருபு தொக்கோ விரிந்தோ தொழில் செய் நில இடம், தொழில் செய் கால இடம் ஆகியவற்றைக் குறிப்பாற் புலப்படுத்தி நிற்க, கண் முதலிய பெயர்ச் சொற்களும் ஆண்டுவரும் வினைச்சொற்களும் பொருளை முடித்து நிற்பனவாம் எனக் கொள்க. இல் என்பது இந்நூற்பாவில் இடம் பெற்றதன் பொருந்தாமை முந்திய நூற்பாவின் உரையில் விளக்கப்பட்டது; ஆண்டுக் கண்டுகொள்க.

இனி, சாத்தன் பக்கல் உண்மை உண்டு, காட்டுப் பாங்கர் நடந்தான், போர்முகத்து எவர்க்கும் அஞ்சான், யாவர்மாட்டும் அருளுடையன், அவன்பால் நியாயம் உளது என்னும் வழக்குண்மையும் கண்டு பக்கல், பாங்கர், முகம், மாட்டு, பால்என்பவற்றையும் அவைபோல்வன பிற உண்டென்றால் அவற்றையும் ஏழன் பெயர்ப் பயனிலைகளாகக் கொள்க.

(45)

**302. எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்**
**றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்**
**[1]றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்**
**தன்முக மாகத் தானழைப் பதுவே.**

**எட்டன் உருபுஏ எய்து பெயர் ஈற்றின்**
**திரிபு குன்றல் மிகுதல் இயல்பு அயல்**
**திரிபும் ஆம் பொருள் படர்க்கை யோரைத்**
**தன் முகமாகத் தான் அழைப்பது ஏ.**

ettaṉ urupuē eyṭupeyar īṟṟiṉ
ṭiripu kuṉṟal mikuṭal iyalpu ayal
ṭiripum ām poruḷ patarkkaiyōraiṭ
ṭaṉ mukamākaṭ ṭāṉ aḻaippaṭu ē

---

பாட வேறுபாடு:–

1. திரிவு

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The eight or vocative case**

The forms of the 8th case are (as follows) changing shortening or adding (a new letter) to the final of the Noun in the Vocative Case, leaving it unchanged and changing the penultimate vowel. The Vocative addresses face to face those that are of the 3rd person

## ஒப்புமைப் பகுதி

**விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு**
**தெளியத் தோன்றும் இயற்கைய வென்ப**

(தொல். சொல்.: 118)

**ஈறு திரிதலும் ஈற்றயல் நீடலும்**
**வேறு வருதலு மெய்யியல்பும் – கூறும்**
**இரண்டீற்று மூவகைப்பேர் முன்னிலைக்கண் என்றும்**
**திரண்டுவிளி யேற்கும் திறம்**

(நேமி.: 48)

**எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்**
**றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்**
**றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்**
**தன்முக மாகத் தானழைப் பதுவே**

(இ.வி.: 205)

**எட்டன் உருபே எய்து பெயர் ஈற்றின்**
**திரிபு குன்றல் மிகுதல் இயல்பு அயல்**
**திரிபுஆம் பொருள் படர்க்கை யோரைத்**
**தன்முக மாகத் தான் அழைப்பதுவே**

(தொ.வி.: 69)

## மயிலை நாதர்

எ–ன், எட்டாம் வேற்றுமையுருபும் பொருளுமுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: எட்டாமெண்ணு முறைமைக்கணின்ற வேற்றுமைக்கு உருபாவது விளியேற்கும் பெயரின் ஈற்றது திரிபும் கேடும் மிகுதலும் இயல்பும்

[1]ஈற்றயலினின்றதன் திரிபுமாம். அதற்குப்பொருள், படர்க்கையிடத்தாரை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைக்கையாம் எ– று.

**'எய்துபெயர்'** எனவே, எய்தாதபெயரும் [2]உளவென்பதாம்; அவை போக்கிச் சொல்லுதும். **'படர்க்கையோரை'** எனவே முன்னிலையோரும் தன்மையோரும் ஈண்டே விலக்கப் பட்டாராவர். படர்க்கையோரை யென்றாரேனும், **"ஒருமொழி யொழிதன் னினங்கொளற்குரித்தே"** என்பதனாற் படர்க்கையிடத்து ஐம்பாலுங் கொள்க.

பெயருருபிற்கும் இயல்பான விளியுருபிற்கும் [3]உருபான் வேற்றுமையின்றேனும் பொருளான் உண்டெனக் கொள்க.

தானென்பது சந்தவின்பப் [4]பொருட்டு வந்தது.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** எட்டாம் வேற்றுமையது இலக்கணம் **உணர்—ற்று.**

**இ—ள்.:** எட்டாம் வேற்றுமையாகிய விளிக்கு வேறுருபு இன்று; அவ்விளி அடைந்த பெயரீற்றின் திரிபும், கேடும், மிகுதலும், இயல்பும், ஈற்றயல் நின்றதன் திரிபுமே உருபாம்; இவற்றின் பொருளாவன இவற்றினையேற்ற படர்க்கைப்பெயர்ப் பொருளை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைக்கப்படுவதாக வேற்றுமை செய்தலாம், **எ—று.**

**'எய்துபெயரீற்றின்'** என்றமையான், வேறு உருபு இன்று என்பது இசையெச்சமாய் நின்றது.

**'இயல்பு'** என்றமையான், இவ்வியல்பாய விளியுருபிற்கும் எழுவாயுருபிற்கும் சொல்லான் வேற்றுமை இன்றேனும் பொருளான் வேற்றுமை உண்டு என்பதூஉம், படர்க்கையோரை எனவே 'ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குறித்து' (358) ஆகலின் படர்க்கை ஐம்பாலும் விளியேற்கும் என்பதூஉம், ஏனைத் தன்மை முன்னிலைகள் ஏலா என்பதூஉம் பெற்றாம்.

**'தான்'** என்பது அசைநிலை. ஈறுதிரிதல் முதலிய ஐவகையுருபும் பொருளும் பின்வரும் சிறப்புச் சூத்திரங்களான் உணர்க.

இஃது எழுவாயினின்றும் ஒருவாற்றான் வேறுபட்டமையின் இறுதிக்கண் தந்து எட்டாம் வேற்றுமை எனப்பட்டது.

---

பாட வேறுபாடு:–

1. ஈற்றயலின்றிரிபுமாம்
2. உளவாம்
3. உருவான்
4. (1) பொருட்டாய்
   (2) பொருள்தர

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** எட்டாம் வேற்றுமை இலக்கணம் கூறுகின்றது.

**இ–ள்.: எட்டனுருபே** – எட்டாமெண்ணின் முறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு உருபாவது, **எய்து பெயரீற்றின்** – விளி ஏற்கும் பெயரின் ஈற்றது, **திரிபு குன்றல் மிகுதல்** – திரிதலும் கெடுதலும் மிகுதலும், **இயல்பயற் றிரிபுமாம்** – இயல்பாதலும் அயனின்றதன் திரிவுமாம்; **பொருள்** – அதற்குப் பொருள், **படர்க்கையோரை** – படர்க்கையிடத்தாரை, **தன் முகமாகத் தானழைப்பதுவே** – ஒருவன் தனக்கு எதிர்முகமாகத் தான் அழைக்கை, **எ–று.**

**அரும்பதவுரை: "எய்துபெயர்"** எனவே எய்தாத பெயரும் உள என்பதாம்; அவை போக்கிச் சொல்லுதும். **"படர்க்கையோரை"** எனவே தன்மை முன்னிலையார் ஈண்டே விலக்கப்பட்டார்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** எ ட்டாம் வேற்றுமைய திலக்கண முணர்த்துகின்றது.

**இ–ள்.: எட்டன்** – எட்டாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளானவை, **எய்துபெயரீற்றின்** – விளியடைந்த பெயரீற்றினுடைய, **திரிபு** – திரிதலும், **குன்றல்**–கெடுதலும், **மிகுதல்** – மிகுதலும், **இயல்பு** – இயல்பாதலும், **அயற்றிரிபும்** – ஈற்று அயலெழுத்துத் திரிதலும், **ஆம்**–ஆகும், **பொருள்**– அவற்றின் பொருளாவது, **படர்க்கையோரை**–படர்க்கைப் பெயர்ப்பொருளை, **தன்முகமாக** – தனக்கெதிர்முகமாக, **அழைப்பது**–அழைப்பதாலாகிய விளிக்கப்படு பொருளாம், **எ–று.** (விளித்தற்குக் கருவியான வுருபை விளியென்றது காரியவாகுபெயர்)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எட்டாம் வேற்றுமை உருபும் பொருளும் கூறுஞ் சூத்திரம் யாது?

எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்
றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத தானழைப் பதுவே.

(எட்டன் உருபே எய்து பெயர் ஈற்றின்
திரிபு குன்றல் மிகுதல் இயல்பு அயல்
திரிபு ஆம் பொருள் படர்க்கையோரைத்
தன்முகம் ஆக தான் அழைப்பதுவே.)

**இ–ள்.:** எட்டாம் வேற்றுமையினுருபுகளாவன விளியடைந்த பெயர் ஈறு திரிதலும் கெடுதலும் மிகுதலும் இயல்பாதலும் ஈற்றயலெழுத்துத் திரிதலுமாகும்; அவற்றின் பொருள் படர்க்கையிடத்தாரை ஒருவன் தனக்கெதிர்முகமாக விளித்தலாம், **எ–று.**

எய்துபெயரென்றதனாற் பெறப்படுவது யாது?

— — எய்தாப்பெயரு முண்டென்பது. அது மேல்வரும் "துவ்வொடு வினாச்சுட்டு" என்னுஞ் சூத்திரத்திற் காண்க.

படர்க்கையோரென்பதனாற் பெறப்படுவது யாது?

மற்றையிடத்தார் விளிக்கப்படாரென்பது. தான் அசைநிலை. விளித்தற்குக் கருவியாகிய உருபை விளியென்றது காரியவாகுபெயர்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** எட்டாம் வேற்றுமையிலக்கணமுணர்த்திற்று.

**இ—ள்.: எட்டனுருபு** – எட்டாம் வேற்றுமையாகிய விளிக்கு வேறேயுருபில்லாததினாலே யதற்கு உருபாவது, **எய்து பெயரீற்றின் றிரிபு** – அந்த விளியடைந்த பெயரின் இறுதி திரிதலும், **குன்றல்** – அப் பெயரிறுதி கெடுதலும், **மிகுதல்** – இறுதியிலே யோரெழுத்து மிக்கிருத்தலும், **இயல்பு** – அந்த இறுதி முன்போலவே யிருத்தலும், **அயற் றிரிபுமாம்**—அந்த இறுதி யெழுத்துக்கு அயலெழுத்துத் திரிதலுமேயாம், **பொருள்** – அதன் பொருளாவது, **படர்க்கை யோரை**—படர்க்கை யிடத்தாரை, **தன்முகமாக** – தனக்கு எதிர்முகமாக, **அழைப்பது**—அழைக்கப்படுவதாக வேற்றுமை செய்தலாம், **எ—று.**

> வேறுருபில்லாததினாலே யென்பது குறைந்து நின்றது, இயல் பென்றதினாலே இயல்பாகிய விளிபுருபிற்கும், எழுவா யுருபிற்குஞ் சொல்லால் வேற்றுமை யில்லையாயினும் பொருளால் வேற்றுமை யுண்டென்பதும், '**படர்க்கையோரை**' யெனவே, ஒழிந்த தன்மை முன்னிலைகள் விளியுருபு கொள்ளா வென்பதும் பெறப்பட்டன. தான் என்பது அசைநிலை. இவ்வாறு வரும் உருபுகளும் பொருளும் பின்வருஞ் சிறப்புச் சூத்திரங்களாலுணர்க. இது எழுவாயிலே நின்றும் ஒருவிதத் தினால் வேறுபட்டதினாலே இறுதியிலே வைத்து எட்டாம் வேற்றுமை யெனப்பட்டது.
>
> **"விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு**
> **தெளியத் தோன்று மியற்கைய வென்ப"**
>
> என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :— எட்டன்** – எட்டாம்வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளாவன; – **எய்துபெயர்** – விளியடைந்த பெயரினது, **ஈற்றின் திரிபு** – இறுதி திரிதலும், **குன்றல்** – இறுதி கெடுதலும், **மிகுதல்** – இறுதில் ஒரெழுத்து மிகுதலும், **இயல்பு** – இயல்பாதலும், **அயல் திரிபும்** – ஈற்றுக்கு அயலெழுத்துத் திரிதலும், **ஆம்** – ஆகும்; **பொருள்** – பொருளாவது:– **படர்க்கையோரை** – படர்க்கையிடத்துப் பொருளை, **தன்முகமாக** – தனக்கு எதிர்முகமாக, **அழைப்பது** – அழைக்கப்படுவதாக வேறுபடுத்துதலாம்.

**குறிப்பு:–**

எனவே, இவ்வேற்றுமையின் பொருள் விளிக்கப்படும் பொருள் என்றதாயிற்று, அதனால், இது 'விளிவேற்றுமை' எனவும்படும்.

உ–ம்:– தந்தை – தந்தாய், நல்லள் – நல்லாய் – (ஈறுதிரிபு)
அரசன் – அரச, அக்காள்–அக்கா – (ஈறுகுன்றல்)
மகன்– மகனே, தந்தை – தந்தையே – (மிகுதல்)
நம்பி, தோழி, இராமன், விடலை – (இயல்பு)
மக்கள் – மக்காள், புலவர் – புலவீர் – (அயல்திரிபு)
அப்பன் – அப்பா (ஈறுகுன்றலும், அயல்திரிபும்
ஐயன் – ஐயாவே (ஈறுகுன்றலும், அயல்திரிபும்,
மிகுதலும்).

இங்கு 'எய்துபெயர்' என்றதனால் – 'விளி எய்தாப் பெயரும் சிலவுள' என்றதாயிற்று. அவை மேற்கூறுவர். ('தான்' சந்தவின்பப்பொருட்டுவந்த அசைநிலை)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: எட்டன் உருபு** – எட்டாம் வேற்றுமையினுருபுகளாவன, **எய்து பெயர் ஈற்றின் திரிபு** – விளியடைந்த பெயரீற்றினுடைய திரிதலும், **குன்றல்** – கெடுதலும், **மிகுதல்** – மிகுதலும், **இயல்பு** – இயல்பாதலும், **அயற்றிரிபும் ஆம்**– ஈற்றயலெழுத்துத் திரிதலுமாகும், **பொருள் படர்க்கையோரைத் தன்முகம் ஆக அழைப்பது**–அவற்றின் பொருளாவது படர்க்கைப்பெயர்ப் பொருளைத் தனக்கெதிர்முகமாக அழைப்பதலாகிய விளிக்கப்படுபொருளாம், **எ–று.**

தான் அசைநிலை. விளித்தற்குக் கருவியாகிய உருபை விளியென்றது காரியவாகுபெயர்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். எட்டன உருபு** – எட்டாம்வேற்றுமையி னுருபுகாளவன, – **எய்து பெயர் ஈற்றின் திரிபு** – விளியடைந்த பெயரீற்றினுடைய திரிதலும், – **குன்றல்** – கெடுதலும், – **மிகுதல்** – மிகுதலும், – **இயல்பு** – இயல்பாதலும், – **அயற்றிரிபும் ஆம்** – ஈற்றயலெழுத்துத் திரிதலுமாகும், – பொருள் **படர்க்கையோரைத் தன்முகம் ஆக அழைப்பது**– அவற்றின் பொருளாவது படர்க்கைப் பெயர்ப் பொருளைத் தனக்கெதிர் முகமாக அழைப்பதாலாகிய விளிக்கப்படுபொருளாம். **எ–று.**

தான் அசைநிலை. விளித்தற்குக் கருவியாகிய உருபை விளியென்றது காரியவாகுபெயர்.

படர்க்கையோரை அழைப்பது என்றதனால் தன்மைப் பெயரும் முன்னிலைப் பெயரும் விளிவேற்றுமையைக் கொள்ள மாட்டாவென்பதாயிற்று.

படர்க்கைப் பெயருள்ளுஞ் சிலபெயர்கள் விளிகொள்ளா

வென்பது "நுவ்வொடு வினாச்சுட்டு" என்னுஞ் சூத்திரத்தாலும் பெறப்படும். மேலும் படர்க்கையோரை எனப் பலர்பாலாற் கூறினும் "ஒருமொழியொழி தன்னினங்கொளற்கு ரித்தே" என்பதனால் ஏனைநாற்பாலும் கொள்ளப்படும். அவ்வாறு வருதல் பிற்சூத்திரங்களாலு முணர்க.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார் சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: எட்டன்** – எட்டாம் வேற்றுமையினுடைய, **உருபு** – உருபுகளாவன, **எய்து பெயர்**– (விளியை) அடையும் பெயரினது, **ஈற்றின் திரிபு**–இறுதி திரிதலும், **குன்றல்** – இறுதி கெடுதலும், **மிகுதல்** – இறுதியில் ஒரெழுத்து மிகுதலும், **இயல்பு** – இயல்பாதலும், **அயல் திரிபும்** – ஈற்றெழுத்துக்கு முந்தின எழுத்துத் திரிதலும், **ஆம்**–ஆகும்; **பொருள்** – பொருளாவது, **படர்க்கையோரை** – படர்க்கை யிடத்துப் பொருளை, **தன் முகம் ஆக** – தனக்கு எதிர்முகமாக, **அழைப்பது** – அழைத்தலாம், **எ–று.** எனவே, விளிக்கப்படுபொருள் எட்டாம் வேற்றுமையின் பொரு ளென்றதாயிற்று. இது, விளிவேற்றுமை யெனவும்படும். தான்–அசை. 'ஈற்றின்' என்பதைப் பிறவிடத்தும் கூட்டுக.

**உ–ம்.:**

தந்தை–தந்தாய், நல்லாள்–நல்லாய், தோழி–தோழீ–ஈறு திரிபு.

அரசன் – அரச, சோழன் – சோழ – ஈறுகுன்றல்

மகன் – மகனே, தந்தை–தந்தையே – மிகுதல்

நம்பி, தோழி, சாத்தன், நங்கை – இயல்பு.

மக்கள் – மக்காள், புலவர் – புலவீர் – அயல் திரிபு.

இவற்றுள் பல உருபுகளை ஓரிடத்தே ஏற்று வருதலும் உண்டு.

**உ–ம்.:** அப்பன் – அப்பா – ஈறுகுன்றலும், அயல்திரிபும்.

அண்ணன்–அண்ணாவோ – ஈறுகுன்றலும், அயல் திரிபும், மிகுதலும்.

சிறுபான்மை அளபெடையும் விளியுருபாம்.

**உ–ம்.:** வேள் – வேஎள், அம்மான் – அம்மாஅன்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். எட்டன் உருபு – எட்டாம் வேற்றுமையினுருபுகளாவன, எய்து பெயர் ஈற்றின் திரிபு–விளியடைந்த பெயரீற்றினுடைய திரிதலும், குன்றல்–கெடுதலும், மிகுதல்–மிகுதலும், இயல்பு–இயல்பாதலும், அயற்றிரிபும் ஆம்–ஈற்றயலெழுத்துத் திரிதலுமாகும். பொருள் படர்க்கையோரைத் தன்முகம் ஆக அழைப்பது–அவற்றின் பொருளாவது படர்க்கைப் பெயர்ப் பொருளைத் தனக்கெதிர்முகமாக அழைப்பதாலாகிய விளிக்கப்படும்பொருளாம். **எ–று.**

எனவே, எட்டாம் வேற்றுமையின் உருபு, பெயரின் ஈறு திரிதலும், குன்றலும், மிகுதலும், இயல்பாதலும், ஈற்றயல்

திரிதலும் ஆம் என்பதும் : பொருள் விளிக்கப்படுதலாம் என்பதும் பெறப்பட்டன.

'தான்' அசைநிலை. திரிதன் முதலிய இவ்வுருபுகள் விளித்தற்குக் கருவியாகும். விளித்தற்குக் கருவியாகிய இந்த உருபை 292–வது சூத்திரத்தில் விளியென்றது காரியவாகுபெயர்.

உ–ம். தந்தை – தந்தாய் – ஈறுதிரிதல்.

அரசன் – அரச – ஈறு குன்றல்.

தாய் – தாயே – ஈறு மிகுதல்.

தம்பி – தம்பி – இயல்பு.

மக்கள் – மக்காள் – ஈற்றயல் திரிதல்.

ஒரே பெயர் ஈண்டுக் கூறிய விகாரங்களில் இரண்டு மூன்று எய்துதலும் உண்டு.

உ–ம். அப்பன் – அப்பா – ஈறு குன்றலும் அயல் திரிதலும்.

ஐயன் – ஐயாவே – ஈறு குன்றலும், அயல் திரிதலும், மிகுதலும்.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) எட்டன் உருபு – எட்டாம் வேற்றுமையினுடைய உருபுகளானவை, எய்து பெயர் ஈற்றின் திரிபு – விளியடைந்த பெயரீற்றினுடைய திரிதலும், குன்றல் – கெடுதலும், மிகுதல் – மிகுதலும், இயல்பு – இயல்பாதலும், அயல் திரிபும் – ஈற்றய லெழுத்துத்திரிதலும், ஆம் – ஆகும்; பொருள் – அவற்றின் பொருளாவது, படர்க்கையோரை – படர்க்கைப் பெயர்ப்பொருளை, தன் முகமாக – தனக்கு எதிர்முகமாக, அழைப்பது – அழைப்பதாலாகிய விளிக்கப்படு பொருளாம். (எ–று)

(பொ–ரை) எட்டாம் வேற்றுமையின் உருபுகள், விளியடைந்த பெயரீற்றினது திரிதல், கெடுதல், மிகுதல், இயல்பாதல், ஈற்றிற்து அயல் எழுத்துத் திரிதல் ஆகியவையாம்; அவற்றின் பொருள் படர்க்கையிடத்தாரைத் தனக்கு எதிர்முகமாக அழைத்தலேயாம்.

எனவே, விளிக்கப்படுபொருள் எட்டாம் வேற்றுமையின் பொருளென்றதாயிற்று. இது விளிவேற்றுமை யெனவும் படும். தான் – அசை. 'ஈற்றின்' என்பதைக் 'குன்றல்' முதலிய பிறவிடத்தும் கூட்டுக. விளித்தற்குக் கருவியான உருபை விளி என்றத காரியவாகுபெயர்.

(உ–ம்.) தந்தை – தந்தாய், நல்லாள் – நல்லாய். தோழி – தோழீ, நங்கை – நங்காய். ஈறு திரிபு.

அரசன் – அரச, சோழன் – சோழ. –ஈறு குன்றல்.

மகன் – மகனே, தந்தை – தந்தையே. –மிகுதல்.

நம்பி, தோழி, சாத்தன், நங்கை. —இயல்பு.

மக்கள் – மக்காள், புலவர் – புலவீர். —அயல் திரிபு.

இவற்றுள் பல வுருபுகளை ஓரிடத்தே ஏற்றுவருதலும் உண்டு.

(உ–ம்.) அப்பன் – அப்பா. —ஈறு குன்றலும், அயல் திரிபும்.

அண்ணன் – அண்ணாவோ. ஈறு குன்றலும்,அயல் திரிபும் மிகுதலும்.

சிறுபான்மை அளபெடையும் விளிபுருபாம்.

(உ–ம்.) வேள் – வேஎள். அம்மான் – அம்மாஅன்.

## கா. நமச்சிவாய முதலியார்

எட்டன் – எட்டாம் வேற்றுமையின், உருபு – உருபுகளானவை, எய்து பெயர் ஈற்றின் – விளியடைந்த பெயரீற்றினது, (1) திரிபு – திரிதலும், (2) குன்றல் – கெடுதலும், (3) மிகுதல் – மிகுதலும், (4) இயல்பு – இயல்பாதலும், (5) அயல் திரிபும் – ஈற்றயலெழுத்துத் திரிதலும், ஆம் – ஆகும்; பொருள் – அவற்றின் பொருளாவது, படர்க்கையோரை – படர்க்கைப்பெயர்ப் பொருளை, தன் முகம் ஆக – தனக்கு எதிர்முகமாக, அழைப்பது – அழைப்பதாலாகிய விளிக்கப்படுபொருளாம்.

விளித்தற்குக் கருவியான உருபை விளி, என்றது, காரியவாகுபெயர்

## மோசசு பொன்னையா

எட்டாம் வேற்றுமையின் உருபுகள் விளியேற்கும் பெயரின் ஈற்றின் திரிபும், கேடும், மிகுதியும், இயல்பும், ஈற்றயல் நின்ற எழுத்தின் திரிபுமே யாகும்; இவ்வேற்றுமையின் பொருள் படர்க்கையோரை ஒருவன் தனக்கு எதிர்முகமாக அழைப்பதுவே யாகும் எ–று.

படர்க்கையோரை என உயர்திணைப் பன்மை விகுதி புணர்த்திக் கூறினாரேனும், 'ஒருமொழி யொழிதன் னினங் கொளற் குரித்து' என்றதனால் படர்க்கை ஐம்பாலும் விளி ஏற்றலைக் கொள்க. அதனாலே, தன்மை முன்னிலைகள் விளியேலா என்பதனையும் உணர்த்தினார் எனவும் கொள்க. விளிவேற்றுமை பெயரின் இயல்வடிவில் நின்றக்காலும் எழுவாய் வேற்றுமையின் தோன்று நிலைப் பொருளை விடுத்து யீவளிப் பொருளதாய் நிற்கும் என்பதறிக. அவ்வேறுபாடு வாக்கிய அமைப்பில் தெற்றெனத் தெரியும் இயல்பினது என்பதைத் தொல்காப்பியர்.

விளியெனப் படுப கொள்ளும் பெயரொடு

தெளியத் தோன்று மியற்கைய வென்ப,

என்பதனற் புலப்படுத்தினார். பின்னர் விளி ஏற்பன இவை,விளி

ஏலாதன இவை3 என விதந்தோதியுள்ளார் ஆதலின் எய்தும் என்றது விளியேற்பவற்றைச் சுட்டி நின்றது எனக் கொள்க.

எ–டு

தந்தாய், தோழீ – ஈறு திரிதல்

அரச, நண்ப – ஈறு குன்றல்

மகனே, தந்தையே – ஈறு மிகுதல்

நம்பி, தோழி – ஈறு இயல்பு

மக்காள், புலவீர் – ஈற்றயல் திரிபு

இளம்பூரணார் விளியின் வகைகளை, ஈறு திரிதல், ஈற்றயணீடல், பிறிதுவந்தடைதல், இயல்பாதல் என நான்காக வகுத்தோதினார். மிகுதலும் குன்றலுந் திரிபேயாதலால் இவ்வாசிரியர் குறித்த ஐவகைப் பாகுபாட்டிலும் அவர் குறித்த நால்வகைப் பாகுபாடு சிறந்து காணப்படுகின்றது.

(46)

**303. இஉ ஊவோ டையோ னளரல**
**யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு**
**ணஃகா னாவீ றாகும் பொதுப்பெயர்**
**ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.**

**இ உ ஊ ஒடு ஐ ஓ ன ள ர ல**
**அவ் ஈற்று உயர்திணை ஓர அல் இவற்றொடு**
**ணஃகான் ஆ ஈறு ஆகும் பொதுப்பெயர்**
**ஞ ந ஒழி அனைத்து ஈற்று அஃறிணை விளிப்பன.**

i u ū ōtu ai ō ṉa ḷa ra la
av īṟṟu uyartiṇai ō ra al ivaṟṟoṭu
ṇakhkāṉ ā īṟu ākum potuppeyar
ña na oḻi aṉaittu īṟṟu akhṟiṇai viḷippaṉa.

**இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)**

**Nouns which admit of the vocative case.**

The Nouns that admit of the Vocative are personals ending in i,u, ai,ô , n,l,r, and y ; those of the common class ending in all the

above except and r, with those in n and a; and impersonal ending in all the (twenty-one) finals, except those in ñ and n.

## ஒப்புமைப் பகுதி

அவைதாம்
இஉ ஐஓவென்னு மிறுதி
அப்பால் நான்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே

(தொல். சொல்.: 120)

னரலள என்னும் அந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே

(தொல். சொல்.: 128)

கிளந்த இறுதி அஃறிணை விரவுப்பெயர்
விளம்பிய நெறிய விளிக்குங் காலை

(தொல். சொல்.: 150)

புள்ளியு முயிரும் இறுதி யாகிய
அஃறிணை மருங்கி னெல்லாப் பெயரும்
விளிநிலை பெறூஉங் காலந் தோன்றின்
தெளிநிலை யுடையஏ காரம் வரலே

(தொல். சொல்.: 151)

இகரமீ காரமாம் ஐஆய்ஆம் ஏஆம்
உகரஓ கார உயிர்கள் – பகர்விளிகள்
அண்மை இடத்தும் அளபெடைப் பேர்க்கண்ணும்
உண்மை இயல்பாய் உறும்

(நேமி.: 49)

இஉ ஊவோ டையோ னளரல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
னஃகா னாவீ றாகும் பொதுப்பெயர்
மெய்யுயி ரனைத்தீற் றஃறிணை விளிப்பன
வொல்வழி யறிதல் வழக்கத் தான

(இ.வி.: 206)

அவைதாம்

**இஉ ஐஒ விறுதிக் கிளவி**
**உயர்திணை மருங்கின் விளியேற் கும்மே**

(மு.வீ.: 558)

**உயர்திணை மருங்கின் னரலள விறுதி**
**விளிக்கு மென்மனார் மெய்யுணர்ந் தோரே**

(மு.வீ.: 566)

**மெய்யுயி ரிறுதி விரவுப் பெயர்ச்சொல்**
**உயர்திணைப் பெயரொடு மொத்து நடக்கும்**

(மு.வீ.: 589)

**ஆவியு மொற்று மந்த மாகிய**
**அஃறிணைப் பெயரெலா மேயொடு சிவணும்**

(மு.வீ.: 590)

## மயிலை நாதர்

**எ–ன்,** மேல் விளியேற்கும் பெயரென்றார், அவை இவையெனத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** இ உ ஊ ஐ ஒ ன ள ர ல ய என்னும் பத்தீற்று உயர்திணைப்பெயரும், இவற்றுள் ஒகாரமும் ரகாரமுமான இரண்டும் ஒழித்து நின்ற இவற்றுடனே ணகார ஆகாரங்களை ஈறாகவுடைய [1]பத்துப் பொதுப்பெயரும், ஞகார நகாரங்களும் மேலையதிகாரத்துள் அளபின்கண் அல்லது ஈறாகாதென்று விலக்கின எகாரமுமொழித்து ஒழிந்த இருபத்தோரீற்று அஃறிணைப்பெயரும் விளியேற்பனவாம், **எ – று.**

ஏனையீற்றுப் பெயர்கள் விளியேலா வென்றவாறு. இதனுட் பெயரென்பதனை இருதிணையிடத்தும் வருவித்துக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** பெயருள் விளிக்கப்படுவன இவை என்பது **உணர்–ற்று.**

**இ–ள்.:** இ உ ஊ ஐ ஒ ன ள ர ல ய என்னும் பத்தீற்று உயர்திணைப் பெயரும், இவற்றுள் ஒகாரமும் ரகாரமுமான இரண்டும் ஒழித்து நின்ற எட்டுடனே ணகாரமும் ஆகாரமுமான இரண்டும் கூடிய பத்தீற்றுப் பொதுப்பெயரும், **'நாலாறும் ஈறே'** (107) என்றவற்றுள் ஞகரமும் நகரமும் இன்னோரன்ன இடங்களில் ஈறாகாது என மேலையதிகாரத்து விலக்கிய எகரமும் ஒழிந்த இருபத்தோரீற்று அஃறிணைப் பெயரும் விளிக்கப்படுவனவாம், **எ–று.**

---

**பாட வேறுபாடு:–**

**1.பத்தீற்றுப்பொதுப்பெயரும்.**

'**இ உ ஊவோடு**' என்புழிக் குற்றுகரம் முற்றுகரம் என உகரத்தை விதவாமையின் இரண்டும் கொள்க.

'**பெயர்**' என்பதனை இருதிணைக்கண்ணும் கூட்டுக. '**விளிப்பன**' என்பது வினைமுதல் வினையைச் செயப்படு பொருண் மேல் ஏற்றப்பட்டது.இவ்வீற்றுப்பெயர்கள் விளிக்கப் படும் எனவே, ஏனையீற்றுப் பெயர்கள் விளிக்கப்படா என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்**, மேல் விளியேற்கும் பெயரென்றார்; அவை இவை யெனத் தொகுத்துக் கூறுகின்றது.

**இ–ள்.: இ உ ஊவோ டையோ ன ள ர ய** – இ உ ஊ ஐ ஓ ன ள ர ல ய என்னும், **ஈற்றுயர்திணை** – இப்பத்து எழுத்தும் ஈறாகவுடைய உயர்திணைப் பெயரும், **ஓரவல் விவற்றொடு** – ஓகாரமும் ரகாரமுமான இரண்டு எழுத்தும் ஒழித்துநின்ற எட்டெழுத்துடனே, **ணஃகானாவீ றாகும் பொதுப்பெயர்** – ணகரமும் ஆகாரமுங்கூட இப்பத்தெழுத்தும் ஈறாகவுடைய பொதுப்பெயரும், **ஞநவொழி யனைத்தீற் றஃறிணை** – ஞகரமும் நகரமும் ஒழித்து ஒழிந்த இருபத்தொரு எழுத்தும் ஈறாகவுடைய அஃறிணைப் பெயரும், **விளிப்பன** – விளி ஏற்பனவாம், **எ–று**.

**உ–ம்.:–**

நம்பி, முனி, வேந்து, பெண்டு, ஆடூஉ, மகடூஉ, விடலை, மங்கை, கோ, கோமான், பெருமான், அடிகள், கோமாள், மாந்தர், சான்றோர், குரிசில், தோன்றல், ஆய் எனப் பத்தீற்று உயர்திணைப் பெயர்; பிதா, பிணா, தம்பி, சாத்தி, அரசு, அழிதூஉ, பேதை, தந்தை, ஆண், பெண், மகன், மகள், தூங்கல், தாய் எனப் பத்தீற்றுப் பொதுப்பெயர்; விள, புறா, தும்பி, முசு, தூ, சே, வாடை, கோ, கோக்கள், இதணே, அன்னம், மானம், மான், பேய், சூர், வேல், தெவ், யாழ், தேள், நாகு என இருபத்தொரு ஈற்று அஃறிணைப் பெயரும் விளியேற்கும், **எ–று**.

## விசாகப் பெருமாளையர்

**இது**, பெயர்களுள் விளிக்கப்படுவன இவை என்கிறதை உணர்த்துகின்றது.

**இ–ள்.: இ, உ ஊ வோடை யோனளரலய** – இகரமும் உகரமும் ஊகாரமும் ஐகாரமும் ஓகாரமும் என்கிறவுயிர்களும் ன ள ர ல ய என்கிற மெய்களும் ஆகிய பத்தெழுத்துகளையும், **ஈற்று** – இறுதியிலுடைய, **உயர்திணைப்** (பெயர்) – உயர்திணைப்பெயர்களும், **ஓரவல்** – ஓகாரவுயிரும் ரகரமெய்யும் ஒழிந்த, **இவற்றொடு** – இவ்வெழுத்துகளுடனே, **ணஃகானா** –

ணகரமும் ஆவும் ஆகிய பத்தெழுத்துகளும், **ஈறாகும்** – இறுதியாகிய, **பொதுப்பெயர்** – பொதுப்பெயர்களும், **ஞ ந வொழி** – ஞகர நகரங்களும் (ஈறாகாத எகரமு மொழிந்த, **அனைத்து** – இருபத்தொரு எழுத்துகளையும், **ஈற்று** – ஈற்றிலுடைய, **அஃறிணைப் (பெயர்)** – அஃறிணைப்பெயர்களும், **விளிப்பன** – அழைக்கப்டுவன, எ–று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

விளியேற்கும்பெயர் இவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

இ உ ஊவோ டையோ ன ள ர ல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
ணஃகா னாவீ றாகும் பொதுப்பெயர்
ஞநவொழி யனைத்தீற் றஃறிணை விளிப்பன.

(இ உ ஊ ஒடு ஐ ஓ ன ள ர ல
ய ஈற்று உயர்திணை, ஓ ர அல் இவற்றொடு
ணஃகான் ஆ ஈறு ஆகும் பொதுப்பெயர்
ஞ ந ஒழி அனைத்து ஈற்று அஃறிணை விளிப்பன.)

**இ–ள்.:** இகரமும் உகரமும் ஊகாரமும் ஐகாரமும் ஓகாரமும் என்னுமுயிர்களும் ன ள ர ல ய என்னுமெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும் இறுதியிலுடைய உயர்திணைப் பெயர்களும், இவற்றுள் ஓகாரவுயிரும் ரகரமெய்யுமாகிய இரண்டு மொழித்து நின்ற எட்டுடனே ணகரமும் ஆகாரமுமாகிய இரண்டுங்கூடிய பத்தெழுத்துக்களும் இறுதியாகிய பொதுப் பெயர்களும், ஞகர நகரங்களும் (ஈறாகாத எகரமு) மொழிந்த இருபத்தோரெழுத்துக்களையும் ஈற்றிலுடைய அஃறிணைப்பெயர்களும் அழைக்கப்படுவன, எ–று.

விளியேற்கும்பெயர்கள் யாவை?

உயர்திணைப்பெயர். பொதுப்பெயர். அஃறிணைப்பெயர்.

அவ்வுயர்திணைப்பெயர்களினுடைய ஈறுகள் யாவை?

இ உ ஊ ஐ ஓ ன ள ர ல ய என்னும் பத்து ஈறுகளுமாம்.

அப்பொதுப்பெயர்களினுடைய ஈறுகள் யாவை?

ஓ ர அல் இவற்றொடு ணஃகான் ஆவீறு.

(இ உ ஊ ஐ ன ள ல ய ண ஆ என்னும் பத்துமாம்.)

99. அவ்வஃறிணைப்பெயர்க்கு ஈறாமெழுத்துக்க ளெத்தனை?

ஞ ந ஒழி அனைத்தீற்றஃறிணை என்றதனால் இருபத்தோ ரெழுத்துக்கள்.

உகரமெனப் பொதுப்படக் கூறியதனாற் கொள்ளக்கிடப்பது யாது?

பொதுப்படக்கூறியதனால் பெரும்பான்மை குற்றுகரமும் சிறுபான்மை முற்றுகரமுமாமென்பது.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** விளியுருபேற்கும் பெயர்களிவை யென்கின்றது.

**இ-ள்.: இ உ ஊ ஐ ஒ ன ள ர ல யவ்வீற் றுயர்திணை** – இப்பத்தீற்று உயர்திணைப்பெயர்களும், **ஓரவல்லிவற்றொடு** – ஓகாரமும் ரகரமும் அல்லாத இந்த எட்டீற்றுப் பெயர்களோடு, **ணஃகானா விறாகும் பொதுப்பெயர்** – ணகர ஒற்றும் ஆகாரமுமாகிய இரண்டும் கூட்டப் பத்தீற்றுப் பொதுப் பெயர்களும், **ஞ ந வொழி யனைத்தீற் றஃறிணை** – ('நாலாறு மீறே' யென்றவற்றுள்) ஞகர வொற்றும் நகரவொற்றும் ஈறாகதென மேலே விலக்கப்பட்ட எகரமு மொழித்து ஒழிந்த இருபத்தோரீற்று அஃறிணைப் பெயர்களும், **விளிப்பன**– விளிக்கப்படுவனவாம், **எ–று.**

(விளித்தல்–அழைத்தல்,)

"இ உ ஐ ஒ வென்னு மிறுதி
யப்பா னான்கே யுயர்திணை மருங்கின்
மெய்ப்பொருள் சுட்டிய விளிகொள் பெயரே"

எனவும்,

"னரலள வென்னு மந்நான் கென்ப
புள்ளி யிறுதி விளிகொள் பெயரே"

எனவும் ஊகாரமும் யகர வொற்றும் விலக்கி, ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியது காலவழக்கெனக் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– இஉ ஊவோடு ஐ ஒ னளரலய** – இப்பத்தெழுத்துக்களையும், **ஈறு** – இறுதியிலுடைய, **உயர்திணை** – உயர்திணைப் பெயர்களும், ஓரஅல் – (இவற்றுள்) ஓகாரவுயிரும் ரகரமெய்யும் ஒழிந்த, **இவற்றொடு** – மற்றை எட்டெழுத்துக்களுடனே, **ணஃகான் ஆ** – ணகரமெய்யும் ஆகாரவுயிரும் ஆகிய பத்தெழுத்துக்களுடனே, **ஈறு ஆகும்** – இறுதியாகிய, **பொதுப்பெயர்** – இருதிணைப் பொதுப் பெயர்களும்; **ஞந ஒழி** – ஞகர நகரங்களும் (ஈறாகாத எகரமும்) ஒழிந்த, **அனைத்து** – இருபத்தொரு எழுத்துக்களையும், **ஈறு** – இறுதியிலுடைய, **அஃறிணை** – அஃறிணைப்பெயர்களும் **விளிப்பன** – அழைக்கப்படுவனவாம்.

## ஆறுமுக நாவலர்

**இ-ள்.: இ உ ஊவோடு ஐ ஒ ன ள ர ல ய ஈற்று உயர்திணைப் (பெயர்)** – இகரமும் உகரமும் ஊகாரமும் ஐகாரமும் ஒகாரமும் என்னுமுயிர்களும் ன ள ர ல ய என்னுமெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும் இறுதியிலுடைய உயர்திணைப் பெயர்களும், **ஓ ர அல் இவற்றொடு ணஃகான் ஆ ஈறு ஆகும் பொதுப்பெயர்** – இவற்றுள் ஓகாரவுயிரும் ரகர மெய்யுமாகிய இரண்டுமொழித்து

நின்ற எட்டுடனே ணகரமும் ஆகாரமுமாகிய இரண்டுங் கூடிய பத்தெழுத்துக்களும் இறுதியாகிய பொதுப்பெயர்களும், **ஞ ந ஒழி அனைத்து ஈற்று அஃறிணைப் (பெயர்)** – ஞகர நகரங்களும் (ஈறாகாத எகரமு) மொழிந்த இருபத்தோரெழுத்துக்களையும் ஈற்றிலுடைய அஃறிணைப்பெயர்களும், **விளிப்பன** – அழைக்கப் படுவன, **எ–று.**

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். இஉ ஊவோடு ஐ ஓ ன ள ர ல ய ஈற்று உயிர்திணைப்** (பெயர்) **–** இகரமும் உகரமும் ஊகாரமும் ஐகாரமும் ஓகாரமும் என்னுமுயிர்களும் னளரலய என்னுமெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும் இறுதியிலுடைய உயர்திணைப் பெயர்களும், – **ஓர அல் இவற்றொடு ணஃகான் ஆ ஈறு ஆகும் பொதுப்பெயர்** – இவற்றுள் ஓகாரவுயிரும் ரகரமெய்யுமாகிய இரண்டு மொழித்து நின்ற எட்டுடனே ணகரமும் ஆகாரமுமாகிய இரண்டுங் கூடிய பத்தெழுத்துக்களும் இறுதியாகிய பொதுப்பெயர்களும், **– ஞ, ந ஒழி அணைத்து ஈற்று அஃறிணைப் (பெயர்)** – ஞகர நகரங்களும் (ஈறகாத ஏகரமு) மொழிந்த இருபத்தோரெழுத்துக்களையும் ஈற்றிலுடைய அஃறிணைப் பெயர்களும், – **விளிப்பன** – அழைக்கப்படுவன. **எ–று.**

> (விளித்தல் – அழைத்தல்) சூத்திரம். இஉஐஓ வென்னுமிறுதி, யப்பானான்கேயுயர் திணைமருங்கின. மெய்ப்பொருள் சுட்டியவிளிகொள் பெயரே எ–ம். னரலள வென்னுமந் நான்கென்ப, புள்ளியிறு திவிளிகொள் பெயரே எ–ம் ஊகாரமும்., யகரவொற்றம் விலக்கி ஆசிரியர் தொல்காப்பியர் கூறவது காலவழக்கெனக் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்

## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: இ உ ஊவோடு ஐ ஓ ன ள ர ல ய** – இ உ ஊ ஐ ஓ என்கிற உயிர்களும் ன ள ர ல ய என்கிற மெய்களும் ஆகிய பத்து எழுத்துக்களையும், **ஈறு** – இறுதியிலுடைய, **உயர்திணை** (பெயர்) – உயர்திணைப் பெயர்களும்; **ஓ ர அல்** – (அவற்றுள் ) ஓகார உயிரும் ரகர மெய்யும் ஒழிந்த, **இவற்றோடு** – மற்றை எட்டு எழுத்துக்களுடனே, **ணஃகான் ஆ – ணகரமெய்யும் ஆகாரவுயிரும் ஆகிய** பத்து எழுத்துக்களும், **ஈறு ஆகும்** – இறுதியாகிய, **பொதுப்பெயர்**– இருதிணைப் பொதுப் பெயர்களும்; **ஞ ந ஒழி** – (மொழிக்கு ஈறாகு மென்ற இருபத்துநான்கு எழுத்துக்களுள்) ஞகர நகரங்களும் (அளபெடையில் மாத்திரமே ஈறாகும் எகாரமும் நொ கெள வெள என வினைக்கு ஈறாதலே யன்றிப் பெயர்க்கு ஈறாகாத ஒகரமும் ஔகாரமும்) ஒழிந்த, **அனைத்து** – பத்தொன்பது எழுத்துக்களையும், **ஈறு** – இறுதியிலுடைய, **அஃறிணை (பெயர்)** – அஃறிணைப்பெயர்களுமே, விளிப்பன – அழைக்கப்படுவனவாம்; **எ–று.** அனைத்து – எல்லாம், விளிப்பன – விளியேற்பன.

ஏனையீற்றுப்பெயர்கள் விளியேலா என்றவாறு.

இதனுள் 'பெயர்' என்பதனை இருதிணையிடத்தும் வருவித்துக் கொள்க.

**உ–ம்.: உயர்திணைப்பெயர்கள்:–** நம்பி, வேந்து, ஆடூ, விடலை, கோ, ஐயன், வேள், வணிகர், தோன்றல், சேய், என முறையே இங்குக் காட்டிய பத்து ஈறுகளும் காண்க.

**பொதுப்பெயர்கள்:–** சாத்தி, கூற்று, அழிதூ (பேடு), தந்தை, சாத்தன், கடவுள், தூங்கல் (பிள்ளை), தாய், ஆண், பிதா, என முறையே இங்குக் காட்டிய பத்து ஈறுகளும் காண்க.

**அஃறிணைப் பெயர்கள்:–** மக, புறா, கிளி, தீ, முசு, பூ, சே, நாரை, சோ, மண், கராம், அலவன், நாய், தகர், குயில், தெவ், பூழ், புள், வண்டு என முறையே இங்குக் காட்டிய பத்தொன்பது ஈறுகளும் காண்க,

இங்கு 'ஞ ந வொழி யனைத்தீற் றஃறிணை' என நகர வீற்று அஃறிணைப்பெயர் விலக்கப்பட்டிருத்தலால், முதுகு என்னும் பொருளை யுணர்த்துகிற வென் வெரின் என்ற சொற்களைச் சிறப்பு னகர வீறாகவே கொண்டனரென்றும், வெந் வெரிந் எனப் பொது நகர வீறாகக் கொண்டிலரென்றும் அறியலாம்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். இ உ ஊவோடு ஐ ஓ ன ள ர ல ய ஈற்று–இகரமும் உகரமும் ஊகாரமும் ஓகாரமும் என்னுமுயிர்களும் ன ள ர ல ய என்னும் மெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும் இறுதியிலுடைய, உயர்திணைப் (பெயர்)–உயர்திணைப் பெயர்களும்; ஓ ர அல் இவற்றொடு ணஃகான் ஆ ஈறு ஆகும்–இவற்றுள் ஓகாதவுயிரும் ரகரமெய்யுமாகிய இரண்டு மொழித்து நின்ற எட்டுடனே ணகரமும் ஆகாரமுமாகிய இரண்டுங்கூடிய பத்தெழுத்துக்களும் இறுதியாகிய, பொதுப்பெயர்–பொதுப்பெயர்களும்; ஞ ங ஒழி அனைத்து ஈற்று–ஞகர நகரங்களும் (ஈறாகாத எகரமும்) ஒழிந்த இருபத்தோரெழுத்துக்களையும் ஈற்றிலுடைய, அஃறிணைப் (பெயர்) – அஃறிணைப் பெயர்களும், விளிப்பன – அழைக்கப்படுவன. **எ–று.**

| **உயர்திணை பெயர்ஈறு** | **பொது பெயர்ஈறு** | **அஃறிணை பெயர்ஈறு** | **பெயர்ஈறு** |
|---|---|---|---|
| நம்பி – இ | சாத்தி – இ | விள – அ | மண் – ண் |
| வேந்து – உ | கூற்று – உ | புறா – ஆ | கராம் – ம் |
| ஆடூ – ஊ | அழிதூ – ஊ | கிளி – இ | அலவன் – ன் |
| விடலை – ஐ | தந்தை – ஐ | தீ – ஈ | நாய் – ய் |
| கோ – ஓ | ஆண் – ண் | முசு – உ | தகர் – ர் |
| ஐயன் – ன் | சாத்தன் – ன் | பூ – ஊ | குயில் – ல் |

| | | | |
|---|---|---|---|
| வேள் – ள் | கடவுள் – ள் | சே – ஏ | தவ் – வ் |
| ஐயர் – ர் | பிதா – ஆ | நாரை – ஐ | பூழ் – ழ் |
| குரிசில் – ல் | தூங்கல் – ல் | சோ – ஓ | புள் – ள் |
| சேய் – ய் | தாய் – ய் | வண்டு – (குறுகிய) உ | |

(மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு.)

## கா. நமச்சிவாய முதலியார்

**இ உ ஊ வோடு ஐ ஓ ன ள ர ல ய** – இகரமும் உகரமும் ஊகாரமும் ஐகாரமும் ஓகாரமும் என்னும் உயிர்களும் ன ள ர ல ய என்னும் மெய்களும் ஆகிய பத்தெழுத்துக்களையும், **ஈறு** – இறுதியிலுடைய, **உயர்திணைப் பெயர்** – உயர்திணைப் பெயர்களும், ஓ ர அல் – ஓகாரவுயிரும் ரகர மெய்யும் ஒழிந்த, **இவற்றொடு** – இவ்வெழுத்துக்களுடனே, ணஃகான் ஆ – ணகரமும் ஆவும் ஆகிய பத்தெழுத்துக்களும், **ஈறு ஆகும்** – இறுதியாகிய, **பொதுப்பெயர்** – பொதுப் பெயர்களும், **ஞ ந ஒழி** – ஞகர நகரங்களும் (ஈறாகாத எகரமும்) ஒழிந்த, **அனைத்து** – இருபத்தொரு எழுத்துக்களையும், **ஈறு** – ஈற்றிலுடைய, **அஃறிணை** – அஃறிணைப்பெயர்களும், **விளிப்பன** – விளிக்கப்படுவன.

இ, உ, ஊ, ஐ, ஓ, ன், ள், ர், ல், ய் என்னும் எழுத்துக்களை ஈற்றில் உடைய உயர்திணைப் பெயர்களும்,

ஆ, இ, உ, ஊ, ஐ, ண், ன், ள், ல், ய் என்னும் எழுத்துக்களை ஈற்றில் உடைய அஃறிணைப் பெயர்களும்,

ஈற்றில் வரும் எழுத்துக்கள் இருபத்துநான்கில் எ, ஞ், ந் இந்த மூன்று எழுத்துக்கள் ஒழிய மற்ற எழுத்துக்களை ஈற்றில் உடைய பொதுப் பெயர்களும் விளியேற்பன வாகும்.

## மோசசு பொன்னையா

இ, உ, ஊ, ஐ, ஓ என்னும் ஐந்து உயிர்களையும், ன, ள, ர, ல, ய, என்னும் ஐந்து மெய்களையும் இறுதியிற் கொண்ட உயர்தினைப் பெயர்களும் ஓகார உயிரும் ரகர மெய்யும் ஒழிந்த மற்றை எட்டெழுத்துக்களுடனே ணகர மெய்யும், ஆகார உயிருமாகிய பத்து எழுத்துக்களையும்; மொழிக்கு ஈறாகும் என்ற இருபத்து நான்கு எழுத்துக்களுள் ஞகர நகரங்களும், அளபெடையில் மட்டுமேயன்றிப் பெயர்க்கு ஈறாகாத ஒகரமும்; ஔகாரமும் ஒழிந்த பத்தொன்பது எழுத்துக்களையும் இறுதியிற் கொண்ட அஃறிணைப் பெயர்களுமே விளியேற்கும் பெயர்களாம். எ–று

தொல்காப்பியர்

உகரந் தானே குற்றிய லுகரம்,2

என விதந்து கூறியவாறே கூறாது பொதுப்படக் கூறினமையின்

இருவகை உகரங்களையும் இவ்வாசிரியர் தழுவிக் கூறினார் எனக் கொள்க. விளிக்கப்படுவனவற்றை விளிப்பன என்றதும் மரபுநிலை வழக்குப்பற்றியாம் என்க.

எ–டு

1.நம்பி, வேந்து, ஆடு, விடலை, கோ; ஐயன், வேள், வணிகர், தோன்றல், சேய் உயர்திணைப் பெயர்கள்

2.சாத்தி, கூற்று, அழுதா (பேடு), தந்தை; சாத்தன், கடவுள், தூங்கல் (பிள்ளை), தாய்; ஆண் பிதா; பொதுப் பெயர்கள்

3.மக, புறா, கிளி, தீ, முசு, பூ, சே, நாரை, சோ; மண், கராம், அலவன், தாய், தகர், குயில், தெவ், பூழ், புள், வண்டு.– அஃறிணைப் பெயர்கள்

(47)

**304. இம்முப் பெயர்க்க ணியல்பு மேயும்
இகர நீட்சியு முருபா மன்னே.**

**இம் முப் பெயர்க் கண் இயல்பும் ஏயும்
இகர நீட்சியும் உருபாம் மன் ஏ.**

im mup peyark kaṇ iyalpum ēyum
ikara nītsiyum urupām man̲ ē

**இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)**

**General vocative sings**

The following are the vocative forms in the majority of instances:—leaving the Noun unchanged; adding (to the final); and lengthening (final)i.

**ஒப்புமைப் பகுதி**

அவற்றுள்
இ ஈ யாகும்...

(தொல். சொல்.: 121)

ஒவும் உவ்வும் ஏயொடு சிவணும்

(தொல். சொல்.: 122)

இம்முப் பெயர்க ணியல்பு மேயு
மிகர நீட்சியு முருபா மன்னே

(இ.வி.: 207)

அவற்றுள்
இஈ யாகும்...

(மு.வீ.: 559)

**உகரம் ஓகாரம் ஏயொடு சிவணும்**

(மு.வீ.: 560)

**எப்பெயர்க் கண்ணும் இயல்பு மேயும்**
**இகர நீட்சியு முருபாம் மன்னே**

(தொ.வி.: 70)

## மயிலை நாதர்

**எ–ன்,** மூவகைப் பெயர்க்கும் பொதுவான விளியுருபு தொகுத்துணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** உயர்திணைப்பெயர் பொதுப்பெயர் அஃறிணைப் பெயரென்னும் மூவகைப் பெயர்க்கண்ணும் எல்லா ஈறும் இயல்பாதலும் அவற்றின்கண் ஏகாரமிகுதலும் இகரவீறு ஈகாரவீறாய்த் திரிதலும் விளி [1]வேற்றுமைக்கு உருபுகளாம், **எ–று.**

**வ–று.:**

நம்பிகூறாய், [2]மனைவிகூறாய், கணிகூறாய், தோழி கூறாய், தொழும்பி கூறாய், வேந்து கூறாய், பெண்டு கூறாய், பூண்டு கூறாய், ஆடூஉக் கூறாய், மகடூஉக் கூறாய், விடலை கூறாய், மங்கை கூறாய், கோக் கூறாய் எனவும், நம்பியே, முனியே, [3]கணியே, வேந்தே, பெண்டே, பூண்டே, ஆடூஉவே, மகடூஉவே, [4]கோவே எ–ம், நம்பீ, மனைவீ, தோழீ, தொழும்பீ எனவும், கோமான்கூறாய், இறைவன் கூறாய், வெற்பன்கூறாய், அருவாளன்கூறாய், பார்ப்பான்கூறாய் எனவும், "பார்ப்பன மகனே பார்ப்பன மகனே" (குறுந். 156), "எம்மானே தோன்றினாயென்னை யொளித்தியோ" (சீவக. 1801) எனவும், அடிகள் கூறீர், கோமாள் கூறீர் எனவும், "அகவன் மகளே யகவன் மகளே" (குறுந். 23) எனவும், மாந்தர் கூறீர், சான்றோர் கூறீர் எனவும், இறைவரே, ஈசரே, குழையரே, வெற்பரே எனவும், குருசில் கூறாய், தோன்றல் கூறாய், எனவும், "குருசிலே யெம்மையுள்ளாய்", திருமாலே, தோன்றலே (பெருமாள். 4–9) எனவும், ஆய் கூறாய், எனவும், ஆயே

---

**பாட வேறுபாடு:–**

1. *வேற்றுமையுருபுகளாம்*
2. *தேவி*
3. *கன்னியே*
4. *கோன்*

சொல்லாய் எனவும், உயர்திணைப் பெயர்க்கண் விளியுருபு வந்தவாறு.

பிதாவுரையாய், பிணாவுரையாய், தம்பிகூறாய்,, சாத்திகூறாய், [1]கொற்றி கூறாய், அரசு கூறாய், அழிதூஉக் கூறாய், பேதை பேசாய், தந்தை தாராய், [2]அம்மை யருளாய், அன்னை யருளாய், ஆண் கூறாய், பெண் கூறாய், சாத்தன் கூறாய், மகன் வாராய், மகள் வாராய், மக்கள் வாரீர், ஒதுங்கல் கூறாய், தூங்கல் கூறாய், தாய் கூறாய், சேய் கூறாய் எனவும், பிதாவே, பிணாவே, அரசே, அழிதூஉவே, ஆணே, பெண்ணே, சாத்தனே, கொற்றனே, மகனே, மகளே, ஒதுங்கலே, தூங்கலே, தாயே, சேயே எனவும், தம்பீ, சாத்தீ, கொற்றீ எனவும் பொதுப்பெயர்க் கண் விளியுருபு வந்தவாறு.

விளக்கொடியை, புறாக்கொடியை, தும்பிகொடியை, வீ கொடியை, முசுக்கொடியை, வண்டுகொடியை, பூக்கொடியை, சேக்கொடியை, மழை கொடியை, நொக்கொடியை, கோக் கொடியை, வெளக்கொடியை, இதண் உரையாய், புனம்கூறாய், மான்கூறாய், வேய்கொடியை, சூர்கொடியை, வேல்கொடியை, தெவ்வலியை, யாழ்கொடியை, புள்கொடியை எனவும், விளவே, புறாவே, தும்பியே, வீயே, முசுவே, வண்டே, பூவே, சேவே, மழையே, நொவ்வே, கோவே, வெளவே, இதணே, புனமே, மானே, வேயே, சூரே, வேலே, தெவ்வே, யாழே, புள்ளே எனவும், மந்தீ, தும்பீ எனவும் அஃறிணைப் பெயர்க்கண் விளியுருபு வந்தவாறு.

'மன்' என்ற [3]மிகையானே உயர்திணைப் பெயரீற்று ஐகாரம் ஏகாரமேலா தெனவும் ஏனைய ஏற்புழி ஐகாரம் திரிந்தும் திரியாதும் ஏற்பனவாமெனவுங் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்**, மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்து **உணர்—ற்று.**

**இ—ள்.:** மேல் விளிக்கப்படும் என்ற மூவகைப் பெயர்க்கண்ணும் இயல்பாதலும், ஏகாரம் மிகுதலும், இகர ஈறு ஈகார ஈறாய்த் திரிதலும் விளியுருபாம் பெரும்பாலும், எ—று.

---

பாட வேறுபாடு:—

1. முடத்தி
2. அம்மே, அன்னே
3. விதப்பானே

**வ–று.:**

முனி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉக் கூறாய், விடலைகூறாய், கோக் கூறாய், கோன் கூறாய், வேள் கூறாய், மாந்தர் கூறீர், தோன்றல் கூறீர், தோன்றல் கூறாய், சேய் கூறாய்; முனியே, வேந்தே; நம்பீ என உயர்திணைக்கண் மூன்றுருபும் வந்தன. பிதாக்கூறாய், ஆண்கூறாய்; பிதாவே, ஆணே; சாத்தீ எனப் பொதுப்பெயர்க்கண் மூன்று உருபும் வந்தன. விளக்கொடியை, புறாக் கொடியை, புல்வாய் கொடியை: விளவே, புறாவே, புல்வாயே; மந்தீ என அஃறிணைக்கண் மூன்று உருபும் வந்தன. பிறவும் அன்ன.

**'மன்னே'** என்றமையான், இவ்வுருபுகள் சிலவற்றிற்கு ஏலாமையும் இப்பொதுவிதியினும் மேல்வரும் சிறப்பு விதியினும் அடங்காது வரும் உருபுகள் சில உளவேல் அவையும் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்**, மூவகைப் பெயர்க்கும் பொதுவான விளியுருபு தொகுத்துக் கூறுகின்றது.

**இ–ள்.: இம் முப் பெயர்க்கண்** – உயர்திணைப்பெயர் பொதுப்பெயர் அஃறிணைப் பெயர் என்னும் இம் மூவகைப் பெயர்க்கண்ணும், **இயல்பும் ஏயும் இகரநீட்சியும்** – இயல்பாதலும் ஏகாரம் மிகுதலும் இகர ஈறு ஈகார ஈறாய்த் திரிதலும், **உருபா மன்னே** – விளி வேற்றுமைக்கு உருபுகளாம் பெரும்பாலும், **எ–று.**

**உ–ம்.:**

நம்பி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉ கூறாய், விடலை கூறாய், , கோக் கூறாய், நம்பியே கூறாய், மாந்தர் கூறீர், குருசில் கூறீர், ஆய் கூறாய், கோமானே, அடிகளே, சான்றாரே, குரிசிலே, ஆயே என உயர்திணைப் பெயர்க்கண் விளியுருபு வந்தவாறு.

பிதா உரையாய், தம்பி கூறாய், அரசு கூறாய், அழிதூஉக் கூறாய், பேதை பேசாய், ஆண் கூறாய், சாத்தன் கூறாய், மகள் பாராய், தூங்கல் கூறாய், தாய் கூறாய் எனவும்; பிதாவே, அளியே, அரசே, அழிதூஉவே, அன்னையே, பெண்ணே, சாத்தனே, தூங்கலே, தாயே எனவும்; சாத்தீ, கொற்றீ எனவும்; பொதுப்பெயர்க்கண் விளியுருபு வந்தவாறு. விளக் கொடியாய், புறா அழகியாய், தும்பி கொடியை, வீ கொடியை, வாடை கொடியை, நொக் கொடியை, கோக் கொடியை, சூர்க்கொடியை, வேல் கொடியை, தெவ் அரியை, யாழ் கொடியை, கௌ கொடியை, எனவும் மகவே, நிலாவே, வீயே, முசுவே, பூவே, சேவே, மழையே, நொவ்வே, கோலே, கௌவே,

இதணே புனமே, தேனே, வேயே, காரே, குயிலே, தெவ்வே, யாழே, புள்ளே, எனவும் மந்தீ, தும்பீ எனவும் அஃறிணைப் பெயர்க்கண் விளியுருபு வந்தவாறு காண்க.

**"மன்னே"** என்ற மிகையானே, உயர்திணைப் பெயரீற்று ஐகாரம் ஏகாரம் ஏலாதெனவும் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** மூவகைப் பெயர்களுக்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்துணர்த்துகின்றது.

**இ—ள்.: இம்முப் பெயர்க்கண்**—முன் விளிக்கப்படுமென்கிற மூவகைப் பெயர்களிடத்தும், **இயல்பும்**—இயல்பாதலும், **ஏயும்**—ஏகார மிகுதலும், **இகர நீட்சியும்**—இகரம் ஈகாரமாதலும், **உருபாமன்** – பெரும்பாலும் விளியுருபுகளாகும், **எ—று.**

**வ—று.:**

முனிகூறாய், வேந்துகூறாய், ஆடூஉக்கூறாய், விடலைகூறாய், கோக்கூறாய், கோன்கூறாய், வேள்கூறாய், மாந்தர்கூறீர், தோன்றல்கூறாய், சேய்கூறாய் எனவும்; முனியேகூறாய், வேந்தேகூறாய் எனவும்; நம்பீகூறாய் எனவும்; உயர்திணைப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன. பிதாக் கூறாய், ஆண்கூறாய் எனவும்; பிதாவே கூறாய், ஆணே கூறாய் எனவும்; சாத்தீ கூறாய், எனவும் பொதுப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன. விளக்கொடியை, புல்வாய்கொடியை எனவும்; விளவே கொடியை, புல்வாயே கொடியை எனவும்; மந்தீகொடியை எனவும்; அஃறிணைப்பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன. காட்டாதொழிந்த பெயர்களும் இப்படியேவரும். பெரும்பாலு மென்றதனால் இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமை யுளவேற் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு கூறுஞ் சூத்திரம் யாது.

இம்முப் பெயர்க்கண் ணியல்பு மேயும்

இகர நீட்சியு முருபா மன்னே.

(இம்முப் பெயர்க்கண் இயல்பும் ஏயும்

இகர நீட்சியும் உருபு ஆம் மன்னே.)

**இ—ள்.:** முன் விளிக்கப்படுமென்ற மூவகைப் பெயர்களிடத்தும் இயல்பாதலும் பிறிதுவந்தடைதலாய் ஏகாரமிகுதலும் இகரம் ஈகாரமாதலும் பெரும்பாலும் விளியுருபுகளாகும், **எ—று.**

அவ்விளியுருபுகள் யாவை?

பெயரீறு இயல்பாதலும், ஏகாரம் மிகுதலும், இகரம் ஈகாரமாதலும் உருபுகளாம்.

இயல்பாக நின்று விளிப்பது எவ்விடத்து?

அண்மைக்கண் விளிகொள்ளுமிடத்து.

**வரலாறு:–**

நம்பிவாழி, வேந்துவாழி, திருவாழி, ஆடூஉவாழி, நங்கை வாழி, கோவாழி என உயிரீற்று உயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின.

கணி–கணியே, வேந்து–வேந்தே, திரு–திருவே, ஆடூஉ–ஆடூஉவே. கோ–கோவே என உயிரீற்று உயர்திணைப் பெயர்கள் பிறிதுவந்து அடைதலால் ஏகாரம் மிக்கன.

நம்பி–நம்பீ, தோழி–தோழீ என இகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் ஈகாரமாய்த் திரிந்தன.

னகர ஈற்று உயர்திணைப்பெயருள் "நம்பின்சிறி தேயிடைதந்திது கேட்க" என அன்னீறுஞ் சேரமான் மலையமான் என ஆனிறும் அண்மைக்கண் இயல்பாயின.

"படிவ வுண்டிப் பார்ப்பான் மகனே" என முறைமை சுட்டா மகனுந் "தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்–மன்னவனே மார்பின் மறு" என அன்னீறுந் தம்முன் தம்முனே என முன்னீறும் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன.

கடவுள்வாழி, அடிகள்கூறீர், கோமான்கூறாய், கடியாள்கூறாய் "ஆவுமானியற்பார்ப்பனமாக்களு மெம்மம்பு கடிது விடுது நும்மரண் சேர்மின்" என ளகர ஈற்றுயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின.

"அகவன்மகளே யகவன்மகளே" என முறைமை சுட்டா மகளென்னும் ளகர ஈற்று உயர்திணைப்பெயர் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம்மிக்கது.

மாந்தர்கூறீர் சான்றோர்கூறீர் கேளிர்வாழி "பெண்டிரும்பிணியுடையீரு நும்மண்சேர்மின்" என ரகர ஈற்று உயர்திணைப் பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின.

இறையவர்–இறையவரே, வந்தவர்–வந்தவரே, கரியவர்–கரியவரே என ரகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன.

குரிசில்கூறாய் தோன்றல்கூறாய் ஆண்பால்கூறாய் பெண்பால்கூறாய் என லகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின.

திருமாலே, தோன்றலே, "குருசிலேயெம்மையுள்ளாய்" என லகரஈற்று உயர்திணைப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன.

ஆய்வாழி—என யகர ஈற்று உயர்திணைப்பெயர் அண்மைக்கண் இயல்பாயிற்று.

ஆயேகூறாய்—என யகர ஈற்று உயர்திணைப்பெயர் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கது.

பிணாவாராய், சாத்திகூறாய், பூண்டுகூறாய் அழிதூவாராய் தந்தை வாராய் அன்னையருளாய் என உயிரீற்று விரவுப் பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின.

பிணாவேகூறாய், பூண்டேகூறாய், என உயிரீற்று விரவுப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலால் ஏகாரம் மிக்கன.

சாத்தி, சாத்தீ, எம்பி, எம்பீ, என இகர ஈற்று விரவுப்பெயர்கள் ஈகாரமாய்த் திரிந்தன.

ஆண்வாழி, பெண்வாழி, சாத்தன்வாழி, மகள்வாழி, நூங்கல்வாழி, தாய்வாழி என ஒற்றீற்று விரவுப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின.

ஆண் – ஆணே, பெண்– பெண்ணே, மகன்—மகனே, மருமகன் – மருகனே, மகள் – மகளே, மருமகள்– மருமகளே, தூங்கல்—தூங்கலே, கூந்தல்—கூந்தலே, தாய்—தாயே என ஒற்றீற்று விரவுப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன.

நெஞ்சம்வருந்தினை, வாழியநெஞ்சம் எனவும், "குருகு கருங்கால் வெண் குரு கொன்று கேண்மதி" எனவும் ஒற்றீற்று அஃறிணைப் பெயரும் உயிரீற்று அஃறிணைப்பெயரும் அண்மைக்கண் இயல்பாயின.

இதண் – இதணே, புனம் – புனமே, மான் – மானே, வேய் – வேயே, காரி – காரே, குயில் – குயிலே, புள் – புள்ளே எனவும், விள – விளவே, நிலா – நிலாவே, கிளி – கிளியே, வீ – வீயே, குருந்து – குருந்தே, பூ – பூவே, சே – சேவே, கழை – கழையே எனவும் ஒற்றீற்று அஃறிணைப் பெயர்களும் பிறிது வந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன.

மந்தி—மந்தீ, தும்பி—தும்பீ என இகர ஈற்று அஃறிணைப் பெயர்களின் இகரம் ஈகாரமாய்த் திரிந்தன. பிறவும் அன்ன.

மன்னென்றமிகையானே ஐகார ஈற்று உயர்திணைப்பெயர் பிறிது வந்து அடைதலாய் ஏகாரம் ஏலாதனவும் அஃறிணைப் பெயர் அன்மொழித்தொகையாய்த்தான் ஆகுபெயராய்த்தான் உயர்திணைக்கண்வந்துழி உயர்திணைப்பெயராய்ச் சுடர்த்தொடி "சுடர்த்தொடீகேளாய்" என இகர ஈறு ஈகாரமாய்த் திரிந்துந் தாழ்குழல் தாழ்குழலே எனப் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கும், விளியேற்றுலுந் தோழீஇஇஇஇ தோழீஇஇஇஇஇ எனத் தொழில்செய்கின்றவளேயென்னும் பொருட்டாய் நிற்பதோர் இகர ஈற்று அளபெடைப்பெயரும்,

உழாஅஅன் கிழாஅஅன் என னகர ஈற்று அளபெடைப்பெயரும், சிறாஅஅர் மகாஅஅர் என ரகர ஈற்று அளபெடைப்பெயரும் கோஒஒள் என ளகர ஈற்று அளபெடைப் பெயரும், மாஅஅல் என லகர ஈற்று அளபெடைப்பெயரும் இயல்பாய் விளியேற்றலும், நம்முன் நம்முனா என முன்னீறு ஆகாரம் மிகுதலும் அம்மசாத்தா என்புழிச் சாத்தா என்பதே எதிர்முகமாக்குமாயினும் அம்ம என்னும் இடைச்சொல்லும் எதிர்முகமாக்குதலே குறித்துநிற்றலின் அதுவும் அம்மாசாத்தா என இறுதி திரிந்து விளியேற்றலும் இவ்வாறுவருவன பிறிவுங்கொள்க.

இவ்வளபெடைப்பெயர்கள் செய்யுளுட் குறைந்துவந்தன சந்த இன்பநோக்கி விகாரத்தான் வந்தனவென்க.

பெரும்பாலும் என்றதனால், இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமை யுளவேற் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மூவகைப் பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்து உணர்த்துகின்றது.

**இ–ள்.: இம் முப்பெயர்க்கண் –** மேல் விளிக்கப்படு மென்ற மூவகைப் பெயருள்ளும், **இயல்பு மேயு மிகர நீட்சியும் –** இயல்பாதலும், ஏகாரம் மிகுதலும் இகரவிறுதி ஈகாரமாகத் திரிதலும், **உருபாமன் –** பெரும்பாலும் உருபுகளாம், **எ– று.**

**வ–று.:**

முனி, வேந்து, ஆடூஉ, விடலை, கோ, கோன், வேள், மாந்தர், தோன்றல், சேய் என நிறுத்தி, கூறாய், கூறீர் என வருவித்து முனிகூறாய், வேந்துகூறாய், மாந்தர் கூறீர் என ஒட்டி இயல்பாதலும், முனியே, வேந்தே என ஏகார மிகுதலும், நம்பீ என இகரம் நீளுதலுமாகிய மூன்று உருபுகளும் உயர்திணையிலே வந்தனவெனக் காண்க. ஒழிந்தவற்றோடு மிவ்வாறே யொட்டுக. பிதாக் கூறாய், ஆண்கூறாய், பிதாவேகூறாய், ஆணேகூறாய், சாத்தீகூறாய், எனப் பொதுப் பெயரிலே மூன்றுருபும் வந்தன. விளக் கொடியை, புறாக்கொடியை, புல்வாய்கொடியை, விளவே, புறாவே, புல்வாயே கொடியை, மந்தீகொடியை என அஃறிணையிலே மூன்றுருபும் வந்தன. பிறவுமன்ன. 'மன்னே' யென்ற மிகுதியினாலே, இந்த உருபுகள் சிலவற்றிற்கு ஏலாமையும் இந்தப் பொதுவிதியிலும் மேல்வருஞ் சிறப்பு விதியிலும் அடங்காது வருமுருபுகள் சிலவுளவாயின் அவையுங் கொள்க. இனியிவரிச் சூத்திர முதலாக விளியிலக்கணங்களைப் பொதுவகையாற் றொகுத்துக் கூறுதலாலும் ஆசிரியர்

தொல்காப்பியனார் சிறப்புவகையாற் றனித்தனி வகுத்துக்கூறுதலாலும் இவர் வகுத்துக் கூறிய விதிகளை யவர் தொகுத்துக் கூறியிருப்பதினாலும் பெரும்பாலும் விதிக ளொத்து வரினுஞ் சூத்திரங்களொத்து வாரமை யுணர்ந்து கொள்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– இ முப்பெயர்க்கண் –** (விளிக்கப்படுமென்ற) இந்த மூவகைப் பெயர்களிடத்தும், **இயல்பும் –** இயல்பாதலும், **ஏயும் –** ஏகாரம் மிகுதலும், **இகரம் நீட்சியும் –** இகரம் ஈகாரமாகத் திரிதலும், **மண் –** பெரும்பாலும், **உருபு ஆகும் –** விளியுருபுகளாம்.

உ–ம்:– முனி கூறாய், மாந்தர் கூறீர் – இயல்பு
கோவே கூறாய், மக்களே கூறீர்– ஏ மிகுதல்
உயர்திணை
நம்பீ கூறாய், தோழீ கூறாய் – இகரநீட்சி
அன்னை கூறாய்,
ஆண்கூறாய்–இயல்பு
பிதாவே கூறாய்,
பெண்ணே கூறாய்– ஏ மிகுதல் பொதுப்பெயர்
சாத்தீ கூறாய், கொற்றீ கூறாய் – இகர நீட்சி
மாங்கொடியாய், கிளிநல்லாய் – இயல்பு
மயிலே ஆடாய், புறாவே வாராய்–ஏ மிகுதல் அஃறிணை
மந்தீ கொடியை, மதீ ஓடிவா – இகர நீட்சி

**குறிப்பு:–** மற்றைப் பெயர்களும் இவ்வாறே வரும். 'முன்' என்றதனால் – இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமை காண்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ன்.: இம்முப்பெயர்க்கண்** – முன் விளிக்கப்படுமென்ற மூவகைப் பெயர்களிடத்தும், **இயல்பும் ஏயும் இகரநீட்சியும் உருபு ஆம் மன்–** இயல்பாதலும் ஏகார மிகுதலும் இகரம் ஈகாரமாதலும் பெரும்பாலும் விளியுருபுகளாகும், **எ–று.**

**உ–ம்.:**

முனி கூறாய், வேந்து கூறாய், ஆடூஉக் கூறாய், விடலை கூறாய், கோக்கூறாய், கோன் கூறாய், வேள் கூறாய், மாந்தர் கூறீர், தோன்றல் கூறாய், சேய் கூறாய் எனவும்; முனியே

கூறாய், வேந்தே கூறாய் எனவும்; நம்பீ கூறாய் எனவும் உயர்திணைப்பெயர்களிலே மூன்று ருபுகளும் வந்தன.

பிதாக் கூறாய், ஆண் கூறாய் எனவும், பிதாவே கூறாய், ஆணே கூறாய் எனவும், சாத்தீ கூறாய் எனவும் பொதுப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன.

விளக்கொடியை, புல்வாய் கொடியை எனவும், விளவே கொடியை, புல்வாயே கொடியை எனவும், மந்தீ கொடியை எனவும் அஃறிணைப் பெயர்களிலே மூன்று ருபுகளும் வந்தன. காட்டாதொழிந்த பெயர்களும் இப்படியே வரும்.

பெரும்பாலும் என்றதனால், இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமையுளவேற் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். இம்முப் பெயர்கண்** – முன் விளிக்கப்படுமென்றே மூவகைப் பெயர்களிடத்தும், – **இயல்பும் ஏயும் இகரநீட்டியும் உருபு ஆம் மன்** – இயல்பாதலும் ஏகாரமிகுதலும் இகரம் ஈகாரமாதலும் பெரும்பாலும் விளியுருபுகளாகும். எ–று.

**உ–ம்.:–**

**(1)** முனிகூறாய், வேந்துகூறாய், ஆடூஉக்கூறாய், விடலைகூறாய், கோக்கூறாய், கோன்கூறாய், வேள்கூறாய், மாந்தர்கூறீர், தோன்றல்கூறாய், சேய்கூறாய், எ–ம் முனியேகூறாய், வேந்தே கூறாய், எ–ம் நம்பீகூறாய், எ–ம். உயர்திணைப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன.

(2) பிதாக்கூறாய், ஆண்கூறாய், எ–ம். பிதாவேகூறாய், ஆணேகூறாய், எ–ம். சாத்தீகூறாய், எ–ம். பொதுப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன.

(3) விளக்கொடியை, புல்வாய்கொடியை, எ–ம். விளவேகொடியை புல்வாயேகொடியை எ–ம். மந்தீகொடியை, எ–ம். அஃறிணைப் பெயர்களிலே மூன்றுருபுகளும் வந்தன. காட்டாதொழிந்த பெயர்களும் இப்படியாகும்.

பெரும்பாலும் என்றதனால், இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமையுள வேற்கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: இ முப் பெயர்க்கண்** – (விளிக்கப்படுமென்ற) இந்த மூவகைப் பெயர்களிடத்தும், **இயல்பும்**–இயல்பாதலும், **ஏயும்** – ஏகாரம் மிகுதலும், **இகரம் நீட்சியும்** – இகரம் ஈகாரமாகத் திரிதலும், **மன்** – பெரும்பாலும், **உருபு ஆம்** – விளியுருபுகளாம்; **எ–று.**

**உ—ம்.:**

முனி கூறாய், மாந்தர் கூறீர்—இயல்பு
கோவே கூறாய், மக்களே கூறீர்— ஏ மிகல் உயர்திணை.
நம்பீ கூறாய், தோழீ கூறாய்—இகர நீட்சி
அன்னைகூறாய், ஆண் கூறாய்—இயல்பு.
பிதாவே கூறாய், பெண்ணே கூறாய்—ஏ மிகல் பொதுப்பெயர்.
சாத்தீ கூறாய், கொற்றீ கூறாய்—இகரநீட்சி.
மான் கொடியாய், கிளி நல்லாய்—இயல்பு.
மயிலே ஆடாய், புறாவே வாராய்—ஏ மிகல். அஃறிணை.
மந்தீ கொடியை, தும்பீ வா – இகர நீட்சி.

காட்டாதொழிந்த பெயர்களும் இவ்வாறே வரும். 'பெரும்பாலும்' என்றதனால் இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமை கொள்க.

## பவானந்தம் பிள்ளை

இ—ள். இம்முப்பெயர்க்கண் – முன்விளிக்கப்படுமென்ற மூவகைப் பெயர்களிடத்தும், இயல்பும் ஏயும் இகரநீட்சியும் உருபு ஆம் மன் – இயல்பாதலும் ஏகாதமிகுதலும் இகரம் ஈகாரமாதலும் பெரும்பாலும் விளியுருபுகளாகும். **எ—று.** மன் = பெரும்பாலும்.

உ—ம்.

(1) மனி கூறாய், வேந்து கூறாய். – இயல்பு.
முனியே கூறாய், வேந்தே கூறாய். – ஏ மிகல்.
நம்பீ கூறாய், தோழீ கூறாய். – இகர நீட்சி. – உயர்திணை.
(2) அன்னை கூறாய், ஆண் கூறாய் – இயல்பு.
பிதாவே கூறாய், ஆணே கூறாய் – ஏ மிகல்.
சாத்தீ கூறாய், கொற்றீ கூறாய் – இகரநீட்சி. – பொதுப்பெயர்.
(3) புலி கொடியை, புல்வாய் நல்லை – இயல்பு.
புலியே கொடியை, புல்வாயே நல்லை – ஏ மிகல்.
புலீ கொடியை, மந்தீ கொடியை. – இகர நீட்சி. – அஃறிணை.

காட்டாதொழிந்த இற்றுப் பெயர்களும் இப்படியே வரும். 'பெரும்பாலும்' என்றதனால், இவ்வுருபுகள் சிலவற்றிற்குப் பொருந்தாமை காண்டுகொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**இம்முப்பெயர்க்கண்** – மேற்சொல்லப்பட்ட மூவகைப் பெயர்களிடத்தும், **இயல்பும்** – இயல்பாதலும், **ஏயும்** – ஏகாரம் மிகுதலும், **இகரம் நீட்சியும்** – இகரம் ஈகாரமாதலும், **உருபாம் மன்** – பெரும்பாலும் விளியுருபுகளாகும்.

**உதாரணம்**

**1. உயர்திணைப் பெயர் :**

முனி கூறாய்<br>
வேந்து கூறாய்<br>
ஆடூஉக் கூறாய்<br>
விடலை கூறாய்<br>
கோக் கூறாய்<br>
கோன் கூறாய் இயல்பு.<br>
வேள் கூறாய்<br>
மாந்தர் கூறீர்<br>
தோன்றல் கூறாய்<br>
சேய் கூறாய்

முனியே கூறாய்<br>
வேந்தே கூறாய் ஏகாரம் மிகல்.

நம்பீ கூறாய்<br>
தோழீ கூறாய் இகரம் நீட்சி.<br>
செவிலீ கூறாய்

**2. பொதுப் பெயர் :**

பிதாக் கூறாய்<br>
ஆண் கூறாய் இயல்பு<br>
பெண் கூறாய்

பிதாவே கூறாய்<br>
ஆணே கூறாய் ஏகாரம் மிகல்.<br>
பெண்ணே கூறாய்

சாத்தீ கூறாய்<br>
கொற்றீ கூறாய் இகரம் நீட்சி.

புல்வாய் கொடியை<br>
விளக் கொடியை இயல்பு

புல்வாயே கொடியை<br>
விளவே கொடியை ஏகாரம் மிகல்.

மந்தீ கொடியை – இகரம் நீட்சி.

காட்டாதொழிந்த ஈற்றுப் பெயர்களும் இப்படியே வரும்.

'பெரும்பாலும்' என்றதனால், இவ்வுருபுகள், சிலவற்றிற்குப் பொருந்தாமை உளவேற் கொள்க.

## மோசசு பொன்னையா

விளி யேற்கும் உயர்திணைப் பெயர், பொதுப்பெயர், அஃறிணைப் பெயர் என்னும் மூவகைப் பெயர்களின் இறுதி இயல்பும், ஏகார மிகுதியும், இகர நீட்சியும் பெரும்பாலும் விளியுருபுகளாம். எ–று.

எ-டு.

இயல்பு ஏகாரம் மிகுதல் இகரநீட்சி

1. கூனி கூறாய் கோவே கூறாய் நம்பீ கூறாய்
உயர்திணைப் பெயர்

மாந்தர் கூறீர் மக்களே கூறீர் தோழீ கூறாய்

2. அன்னை கூறாய் பிதாவே கூறாய் சாத்தீ கூறாய் பொதுப் பெயர்

ஆண் கூறாய் பெண்ணே கூறாய் கொற்றீ கூறாய்

1. நன். 400

3. மான் கொடியாய் மயிலே ஆடாய் மந்தீ கொடியாய்
அஃறிணைப் பெயர்

கிளி நல்லாய் புறாவே ஆடாய் தும்பீ வா

காட்டாத ஈறுகட்கும் இவ்வாறே கொள்க. மன்னே என்றதனால், இவ்வீறுகளுட் சில இம்முறைகளை முற்ற ஏலா எனக் கொள்க.

(48)

**305. ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்
உருபா மல்லவற் றாயு மாகும்.**

**ஐ இறு பொதுப் பெயர்க்கு ஆயும் ஆவும்
உருபுஆம் அல் லவற்று ஆயும் ஆகும்.**

ai iūu poṭuppeyarkku āyum āvum
urupu ām allavaūūu āyum ākum

**இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)**

**Vocative signs of nouns ending in I**

Nouns of the common class ending in ai change it (also) into ay or a; the others (personals and impersonals) may also form their Vocatives by changing ai into ãy.

**ஒப்புமைப் பகுதி**

................... ஐ ஆய் ஆகும்

(தொல். சொல்.: 121)

முறைப்பெயர் மருங்கின் ஐயெ னிறுதி

ஆவொடு வருதற் குரியவு முளவே

(தொல். சொல்.: 126)

ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவு
முருபா மல்லவற் றாயு மாகும்

(இ.வி.: 208)

............... ஐ ஆவாகும்

(மு.வீ.: 208)

ஐகா னிறுதி முறைப்பெர் மருங்கின்
ஆவொடு வருதற்கு முரிய வாகும்

(மு.வீ.: 564)

ஐயிறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும்
உருபாம் அல்லவற்று ஆயு மாகும்

(தொ.வி.: 71)

## மயிலை நாதர்

என், ஐகார வீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: ஐகார வீற்றுப் பொதுப்பெயர்க்கண் ஆயும் ஆவும் விளியுருபாம்; உயர்திணை அஃறிணைப் பெயர்குக்கண்ணும் ஐகாரத்துக்கு ஆய் உருபாம், எ–று.

வ–று.:

அன்னாய், தந்தாய், [1]"ஆவன்னா வன்னா வலந்தே னெழுந்திராய்", என விரவுப்பெயர்க்கண் இரண்டுருபும் வந்தவாறு. விடலாய், மடந்தாயென உயர்திணைக்கண்ணும், "சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்" (ஐந். எழு. 68), "கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் வாடினீர்" (திணை. நூற். 81) என அஃறிணைக்கண்ணும் ஆயுருபு வந்தவாறு.

உம்மைகள் இவையுமாமென எண்ணின்கண் வந்தன.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், ஐகார ஈற்றிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்–ற்று.

இ–ள்.: ஐகார ஈற்றுப் பொதுப்பெயர்க்கு இயல்பும் ஏகாரம் மிகுதலுமன்றி

---

பாட வேறுபாடு:–

1. ஆத்தாய்

ஐகாரம் ஆயும் ஆவுமாய்த் திரிதலும், உயர்திணை அஃறிணைப் பெயர்க்கு அவ்வுருபுகளன்றி ஐகாரம் ஆய் எனத் திரிதலும் உருபாம், **எ—று.**

**வ—று.:**

அன்னாய், தந்தாய் எனவும், "ஆ அ வன்னா அலந்தேன் எழுந்திராய்" எனவும் விரவுப் பெயர்க்கண் இரண்டு உருபும் வந்தன. விடலாய், மடந்தாய் எனவும் "சிறுமீன் கவுட் கொண்ட செந்தூவி நாராய்" "கொன்றாய் குருந்தே கொடி முல்லாய்" எனவும் இருதிணைப் பெயர்க்கண்ணும் ஆயுருபு வந்தது.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** ஐகார வீற்றிற்கு எய்தியதை விலக்கலும் எய்தியதன்மேற் சிறப்பு விதியும் கூறுகின்றது.

**இ—ள்.: ஐயிறு பொதுப்பெயர்க்கு** – ஐகார வீற்றுப் பொதுப் பெயர்க்கண், **ஆயும் ஆவும் உருபாம்** – ஐகாரம் நீங்கி ஆயென்பதுவும் ஆவென்பதுவும் விளியுருபாம்; **அல்லவற்று** – பொதுப்பெயர் அல்லாத உயர்திணைப் பெயர்க்கண் அஃறிணைப் பெயர்க்கண், **ஆயுமாகும்**–ஐகாரம் திரிந்து ஆயுருபாம், **எ—று.**

**உ—ம்.:—**

அன்னாய், அன்னா; தந்தாய், தந்தா; "ஆவன்னா வன்னா வலந்தே னெழுந்திராய்" எனவும் விரவுப் பெயர்க்கண் வந்தன. விடலாய், மடந்தாய் என உணர்திணைப் பெயர்க்கண் வந்தன. நாராய், கொன்றாய், என அஃறிணைப் பெயர்க்கண் வந்தன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ஐகாரவீற்றிகு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ—ள்.: ஐயிறு பொதுப்பெயர்க்கு** – பொதுவிதியால் இயல்பும் ஏகார மிகுதலுமன்றி ஐகார வீற்றுப் பொதுப்பெயர்க்கு, **ஆயுமாவும்**— ஐகாரம் ஆயாதலும் ஆவாதலும், **அல்லவற்று**—உயர்திணை யஃறிணைப் பெயர்களுக்கு, **ஆயும்**—அவ்விரண்டுமல்லாமல் ஐகாரம் ஆயாதலும், **உருபாகும்**— விளியுருபுகளாம், **எ—று.**

அன்னை, அன்னாய், அன்னா, பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் வந்தன. விடலை விடலாய், எனவும்; நாரை நாராய், எனவும், உயர்திணைப் பொதுபெயர்க்கும் அஃறிணைப்பெயர்க்கும் ஆய் வந்தது.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ஐகாரவீற்றுப்பெயர்களுக்கு முற்கூறியவுருபுகளேயன்றி வேறுருபுகளும் உளவெனக் கூறுஞ் சிறப்புச்சூத்திரம் யாது?

ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவும்
உருபா மல்லவற் றாயு மாகும்.
(ஐ இறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும்
உருபு ஆம் அல்லவற்று ஆயும் ஆகும்.)

இ–ள்.:– ஐகாரவீற்றுப் பொதுப்பெயர்க்குப் பொதுவிதியால் இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவு மாகத்திரிதலும் அஃதல்லாத உயர்திணை அஃறிணைப்பெயர்களுக்கு அவ்விரண்டுருபுகளின்றி ஐகாரம் ஆயெனத் திரிதலும் விளியுருபுகளாம், **எ–று.**

**உ–ம்.:–** (1) அன்னை அன்னாய், அன்னா பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் வந்தன.

(2) விடலை–விடலாய் எனவும், நாரை–நாராய் எனவும், உயர் திணைப் பெயர்க்கும் அஃறிணைப்பெயர்க்கும் ஆய் வந்தது.

உரையிற்கோடலென்னு முத்தியால், "அன்னை யுன்னை யல்லா லினியாரை நினைக்கேனே." எனப் பொதுப்பெயர்க்கு ஐகாசம் ஏகார்மாகத் திரிதலுங் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ஐகார வீற்றுப் பொதுப்பெயர்க்கு எய்தியது விலக்குகின்றது.

**இ–ள்.: ஐயிறு பொதுப் பெயர்க்கு** – ஐகார வீற்றுப் பொதுப் பெயர்க்கு, (இயல்பும் ஏகார மிகுதலுமன்றி) **ஆயு மாவுமுருபாம்**–ஐகாரம் ஆய் ஆகவும் ஆவாகவுந் திரிதலும் உருபுகளாம், **அல்லவற் றாயுமாகும்** – அல்லாத உயர்திணை யஃறிணைப் பெயர்களில் ஐகாரம் ஆய் எனத் திரிந்து வருதலும் உருபுகளாம், **எ–று.**

**வ–று.:–**

அன்னை அன்னாய், தந்தை தந்தாய் எனவும் அன்னா அலந்தேன் எழுந்திராய் எனவும், பொதுப்பெயரில் இரண்டுருபுகளும் வந்தன. விடலை–விடலாய் (விடலை–ஆண்மகன்,) மடந்தை மடந்தாய் எனவும் நாரை–நாராய், கொன்றை–கொன்றாய், முல்லை முல்லாய் எனவும் இருதிணைப் பெயரிலும் ஆய் உருபு வந்தது. பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஐ இறு பொதுப்பெயர்க்கு** – ஐகாரத்தை ஈற்றிலுடைய பொதுப்பெயர்க்கு, **ஆயும் ஆவும்** – (இயல்பும் ஏகாரம் மிகுதலுமன்றி) ஐகாரம் ஆய் ஆகவும் ஆ ஆகவும் திரிதலும், **உருபு ஆம்** – உருபுகளாம்; **அல்லவற்று** – அல்லாத உயர்திணை அஃறிணைப் பெயர்களுக்கு; **ஆயும்** (இயல்பும் ஏகாரம் மிகுதலுமின்றி ஐகாரம்) ஆய் ஆகத்திரிதலும், **ஆகும்** – விளியுருபாம்.

உ-ம்:- அன்னை – அன்னாய், அம்மை – அம்மாய் (எனப் பொதுப் பெயர்க்கு 'ஆயும்' 'ஆவும்' வந்தன.

விடலை–விடலாய், நாரை–நாராய். (என உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் 'ஆய்' வந்தது).

**குறிப்பு:-** இனி, **உரையிற்கோடலால்** 'அன்னே', 'அம்மே' எனப் பொதுப்பெயரின் ஈற்று ஐகாரம் ஏகாரமாகத் திரிதலுங் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஐ இறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும்** – ஐகார வீற்றுப் பொதுப்பெயர்க்குப் பொதுவிதியால் இயல்பும் ஏகார மிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவு மாகத் திரிதலும், **அல்லவற்று ஆயும்** – உயர்திணை யஃறிணைப்பெயர்களுக்கு அவ்விரண்டுருபுகளன்றி ஐகாரம் ஆயெனத் திரிதலும், **உருபு ஆகும்** – விளியுருபுகளாம், **எ–று.**

**உ–ம்.:**

அன்னை–அன்னாய், அன்னா பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் வந்தன.

விடலை–விடலாய் எனவும்; நாரை–நாராய் எனவும் உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் ஆய் வந்தது.

**உரையிற்கோடலென்னு** முத்தியால், "அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே". எனப் பொதுப்பெயர்க்கு ஐகாரம் ஏகாரமாகத் திரிதலுங் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ஐஇறு பொதுப் பெயர்க்கு ஆயும் ஆவும்** – ஐகாரவீற்றுப் பொதுப் பெயர்க்குப் பொதுவிதியால் இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி ஐகாரம் ஆயும் ஆவுமாகத் திரிதலும், **அல்லவற்று ஆயும்** – உயர்திணையஃறிணைப் பெயர்களுக்கு அவ்விரண்டுருபுகளன்றி ஐகாரம் ஆயெனத் திரிதலும், – **உருபு ஆகும்** – விளியுருபுகளாம். **எ–று.**

**உ–ம்** (1) அன்னை, அன்னாய், அன்னா பொதுப் பெயர்க்கு ஆயும் ஆவும்வந்தன.

(2) விடலை – விடலாய், எ–ம். நாரை – நாராய், எ–ம். உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப்பெயர்க்கும் ஆய் வந்தது.

உரையிற்கோடலென்னுமுத்தியால் "அன்னேயுன்னையல்லா லினியாரைநினைக்கேனே". எ–ம். "என்னம்மேயென்னும்" எனவும், பொதுப்பெயர்க்கு ஐகாரம் ஏகரமாகத் திரிதலுங்கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: **ஐஇறு பொதுப்பெயர்க்கு** – ஐகார ஈற்றுப் பொதுப்பெயர்க்கு, **ஆயும் ஆவும்** – (இயல்பும் ஏகாரம் மிகுதலு மன்றி ஐகாரம்) ஆய் ஆகவும் ஆ ஆகவும் திரிதலும், **உருபுஆம்** – உருபுகளாம்; **அல்லவற்று** – அல்லாத உயர்திணை அஃறிணைப் பெயர்கட்கு, **ஆயும்** – (இயல்பும் ஏகாரம் மிகுதலுமல்லாமல் ஐகாரம்) ஆய் ஆகத் திரிதலும், **ஆகும்** – விளியுருபாம், **எ–று.**

**உ–ம்.:**

அன்னை – அன்னாய்

அம்மை – அம்மா (பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் வந்தன)

விடலை – விடலாய்

நாரை – நாராய் (உயர்திணைப்பெயர்க்கும், அஃறிணைப் பெயர்க்கும் 'ஆய்' வந்தது.

இனி, **உரையிற்கோடலால் –** 'அன்னே', 'அம்மே' எனப் பொதுப்பெயரின் ஈற்று ஐகாரம் ஏகாரமாகத் திரிதலும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். ஐ இறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும்–ஐகாரவீற்றுப பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் (பொதுவிதியால் இயல்பும் ஏகாரமிகுதலுமன்றி) ஐகாரம் ஆயும் ஆவு மாகத் திரிதலும், அல்லவற்று–உயர்திணை யஃறிணைப் பெயர்களுக்கு, ஆயும்–(இயல்பும் ஏகாதரம் மிகுதலுமன்றி ஐகாரம்) ஆயெனத் திரிதலும், உருபு ஆகும்–விளியுருபுகளாம். **எ–று.**

உ–ம். (1) அன்னை – அன்னாய்

அம்மை – அம்மா – பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் வந்தன.

(2) விடலை – விடலாய்

நாரை – நாராய் – உயர்திணைப் பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் ஆய் வந்தது.

'உரையிற்கோட'லென்னு முத்தியால், 'அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே' எனப் பொதுப் பெயர்க்கு ஐகாரம் ஏகாரமாகத் திரிதலுங் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

(1) **ஐ இறு பொதுப்பெயர்க்கு** – (பொது விதியால் இயல்பும் ஏகாரம் மிகுதலும் அன்றி) ஐகார ஈற்றுப் பொதுப்பெயர்க்கு, **ஆயும் ஆவும்** – ஐகாரம் ஆய் ஆதலும் ஆ ஆதலும், **உருபு ஆம்** – உருபாகும்.

(2) **அல்லவற்று** – உயர்திணை அஃறிணைப் பெயர்களுக்கு, **ஆயும்** – ஆய் ஆதலும், **ஆகும்** – விளியுருபாகும்.

**உதாரணம்**

| | | |
|---|---|---|
| (1) | அன்னை – அன்னாய், அன்னா | பொதுப்பெயர்க்கு ஆயும், ஆவும் வந்தன. |
| (2) | விடலை – விடலாய் நாரை – நாராய் | உயர்திணைப்பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் ஆய் வந்தது. |

**உரையிற் கோடல்** என்னும் உத்தியால், 'அன்னே யுன்னை யல்லால் இனி யாரை நினைக்கேனே' எனப் பொதுப்பெயர் ஏகாரமாகத் திரிதலும் கொள்க.

## மோசசு பொன்னையா

ஐகார ஈற்றுப் பொதுப் பெயர்கள் பொதுவிதியால் பெறுமவற்றோடு, ஐகாரம் ஆய் எனவும், ஆ எனவும் திரிதலையும், அஃதல்லாத உயர்திணை அஃறிணைப் பெயர்கள் பொதுவிதியாற் பெறுமவற்றோடு ஐகாரம் ஆய் எனத் திரிதலையும் விளியுருபாகக் கொள்ளும். எ–று.

எ–டு

அன்னாய், அன்னா (அன்னை)–பொதுப்பெயர்

விடலாய் (விடலை)–உயர்திணை

நாராய் (நாரை)–அஃறிணை

உரையிற்கோடலால், அம்மே, அன்னே எனப் பொதுப் பெயர்களின் ஈற்று ஐகாரம் ஏகாரமாகத் திரிதலையும் கொள்க.

**(49)**

**306. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்**
**[1]அளபீ றழிவய னீட்சி யதனோ**
**டீறு போத லவற்றோ டோவுறல்**
**ஏறழிந் தோவுற லிறுதியவ் வாதல்**
**அதனோ டயறிரிந் தேயுற லீறழிந்**
**தயலே யாதலும் விளியுரு பாகும்.**

---

பாட வேறுபாடு:–

1. அளவீறு

ஒருசார் னவ் ஈற்று உயர்திணைப் பெயர்க் கண்
அளபு ஈறு அழிவு அயல் நீட்சி அதனோடு
ஈறு போதல் அவற்றோடு ஓ உறல்
ஈறு அழிந்து ஓ உறல் இறுதி யவ்வாதல்
அதனோடு அயல் திரிந்து ஏ உறல் ஈறு அழிந்து
அயல் ஏ ஆதலும் விளி உருவு ஆகும்

orusār ṉav īṟṟu uyarṭiṇaip peyarkkaṇ
aḷapu īṟu aḻivu ayal nītsi aṭaṉōtu
īṟu pōṭal avaṟṟōtu ō uṟal
īṟu aḻiṇṭu ō uṟal iṟuṭi yavvāṭal
aṭaṉōtu ayal ṭiriṇṭu ē uṟal īṟuaḻiṇṭu
ayal ē āṭalum viḻi urupu ākum

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Vocative signs of personal nouns ending in n**

A few personals in n form their vocatives as follows; Vowel prolongation; dropping the final; lengthening the penultimate (short)vowel; making both the last mentioned changes; adding o after these two changes have been made; dropping the final and adding o; changing the final (n) into y; in addition to this changing the penultimate vowel into ô and adding é; or dropping the final and changing the penultimate vowel into é.

## ஒப்புமைப் பகுதி

அவற்றுள்
அன்னென் இறுதி ஆவா கும்மே

(தொல். சொல்.: 130)

அண்மைச் சொல்லிற்கு அகர மாகும்

(தொல். சொல்.: 131)

ஆனென் இறுதி இயற்கை யாகும்

(தொல். சொல்.: 132)

தொழிலிற் கூறும் ஆனென் இறுதி
ஆயா கும்மே விளிவயி னான

(தொல். சொல்.: 133)

பண்புகொள் பெயரு மதனோ ரற்றே

(தொல். சொல்.: 134)

அளபெடைப் பெயரே அளபெடை யியல

(தொல். சொல்.: 135)

முறைப்பெயர்க் கிளவி ஏயொடு வருமே

(தொல். சொல்.: 136)

அன்னிறுதி ஆவாகும் அண்மைக் ககரமாம்
இன்னு முறைப்பெயரேல் ஏஆகும் – முன்னியல்பாம்
ஆனும் அளபெடையும் ஆனீற்றுப் பண்புதொழில்
மான்விழி ஆயாய் வரும்

(நேமி.: 50)

ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்க
ணளபீ றழிவய னிட்சி யதனோ
டீறு போத லவற்றோ டோவுற
வீறழிந் தோவுற லிறுதியவ் வாத
லதனோ டயறிரிந் தேயுற வீறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்

(இ.வி.: 209)

ஒருசார் னவ்ஈற்று உயர்திணைப் பெயர்க்கண்
அளபுஈறு அழிவு அயல்நீட்சி அதனோடு
ஈறுபோதல் அவற்றோடு ஓ உறல்
ஈறு அழிந்து ஓவரல் இறுதி யவ்வாதல்
அதனோ டயல் திரிந்து ஏஉறல் ஈறு அழிந்து
அயலே தாதலும் விளிவுருபு ஆகும்

(தொ.வி.: 72)

அன்னெ னிறுதி யாவா கும்மே

(மு.வீ.: 568)

அண்மைக் கிளவிக் ககர மாகும்

(மு.வீ.: 569)

ஆனென் னிறுதி யியற்கை யாகும்

(மு.வீ.: 570)

பண்புகொள் பெயரா னாயா கும்மே

(மு.வீ.: 571)

தொழிற்பெயர்க் கிளவி யவற்றோ ரற்றே

(மு.வீ.: 572)

அளபெடைப் பெயரே யளபெடை யியல

(மு.வீ.: 573)

முறைப்பெயர்க் கிளவி யேயொடு சிவணும்

(மு.வீ.: 574)

விளியேற்கும் பெயரீற்றின் அயலின்அள பெழுதல்
விளம்பயல் ஈறவைநீடல் அயலீறு கெடுதல்
ஓளிரீறு [illegible]குதிகெட்டு [illegible]வுறல் ஆவோ [illegible]ஏயே
யுற்றிடல் ஈறறயல் அ[illegible]ற்றி[illegible]ல் ஈறு
அளவோடு அயலாதல் கடைமிகுதல் இயல் பாயணமைக்கே
யுருத்தொகுத் தல்பிறவும் அவற்று உருபாந்
தெளிவாய்ஏற் பதுபடர்க்கை ஏற்றிடின்முன் னிலையாம்
செப்பு ஏவல் வினைப்பயனும் எட்டாம் வேற்றுமைக்கே

சுவாமி.: 44)

## மயிலைநாதர்

எ–ன், னகார வீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: னகார வீற்றுயர்திணைப் பெயர்களுட் சில அளபெழுதலும், சில ஈறுகெடுதலும், சில ஈற்றயல் நீளலும், சில ஈற்றயல் நீண்டு ஈறு கெடுதலும், சில ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஓகார மிகுதலும், சில ஈறுகெட்டு ஓகார மிகுதலும் சில இறுதி யவ் வொற்றாதலும், சில இறுதி யகாரமாய் அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமேற்றலும், சில ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம், எ–று.

'ஒருசார்' என்பதனை விளியதிகாரமுடியுமளவும் [2]எல்லா ஈற்றுள்ளும் யாண்டும் வருவித்துக் கண்டுகொள்க.

---

பாட வேறுபாடு:–

1. அவ்வவ்வீற்றுள்ளும்
2. நந்த

**வ—று.:**

அம்பர்கிழாஅன், வல்லங்கிழாஅனெனச் சேய்மைக்கண் அளபாயின. இறைவகேளா நந்தகோ

"எலுவ சிறாஅ ரேமுறு நண்ப

புலவர் தோழ கேளா யத்தை"

(குறுந். 129)

"பேரேமுற்றார்போல முன்னின்று விலக்குவா யாரெல்லா"

(கலி. 113)

என அண்மைக்கண் ஈறழிந்தன. [2]நம்பானெம்பெருமானென அயல்நீண்டது. இறைவா, மன்னா, தேவாவெனஅயல்நீண்டு ஈறுகெட்டன. ஐயாவோ அன்பாவோவெனப் புலம்பின்கண் அயல்நீண்டு ஈறழிந்து ஒகார மிக்கன. **"திரையவோ"**, ஐயவோ எனப் புலம்பின்கண் ஈறழிந்து ஒகார மிக்கன. குழையாய், வாயிலாய், ஆதிரையாய், **"எண்கையாய்"** (கலி.1) கரியாய், உணாயென இறுதி யவ் வொற்றாயின.

"வாயி லோயே வாயி லோயே"

(புறநா. 206; சிலப். 20:24)

என ஈற்றயல் திரிந்து இறுதி யகரம் ஏகார மேற்றது.

"ஐயேயெமக்கீங் கருள்"

"மடவை மன்ற வாழிய முருகே"

(நற். 34)

என ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாயின. பிறவும் இவ்வாறே வருவன கண்டு கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** னகர ஈற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி **உணர்—ற்று.**

**இ—ள்.:** பொதுவிதி யன்றி னகர ஈற்று உயர்திணைப் பெயர்களுள் சில அளபெழுதலும், சில ஈறு கெடுதலும், சில ஈற்றயல் நீடலும், சில ஈற்றயல் நீண்டு ஈறு கெடுதலும், சில ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஒகாரம் மிகுதலும், சில ஈறு கெட்டு ஒகாரம் மிகுதலும், சில இறுதி னகர ஒற்று யகர ஒற்றாய்த் திரிதலும், சில

---

பாட **வேறுபாடு:—**

**1. நந்த**

**2.நம்பெருமான்**

இறுதி னகர ஒற்று யகர ஒற்றாய்த் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிகுதலும், சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம், எ–று.

**'ஒருசார்'** என்பதனை விளியதிகாரம் அனைத்தினும் கூட்டுக.

**வ–று.:**

அம்பர்கிழாஅன், வல்லங்கிழாஅன் என அளபாயின. [3] "ஏலுவ சிறாஅர் ஏமுறு நண்ப, புலவர் தோழ" என ஈறு அழிந்தன. நம்பான், பெருமான் என ஈற்றயல் நீண்டன. இறைவா, மன்னா என அயல்நீண்டு ஈறு கெட்டன. ஐயாவோ, அப்பாவோ என ஈறுகெட்டு அயல் நீண்டு ஓகாரம் மிக்கன. திரையவோ, ஐயவோ என ஈறழிந்து ஓகார மிக்கன. வாயிலாய், ஆதிரையாய் என இறுதி யவ்வாயின. வாயிலோயே என இறுதி யவ்வொற்றாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகார மிக்கது. "ஐயே எமக்கருள்" [1]"மடவை மன்ற வாழிய முருகே" என ஈறு அழிந்து அயலில் அகரம் ஏகாரமாயின.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்**, னகார வீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ–ள்.: ஒரு சார் னவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கண்**–சில இடத்து னகார வீற்று உயர்திணைப் பெயர்களுள், **அளபீறழிவு** – சில அளபெழுந்து சில ஈறு கெட்டு, **அயனீட்சி** – சில ஈற்றயல் நீண்டு, **அதனோடு ஈறு போதல்** – சில ஈற்றயல் நீண்டதனோடு ஈறு கெட்டும், **அவற்றோடு ஓவுறல்** – சில ஈற்றயல் நீண்டு ஈறு கெட்டு அவற்றோடு ஓகாரம் மிக்கும், **ஈறழிந்து ஓ வரல்** – சில ஈறு கெட்டு ஓகாரம் மிக்கும், **இறுதி யவ்வாதல்** – சில இறுதி யகர ஒற்றாயும், **அதனோடு அயல் திரிந்து ஏயுறல்** – சில இறுதி யகரமாய் அதனோடு அயலில் ஆகாரம் ஓகாரமாகத் திரிந்து ஏகாரம் ஏற்றும், **ஈறழிந்து அயலேயாதலும்** – சில ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாகியும், **விளி உருபாகும்** – விளி வேற்றுமை உருபாம், **எ–று.**

**உ–ம்.:**

அம்பர்கிழாஅன், வல்லங்கிழான், அரசூருடையாஅன் எனச் சேய்மைக்கண் அளபாயின. இறைவ கேள், புலவ கேள் என அணிமைக்கண் ஈறழிந்தன. ஐயான் கேள், நண்பான் கேள் என அயல் நீண்டன. இறைவா, மன்னா, தேவா என அயல் நீண்டு ஈறு கெட்டன. ஐயாவோ, அன்பாவோ எனப் புலம்பின்கண் அயனீண்டு ஈறழிந்து ஓகாரம் மிக்கன. திரையவோ, ஐயவோ என அணிமைப் புலம்பின்கண் ஈறழிந்து ஓகாரம் மிக்கன. குழையாய், வாயிலான், ஆதிரையாய் என இறுதி யகார ஒற்றாய்த் திரிந்தன. வாயிலோயே என அயல் திரிந்து இறுதி யகரம் ஏகாரம் ஏற்றது. ஐயே வாழ்க, முருகே வாழ்க என ஈறழிந்து அயனின்ற அகரம் ஏகாரமாயின. பிறவும் இவ்வாறே கண்டு கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** னகர மெய்யீற்று உயர்திணைப்பெயர்களுக்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.: னவ்வீற்றுயர் திணைப் பெயர்க்கண்** – பொதுவிதி யன்றி னகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள், **ஒருசாரளபு** – சில வளபெடுத்தலும், (ஒருசா) **ரீறழிவு** – சில வீறு கெடுதலும், **(ஒருசா)ராயனீட்சி** – சில ஈற்றயனீளுதலும், **(ஒருசா)ரதனோடீறுபோதல்** – சில ஈற்றயனீண்டு ஈறு கெடுதலும், **(ஒருசா) ரவற்றோ டோவுறல்** – சில ஈறுகெட்டு ஈற்றயனீண்டு ஒகார மிகுதலும், **(ஒருசா) ரீறழிந்தோவுறல்** – சில ஈறுகெட்டு ஒகார மிகுதலும், **(ஒருசா) ரிறுதியவ்வாதல்**– சில இறுதி னகர மெய் யகர மெய்யாதலும், **(ஒருசா) ரதனோடயறிரிந்தேயுறல்** – சில ஈற்று னகர மெய் யகர மெய்யாய்த் திரிந்து அயலில் ஆகாரம் ஒகாரமாய் ஏகார மிகுதலும், **(ஒருசா) ரீறழிந் தயலேயாதலும்** – சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும், **விளியுருபாகும்**– விளியுருபுகளாகும், **எ–று.**

**வ–று.:**

அம்பர்கிழான், அம்பர்கிழாஅன், அளபாயிற்று. புலவன், புலவ, ஈறழிந்தது. பெருமன், பெருமான், அயனீண்டது. மன்னன், மன்னா, அயனீண்டு ஈறுகெட்டது. ஐயன் ஐயவோ, அயனீண்டு ஈறுகெட்டு ஒகார மிக்கது. திரையன், திரையவோ, ஈறழிந்து ஒகார மிக்கது. வாயிலான், வாயிலாய், இறுதி யவ் வாயிற்று. வாயிலான், வாயிலாயே, இறுதி யவ்வாய் ஈற்றயல் ஆகாரம் ஒகாரமாய் ஏகார மிக்கது. ஐயன், ஐயே, ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாயிற்று. (இவ் வொருசா ரென்கிறதை விளியதிகார முழுதுங் கூட்டுக)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

னகரவீற்று உயர்திணைப்பெயர்களுக்கு முற்கூறிய விளியுருபுகளே யன்றி வேறுருபுகளுமுள வெனக் கூறுஞ் சிறப்புச் சூத்திரம் யாது?

ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்கண்
அளபீ றழிவய னீட்சி யதனோ
டீறு போத லவற்றோ டோவுறல்
ஈறழிந் தோவுற லிறுதியவ் வாதல்
அதனோ டயறிரிந் தேயுற லீறழிந்
தயலே யாதலும் விளியுருபாகும்

(ஒருசார் னவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கண்
அளபு ஈறு அழிவு அயல் நீட்சி அதனோடு
ஈறு போதல் அவற்றோடு ஓ உறல்
ஈறு அழிந்து ஓ உறல் இறுதி யவ்வாதல்
அதனோடு அயல் திரிந்து ஏ உறல் ஈறு அழிந்து
அயல் ஏ ஆதலும் விளியுருபு ஆகும்.)

**இ–ள்.:** பொதுவிதியன்றி னகரமெய்யீற்றுயர் திணைப்பெயர்களுட் சில அளபெடுத்தலும், சில ஈறு கெடுதலும், சில ஈற்றயனீளுதலும், சிலஈற்றயனீண்டு ஈறு கெடுதலும், சில ஈறு கெட்டு ஈற்றயனீண்டு ஓகார மிகுதலும், சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலும், சில இறுதி னகரமெய் யகரமெய்யாதலும், சில ஈற்று னகரமெய் யகரமெய்யாகத் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமிகுதலும், சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபுகளாகும், **எ–று.**

இச்சூத்திரவிதிப்படி னகர வீற்றுயர்திணைப் பெயர்க்கண் விளியுருபு எத்தனை வகையாகவரும்.

அளபு, ஈறழிவு, அயல்நீட்சி, அதனோடு (அயல் நீட்சியோடு) ஈறுபோதல், அவற்றோடு (ஈறுபோதல் ஈற்றயானீளுதலோடு) ஓவுறல், ஈறழிந்தோவுறல், இறுதியவ்வாதல், அதனோடு அயறிரிந்து ஏயுறல், ஈறழிந்தயல் ஏயாதல் என்னும் ஒன்பது வகையாக வரும்.

**உ–ம்.**

1. அம்பர்கிழான்–அம்பர்கிழாஅன் அளபாயிற்று. 2.புலவன்–புலவ ஈறழிந்தது 3.பெருமன்–பெருமான் ஈற்றயனீண்டது. 4.மன்னன்–மன்னா ஈற்றயனீண்டு ஈறுகெட்டது. 5. ஐயன்–ஐயாவோ ஈற்றயனீண்டு ஈறுகெட்டு ஓகாரமிக்கது. 6. திரையன்–திரையவோ ஈறழிந்து ஓகார மிக்கது. 7. வாயிலான்–வாயிலாய் இறுதி யவ்வாயிற்று. 8. வாயிலான்–வாயிலோயே இறுதி யவ்வாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகார மிக்கது. 9. ஐயன் ஐயே ஈறழிந்து அயலின் அகரம் ஏகாரமாயிற்று.

இவ்வொருசாரென்பதை விளியதிகாரமுழுதுங் கூட்டுக.

## முகவை இராமானுச கவிராயர்

இது, னகரவீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்திற்று.

**இ–ள்.: ஒருசார் னவ்வீற்றுயர் திணைப் பெயர்க்கண்–** (பொதுவிதியன்றி) சில னகர ஈற்று உயர்திணைப் பெயர்களில், **அளபு** – அளபெடுத்து வருதலும், **ஈறழிவு**–ஈறுகெட்டு வருதலும், **அயனீட்சி**–ஈற்றுக்கு அயலெழுத்து நீண்டு வருதலும், **அதனோடீறு போதல்**–அந்த நீட்சியுடனே ஈறுகெடுதலும், **அவற்றோடோவுறல்** – அந்த இரண்டுடனே ஓகார மிகுதலும், **ஈறழிந்தோவுறல்** – ஈறுகெட்டு ஓகார மிகுதலும், **இறுதி யவ்வாதல்** – னகர ஒற்றுல்யகர ஒற்றாய்த் திரிதலும், **அதனோட யறிரிந் தேயுறல்**–அத்திரிதலுடன் அயல் நின்ற ஆகாரம் ஓகாரமாகி ஏகாரம் மிகுதலும், **ஈறழிந்தயலே யாதலும் விளி யுருபாகும்**–ஈறுகெட்டு அயல்நின்ற அகரம் ஏகாரமாதலும் விளியுருபுகளாம், **எ–று.**

'**ஒருசார்**' என்பதனை விளியதிகார முற்றுமளவும் வருஞ் சூத்திரங்கள்தோறுங் கூட்டுக.

**வ–று.:**

அம்பர் கிழாஅன், வல்லங் கிழாஅன், (அம்பர் – வல்லம் என்னும் ஊர்க்குரியவன்) இவை அளபெடுத்தன. நண்ப, புலவ, தோழ, எலுவ இவை ஈறழிந்தன. நம்பான், பெருமான் (நம்பன்– பெருமன் என்பன) அயல் நீண்டன. இறைவா, மன்னா என அயல்நீண்டு ஈறுகெட்டன. ஐயாவோ அப்பாவோ. என ஈறுகெட்டு அயல்நீண்டு ஒகார மிக்கன. திரையவோ, ஐயவோ என ஈறுகெட்டு ஒகார மிக்கன. வாயிலாய், ஆதிரையாய் என் இறுதி னகரம் யவ்வாயின. வாயிலோயே என இறுதி யவ்வொற்றாகி ஈற்றயல்ஆகாரம் ஒகாரமாய் ஏகார மிக்கது. ஐயே யெமக்கருள், வாழிய முருகே, என ஈறுகெட்டு அயலில் அகரம் எகாரமாயின. பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** (பொதுவிதியால் இயல்பும் ஏகாரம் மிகுதலுமன்றி) **ன ஈறு உயர்திணைப் பெயர்க்கண்** – னகரமெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள், **ஒருசார்** – சில, **அளபு** – அளபெடுத்தலும், **ஈறு அழிவும்** – ஈறுகெடுதலும், **அயல் நீட்சி** – ஈற்றயல் நீளுதலும், **அதனோடு ஈறுபோதல்** – ஈற்றயல் நீண்டு ஈறுகெடுதலும், **அவற்றோடு ஒ உறல்** – ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஒகாரம் மிகுதலும், **ஈறு அழிந்து ஒ உறல்** – ஈறு கெட்டு ஒகாரம்மிகுதலும், **இறுதி ய ஆதல்** – ஈற்று னகரமெய் யகரமெய்யாகத் திரிந்து அதன் அயலில் நின்ற ஆகாரம் ஒகாரமாகி ஏகாரம் மிகுதலும், **ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும்** – ஈறுகெட்டு அதன் அயலில் நின்ற அகரம் ஏகாரமாதலும், **விளியுருபாகும்:–**

**உதாரணம்**

அம்பர் கிழான் –அம்பர் கிழாஅன் – அளபெடுத்தது

புலவன் – புலவ– ஈறுஅழிந்தது

நம்பன் – நம்பான் –ஈற்றயல் நீண்டது

மன்னன் – மன்னா – ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டது

ஐயன் – ஐயாவோ – ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஒமிக்கது.

ஐயன்– ஐயவோ – ஈறு அழிந்து ஒகாரம் மிக்கது

கோயிலாள் – கோயிலாய் – இறுதி ய ஆயிற்று

வாயிலான் – வாயிலோயே – இறுதியவ்வாய் ஈற்றயல் ஆகாரம் ஒகாரமாய் ஏகாரம் மிக்கது.

ஐயன்–ஐயோ– ஈறு அழிந்து அயல் அகரம் ஓகாரமாயிற்று.

**குறிப்பு:–** 'ஏடா' என்பது படர்க்கைப் பெயராகாமல் முன்னிலைப் பெயராய், 'தோழா' என்னும் பொருள்பட நிற்பதொன்றாகலின், அஃது இவ்விதிபெறாதென்க. 'ஒருசார்' என்பதை விளியிலக்கணம் முடியும் அளவும் வேண்டுழிக் கூட்டுக.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: னவ் வீற்று உயர்திணைப் பெயர்க்கண்** – பொதுவிதி யன்றி னகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், **ஒருசார் அளபு** – சில அளபெடுத்தலும், **(ஒருசர்) ஈறு அழிவு** – சில ஈறு கெடுதலும், **(ஒருசார்) அயல்நீட்சி** – சில ஈற்றயனீளுதலும், **(ஒருசார்) அதனோடு ஈறு போதல்** – சில ஈற்றயனீண்டு ஈறு கெடுதலும், **(ஒருசார்) அவற்றோடு ஓ உறல்** – சில ஈறுகெட்டு ஈற்றயனீண்டு ஓகார மிகுதலும், **(ஒருசார்) ஈறு அழிந்து ஓ உறல்** – சில ஈறுகெட்டு ஓகார மிகுதலும், **(ஒருசார்) இறுதி யவ்வாதல்** – சில இறுதி னகரமெய் யகர மெய்யாதலும், **(ஒருசார்) அதனோடு அயல் திரிந்து ஏ உறல்** – சில ஈற்று னகர மெய் யகர மெய்யாகத் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகார மிகுதலும், **(ஒருசார்) ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும்** – சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும், **விளியுருபு ஆகும்** – விளியுருபுகளாகும், **எ–று.**

**உ–ம்.:** அம்பர்கிழான் – அம்பர்கிழாஅன் அளபாயிற்று. புலவன் – புலவ ஈறழிந்தது. பெருமன்–பெருமான் ஈற்றயனீண்டது. மன்னன் – மன்னா ஈற்றயனீண்டு ஈறுகெட்டது. ஐயன் – ஐயாவோ ஈற்றயனீண்டு ஈறுகெட்டு ஓகார மிக்கது. திரையன் – திரையவோ ஈறழிந்து ஓகார மிக்கது. வாயிலான் – வாயிலாய் இறுதி யவ்வாயிற்று. வாயிலான் – வாயிலோயே இறுதி யவ்வாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகார மிக்கது. ஐயன் – ஐயே ஈறழிந்து அயலிலகரம் ஏகாரமாயிற்று.

இவ்வொருசாரென்பதை விளியதிகார முழுதுங் கூட்டுக.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். னவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கண்** – பொதுவிதியன்றி னகரமெய்யீற்றுயர் திணைப் பெயர்களுள், – **ஒருசார் அளபு** – சிலஅளபெடுத்தலும், – (ஒருசார்) **ஈறுஅழிவு** – சில ஈறுகொடுதலும், (ஒருசார்) **அயல்நீட்சி**– சில ஈற்றயனீளுதலும், – (ஒருசார்) **அதனோடு ஈறுபோதல்** – சில ஈற்றயவீண்டு ஈறு கெடுதலும் –(ஒருசார்) அவற்றோடு ஓ உறல் – சில ஈறுகெட்டு ஈற்றயனீண்டு ஓகார மிகுதலும், (ஒருசார்) **ஈறு அழிந்து ஓ உறல்** – சில ஈறுகெட்டு ஓகாரமிகுதலும், (ஒருசார்) இறுதி யவ்வாதல் – சில இறுதி னகர மெய் யகர மெய்யாதலும், (ஒருசார்) **அதனோடு அயல் திரிந்து ஏஉறல்.** சில ஈற்றுனகரமெய் யகரமெய்யாகத் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமிகுதலும், (ஒருசார்) **ஈறு அழித்து அயல் ஏ ஆதலும்** – சில ஈறுகெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும், **விளியுருபு ஆகும்** – விளியுருகளாகும். **எ–று.**

**உம்.** அம்பர்கிழான் – அம்பர்கிழாஅன் அளபாயிற்று. புலவன் – புலவ ஈறழிந்தது. பெருமன் – பெருமான் ஈற்றய னீண்டது. மன்னன் – மன்னா ஈற்றயனீண்டு ஈறுகெட்டது. ஐயன் – ஐயாவோ ஈறழிந்து ஒகாரமிக்கது. திரையன் – திரையவோ ஈறழிந்து ஒகார மிக்கது. வாயிலான் – வாயிலாய். இறுதியவ்வாயிற்று. வாயிலான் – வாயிலோயே இறுதியவ்வாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகாரமிக்கது. ஐயன் – ஐயே ஈறழிந்து அயலிலகரம் ஏகாரமாயிற்று.

இவ்வொருசாரென்பதை விளியதிகாரமுழுதுங் கூட்டுக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** (பொதுவிதியால் இயல்பும் ஏகாரம் மிகுதலு மன்றி), **ன ஈறு உயர்திணை பெயர்க்கண்** – னகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள், **ஒருசார்** – சில, **அளபு** – அளபெடுத்தலும், **ஈறு அழிவு** – இறுதி கெடுதலும், **அயல் நீட்சி** – ஈற்றயல் நீளுதலும், **அதனோடு ஈறுபோதல்** – ஈற்றயல் நீண்டு ஈறுகெடுதலும், **அவற்றோடு ஓ உறல்** – ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், **ஈறு அழிந்து ஓ உறல்** – ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், **இறுதி ய ஆதல்** – ஈற்று னகரமெய் யகர மெய்யாகத் திரிதலும், **அதனோடு அயல் திரிந்து ஏ உறல்** – ஈற்று னகர மெய் யகர மெய்யாகத் திரிந்து அதன் அயலில் நின்ற ஆகாரம் ஓகாரமாகி ஏகாரம் மிகுதலும், **ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும்** – ஈறுகெட்டு அதன் அயலில் நின்ற அகரம் ஏகாரமாதலும், **விளி உருபு ஆகும்** – விளியுருபுகளாம், **எ–று.**

'**ஒருசார்**' என்பதை அடுத்த சூத்திரங்கட்கும் கூட்டுக.

**உ–ம்.:**

சேக்கிழான்– சேக்கிழாஅன் – அளபெடுத்தது.

புலவன் – புலவ – ஈறு அழிந்தது.

நம்பன் – நம்பான் – ஈற்றயல் நீண்டது.

மன்னன் – மன்னா – ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டது.

ஐயன் – ஐயாவோ – ஈற்றயல்நீண்டு ஈறுகெட்டு ஓகாரம் மிக்கது.

ஐயன் – ஐயவோ – ஈறு அழிந்து ஓகாரம் மிக்கது.

கோயிலான்– கோயிலாய் – இறுதி யவ்வாயிற்று.

வாயிலான் – வாயிலோயே – இறுதி யவ்வாய் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரம் மிக்கது.

ஐயன் – ஐயே – ஈறு அழிந்து அயல் அகரம் ஏகாரமாயிற்று.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். (பொதுவிதியால் இயல்பும் ஏகாரம் மிகுதலுமின்றி) னவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கண்–னகரமெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், ஒருசார் அளவு–சில அளபெடுத்தலும், (ஒருசார்) ஈறு அழிவு–சில ஈறு கெடுதலும், (ஒருசார்) அயல் நீட்சி–சில ஈற்றயனீளுதலும், (ஒருசார்) அதனோடு ஈறு போதல்–சில ஈற்றயனீண்டு ஈறு கெடுதலும், (ஒருசார்) அவற்றோடு ஒ உறல்–சில ஈறுகெட்டு ஈறறயனீண்டு ஒகாரமிகுதலும், (ஒருசார்) இறுதி யவ்வாதல்–சில இறுதி னகரமெய் யகர மெய்யாதலும், (ஒருசார்) அதனோடு அயல் திரிந்து ஏ உறல்–சில ஈற்று னகரமெய் யகரமெய்யாகத் திரிந்து அயலில் ஆகாரம் ஓகாரமாய் ஏகாரமிகுதலும், (ஒருசார்) ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும்–சில ஈறு கெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும், விளியுருபு ஆகும் – விளியுருபுகளாகும். **எ–று.**

உ–ம். அம்பர்கிழான்–அம்பர்கிழாஅன் அளபாயிற்று. புலவன்–புலவ, ஈறழிந்தது. பெருமன்–பெருமான், ஈற்றயனீண்டது. மன்னன்–மன்னா, ஈற்றயனீண்டு ஈறுகெட்டது. ஐயன்–ஐயாவோ, ஈற்றயனீண்டு ஈறுகெட்டு ஓகாரமிக்கது. திரையன்–திரையவோ, ஈறழிந்து ஓகாரமிக்கது. வாயிலான்–வாயிலாய், இறுதி யவ்வாயிற்று. வாயிலான்–வாயிலோயே, இறுதி யவ்வாய் ஈற்றயலாகாரம் ஓகாரமாய் ஏகாரமிக்கது. ஐயன்–ஐயே, ஈறழிந்து அயலிலகரம் ஏகாரமாயிற்று.

'ஒருசா' ரென்பதை விளியதிகார முழுதுங் கூட்டுக.

## கா. நமச்சிவாய முதலியார்

**னவ்வீற்று உயர்திணைப் பெயர்க்கண்** – பொது விதியன்றி னகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள், (1) **ஒரு சார் அளபு** – சில அளபெடுத்தலும், (2) **ஈறு அழிவு** – சில ஈறுகெடுதலும், (3) **அயல் நீட்சி** – சில ஈற்றின் அயல் நீளுதலும், (4) **அதனோடு ஈறுபோதல்** – சில ஈற்றயல் நீண்டு ஈறு கெடுதலும்; (5) **அவற்றோடு ஓவுறல்** – சில ஈறு கெட்டு ஈற்றயல் நீண்டு ஓகாரம் மிகுதலும், (6) **ஈறு அழிந்து ஓவுறல்** – சில ஈறு கெட்டு ஓகாரம் மிகுதலும், (7) **இறுதிய ஆதல்** – சில இறுதி னகரமெய் யகரமெய்யாதலும், (8) **அதனோடு அயல் திரிந்து ஏ உறல்** – சில ஈற்று னகர மெய் யகரமெய்யாய்த் திரிந்து அயல் ஆகாரம் ஓகாரமாகி ஏகாரம் மிகுதலும்,(9) **ஈறு அழிந்து அயல் ஏ ஆதலும்** – சில ஈறு கெட்டு அயலில் அகரம் ஏகாரமாதலும், விளி உருபு ஆகும் – விளியுருபுகளாகும்.

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| (1) | அம்பர் கிழான்–அம்பர் கிழாஅன்– | | அளபாயிற்று. |
| (2) | புலவன் – | புலவ – | ஈறு அழிந்தது. |
| (3) | நம்பன் – | நம்பான் – | ஈற்றயல் நீண்டது. |
| (4) | மன்னன் – | மன்னா – | ஈற்றயல் நீண்டு, ஈறுகெட்டது. |
| (5) | ஐயன்–ஐயாவோ–ஈற்றயல் | | நீண்டு, ஈறுகெட்டு, ஓகாரம் மிக்கது. |

| | | |
|---|---|---|
| (6) | திரையன் – திரையவோ– | ஈறு அழிந்து, ஓகாரம் மிக்கது. |
| (7) | வாயிலான்–வாயிலாய் | – இறுதி யவ்வாயிற்று. |
| (8) | வாயிலான்–வாயிலோயே– | இறுதி யவ்வாகி, ஈற்றயல் ஆகாரம், ஓகாரமாகி, ஏகாரம் மிக்கது. |
| (9) | ஐயன்– ஐயே – | ஈறு அழிந்து, அயலில் அகரம் ஏகாரமாயிற்று. |

'ஒருசார்' என்பதை விளியதிகாரம் முழுதும் கூட்டுக.

## மோசகு பொன்னையா

னகரவீற்று உயர்திணைப் பெயர்களுட் சில பொதுவிதியாற் பெறுமவற்றோடு அளபெடுத்தலும், இறுதிகெடுதலும், ஈற்றயல் நீளுதலும், ஈற்றயல் நீண்டு ஈறுகெடுதலும், ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், ஈறுகெட்டு ஓகாரம் மிகுதலும், ஈற்று னகரமெய் யகர மெய்யாய்த் திரிதலும், ஈற்று னகரமெய் யகர மெய்யாய்த் திரிந்து அதன் அயலில் நின்ற ஆகாரம் ஓகாரமாகி ஏகாரம் மிகுதலும், ஈறுகெட்டு அதன் அயலில் நின்ற அகரம் ஏகார மாதலும் விளியுருபுகளாம் எ–று.

ஒருசார் என்பதனை விளியுருபுகள் அனைத்துக்குங் கூட்டுக.

எ–டு.

1. அம்பர் கிழாஅன் (கிழான்)–அளபெடுத்தது.

2.புலவ (புலவன்)–ஈறு அழிந்தது

3.பெருமான் (பெருமன்)–ஈற்றயல் நீண்டது

4.மன்னா (மன்னன்)–ஈற்றயல் நீண்டு ஈறுகெட்டது

5.ஐயாவோ (ஐயன்)–ஈற்றயல் நிண்டு ஈறுகெட்டு ஓகாரம் மிக்கது

6.திரையவோ (திரையன்)–ஈறு அழிந்து ஓகாரம் மிக்கது.

7.வாயிலாய் (வாயிலான்)–இறுதியவ்வாயிற்று

8.வாயிலோயே(வாயிலான்)–இறுதியவ்வாகி ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாகி ஏகாரம் மிக்கது.

9.ஐயே (ஐயன்)–ஈறு அழிந்து அயல் நின்ற அகரம் ஏகாரமாயிற்று.

(50)

307. ளஃகா னுயர்பெயர்க் [1]களபீ றழிவயல்
நீட்சி யிறுதி யவ்வொற் றாதல்
அயலி லகரமே யாதலும் விளித்தனு.

ளஃகான் உயர் பெயர்க்கு அளபு ஈறு அழிவு அயல்
நீட்சி இறுதி யவ் ஒற்று ஆதல்
அயலில் அகரம் ஏ ஆதலும் விளித்தனு.

ḻakẖkāṉ uyarpeyarkku aḻapu īṟu aḷivu ayal
nītsi iṟuṭi yav oṟṟu āṭal
ayalil akaram ē āṭalum viḻiṭṭaṉu.

இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Vocative signs of personal nouns ending in l**

The following are also Vocative forms of personals ending in l;—Vowel-prolongation; dropping the final; lengthening the penultimate vowel; changing final (l) into y; and changing penultimate a into e.

ஒப்புமைப் பகுதி

எஞ்சிய விரண்டி னிறுதிப் பெயரே
நின்ற ஈற்றயல் நீட்டம் வேண்டும்

(தொல். சொல்.: 144)

அயல்நெடி தாயின் இயற்கை யாகும்

(தொல். சொல்.: 145)

வினையினும் பண்பினும்
நினையத் தோன்று மாளெ னிறுதி
ஆயா கும்மே விளிவயி னான

(தொல். சொல்.: 146)

முறைப்பெயர்க் கிளவி முறைப்பெ ரியல

(தொல். சொல்.: 147)

---

பாட வேறுபாடு:–

1. அளவீறழிவு

சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர்

(தொல். சொல்.: 148)

அளபெடைப் பெயரே அளபெடை யியல

(தொல். சொல்.: 149)

ஈற்றய னீடும் லளக்கள்தாம் ஏகாரம்
தோற்று முறைப்பெயர்கள் துன்னுங்கால் – ஆற்ற
அயல்நெடிதாம் பேரும் அளபெடையாம் பேரும்
இயல்பாம் விளிக்கு மிடத்து

(நேமி.: 52)

ளளஃகா னுயர்பெயர்க் களபய னீட்சி
யிறுதி ளகரம் யவ்வொற் றாத
லயலி லகரமே யாதலும் விளித்தனு

(இ.வி.: 210)

லளக்களி னீற்றய னீண்டு விளிக்கும்

(மு.வீ.: 583)

அயனெடி தாயி னியல்பா கும்மே

(மு.வீ.: 584)

ஆளெ னிறுதிப் பண்புப் பெயரும்
வினைப்பெயர்க் கிளவியு மாயொடு விளிக்கும்

(மு.வீ.: 585)

முறைப்பெயர்க் கிளவி முறைப்பெய ரியல

(மு.வீ.: 586)

அளபெடைப் பெயரே யளபெடை யியல

(மு.வீ.: 588)

ளஃகான் உயர்பெயர்க்கு அளபீ றழிவயல்
நீட்சி இறுதி யவ்வொற் றாதல்
அயலில் அகரம் ஏஆதலும் விளித்தனு

(தொ.வி.: 73)

## மயிலை நாதர்

**எ–ன்,** ளகார வீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** ளகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண் அளபெழலும் ஈறுகெடலும் அயல்நீடலும் இறுதி யகர வொற்றாய்த் திரிதலும் அயலில் அகரம் எகாரமாதலும் விளியுருபாம், **எ–று.**

**வ–று.:**

**"மேவார்த் தொலைத்த விறன்மிகு வேஎள்"** என அளபாயிற்று. **"துனிகொள்ள லெல்லா நீ"** (கலி. 35) என ஈறுகெட்டது. **நமர்காள், எமர்காளென** ஈற்றயல் நீண்டன. **குழையாய், வாயிலாய், ஆதிரையாய், எண்டோளாய், கரியாய், [1]ஊணாயென** இறுதி யகர வொற்றாயின. **"தலைமீது கொள்வெ மடிகேள்"** என ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று. பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** ளகர ஈற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி **உணர்–ற்று.**

**இ–ள்.:** ளகர ஈற்று உயர்திணைப் பெயர்க்குப் பொதுவிதி யன்றி அளபு எழலும், ஈறுகெடலும், அயல்நீடலும், இறுதி ளகர ஒற்று யகர ஒற்றாதலும், ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம், **எ–று.**

**வ–று.:**

"மேவார்த்தொலைத்த விறன்மிகு வேஎள்" என அளபாயிற்று. "துனிகொள்ளல் எல்லா நீ" என ஈறுகெட்டது. நமர்காள், எமர்காள் என ஈற்றயல் நீண்டன. குழையாய், வாயிலாய் என இறுதி ளகரஒற்று யகர ஒற்றாயின. "தலைமீதுகொள்வம் அடிகேள்" என ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று.

எல்லா என்பது தோழி முன்னிலைப் பெயரன்றோ? விளி ஏலாது என விலக்கப்பட்ட அம் முன்னிலைப் பெயரை ஈண்டுக் காட்டியது என்னை யெனின்:– 'முன்னிலை, எல்லீர் நீயிர் நீவிர் நீர் நீ அல்லன படர்க்கை' (285) என வரையறுக்கப் பட்டமையின், தோழன் என்னும் பொருட்டாகிய ஏடன் என்னும் படர்க்கைப்பெயர் விளியேற்றமையின், ஏடா என்பது தோழன் முன்னிலைப்பெயர் என்றும் தோழி என்னும் பொருட்டாகிய

---

பாட வேறுபாடு:–

1. உண்டாய்

எல்லாள் ஏடி என்னும் படர்க்கைப் பெயர்கள் விளியேற்றமையின் "எல்லாவும் ஏடியும் தோழி முன்னிலைப்பெயர்" என்றும் கூறப்பட்டனவன்றி அவை இயல்பாய் நின்ற முன்னிலைப் பெயரல்ல என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** ஏகார வீற்றிற்கு எய்தியன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ—ள்.: ளஃகான் உயர்பெயர்க்கு** — ளகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண், **அளபீறு அழிவு அயனீட்சி** — அளபெடுத்தலும் ஈறுகெடுதலும் அயல் நீடலும், **இறுதி யவ்வாற் றாதல்** — இறுதி யகர வொற்றாய்த் திரிதலும், **அயலில் அகரம் ஏயாதலும்** — அயனின்ற அகரம் ஏகாரமாகத் திரிதலும், **விளித்தனு** — விளி வேற்றுமை, **எ—று.**

**உ—ம்.:**

"மேவார்த் தொலைத்த விறன்மிகு வேஎள்" என அளபாயிற்று. கருங்கண்ணா, கருங்குழலா என ஈறழிந்தன. நமர்காள், எமர்காள், அளிகாள் என ஈற்றயல் நீண்டன. குழையாய், வாயிலாய், ஆதிரையாய், தோளாய், உண்டாய் என இறுதி யகரவொற்றாயின. அடிகேள், மக்கேள் என ஈற்றயல் அகரம் ஏகாரமாயின.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ளகர மெய்யீற்று உயர்திணைப்பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ—ள்.: ளஃகானுயர்பெயர்க்கு** — பொதுவிதியன்றி ளகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், **(ஒருசா) ரளபு** — சில அளபெடுத்தலும், **(ஒருசா) ரீறழிவு**—சில ஈறுகெடுதலும், **(ஒருசா) ரயனீட்சி** — சில ஈற்றனீளுதலும், **(ஒருசா) ரிறுதியவ்வொற்றாதல்**—சில இறுதி ளவ் வொற்று யவ் வொற்றாதலும், **(ஒருசா) ரயலிலகரமேயாதலும்** — சில ஈற்றயல் அகரம் ஏகாரமாதலாலும், **விளித்தனு**—விளி யுருபுகளாகும், **எ—று.**

**வ—று.:**

வேள், வேஎள் — அளபெடுத்தது. எல்லாள், எல்லா, ஈறுகெட்டது. மக்கள், மக்காள் — ஈற்றயனீண்டது. குழையாள், குழையாய், ளவ் வொற்று யவ் வொற்றாயிற்று. அடிகள், அடிகேள், ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ளகரவீற்று உயர்திணைப்பெயர்கள் விளிக்கண் முற்கூறிய விளியுருபுகளே யன்றி வேறுருபுகளும் பெறுமெனக் கூறுஞ் சிறப்புச் சூத்திரம் யாது?

**ளஃகா னுயர்பெயர்க் களபீ றழிவயல்**

**நீட்சி யிறுதி யவ்வொற் றாதல்**
**அயலி லகரமே யாதலும் விளித்தனு.**
**(ளஃகான் உயர்பெயர்க்கு அளபு ஈறு அழிவு அயல்.**
**நீட்சி இறுதி யவ்வொற்று ஆதல்**
**அயலில் அகரம் ஏ ஆதலும் விளித்தனு.)**

**இ–ள்.:** பொதுவிதியன்றி ளகரமெய் யீற்றுயர்திணைப்பெயர்களுட் சில அளபெடுத்தலும் சில ஈறு கெடுதலும் சில ஈற்றயனீளுதலும் சில இறுதி ளவ்வொற்று யவ்வொற்றாதலும் சில ஈற்றயலகரம் ஏகாரமாதலும் விளியுருபுகளாகும், **எ–று.**

**உ–ம்.**

1.வேள்–வேஎள் அளபெடுத்தது. 2. எல்லாள்–எல்லா ஈறுகெட்டது. 3. மக்கள்–மக்காள் ஈற்றயனீண்டது. 4. குழையாள்–குழையாய் ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று. 5. அடிகள்–அடிகேள் ஈற்றயலகரம் ஏகாரமாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ளகர வீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற்சிறப்பு விதியுணர்த்துகின்றது.

**இ–ள்.: ளஃகானுயர் பெயர்க்கு** – சில ளகர ஈற்று உயர்திணைப் பெயர்க்கு, அளபீறழிவு – (இயல்பாதலும் ஏகார மிகுதலுமன்றி) அளபெடுத்தலும் ஈறுகெடுதலும், **அயனீட்சி** – ஈற்றுக்கு அயலெழுத்து நீளுதலும், **இறுதியவ் வொற்றாதல்** – ளகர ஒற்று யகர ஒற்றாதலும், **அயலி லகரமே யாதலும்** – ஈற்றுக்கு அயல் நின்ற அகரம் ஏகாரமாதலும், **விளித்தனு** – விளியுருபாம், **எ–று.**

**வ–று.:** விறன்மிகு வேஎள் – என அளபெடுத்தது. (விறல்–வெற்றி,). ‘துனிகொள்ளலெல்லா நீ’ என ஈறு கெட்டது. (துனி–கோபம், எல்லாள்–தோழி.) நமர்காள், எமர்காள் என ஈற்றயல் நீண்டன. குழையாள், குழையாய், வாயிலாள், வாயிலாய் என இறுதி ளகர ஒற்று யகர ஒற்றாயின. தலைமீது கொள்வமடிகேள் என ஈற்றுக்கு அயல்நின்ற அகரம் ஏகாரமாயிற்று, (அடிகள் – ஆசாரியன்) பிறவுமன்ன.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ளஃகான் உயர்பெயர்க்கு** – (பொதுவிதியின்றி) ளகரமெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபு** – அளபெடுத்தலும், **ஈறு அழிவு** – ஈறுகெடுதலும், **அயல் நீட்சி** – ஈற்றயல் நீளுதலும், **இறுதிய ‘ஒற்றாதல்** – ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும், **விளி தனு** – விளியுருபுகளாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ–ம்:– | வேள் | – வேஎள் | – | அளபெடுத்தது |
| | எல்லாள் | – எல்லா | – | ஈறு அழிந்தது |
| | மக்கள் – | மக்காள் | – | ஈற்றயல் நீண்டது |
| | குழையள் | – குழையாய் | – | ளவ்வொற்று ய ஆயிற்று |
| | அடிகள் | – அடிகேள் | – | ஈற்றயல் அகரம் ஏகார மாயிற்று. |

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ளஃகான் உயர்பெயர்க்கு** – பொதுவிதியன்றி ளகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், **(ஒருசார்) அளபு** – சில அளபெடுத்தலும், **(ஒருசார்) ஈறு அழிவு** – சில ஈறு கெடுதலும், **(ஒருசார்) அயல் நீட்சி** – சில ஈற்றயனீளுதலும், **(ஒருசார்) இறுதியவ்வொற்று ஆதல்** – சில இறுதி ளவ்வொற்று யவ்வொற்றாதலும், **(ஒருசார்) அயலில் அகரம் ஏ ஆதலும்** – சில ஈற்றயலகரம் ஏகார மாதலும், **விளித்தனு** – விளியுருபுகளாகும், **எ–று.**

**உ–ம்.:**

வேள் – வேஎள் அளபெடுத்தது. எல்லாள் – எல்லா ஈறுகெட்டது. மக்கள் – மக்காள் ஈற்றயனீண்டது. குழையாள் – குழையாய் ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று. அடிகள் – அடிகேள் ஈற்றயலகரம் ஏகாரமாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ளஃகான் உயர்பெயர்க்கு** – பொதுவிதியன்றி ளகரமெய் யீற்றுயர் திணைப் பெயர்களுள், (ஒருசார்), **அளபு** – சில அளபெடுத்தலும் – (ஒருசார்) **ஈறு அழிவு** – சில ஈறுகெடுத்தலும் – (ஒருசார்) **அயல்நீட்சி** – சில ஈற்றயனீளுதலும் – (ஒருசார்) **இறுதி யவ்வொற்று ஆதல்** – சில இறுதி ளவ்வொற்று யவ்வொற்றுதலும், – (ஒருசார்) **அயலில் அகரம் ஏ ஆகலும்** – சில ஈற்றயலகரம் ஏகாரமாதலும், **விளித்தனு** – விளியுருபுகளாகும்.

**உ–ம்** வேள் – வேஎள் அளபெடுத்தது, எல்லாள் – எல்லா ஈறுகெட்டது. மக்காள் – மக்கள் ஈற்றயனீண்டது. குழையாள் – குழையாய் ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று. அடிகள் – அடிகேள் ஈற்றயலகரம் ஏகரமாயிற்று. (அடிகள் – ஆசாரியர்).

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** (பொதுவிதியன்றி) **ளஃகான் உயர் பெயர்க்கு** – ளகர

மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபு** – அளபெடுத்தலும், **ஈறு அழிவு** – ஈறுகெடுதலும், **அயல் நீட்சி** – ஈற்றயல் நீளுதலும், **இறுதி ய ஒற்று ஆதல்** – ஈற்று ளகரமெய் யகரமாதலும், **அயலில் அகரம் ஏ ஆதலும்** – ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும், **விளி தனு** – விளியுருபுகளாம், எ–று.

**உ–ம்.:**

வேள் – வேஎள் – அளபெடுத்தது.

எல்லாள் – எல்லா – ஈறு அழிந்தது.

மக்கள் – மக்காள் – ஈற்றயல் நீண்டது.

குழையாள் – குழையாய் – ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று

அடிகள் – அடிகேள் – ஈற்றயலில் அகரம் ஏகாரமாயிற்று.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். ளஃகான் உயர்பெயர்க்கு – பொதுவிதியன்றி ளகரமெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், (ஒருசார்) அளபு – சில அளபெடுத்தலும், (ஒருசார்) ஈறு அழிவு – சில ஈறு கெடுதலும், (ஒருசார்) அயல் நீட்சி – சில ஈற்றயனீளுதலும், (ஒருசார்) இறுதி யவ்வொற்று ஆதல்–சில இறுதி ளவ்வொற்று யவ்வொற்றாதலும், (ஒருசார்) அயலில் அகரம் ஏ ஆதலும் – சில ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும், விளித்தனு–விளியுருபுகளாகும். எ–று.

உ–ம்.

வேள்–வேஎள், அளபெடுத்தது. எல்லாள்–எல்லா, ஈறுகெட்டது. நமர்கள்–நமர்காள், ஈற்றயனீண்டது. குழையாள்–குழையாய், ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று. அடிகள்–அடிகேள், ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று.

## கா. நமச்சிவாய முதலியார்

**ளஃகான் உயர் பெயர்க்கு** – பொதுவிதியன்றி ளகர மெய் ஈற்று உயர்திணைப் பெயர்களுள், (1) **அளபு** – சில அளபெடுத்தலும், (2) **ஈறு அழிவு** – சில ஈறுகெடுதலும், (3) **அயல் நீட்சி** – சில ஈற்றயல் நீளுதலும், (4) **இறுதிய ஒற்றாதல்** – சில இறுதி ளவ்வொற்று யவ்வொற்றாதலும், (5) **அயலில் அகரம் ஏ ஆதலும்** – சில ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும், **விளித்தனு** – விளியுருபுகளாகும்.

**உதாரணம்**

| | | | |
|---|---|---|---|
| (1) | வேள் – | வேஎள் – | அளபெடுத்தது. |
| (2) | எல்லாள் – | எல்லா – | ஈறுகெட்டது. |
| (3) | மக்கள் – | மக்காள் – | ஈற்றயல் நீண்டது. |
| (4) | குழையாள்– | குழையாய்– | ளவ்வொற்றுயவ் வொற்றாயிற்று. |

(5) அடிகள் - அடிகேள் - ஈற்றயல் அகரம் ஏகாரமாயிற்று.

## மோசசு பொன்னையா

ளகரவீற்று உயர்திணைப் பெயர்களுட் சில பொது விதியாற் பெறுமவற்றோடு அளபெடுத்தலும், ஈறுகெடுதலும், ஈற்றயல் நீளுதலும், ஈற்று ளகரமெய் யகரமாதலும், ஈற்றயல் அகரம் ஏகாரமாதலும் விளியுருபுகளாம். எ-று.

தனு எனினும் உருபு எனினும் ஒக்கும்.

எ-டு

1. வேளஎ் (வேள்)-அளபெடுத்தது

2.எல்லா (எல்லாள்)-ஈறு அழிந்தது

3.மக்காள் (மக்கள்)-ஈற்றயல் நீண்டது

4.குழையாய் (குழையன்)-ளவ்வொற்று யவ்வொற்றாயிற்று

5.அடிகேள் (அடிகள்)-ஈற்றயலில் அகரம் ஏகாரமாயிற்று

எல்லாள் என்பது தோழி என்னும் பொருளது; ஏடன் என்பது அதன் ஆண்பால் இணை.

(51)

**308.** **ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்**
**அகரம் இஈ யாத லாண்டையா**
**ஈயாத லதனோ டேயுற லீற்றே**
**மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்**
**ஈற்றி னீருற லிவையுமீண் டுருபே.**

ரவ் ஈற்று உயர் பெயர்க்கு அளபு எழல் ஈற்று அயல்
அகரம் இ ஈ ஆதல் ஆண்டை ஆ
ஈ ஆதல் அதனோடு ஏ உறல் ஈற்று ஏ
மிக்கு அயல் யாக் கெட்டு அதன் அயல் நீடல்
ஈற்றின் ஈர் உறல் இவையும் ஈண்டு உருபு ஏ.

rav īūūu uyarpeyarkku aḻapu eḷal īūūu ayal
akaram i ī āṭal āṇtai ā
ī āṭal aṭanōtu ē uūal īūūu ē
mikku ayal yākkettu aṭan ayal nītal
īūūin īr uūal ivaiyum īṇtu urupu ē

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### Vocations signs of personal nouns ending in r

Personals in r also form their vocatives by vowel-prolongation, changing preceding a into i— or preceding â into i adding é after this change (has taken place); adding e, dropping preceding ya, changing its preceding i into i; and adding ir to the final.

## ஒப்புமைப் பகுதி

ஆரும் அருவும் ஈரொடு சிவணும்

(தொல். சொல்.: 138)

தொழிற்பெய ராயின் ஏகாரம் வருதலும்
வழக்கின் றென்மனார் வயங்கி யோரே

(தொல். சொல்.: 139)

பண்புகொள் பெயரும் அதனோ ரற்றே

(தொல். சொல்.: 140)

அளபெடைப் பெயரே அளபெடை யியல

(தொல். சொல்.: 141)

சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன

(தொல். சொல்.: 142)

ஈராகும் அர்ஆர் இதன்மேலும் ஏகாரம்
ஓரோ விடத்துளதாம் ஓங்களபாம் – பேர்கள்
இயல்பாம் விளியேலா எவ்வீற்றுப் பேரும்
புயல்போலுங் கூந்தலாய் போற்று

(நேமி.: 51)

ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றய
லகர மிஈ யாதலாண் டையா
வீயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய நீட
லீற்றி னோவுற லிவையு மீண் டுருபே

(இ.வி.: 211)

ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றய
லகர மிஈ யாதலாண் டையா

**வீயாத லதனோ டேயுறல்**
**ஈற்று ஏமிக்கு அயல் யாக்கெட்டு அதனயல்**
**நீடல் ஈருறல் இவையும் ஈண்டுருபே**

(தொ.வி.: 74)

**ஆரு மருவு மீரொடு சிவணும்**

(மு.வீ.: 577)

**தொழிற்பெயர்க் கிளவி யேயொடு சிவணும்**

(மு.வீ.: 578)

**பண்புப் பெயரு மவ்வியல் பாகும்**

(மு.வீ.: 579)

**அளபெடைப் பெயரே யளபெடை யியல**

(மு.வீ.: 580)

## மயிலை நாதர்

**எ–ன்,** ரகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண் அளபெழலும் ஈற்றயலில் அகரம் இகரமாதலும் ஈகாரமாதலும், ஆகாரம் ஈகாரமாதலும், ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றலும், ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக்கெட்டு அதனயலில் இகரம் ஈகாரமாதலும், ஈற்றின் ஈர் ஆதலுமென்றிவையும் விளியுருபாம், **எ–று.**

**வ–று.:**

**"எலுவ சிறாஅ ரேமுறு நண்ப"** (குறுந். 129) என அளபாயிற்று. **"என்னைமுன் னில்லன்மின் றெவ்வீர்"** (குறள். 771) என அகரம் இகரமாயிற்று. வேந்தீர், "நாய்கீர்", அமரீர், அசுரீர், நாகீரென அகரம் ஈகாரமாயிற்று. சான்றீர், மடவீர், பார்ப்பீர், ஊரீரென ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. **"பல்சான்றீரே"** (புறநா. 195), கணியீரே முனியீரே என ஈற்றயலில் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரமேற்றன. நம்பீரே, தம்பீரே, தோழீரே, தொழும்பீரேயென ஏகாரமிக்கு ஈற்றயலில் யாக்கெட்டு அதனயலில் இகரம் ஈகாரமாயின. எமரீர், பிறரீர், தமரீரென ஈரேற்றன.

இதனுள், **'ஈண்டு'** என்ற மிகையானே, கடலார், கழியார், மயிலார், குயிலார், சாத்தியார், கொற்றியாரென்றற் றொடக்கத்து அஃறிணைப்பெயர் விரவுப்பெயர்களும் சிறப்பித்து உயர்திணை போல வழங்கப்படுதலின், ஈண்டும் கடலீரே, கழியீரே, மயிலீரே, குயிலீரே, சாத்தீரே, கொற்றீரே யென்றற் றொடக்கத்து முடிபும் பிறவும் இவ்வாறு வருவன வெல்லாம் கண்டு கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** ரகார ஈற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி **உணர்–ற்று.**

**இ–ள்.:** பொதுவிதியன்றி ரகார ஈற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெழலும், ஈற்றயல் அகரம் இகரமாதலும், ஈகாரமாதலும், அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாதலும், அதனோடு ஏகாரம் ஏற்றலும், ஈற்றில் ஏகாரம் மிக்கு அயலில் யாக்கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாதலும், ஈற்றின் ஈராதலும் விளியுருபாம், **எ–று.**

**வ–று.:**

சிறாஅர், மகாஅர் என அளபாயின "என்னை முன் நில்லன்மின் தெவ்விர்" என ஈற்றயல் அகரம் இகரமாயிற்று. வேந்தீர், நாய்கீர் என அகரம் ஈகாரமாயின. சான்றீர், மடவீர் என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயின. [2] "பல்சான்றீரே பல்சான்றீரே" கணியீரே என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் ஏற்றன. நம்பீரே, தம்பீரே, தோழீரே, தொழும்பீரே என ஈற்றில் ஏகாரம் மிக்கு அயல் யா கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாயின. எமரீர், தமரீர் என ஈரேற்றன.

**'ஈண்டு'** என்ற மிகையானே கடலாரே, கடலீரே, கழியாரே, கழியீரே, சாத்தியாரே, சாத்தியீரே, கொற்றியாரே, கொற்றியீரே என அஃறிணைப் பெயர் விரவுப் பெயர்களைச் சிறப்பித்து ரகர ஈற்று உயர்திணைப்பெயர் போலக் கூறியவழியும் இவ்வுருபு ஏற்றல் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** ரகர வீற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ–ள்.: ரவ்வீறு றுயர் பெயர்க்கு** – ரகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண், **அளபெழல்** – அளபெடுத்தலும், **ஈற்றயல் அகரம் இ ஈ யாதல்** – ஈற்றயலினின்ற அகரம் இகரம் ஈகாரம் ஆதலும், **ஆண்டையா ஈயாதல் அதனோடு ஏயுறல்** – ஈற்றயல் நின்ற ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் ஏற்றலும், **ஈற்றே மிக்கயல் யாக்கெட்டு அதனயல் நீடல்** – ஈற்றில் ஏகாரம் மிக்கு அயலினின்ற யாக் கெட்டு அதனின் அயலில் இகரம் ஈகாரமாதலும், **ஈற்றின் ஈகுறல்** – இறுதி ஈராதலும், **இவையும் ஈண்டுருபே** – என்றிவை இவ்விடத்து விளியுருபாம், **எ–று.**

**உ–ம்.:**

சிறாஅர், நம்பிமாஅர், உளாஅர் என அளபாயின. தெவ்விர், வேந்திர் என ஈற்றயல் அகரம் இகாரமாயின. வேந்தீர், அமரீர், உளரீர், பார்ப்பீர் என ஈற்றயல் அகரம் ஈகாரமாயின. சான்றீர், மடவீர் என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயின. "பல் சான்றீரே" (புறம். 195), முனியீரே என அயலில் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம்

ஏற்றன. நம்பீரே, தம்பீரே, தோழீரே என ஈற்றயல் யாக்கெட்டு அதன் அயலில் இகாரம் ஈகாரமாய் ஈற்றில் ஏகாரம் மிக்கன. தமரீர், நம்பீர், எமரீர், பிறரீர் என ஈற்று ஈரேற்றன. இதனுள் "ஈண்டு" என்ற மிகையானே அஃறிணைப் பெயர்க்கும் பொதும் பெயர்க்கும் இவ்விதி கொள்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** ரகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ-ள்.: ரவ்வீற்றுயர் பெயர்க்கு** - (பொதுவிதி யன்றி) ரகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள், **(ஒருசா) ரளபெழல்** - சில அளபெடுத்தலும், **(ஒருசா) ரீற்றயலகரம் இ ஈயாதல்** - சில ஈற்றயல் அகரமானது இகரமாதலும் ஈகாரமாதலும், **(ஒருசா) ராண்டையாவீயாதல்** - சில அவ்வீற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், **(ஒருசா) ரதனோடேயுறல்** - சில அதனோடு ஏகாரம் ஏற்றலும், **(ஒருசா) ரீற்றே மிக்கயல் யாக்கெட்டதனய னீடல்** - சில ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக்கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாதலும், **(ஒருசா) ரீற்றினீருறல்** - சில ஈற்றியல் ஈர் ஆதலும், **இவையும்** - ஆகியவையும், **ஈண்டு** - இவ்விடத்து, **உருபு** - விளியுருபுகளாகும், **எ-று.**

**வ-று.:**

சிறார், சிறாஅர். அளபெடுத்தது. தெவ்வர், தெவ்விர், ஈற்றயல் அகரம் இகரமாயிற்று. நாய்கர், நாய்கீர், ஈற்றயல் அகரம் ஈகாரமாயீற்று. சான்றார், சான்றீர், ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. கணியார், கணியீரே, ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகார மிக்கது. நம்பியார், நம்பீரே, ஈற்றில் ஏகாரமிக்கு அயல் யாக் கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாயிற்று. எமர், எமரீர், ஈர் ஏற்றது. (ஈண்டென்ற மிகையால் கடலாரே, கடலீரே, சாத்தியாரே, சாத்தியீரே எனவும், அஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து ரவ்வீற்று உயர்திணைப் பெயர்போலக் கூறினும் இவ்வுருபேற்றல் கொள்க.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

ரகரவீற்று உயர்திணைப்பெயர்கட்கு விளியுருபு வகுத்த விதியின்மேற் சிறப்புவிதி கூறுஞ் சூத்திரம் யாது?

ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றயல்
அகரம் இ ஈ யாத லாண்டையா
ஈயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீடல்
ஈற்றினீ ருற லிவையுமீண் டுருபே.

(ரவ்வீற்று உயர்பெயர்க்கு அளபு எழல் ஈற்றயல் அகரம் இ ஈயாதல் ஆண்டைஆ ஈ ஆதல் அதனோடு ஏ உறல் ஈற்று ஏ மிக்கு அயல் யாக் கெட்டு அதன் அயல் நீடல் ஈற்றின் ஈர் உறல் இவையும் ஈண்டு உருபே.)

**இ–ள்.:** பொதுவிதி யன்றி ரகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள் சில அளபெடுத்தலும் சில ஈற்றயலகரம் இகரமாதலும் ஈகாரமாதலும் சில அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாதலும் சில அதனோடு ஏகாரம் ஏற்றலும், சில ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாதலும் சில ஈற்றில் ஈர் ஆதலும் ஆகியவிவையும் இவ்விடத்து விளியுருபுகளாகும், **எ–று.**

**உ–ம்.**

1. சிறார்–சிறாஅர் அளபெடுத்தது. 2. தெவ்வர்–தெவ்விர் ஈற்றயலகரம் இகரமாயிற்று. 3. நாய்கர்–நாய்கீர் ஈற்றயலகரம் ஈகாரமாயிற்று. 4. சான்றார்–சான்றீர் ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. 5. கணியார்–கணியீரே ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகாரமிக்கது. 6. தோழியார்–தோழீரே நம்பியார்–நம்பீரே ஈற்றிலேகாரமிக்கு அயல் யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாயிற்று. 7. எமர்–எமரீர் ஈரேற்றது.

ஈண்டென்ற மிகையால், கடலாரே, கடலீரே; சாத்தியாரே, சாத்தியீரே எனவும், அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து, ரவ்வீற்றுயர்திணைப்பெயர்போலக் கூறினும், இவ்வுரு பேற்றல் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

இது, ரகர வீற்று உயர்திணைப் பெயர்க்குப் பொதுவிதிமேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ–ள்.: ரவ்வீற்றுயர் பெயர்க்கு** – சில ரகர ஈற்று உயர்திணைப் பெயர்க்கு, **அளபெழல்** – (இயல்பு மேயு மன்றி) அளபெடுத்து வருதலும், **ஈற்றயலகரமிஈயாதல்** – ஈற்றுக்கு அயல்நின்ற அகரம் இகரமாதலும் ஈகாரமாதலும், **ஆண்டையா வீயாதல்** – அந்த ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், **அதனோடேயுறல்** – அந்தஆகாரம் ஈகாரமாதலுடனே ஏகார மிகுதலும், **ஈற்றேமிக்கயல் யாக்கெட்டத யயைனீடல்** – ஈற்றிலேகார மிகுந்து அதற்கு அயல்நின்ற யாக் கெட்டு அதனயல் நின்ற இகரம் ஈகாரமாதலும், **ஈற்றினீருறல்** – ஈற்றிலே ஈர் வந்து அடைதலும், **இவையுமீண்டுருபு** –ஆகிய இவையும் இங்கு விளியுருபாம், **எ–று.**

**வ–று.:**

சிறாஅர்–மாகாஅர் என அளபெடுத்தன. நில்லன்மின் தெவ்விர் – எனத் தெவ்வர் என்னும் ஈற்றயல்அகரம் இகரமாயிற்று (தெவ்வர் பகைவர்,) வணிகீர், வேந்தீர் என அகரம் ஈகாரமாயின. சான்றீர், மடவீர் என அந்த இடத்து ஆகாரம் ஈகாரமாயின. பல்சான்றீரே பல்சான்றீரே, கணியீரே

என அவ்விடத்து ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் மிக்கன. நம்பியார், தோழியார் என்பன, நம்பீரே, தோழீரே என ஈற்றில் ஏகாரம் மிக்கு அயல் யாக்கெட்டு அதன் அயல் இகரம் ஈகாரமாயின. எமரீர், தமரீர் என ஈற்றில் ஈர் வந்தன. ஈண்டு என்ற மிகையாலே கடலாரே, கடலீரே, சாத்தியாரே, சாத்தியீரே என அஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து ரகர ஈற்று உயர்திணைப் பெயர்போலக் கூறியவழியும் இந்த உருபேற்றுலுங் கொள்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ர ஈறு உயர்பெயர்க்கு** – (பொதுவிதி யின்றி) ரகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபு எழல் –** அளபெடுத்தலும், **ஈறு அயல் அகரம் இஈ ஆதல் –** ஈற்றயல் அகரமானது இகரமாதலும் ஈகாரமாதலும், **ஆண்டை ஆ ஈ ஆதல் –** ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், **அதனோடு ஏஉறல்** – சில ஈற்றயல் ஆஈயாய் ஏகாரம் ஏற்றலும், **ஈற்று ஏமிக்கு அயல் யாகெட்டுஅதன்** அயல் இகரம் ஈகாரமாதலும், **ஈற்றின் ஈர் உறல் –** இறுதியில் ஈர் அடைதலும், **இவையும் –** ஆகிய இவையும், **ஈண்டு –** இவ்விடத்து, **உருபு –** விளியுருபாம்.

| | | | | |
|---|---|---|---|---|
| உ–ம்:– | சிறார் – | சிறாஅர் | – | அளபெடுத்தது. |
| | தெவ்வர்– | தெவ்விர் | – | ஈற்றயல் அ இகரமாயிற்று. |
| | வணிகர்– | வணிகீர் | – | ஈற்றயல் அ ஈகாரமாயிற்று. |
| | கணியார்– | கணியீரே | – | ஈற்றயல் ஆ ஈகாரமாய் ஏகாரம் மிக்கது. |
| | நம்பியார்– | நம்பீரே | – | ஈற்றில் ஏகாரம் மிக்கு அயல்யா கெட்டு. (அதன் அயல் இகரம் ஈகாரமாயிற்று) |

குறிப்பு:– 'ஈண்டு' என்றதனால் கடலாரே – கடலீரே எனவும் சாத்தியாரே – சாத்தியீரே எனவும் அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களைச் சிறப்பித்து ரகரவீற்று உயர்திணைப் பெயர் போலக் கூறினும் இவ்வுரு பேற்றல் கொள்க.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ரவ்வீற்று உயர்பெயர்க்கு** – பொதுவிதி யன்றி ரகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், **(ஒருசார்) அளபு எழல்** – சில அளபெடுத்தலும், **(ஒருசார்) ஈற்றயல் அகரம் இ ஈயாதல்** – சில ஈற்றயலகரம்

இகரமாதலும் ஈகாரமாதலும், **(ஒருசார்) ஆண்டை ஆ ஈ ஆதல்** – சில அவ்வீற்றயலாகாரம் ஈகாராமாதலும், **(ஒருசார்) ஈற்று ஏ மிக்கு அயல் யாக் கெட்டு அதன் அயல் நீடல்** – சில ஈற்றில் ஏகாரமிக்கு அயலில் யாக் கெட்டு அதன் அதனயலிகரம் ஈகாரமாதலும், **(ஒருசார்) ஈற்றின் ஈர் உறல்** – சில ஈற்றில் ஈர் ஆதலும், **இவையும் ஈண்டு உருபு** – ஆகியவிவையும் இவ்விடத்து விளியுருபுகளாகும், எ–று.

உ–ம்.:

சிறார் – சிறாஅர் அளபெடுத்தது. தெவ்வர் – தெவ்விர் ஈற்றயலகரம் இகரமாயிற்று. நாய்கர் – நாய்கீர் ஈற்றயலகரம் ஈகாரமாயிற்று. சான்றார் – சான்றீர் ஈற்றயலாகராம் ஈகாரமாயிற்று. கணியார் – கணியீரே ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகார மிக்கது. நம்பியார் – நம்பீரே ஈற்றிலேகார மிக்கு அயல் யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாயிற்று. எமர்– எமரீர் ஈரேற்றது.

ஈண்டென்ற மிகையால், கடலாரே, கடலீரே; சாத்தியாரே, சாத்தியீரே எனவும்; அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து, ரவ் வீற்றுயர்திணைப்பெயர் போலக் கூறினும், இவ்வுருபேற்றல் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

இ–ள். **ரவ்வீற்று உயர்பெயர்க்கு** – பொதுவிதியன்றி ரகரமெய்யீற் றுயர்திணைப் பெயர்களுள், (ஒருசார்) **அளபுஎழல்** – சில அளபெடுத்தலும், – (ஒருசார்) **ஈற்றயல் அகரம் இஈயாதல்** – சில ஈற்றயலகரம் இகரமாதலும், ஈகாரமாதலும் (ஒருசார்) **ஆண்டை ஆ ஈயாதல்** – சில அவ்வீற்றயலா காரம் ஈகாரமாதலும், – (ஒருசார்) அதனோடு ஏஉறல் – சில அதனோடு ஏகாரம் ஏற்றலும், (ஒருசார்) **ஈற்று ஏ மிக்கு அயல் யாக் கெட்டு அதன் அயல் நீடல்** – சில ஈற்றில் ஏகாரமிக்கு அயலில்யாக் கெட்டு அதனயலிகரம் ஈகாரமாதலும் – (ஒருசார்) **ஈற்றின் ஈர் உறல்** – சில ஈற்றில் ஈர் ஆதலும் – **இவையும் ஈண்டு உருபு** – ஆகியவிவையும் இவ்விடத்து – விளியுருபுகளாகும்.

உ–ம் சிறார் – சிறாஅர் அளபெடுத்தது. தெவ்வர் – தெவ்விர் ஈற்றயலகரம் இகரமாயிற்று. நாய்கர் – நாய்கீர் ஈற்றயலகரம் ஈகாரமாயிற்று. சான்றார் – சான்றீர் ஈற்றயலாகாரம் ஈகாரமாயிற்று. கணியார் – கணியீரே ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகாரமிக்கது. நம்பியார் – நம்பீரே ஈற்றிலேகாரமிக்கு அயல் யாக் கெட்டு அதனயலிகரம் ஈகாரமாயிற்று. எமர் – எமரீர் ஈரேற்றது.

ஈண்டென்ற மிகையால், கடலாரே, கடலீரே; சாத்தியாரே, சாத்தியீரே, எ–ம். அஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து, ரவ்வீற்றுயர் திணைப்பெயர்போலக் கூறினும், இவ்வுருபேற்றல்கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:** (பொதுவிதியன்றி) **ர ஈறு உயர் பெயர்க்கு** — ரகர மெய் யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபு எழல்** —அளபெடுத்தலும், **ஈறு அயல் அகரம் இ ஈ ஆதல்** — ஈற்றயல் அகரமானது இகரமாதலும் ஈகாரமாதலும், **ஆண்டை ஆ ஈ ஆதல்** — ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், **அதனோடு ஏ உறல்** — சில ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் ஏற்றலும், **ஈ று ஏ மிக்கு அயல் யா கெட்டு அதன் அயல் நீடல்** — ஈற்றில் ஏகாரம் மிகுந்து அயலில் 'யா' கெட்டு அதனயல் இகரம் ஈகார மாதலும், **ஈற்றின் ஈர் உறல்** — இறுதியில் 'ஈர்' அடைதலும், **இவையும்** — ஆகிய இவையும்; **ஈண்டு** — இவ்விடத்து, **உருபு** — விளியுருபுகளாம்; **எ—று.**

**உ—ம்.:**

| | | |
|---|---|---|
| சிறார் — சிறா அர் | — | அளபெடுத்தது. |
| தெவ்வர் — தெவ்விர் | — | ஈற்றயல் அகரம் இகரமாயிற்று. |
| வணிகர் — வணிகீர் | — | ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று |
| சான்றார் — சான்றீர் | — | ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. |
| கணியார் — கணியீரே | — | ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாய் ஏகாரம் மிக்கது. |
| நம்பியார் — நம்பீரே | — | ஈற்றில் ஏகாரம் மிக்கு அயல் 'யா' கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாயிற்று. |
| எமர் — எமரீர் | — | ஈர் ஏற்றது. |

**'ஈண்டு'** என்ற மிகையால் கடலாரே கடலீரே எனவும், சாத்தியாரே சாத்தியீரே எனவும் அஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களைச் சிறப்பித்து ரவ்வீற்று உயர்திணைப் பெயர்போலக் கூறினும் இவ்வுருபேற்றல் கொள்க.

**மோசசு பொன்னையா**

ஏகரவீற்று உயர்திணைப் பெயர்கள் பொதுவிதியாற் பெறுமவற்றோடு, அளபெடுத்தலும், ஈற்றயல் அகரம் இகரமாகவோ ஈகாரமாகவோ திரிதலும், ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாகி ஏகாரம் மிகலும் ஈற்றயல் ஆகாரம் மிகுந்து அயல் யா கெட்டு அதனயல் இகரம் ஈககாரமாதலும், இறுதின்கண் 'ஈர்' அடைதலும் ஆகிய இவற்றையும் இவ்விடத்தே விளியுருபுகளாகக் கொள்ளும் எ-று.

எ—டு

1. சிறஅர் (சிறர்) — அளபெடுத்தது
2. தெவ்விர் (தெவ்வர்) — ஈற்றயல் அகரம் இகரமாயிற்று
3. வணிகீர் (வணிகர்) — ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று

| | | | |
|---|---|---|---|
| 4. | சான்றீர் (சான்றார்) | – | ஈற்றயல்ஆகரம் ஈகார மாயிற்று |
| 5. | கணியீரே (கணியார்) | – | ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாகி ஏகாரம் மிக்கது |
| 6. | நம்பீரே (நம்பியார் | – | ஈற்றயல் ஏகாரம் மிக்கு இயல் யாக்கெட்டு அதனயல் இகரம் ஈகாரமாயிற்று |

ஈண்டு என்ற மிகையால், அஃறிணைப் பெயர்களும், பொதுப் பெயர்களும் சிறப்பால் ரகர ஈற்றவாக வழங்கப்படும் பொழுதும் இவ்வுருபுகளை ஏற்றுக் கடலாறே, கடலீரே எனவும், சாத்தியாரே, சாத்தியீரே எனவும் வரும் எனக் கொள்க.

ஈற்றியல் ஈர் அடைதல் வந்தவழிக் கண்டு கொள்க.

தொல்காப்பியர்,

*தநது எனன அவைமுத லாகித்*
*தன்மை குறித்த னரளஎன் இறுதியும்*
*அன்ன பிறவும் பெயர்நிலை வரினே*
*இன்மை வேண்டும் விளியொடு கொளலே,1*

என்று விதித்த ஆணையுடன் மாறுகொண்டு நிற்குமாதலின் எமரீர் முதலியன காட்டப்படுவதற்குரியன வல்லவாயின.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். ரவ்வீற்று உயர்பெயர்க்கு – பொதுவிதியன்றி ரகரமெய்யீற்றுயர்திணைப் பெயர்களுள், (ஒருசார்) அளவு எழல்–சில அளபெடுத்தலும், (ஒருசார்) ஈற்றயல் அகரம் இ ஈயாதல்–சில ஈற்றயல் அகரம் இகரமாதலும் ஈகாரமாதலும், (ஒருசார்) ஆண்டை ஆ ஈ ஆதல்–சில அவ்வீற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், (ஒருசார்) அதனோடு ஏ உறல்–சில அதனோடு ஏகாரம் ஏற்றலும், (ஒருசார்) ஈற்று ஏ மிக்கு அயல் யாக்கெட்டு அதன் அயல் நீடல்–சில ஈற்றில் ஏகாரமிக்கு அயலில்யாக் கெட்டு அதனயலிகரம் ஈகாரமாதலும், (ஒருசார்) ஈற்றின் ஈர் உறல்–சில ஈற்றில் ஈர் ஆதலும், இவையும் ஈண்டு உருபு–ஆகிய இவையும் இவ்விடத்து விளியுருபுகளாகும். **எ–று.**

உ–ம்.

சிறார்–சிறா அர், அளபெடுத்தது. தெவ்வர்–தெவ்விர், ஈற்றயல் அகரம் இகரமாயிற்று. நாய்கர்–நாய்கீர், ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று. சான்றார்–சான்றீர், ஈற்றயலாகாரம் ஈகாரமாயிற்று. கணியார்–கணியீரே, ஈற்றயலாகாரம் ஈகாரமாய் ஏகார மிக்கது. நம்பியார்–நம்பீரே, ஈற்றிலேகாரமிக்கு அயல்யாக்கெட்டு அதனயலிகரம் ஈகாரமாயிற்று. எமர்–எமரீர், ஈரேற்றது. 'ஈண்'டென்ற மிகையால், கடலாரே, கடலீரே; சாத்தியாரே, சாத்தியீரே–என அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்களைச் சிறப்பித்து ரவ்வீற் றுயர்திணைப் பெயர்போலக் கூறினும், இவ்வுருபேற்றல் கொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**ரவ்வீற்று உயர்பெயர்க்கு** – (பொது விதியன்றி) ரகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள், (1) **அளபு எழல்** – சில அளபெடுத்தலும், (2) **ஈற்றயல் அகரம் இ ஈ ஆதல்** – சில ஈற்றயல் அகரமானது இகரமாதலும் ஈகாரமாதலும், (3) **ஆண்டை ஆஈ ஆதல்** – சிலஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதலும், (4) **அதனோடு ஏயுறல்** – சில ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாகி ஏகாரம் ஏற்றலும், (5) **ஈற்று ஏ மிக்கு அயல் யாக்கெட்டு அதன் அயல் நீடல்** – சில ஈற்றில் ஏகாரம் மிக்கு ஈற்றயல் யாக் கெட்டு அதன் அயல் இகரம் ஈகாரமாதலும், (6) **ஈற்றின் ஈர் உறல் – சில ஈற்றில் ஈர் வருதலும், இவையும்** – ஆகிய இவையும், **ஈண்டு** – இவ்விடத்து, **உருபு** – விளியுருபுகளாகும்.

**உதாரணம்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| (1) | சிறாஅர் | – | சிறாஅர் | – | அளபெடுத்தது. |
| (2) | தெவ்வர் | – | தெவ்விர் | – | ஈற்றயல் அகரம் இகரமாயிற்று. |
| | நாய்கர் | – | நாய்கீர் | – | ஈற்றயல் அகரம் ஈகாரமாயிற்று |
| (3) | சான்றார் | – | சான்றீர் | – | ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாயிற்று. |
| (4) | கணியார் | – | கணியீரே | – | ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாகி ஏகாரம் மிக்கது. |
| (5) | நம்பியார் | – | நம்பீரே | – | ஈற்றில் ஏகாரம் மிக்கு, ஈற்றயல் யாக்கெட்டு, அதனயல் இகரம் ஈகாரமாயிற்று. |
| (6) | எமர் | – | எமரீர் | – | ஈர் உற்றது. |

'ஈண்டு' என்ற மிகையால், கடலாரே, கடலீரே, சாத்தியாரே, சாத்தியீரே, எனவும், அஃறிணைப்பெயர், பொதுப்பெயர்களைச் சிறப்பித்து, ரவ்வீற்று உயர்திணைப் பெயர் போலக் கூறினும் இவ்வுருபேற்றல் கொள்க.

**(52)**

## 309. லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
## யகார வீற்றிற் களபுமா முருபே.

**லகார ஈற்று உயர் பெயர்க்கு அளபு அயல் நீட்சியும்**
**யகார ஈற்றிற்கு அளபும் ஆம் உருபு ஏ.**

lakāra īūūu uyarpeyarkku a_lapu ayal nītsiyum
yakāra īūūiūku a_lapum ām urupu ē.

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Vocations signs of personal nouns ending l and y**

Personal in l have (also) vowel-prolongation and lengthening of the penultimate vowel; those in y, have vowel-prolongation (only).

## ஒப்புமைப் பகுதி

எஞ்சிய விரண்டின் இறுதிப் பெயரே
நின்ற ஈற்றய னீட்டம் வேண்டும்

(தொல். சொல்.: 144)

அயல்நெடி தாயின் இயற்கை யாகும்

(தொல். சொல்.: 145)

அளபெடைப் பெயரே அளபெடை யியல

(தொல். சொல்.: 149)

ஈற்றய னீடும் ளஃக்கள்தாம் ஏகாரம்
தோற்று முறைப்பெயர்கள் துன்னுங்கால் – ஆற்ற
அயல்நெடிதாம் பேரும் அளபெடையாம் பேரும்
இயல்பாம் விளிக்கு மிடத்து

(நேமி.: 52)

லகாரவீற் றுயர்பெயர்க் கயனீ டுதலும்
யகார வீற்றிற் களபுமா முருபே

(இ.வி.: 212)

ளஃக்களி னீற்றய னீண்டு விளிக்கும்

(மு.வீ.: 583)

அயனெடி தாயி னியல்பா கும்மே

(மு.வீ.: 584)

லகார ஈற்று உயர்பெயர்க்கு அளபய னீட்சியும்
யகார ஈற்றிற்கு அளபுமாம் உருபே

(தொ.வி.: 75)

## மயிலை நாதர்

எ–ன், லகார யாகர வீற்றுயர்திணைப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: லகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண் அளபெழலும் அயல்நீட்சியும், யகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண் அளபெழலும் விளியுருபாம், எ–று.

வ–று.:

"வலம்புரித் தடக்கை மாஅனின்னிறம்" எனவும், "தோன்றால்", "தாழ்குழால்", "மடவரால்" எனவும், "விளிங்குமணிக் கொடும்பூணாஅய் நின்னாட், டிளம்பிடி" (புறநா. 130) எனவும் வரும்.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** லகார யகார ஈற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி **உணர்—ற்று.**

**இ—ள்.:** பொதுவிதியன்றி லாகர ஈற்று உயர்திணைப் பெயர்க்கு அளபு எழலும் ஈற்றயல் நீடலும், யகார ஈற்று உயர்திணைப் பெயர்க்கு அளபு எழலும் உருபாம், **எ—று.**

**'உயர்பெயர்'** என்பதனை யகார ஈற்றின்கண்ணும் உம்மையை அளபு என்பதன்கண்ணும் கூட்டுக.

**வ—று.:**

"வலம்புரித் தடக்கை மாஅல் நின்னிறம்" எனவும்;
தோன்றால், மடவரால், தாழ்குழால் எனவும்; சேஎய் எனவும்
வரும்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** லகார யகார வீற்றுப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறியது.

**இ—ள்.: லகார வீற்று உயர்பெயர்க்கு** – லகார வீற்று உயர்திணைப் பெயர்க்கண், **அளபயனீட்சியும்** – அளபெடுத்தலும் அயல் நீடலும், **யகார வீற்றிற்கு** – யகரவீற்று உயர்திணைப் பெயர்க்கண், **அளபுமாம் உருபே** – அளபெடுத்தலும் விளியுருபாம், **எ—று.**

**உ—ம்.:**

"வலம்புரித் தடக்கை மாஅல்நின் னிறம்" என அளபெடுத்தது.
தாழ்குழால், மடவரால், தோன்றால் என அயல் நீண்டது.
ஆஅய் கூறாய், மணிப் பூணாஅய் என அளபெழுந்தன.
பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** லகார யகார மெய்யீற்று உயர்திணைப் பெயர்க்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ—ள்.: லகார வீற்றுயர் பெயர்க்கு** – பொதுவிதி யன்றி லகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்க்கு, **(ஒருசா) ரளபு** – சில அளபெடுத்தலும், **(ஒருசா) ரயனீட்சியும்** – சில ஈற்றயனீளுதலும், **யகாரவீற்** (றுயர்பெயர்க்கு) – யகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்க்கு, **அளபும்** – அளபெடுத்தலும், **உருபாம்** – விளியுருபுகளாகும், **எ—று.**

**வ—று.:**

மால் – மா அல் எனவும், தோன்றல்—தோன்றால் எனவும், சேய்,
சேஎய் எனவும், அம் மூன்றுருபுகளும் வந்தன.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

லகார யகார வீற்று உயர்திணைப்பெயர்க்கண் விளியுருபிற்குச் சிறப்புவிதி

கூறுஞ் சூத்திரம் யாது?

லகாரவீற் றுயர்பெயர்க் களபய னீட்சியும்
யகர வீற்றிற் களபுமா முருபே,
(லகார ஈற்று உயர்பெயர்க்கு அளபு அயல் நீட்சியும்
யகாரவீற்றிற்கு அளபும் ஆம் உருபே.)

**இ–ள்.:** பொதுவிதி யன்றி லகர மெய்யீற்றுயர்திணைப் பெயர்க்குச் சில அளபெடுத்தலும் சிலஈற்றயனீளுதலும் யகரமெய்யீற்று யர்திணைப்பெயர்க்கு அளபெடுத்தலும் விளியுருபுகளாகும், **எ–று.**

**உ–ம்.** மால்–மாஅல் எனவும், தோன்றல்–தோன்றால் எனவும், சேய்–சேஎய் எனவும் அம் மூன்றுருபுகளும் வந்தன.

## முகவை இராமானுச கவிராயர்

**இது**, லகர யகர ஈற்று உயர்திணைப்பெயர்க்குப் பொதுவிதி மேற் சிறப்பு விதி யுணர்த்திற்று.

**இ–ள்.: சில** – லகர ஈற்று உயர்திணைப் பெயர்களுக்கு அளபெடுத்து வருதலும் ஈற்றுக்கு அயலெழுத்து நீண்டுவருதலும், சில யகர ஈற்று உயர்திணைப் பெயர்க்கு அளபெடுத்து வருதலும் உருபாம், **எ–று.**

'உயர்பெயர்' என்பதை யகர வீற்றிலும், உம்மையை உயர்பெயர்க்களபென்பதிலுங் கூட்டுக.

**வ–று.:** 'வலம்புரித் தடக்கைமா அல்நின்னிறம்' எனவும் தோன்றல். என்பது தோன்றால் எனவும், சே எய் எனவும் வரும். (சேய்–முருகன்)

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை:– லகார ஈறு உயர்பெயர்க்கு** – (பொதுவிதியின்றி) லகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு – **அளபு** அளபெடுத்தலும், **அயல் நீட்சியும்** – ஈற்றயல் நீளுதலும், **யகார ஈற்றிற்கு** – யகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபும்** – அளபெடுத்தலும், **உருபுஆம்** – உருபாகும்.

**உ–ம்:–** மால் –மா அல் – (அளபு) **தோன்றல்** – தோன்றால் –
(அயல்நீட்சி) **சேய்** – சே எய் (அளபு)

**குறிப்பு:–** 'யகரவீற்றிற்கு' எனப் பொதுப்படக் கூறியதனால் சிலவிடத்தில் தாய் – தா அய், பேய் – பே எய் என யகரவீற்றுப்பொதுப் பெயர் அஃறிணைப் பெயர்களுக்கு அளபெடுத்தல் விளியுருபாதலுங் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். லகார ஈற்று உயர்பெயர்க்கு** – பொதுவிதியன்றி லகரமெய் யீற்றுயர்திணைப் பெயர்க்கு, **(ஒருசார்) அளபு** – சில அளபெடுத்தலும், – (ஒருசார்) **அயல்நீட்சியும்** – சில ஈற்றயனீளுதலும், யகாரவீற் (றுயர்பெயர்க்கு)

**அளபும்** – யகரமெய்யீற்றுயர் திணைப் பெயர்க்கு அளபெடுத்தலும், **உருபு ஆம்** – விளியுருபுகளாகும். **எ–று.**

உ–ம் மால்–மாஆல் எ–ம் தோன்றல் – தோன்றால் எ–ம் சேய் – சேஎய், எ–ம். அம்மூன்றுருபுகளும் வந்தன.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** (பொதுவிதியன்றி), **லகார ஈறு உயர் பெயர்க்கு** – லகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபு** – அளபெடுத்தலும், **அயல் நீட்சியும்** – ஈற்றயல் நீளுதலும்; **யகார ஈற்றிற்கு** – யகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **அளபும்** – அளபெடுத்தலும், **உருபு ஆம்** – விளியுருபுகளாம்; **எ–று.**

**உ–ம்.:**

மால் – மாஅல் – அளபு. சேய் – **சேஎய்** – அளபு.

மடவரல் – மடவரால் – அயல்நீட்சி

'**யகார வீற்றிற்கு**' எனப் பொதுப்படக் கூறியதனால், சிலவிடத்தில் தாய் – தாஅய், பேய் – பேஎய் என யகர வீற்றுப் பொதுப்பெயர்க்கும் அஃறிணைப் பெயர்க்கும் அளபெடுத்தல் விளியுருபாதலும் கொள்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். லகார ஈற்று உயர்பெயர்க்கு–பொதுவிதியன்றி லகரமெய் யீற்றுயர்திணைப்பெயர்க்கு, (ஒருசார்) அளவு–சில அளபெடுத்தலும், (ஒருசார்) அயல் நீட்சியும்–சில ஈற்றயனீளுதலும், யகாரவீற்று (உயர்பெயர்க்கு) அளவும்–யகரமெய்யீற்றுயர்திணைப்பெயர்க்கு அளபெடுத்தலும், உருபு ஆம்–விளியுருபுகளாகும். **எ–று.**

உ–ம். மால்–மாஅல்–அளபு.

தோன்றல்–தோன்றல்–அயல்நீட்சி

சேய்–சேஎய்–அளபு. (யகார ஈறு) – (லகார ஈறு)

## கா. நமச்சிவாய முதலியார்

**(1) லகாரஈற்று உயர் பெயர்க்கு** – (பொதுவிதி யன்றி) லகர மெய்யீற்று உயர்திணைப் பெயர்க்கு, **அளபு** – சில அளபெடுத்தலும், அயல் நீட்சியும் – சில ஈற்றயல் நீளுதலும், (2) **யகார ஈற்றிற்கு** – யகரமெய்யீற்று உயர்திணைப் பெயர்க்கு, **அளபும்** – அளபெடுத்தலும், **உருபு ஆம்** – விளியுருபுகளாகும்.

உதாரணம்

| | | | | |
|---|---|---|---|---|
| (1) மால் | – | மாஅல் | – | அளபு. |
| தோன்றல் | – | தோன்றால் | – | அயல்நீட்சி. |
| (2) சேய் | – | சேஎய் | – | அளபு. |

## மோசசு பொன்னையா

லகரவீற்று உயர்திணைப் பெயர்களுட் சில, பொதுவிதியாற் பெறுமவற்றோடு, அளபெடுத்தலும், ஈற்றயல் நீளுதலும்; யகர வீற்று உயர்திணைப் பெயர்களுட்சில, பொது விதியாற் பெறுமவற்றோடு அளபெடுத்தலும் விளியுருபுகளாம் எ-று.

எ–டு

| | | | |
|---|---|---|---|
| 1. | மாஅல் (மால்) | – | அளபு |
| 2. | மடவரால் (மடவரல்) | – | அயல் நீட்சி |
| 3. | சேஎய் (சேய்) | – | அளபு (53) |

(53)

## 310. னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண் இறுதி யழிவத னோடய னீட்சி.

**னவ் ஈற்று உயர்திணை அல் இரு பெயர்க் கண்**
**இறுதி அழிவு அதனோடு அயல் நீட்சி.**

n̲av īṟṟu uyartiṇai allru peyarkkaṇ
iṟuti aḻivu atan̲ōtu ayal nītsi

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Vocation signs of impersonal and common-class nouns ending in n**

The other Nouns (impersonal and common class) ending in n drop their final or lengthen the penultimate.

### ஒப்புமைப் பகுதி

**னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்**

**ணிறுதி யழிவத னோடய னீட்சி**

(இ.வி.: 213)

**னவ் ஈற்று உயர்திணை அல்இரு பெயர்க்கண்**
**இறுதி அழிவு அதனோடு அயல் நீட்சி**

(தொ.வி.: 76)

## மயிலை நாதர்

**எ—ன்,** னகார வீற்றஃறிணைப் பெயர் பொதுப்பெயர்கட்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:** னகார வீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் இறுதியழிவும் இறுதியழிவதனோடு அயல்நீட்சியும் விளியுருபாம், எ—று

**வ—று.:** **"கொடுந்தா ஊலவ குறையா மிரப்போம்"** (ஐந். ஐம். 42), **"இகலுபு குதிக்கு மிகல", "கண்டல் வேரலை சேரல வாநீ"** [1] "கடும்பறைக் கருடா" எனவும், சாத்தகேள் கொற்றகேள், சாத்தாகேள், கொற்றாகேள் எனவும் வரும்.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** னகர ஈற்று அஃறிணைப் பெயர்க்கும் விரவுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி **உணர்—ற்று.**

**இ—ள்.:** பொதுவிதி யன்றி னகர ஈற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் இறுதி கெடுதலும், அதனோடு ஈற்றயல் நீடலும் விளியுருபாம், **எ—று.**

இறந்தது தழீஇய எச்சவும்மைகளும், விளியுருபாம் என்பதூஉம் தொக்கு நின்றன.

**வ—று.:** அலவ, இகல, கலுழ எனவும்; அலவா, இகலா, கலுழா எனவும்; சாத்த, கொற்ற எனவும்; சாத்தா, கொற்றா எனவும் வரும்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** னகார வீற்று அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்கட்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறியது.

**இ—ள்.: னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்** – னகார வீற்று உயர்திணை அல்லாத அஃறிணைப் பெயர்க்கண்ணும் பொதுப் பெயர்க்கண்ணும்,

---

பாட **வேறுபாடு:–**

1. கடுஞ்சிறைக்

**இறுதி அழிவு அதனோடு அயல் நீட்சி** – இறுதி அழிதலும் அதனோடு அயல் நீட்சியும் விளியுருபாம், எ–று.

**உ–ம்.:** அலவ, கலுழ என ஈறழிந்தன. அலவா, கலுழா என ஈறழிந்து அயல் நீண்டன. இனி விரவுப் பெயர் வருமாறு. சாத்தகேள், கொற்ற கேள் என ஈறழிந்தன. சாத்தா, கொற்றா என ஈறழிந்து அயல் நீண்டன. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** னகர மெய்யீற்று அஃறிணைப் பெயர்க்கும் பொதுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.: னவ் வீற்றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்** –பொதுவிதியன்றி னகர மெய்யீற்று அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களிடத்து, **(ஒருசா) ரிறுதியழிவு** – சில ஈறு கெடுதலும், **(ஒருசா) ரதனோடயனீட்சி** – சில ஈறுகெடுதலுடனே ஈற்றயனீளுதலும் விளியுருபுகளாம், எ–று.

**வ–று.:** அலவன், அலவ எனவும், கலுழன், கலுழா எனவும், சாத்தன், சாத்த எனவும், கொற்றன், கொற்றா எனவும், முறையே அஃறிணைப் பெயரிலும் பொதுப்பெயரிலும் அவ்விரண்டும் வந்தன.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

னகரவீற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எட்டாம் வேற்றுமைக்கண் பொதுவிதியானன்றிச் சிறப்புவிதியா னெய்தும் உருபுகள் யாவை?

னவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
இறுதி யழிவத னோடய னீட்சி.
(னவ்வீற்று உயர்திணை அல் இருபெயர்க்கண்
இறுதி அழிவு அதனோடு அயல் நீட்சி.)

**இ–ள்.:** பொதுவிதியன்றி னகரமெய் யீற்றஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களிடத்துச் சில ஈறு கெடுதலும் சில ஈறுகெடுதலுடனே ஈற்றயனீளுதலும் விளியுருபுகளாம், எ–று.

**உ–ம்.** அலவன்–அலவ எனவும், கலுழன்–கலுழா எனவும், சாத்தன்–சாத்த எனவும், கொற்றன்–கொற்றா எனவும், முறையே அஃறிணைப்பெயரிலும் பொதுப்பெயரிலும் அவ்விரண்டும் வந்தன.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** னகர ஈற்று அஃறிணைப் பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும் பொதுவிதிமேற் சிறப்புவிதி கூறுகின்றது.

**இ–ள்.:** சில னகர ஈற்று உயர்திணைப் பெயரல்லாத அஃறிணைப்பெயர், பொதுப்பெயர்களில் இறுதி கெடுதலும் அதனோடு ஈற்றுக்கு அயலெழுத்து நீண்டு வருதலும் விளியுருபாம், எ–று.

இதனுள், விளியுருபு என்பதும், இறுதியழிவும், அயனீட்சியும் என்னும் இறந்ததுதழுவிய எச்சவும்மைகளுங் குறைந்து நின்றன. ஆதலால் இறுதி யழிவும், அதனோடு அயனீட்சியும் உருபாமென முடித்துக் கொள்க.

**வ—று.:** அலவ, இகல, கலுழ எனவும் அலவா இகலா கலுழா எனவும் (அல்வன்—நண்டு, இகலன்—நரி, கலுழன்—கருடன்,) வரும். இவை அஃறிணை. சாத்த, கொற்ற, எனவும் சாத்தா, கொற்றா, எனவும் வரும். இவை பொதுப்பெயர்.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை:— னஈறு உயர்திணை அல் இருபெயர்க்கண் —** (பொதுவிதியின்றி) னகரமெய்யீற்று உயர்திணைப் பெயரல்லாத அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களுள் சிலவற்றிற்கு — **இறுதி அழிவு** — ஈறு கெடுதலும், **அதனோடு அயல்நீட்சி** — ஈறு கெட்டு அதன் அயல்நீளுதலும் (விளியுருபாம்).

உ—ம்:— அலவன் — அலவ, அலவா.

(என அஃறிணைப் பெயர்கள் ஈறு அழிந்தும், ஈற்றயல் நீண்டும் வந்தன, சாத்தன்— சாத்த, சாத்தா).

(எனப் பொதுப் பெயர்கள் ஈறு அழிந்தும், ஈற்றயல் நீண்டும் வந்தன).

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.: னவ்வீற்று உயர்திணை அல் இருபெயர்க்கண்** — பொதுவிதி யன்றி னகர மெய்யீற் றஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களிடத்து, **(ஒருசார்) இறுதி அழிவு** — சில ஈறு கெடுதலும், **(ஒருசார்) அதனோடு அயல் நீட்சி** — சில ஈறுகெடுதலுடனே ஈற்றயனீளுதலும் விளியுருபுகளாம், **எ—று.**

**உ—ம்.:** அலவன் — அலவ எனவும்; கலுழன் — கலுழா எனவும்; சாத்தன் — சாத்த எனவும்; கொற்றன் — கொற்றா எனவும்; முறையே அஃறிணைப் பெயரிலும் பொதுப்பெயரிலும் அவ்விரண்டும் வந்தன.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள் னவ்வீற்று உயர்திணை அல் இருபெயர்கண் —** பொதுவிதியன்றி னகர மெய்யீற் றஃறிணைப் பெயர் பொதுப்பெயர்களிடத்து — (ஒருசார்) **இறுதி அழிவு** — சில ஈறுகெடுதலும் — (ஒருசார்) **அதனோடு அயல் நீட்சி** — சில ஈறு கெடுதலுடனே ஈற்றயனீளுதலும் (விளியுருபுகளாம்). **எ—று.**

**உ—ம்** அலவன் — அலவ. எ—ம். கழலுன் — கலுழா எ—ம் சாத்தன் — சாத்த. எ—ம். கொற்றன் — கொற்றா எ—ம். முறையே அஃறினைப் பெயரிலும் பொதுப்பெயரிலும் அவ்விரண்டும் வந்தன.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.:** (பொதுவிதியன்றி), **ன ஈறு உயர்திணை அல் இருபெயர்க் கண்** – னகர மெய்யீற்று உயர்திணைப் பெயரல்லாத அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **இறுதி அழிவு** – ஈறுகெடுதலும், **அதனோடு அயல் நீட்சி** – ஈறுகெட்டு அதன் அயல் நீளுதலும், (விளியுருபுகளாம்); **எ–று.**

| | | |
|---|---|---|
| அலவன் – | அலவ – இறுதி அழிவு | அஃறிணைப் பெயர் |
| | அலவா – இறுதி அழிந்து | அயல்நீட்சி |
| சாத்தன் – | சாத்த – இறுதி அழிவு | பொதுப்பெயர் |
| | சாத்தா – இறுதி அழிந்து | அயல்நீட்சி. |

## பவானந்தம் பிள்ளை

இ–ள். னவ்வீற்று உயர்திணை அல் இருபெயர்க்கண்–பொதுவிதியன்றி னகரமெய்யீற் றஃறிணைப்பெயர் பொதுப்பெயர்களிடத்து, (ஒருசார்) இறுதி அழிவு – சில ஈறு கெடுதலும், (ஒருசார்) அதனோடு அயல் நீட்சி – சில ஈறுகெடுதலுடனே ஈற்றயனீளுதலும் விளியுருபுகளாம். **எ–று.**

உ–ம். அலுவன் – அலவ – இறுதியழிவு

அலவா – இறுதியழிந்து அயனீட்சி – அஃறிணைப்பெயர்

சாத்தன் – தாத்த – இறுதியழிவு

சாத்தா – இறுதியழிந்து அயனீட்சி – பொதுப்பெயர்.

## கா. நமச்சிவாய முதலியார்

**னவ்வீற்று உயர்திணை அல் இருபெயர்க்கண்** – (பொது விதியன்றி) னகரமெய்யீற்று அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களிடத்து, **இறுதி அழிவு** – சில ஈறு கெடுதலும், **அதனோடு அயல் நீட்சி** – சில ஈறு கெடுதலுடனே ஈற்றயல் நீளுதலும் விளியுருபுகளாம்.

**உதாரணம்**

| | | | | |
|---|---|---|---|---|
| அலவன் | அலவ | – | ஈறழிவு | அஃறிணைப் பெயர் |
| | அலவா | – | ஈறழிவோடு அயல் நீட்சி | |
| சாத்தன் | சாத்த | – | ஈறழிவு | பொதுப்பெயர் |
| | சாத்தா | – | ஈறழிவோடு அயல் நீட்சி | |

## மோசசு பொன்னையா

னகரவீற்று அஃறிணைப் பெயர்களுள்ளும், பொதுப் பெயர்களுள்ளும் சில, பொதுவிதியாற் பெறும்அவற்றோடு ஈறு கெடுதலும், ஈறுகெட்டு அதன் அயல் நீளுதலும் விளியுருபுகளாம் எ-று.

எ-டு.

| | | | |
|---|---|---|---|
| 1. | அலவ, அலவா (அலவன்) | – | அஃறிணைப் பெயர் |
| 2. | சாத்த, சாத்தா (சாத்தன்) | – | பொதுப்பெயர் |

(54)

## 311. லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண் ஈற்றய னீட்சியு முருபா கும்மே.

ல ள ஈற்று அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்க் கண்
ஈற்று அயல் நீட்சியும் உருபு ஆகும் ஏ.

la ḻa īṟṟu akhṟiṇaip peyarpoṭup peyarkkaṇ
īṟṟuayal nīṭsiyum urupu ākum ē.

### இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Vocative signs of impersonal and common-class nouns ending in l and 1.**

The above mentioned Nouns in l and 1 may also lengthen the penultimate vowel.

### ஒப்புமைப் பகுதி

லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்
ஈற்றய னீட்சியு முருபா கும்மே

(இ.வி.: 214)

லளஈற்று அஃறிணைப் பெயர்ப் பொதுப்பெயர்க்கண்
ஈற்று அயல் நீட்சியும் உருபு ஆகும்மே

(தொ.வி.: 77)

### மயிலை நாதர்

எ-ன், இவ் விரண்டீற்றுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்பு விதி யுணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்.: லகார ளகார வீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் பொதுப்பெயர்க்கண்ணும் ஈற்றயல் நீட்சியும் உருபாம், எ-று.

வ–று.: "காட்டுச்சாரோடுங்குறுமுயால்", கிளிகாள் எனவும், தூங்கால், [1]ஓங்கால், மக்காள் எனவும் வரும்; பிறவுமன்ன.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** லகார ளகார ஈற்று அஃறிணைப் பெயர்க்கும் விரவுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி **உணர்–ற்று.**

**இ–ள்.:** பொதுவிதி யன்றி லகார ளகார ஈற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும் விரவுப் பெயர்க்கண்ணும் ஈற்றயல் நீடலும் விளியுருபாம், **எ–று.**

**வ–று.:**

காட்டுச்சார் ஓடும் குறுமுயால், கிளிகாள் எனவும்; தூங்கால், மக்காள் எனவும் வரும்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** லகார ளகாரவீற்றுப் பெயர்க்கு எய்தியதன் மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ–ள்.: லள வீற்று அஃறிணைப் பெயர்** – லகார ளகார வீற்று அஃறிணைப் பெயர்க்கண்ணும், **பொதுப் பெயர்க்கண்** – லகார ளகார வீற்றுப் பொதுப் பெயர்க்கண்ணும், **ஈற்றயல் நீட்சியும் உருபாகும்மே** – ஈற்றயல் நீளலும் உருபாம், **எ–று.**

**உ–ம்.:** "காட்டுச்சா ரோடுங் குறுமுயால்," கிளிகாள் என அஃறிணைப் பெயர்க்கண் அயல் நீண்டன.

ஒதுங்கால், தூங்கால், மக்காள் என விரவுப் பெயர்க்கண் அயல் நீண்டன. பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** லகார ளகார மெய்யீற்று அஃறிணைப் பெயர்க்கும் பொதுப் பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.

**இ–ள்.: லளவீற் றஃறிணைப்பெயர் பொதுப்பெயர்க்கண்** – லகர ளகர மெய்யீற்று அஃறிணைப் பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும், **ஈற்றயனீட்சியும்** – பொதுவிதி யன்றி ஈற்றயலெழுத்து நீளுதலும், **உருபாகும்** – விளியுருபாகும், **எ–று.**

**வ–று.:** முயல், முயால், கிளிகள், கிளிகாள் எனவும், தூங்கல், தூங்கால், மக்கள், மக்காள் எனவும், வரும்.

---

**பாட வேறுபாடு:–**

1. ஒதுங்கால்

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

லளவீற்று அஃறிணைப்பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும் எய்தியதன் மேற் சிறப்புவிதியால் விளியுருபு கூறுஞ் சூத்திரம் யாது?

லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்கண்

ஈற்றய னீட்சியு முருபா கும்மே.

(ல ள ஈற்று அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்க்கண்

ஈற்று அயல் நீட்சியும் உருபு ஆகும்ஏ.)

**இ—ள்.:** லகர ளகர மெய்யீற்றஃறிணைப்பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும் பொதுவிதி யன்றி ஈற்றயலெழுத்து நீளுதலும் விளியுருபாகும், **எ—று.**

**உ—ம்.** முயல்—முயால், கிளிகள்—கிளிகாள் எனவும், தூங்கல்—தூங்கால், மக்கள்—மக்காள் எனவும் வரும்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** லகர ளகர ஈற்றுக்களை யுடைய அந்த இரண்டு பெயர்க்குஞ் சிறப்புவிதி கூறுகின்றது.

**இ—ள்.:** (பொதுவிதி யன்றி) சில லகர ளகர ஈற்று அஃறிணைப் பெயரிடத்தும் பொதுப் பெயரிடத்தும் ஈற்றுக்கு அயலெழுத்து நீண்டு வருதலும் விளியுருபாம், **எ—று.**

**வ—று.:** முயல், முயால், ஆரல், ஆரால், கிளிகள், கிளிகாள், மரங்கள், மரங்காள் இவை அஃறிணை (ஆரல்—ஓர் மீன்,) தூங்கால், மக்காள் – இவை பொதுப்பெயர். தூங்கல் என்றது – யானையையும், சோம்பலுடையவன், உடையவள், உடையது, என்னு முக்கூற்று ஒருமைகளையும், மக்கள் என்பது இருதிணை இருகூற்றுப் பன்மையையுங் குறித்தலிற் பொதுப்பெயரெனக் காண்க.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை:— லள ஈறு அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்க்கண்** – லளவீற்று அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **ஈறு அயல் நீட்சியும்** – (பொதுவிதியின்றி) ஈற்றயல் எழுத்து நீளுதலும், உருபாகும் – விளியுருபாம்.

உ–ம்:– முயல் – முயால், கிளிகள் – கிளிகாள் – (அஃறிணைப் பெயர்)

தூங்கல் – தூங்கால், மக்கள் – மக்காள் – (பொதுப்பெயர்)

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.: ல ள ஈற்று அஃறிணைப்பெயர் பொதுப் பெயர்க்கண்** – லகர ளகர மெய்யீற் றஃறிணைப் பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும், **ஈற்றயல் நீட்சியும்**

**உருபு ஆகும்** – பொது விதியன்றி ஈற்றயலெழுத்து நீளுதலும் விளியுருபாகும், எ–று.

**உ–ம்.:** முயல்–முயால், கிளிகள் – கிளிகாள் எனவும்; தூங்கல் –தூங்கால், மக்கள்–மக்காள் எனவும் வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.: லள ஈற்று அஃறிணைப் பெயர் பொதுப்பெயர்கண்** – லகரளகர மெய்யீற்றஃறிணைப் பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும், – **ஈற்றயல் நீட்சியும் உருபு ஆகும்** – பொதுவிதியன்றி ஈற்றயலெழுத்து நீளுதலும் விளியுருபாகும். **எ–று.**

**உ–ம்** முயல் – முயால், கிளிகள் – கிளிகாள். எ–ம். தூங்கல் – தூங்கால், மக்கள் – மக்காள், எ–ம். வரும்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ல ள ஈ று அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்க்கண்**–லகர ளகர மெய்யீற்று அஃறிணைப் பெயர் பொதுப் பெயர்களுள் சிலவற்றிற்கு, **ஈறு அயல் நீட்சியும்** – (பொதுவிதி யன்றி) ஈற்றயலெழுத்து நீளுதலும், **உருபு ஆகும்** – விளியுருபாம்; **எ–று.**

**உ–ம்.:** முயல்–முயால்; கிளிகள்–கிளிகாள்–அஃறிணைப் பெயர். தூங்கல்–தூங்கால்; பிள்ளைகள்–பிள்ளைகாள்–பொதுப்பெயர்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். ல ள ஈற்று அஃறிணைப்பெயர் பொதுப்பெயர்க்கண்–லகர ளகர மெய்யீற் றஃறிணைப் பெயர்க்கும் பொதுப்பெயர்க்கும், ஈற்றயல் நீட்சியும் உருபு ஆகும் – (பொதுவிதியன்றி) ஈற்றயலெழுத்து நீளுதலும் விளியுருபாகும். **எ–று.**

உ–ம். முயல்–முயால், கிளிகள்–கிளிகாள் (அஃறிணை). தூங்கல்–தூங்கால், மக்கள்–மக்காள் (பொது).

## கா. நமச்சிவாய முதலியார்

**ல ள ஈற்று அஃறிணைப் பெயர் பெதுப் பெயர்க்கண்** – லகர ளகர மெய்யீற்று அஃறிணைப் பெயர்க்கும் பொதுப் பெயர்க்கும், ஈற்றயல் நீட்சியும் – (பொது விதியன்றி) ஈற்றயல் எழுத்து நீளுதலும், உருபு ஆகும் – விளியுருபாகும்.

**உதாரணம்**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| முயல் | – | முயால் | ஈற்றயல் நீட்சி | – | அஃறிணைப் பெயர் |
| கிளிகள் | – | கிளிகாள் | | | |

தூங்கல் - தூங்கால்
மக்கள் - மக்காள்
ஈற்றயல் நீட்சி - பொதுப்பெயர்

## மோசசு பொன்னையா

லகரளகரவீற்று அஃறிணைப் பெயர்களுள்ளும், பொதுப் பெயர்களுள்ளும் சில, பொதுவிதியாற் பெறுமவற்றோடு ஈற்றயலெழுத்து நீளுதலும் விளியுருபாம் எ-று.

எ-டு

முயால் (முயல்), கிளிகாள் (கிளிகள்)–அஃறிணைப்பெயர்
தூங்கால் (தூங்கல்), பிள்ளைகாள் (பிள்ளைகள்)–பொதுப்பெயர்

(55)

## 312. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின் அளபும் புலம்பி னோவு மாகும்.

**அண்மையின் இயல்பும் ஈறு அழிவும் சேய்மையின்**
**அளபும் புலம்பின் ஓவும் ஆகும்.**

aṇmaiyiṉ iyalpum īūu aḻivum sēymaiyiṉ
aḷapum pulampiṉ ōvum ākum

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**An exception on Vocative signs**

(Of the various forms of the Vocative),—leaving (the Noun), unchanged and dropping the final are those adapted to nearness; Vowel-prolongation to remoteness; and (the addition of) ô, to weeping.

## ஒப்புமைப் பகுதி

**அண்மைச் சொல்லே யியற்கை யாகும்**

(தொல். சொல்.: 127)

**அண்மைச் சொல்லிற்கு அகர மாகும்**

(தொல். சொல்.: 131)

**உளவெனப் பட்ட எல்லாப் பெயரும்**
**அளபிறந் தனவே விளிக்குங் காலைச்**
**சேய்மையி னிசைக்கும் வழக்கத் தான**

(தொல். சொல்.: 152)

**............ ஏகாரமும் கூவுங்காற் சேய்மைக்**
**களவிறப்ப நீளும் அவை**

(நேமி.: 53: 3–4)

**அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையி**
**னளவும் புலம்பி னோவு மாகும்**

(இ.வி.: 215)

**அண்மையின் இயல்பும் ஈறுள அழிவும் சேய்மையின்**
**அளபும் புலம்பின் ஓவும் ஆகும்**

(தொ.வி.: 78)

**அண்மைப் பெயரியல் பாக விளிக்கும்**

(மு.வீ.: 565)

**இருதிணை மருங்கினு மெல்லாச் சொற்களுஞ்**
**சேய்மையி னளவைக் கடந்துசென் றிசைக்கும்**

(மு.வீ.: 592)

## மயிலை நாதர்

எ–ன், உரைத்த விளிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியுணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: அணியாரை விளிக்குமிடத்து இயல்பும் ஈற்றினது அழிவும், சேயாரை விளிக்குமிடத்து அளபெழலும், புலம்பின்கண் ஒகாரமுமாம், எ–று.

உதாரணம் முன்னர்க்காட்டினவற்றிற் கண்டுகொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** மேல் விதந்த விளியுருபுகட்கு ஆவதோர் புறனடை **உணர்–ற்று.**

**இ–ள்.:** மேற்போந்த விளியுருபுகளுள் இயல்புகளும் ஈறு அழிவுகளும் அண்மை விளிக்கண்ணும், அளபுகள் சேய்மை விளிக்கண்ணும், ஒகாரங்கள் புலம்பல் விளிக்கண்ணும் வரும், **எ–று.**

எனவே, ஏனை விளியுருபுகள் அண்மை, சேய்மை, புலம்பு என்னும் மூன்றிடத்தும் விராய் வரும் என்பது பெற்றாம்.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** உரைத்த விளி வேற்றுமை உருபிற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.

**இ—ள்.:** **அண்மையின் இயல்பும் ஈறழிவும்** – அணியாரை விளிக்குமிடத்து இயல்பும் ஈற்றினது அழிவும், **சேய்மையின் அளபும்** – சேய்மையாரை விளிக்குமிடத்து அளபெடுத்தலும், **புலம்பின் ஓவுமாகும்**– புலம்பின்கண் ஒகாரமுமாம், **எ—று.**

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன்சொல்லப்பட்ட விளியுருபுகளுக்காவதோர் புறனடையுணர்த்துகின்றது.

**இ—ள்.:** முன்சொல்லப்பட்ட விளியுருபுகளுள், **அண்மையின்** – சமீப விளிகளுக்கு, **இயல்பு மீறழிவும்**—இயல்பாதலும் ஈறுகெடுதலும், **சேய்மையின்**— தூர விளிகளுக்கு, **அளவும்**—அளபெடுத்தலும், **புலம்பின்**—புலம்பல் விளிகளுக்கு, **ஓவும்**—ஓகார மிகுதலும், **ஆகும்**—வரும், **எ—று.**

(எனவே, மற்றை விளி வேற்றுமை யுருபுகள் இம்மூன் றிடங்களிலுங் கலந்து வருமென்கிறது பெற்றாம்.)

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

112. இதுகாறும் எட்டாம் வேற்றுமைக்குக் கூறிய இயல்பு முதலிய உருபுகள் இன்னஇன்னவிடத்திற் குரியனவெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையின்

அளபும் புலம்பி னோவு மாகும்

(அண்மையின் இயல்பும் ஈறு அழிவும் சேய்மையின்

அளபும் புலம்பின் ஓவும் ஆகும்.)

**இ—ள்.:** முன் சொல்லப்பட்ட விளியுருபுகளுள் இயல்பாதலும் ஈறு கெடுதலுஞ் சமீபவிளிக்கண்ணும், அளபெடுத்தல் தூரவிளிக்கண்ணும், ஓகாரமிகுதல் புலம்பல்விளிக்கண்ணும், வரும், **எ—று.**

எனவே, மற்றைவிளியுருபுகள் இம்மூன்றிடத்துங் கலந்து வருமென்பதுபெற்றாம்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** மேலே சொல்லப்பட்ட விளியுருபுகளுக்குப் புறனடை யுணர்த்திற்று,

**இ—ள்.:** **அண்மையி னியல்பும்** – (மேற் சொல்லிய விளி யுருபுகளுள்) இயல்புகளும் ஈறுகெடுதல்களும் சமீபத்திலும், **சேய்மையினளவும்** – அளபுகள் தூரத்திலும், **புலம்பினோவுமாகும்** –ஓகாரம் புலம்புதலிலும் வரும், **எ—று.**

எனவே மற்ற விளியுருபுகள் சமீபம், தூரம், புலம்பல் என்ற இந்த மூன்றிடத்துங் கலந்து வருமென்பதாயிற்று. உதாரண மேலே காட்டப்பட்டனவற்றுட் காண்க. இரண்டும் ஒன்றும் ஒன்றுமாமென முடித்துக் கொள்க.

**"அண்மைச் சொல்லே யியற்கை யாகும்"**

எனவும்,

**"அண்மைச் சொல்லிற் ககரமாகும்"**

எனவும்,

**"ஊவெனப்பட்டவெல்லாப் பெயரு**
**மளபிறந் தனவே விளிக்குங் காலைச்**
**சேய்மை யினிசைக்கும் வழக்கத் தான"**

என ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை:–** (முன் சொல்லப்பட்ட விளியுருபுகள், **அண்மையின்** – சமீபவிளிகளுக்கு, **இயல்பும்** – இயல்பாதலும், **ஈறு அழிவும்,** – ஈறுகெடுதலும், **சேய்மையின்** – தூரவிளிகளுக்கு, **ஓவும்** – ஓகாரம் மிகுதலும், **ஆகும்** – வரும்.

குறிப்பு :– எனவே, மற்றை விளியுருபுகள் இம்மூன்றிடங்களிலும் கலந்துவரும்.

**உ–ம் :–** அண்மைவிளி – தம்பி, அரச.
சேய்மைவிளி – மாஅல், சீறா அர்.
புலம்பல்விளி – அப்பாவோ.(இதுவும் அது – விளிக்கப்படாதபெயர்கள்)

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.:** முன் சொல்லப்பட்ட விளியுருபுகளுள், **இயல்பும் ஈறு அழிவும் அண்மையின்** – இயல்பாதலும் ஈறு கெடுதலுஞ் சமீப விளிக்கண்ணும், **அளபு சேய்மையினும்** – அளபெடுத்தல் தூர விளிக்கண்ணும், **ஓ புலம்பினும் ஆகும்** – ஓகார மிகுதல் புலம்பல் விளிக்கண்ணும் வரும், **எ–று.**

எனவே, மற்றை விளியுருபுகள் இம்மூன்றிடத்துங் கலந்து வருமென்பது பெற்றாம்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள் முன்சொல்லப்பட்ட விளியுருபுகளுள்** – இயல்பும் ஈறு அழிவும் அண்மையின் – இயல்பாதலும் ஈறுகெடுதலுஞ் சமீபவிளிக்கண்ணும், – **அளபு சேய்மையினும்** – அளபெடுத்தல் தூரவிளிக்கண்ணும், **ஓ புலம்பினும் ஆகும்** – ஓகாரமிகுதல் புலம்பல் விளிக்கண்ணும் வரும். **எ–று.**

எனவே, மற்றைவிளியுருபுகள் இம்மூன்றிடத்துங் கலந்து வருமென்பது பெற்றாம்.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ—ள்.:** (முன்சொல்லப்பட்ட விளியுருபுகளுள்), **அண்மையின்** — சமீபத்திலிருக்கிற பொருளை அழைக்குமிடத்து, **இயல்பும்** — இயல்பாதலும், **ஈறு அழிவும்** — ஈறு கெடுதலும்; **சேய்மையின்** — தூரத்திலிருக்கிற பொருளை அழைக்குமிடத்து, **அளபும்** — அளபெடுத்தலும்; **புலம்பின்** — அழுகையில் ஒரு பொருளை அழைக்குமிடத்து, **ஓவும்** — ஒகாரம் மிகுதலும், **ஆகும்** — வரும்; **எ—று.**

எனவே, மற்றை விளியுருபுகள் இம் மூன்றிடங்களிலும் கலந்து வரும்.

**உ—ம்.:**

| | | |
|---|---|---|
| அண்மை விளி | — | தம்பி, அரசு. |
| சேய்மை விளி | — | மாஅல், சிறாஅர் |
| புலம்பல் விளி | — | அப்பாவோ. |

## பவானந்தம் பிள்ளை

இ—ள். (முன் சொல்லப்பட்ட விளியுருபுகளுள்) இயல்பும் ஈறு அழிவும் அண்மையின்—இயல்பாதலும் ஈறு கெடுதலுஞ் சமுபவிளிக் கண்ணும், அளவு சேய்மையினும் — அளபெடுத்தல் தூரவிளிக்கண்ணும், ஓ புலம்பினும் ஆகும்— ஒகார மிகுதல் புலம்பல் விளிக்கண்ணும் வரும். **எ—று.**

எனவே, மற்றைவிளியுருபுகள் இம்மூன்றிடத்துங் கலந்து வருமென்பது பெற்றாம்.

உ—ம். தம்பி, அரச — அண்மை விளி.

மா அல், சிறாஅர் — சேய்மை விளி.

அப்பாவோ — புலம்பல் விளி. (56)

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ—ள்.) (முன்சொல்லப்பட்ட விளியுருபுகளுள்) அண்மையின் — சமீப விளிகளுக்கு, இயல்பும் ஈறு அழிவும் — இயல்பாதலும் ஈறு கெடுதலும், சேய்மையின் தூர விளிகளுக்கு, அளபும் — அளபெடுத்தலும், புலம்பின் — புலம்பல் விளிகளுக்கு, ஓவும் — ஒகாரமிகுதலும், ஆகும் — வரும். (எ—று)

(பொ—ரை.) மேற் சொல்லிய விளியுருபுகளுள் சமீப விளிகளுக்கு இயல்பாதலும், ஈறு கெடுதலும்; தூரவிளிகளுக்கு அளபெடுத்தலும்; புலம்பல் விளிகளுக்கு ஒகார மிகுந்துவருதலும் ஆகும்.

எனவே மற்றை விளிவேற்றுமை யுருபுகள் இம் மூன்றிடங்களிலும் கலந்துவரும் என்பது பெற்றாம்.

(உ–ம்.) அன்னை.

அரச. அண்மைவிளி.

வேஎள். –சேய்மைவிளி.

ஐயாவோ. –புலம்பல்விளி.

(எட்டாம் வேற்றுமை ஏற்காத பெயர்கள்.)

நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாம்தான் இன்னன் விளியா.

## கா. நமச்சிவாய முதலியார்

(முன் சொல்லப்பட்ட விளியுருபுகள்) (1) **அண்மையின்** – சமீப விளிகளுக்கு, **இயல்பும் ஈறு அழிவும்** – இயல்பாதலும் ஈறு கெடுதலும், (2) **சேய்மையின்** – தூரவிளிகளுக்கு, **அளபும்** – அளபெடுத்தலும், (3) **புலம்பின்** – புலம்பல் விளிகளுக்கு, **ஓவும்** – ஓகாரம் மிகுதலும், **ஆகும்** – வரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| (1) | அன்னை | – இயல்பு | | |
| | அரச | – ஈறு அழிவு | – | அண்மைவிளி |
| (2) | வேஎள் – | அளபு | – | சேய்மைவிளி. |
| (3) | ஐயாவோ | – ஓகாரம் மிக்கது | – | புலம்பல்விளி. |

## மோசசு பொன்னையா

முன்னர்ச் சொல்லப்பட்டுள்ள விளியுருபுகளுள் அண்மைப் பொருளை அழைக்குமிடத்து இயல்பாதலும், ஈறுகெடுதலும்; சேய்மைப் பொருளை அழைக்குமிடத்து அளபெடுத்தலும்; அழுகையில் ஒரு பொருளை அழைக்குமிடத்து ஓகாரம் மிகுதலும் விளியுருபாம் எ-று.

எ–டு.

| | | | |
|---|---|---|---|
| 1. | தம்பி, அரசு | – | அண்மை விளி |
| 2. | மாஅல், சிறாஅர் | – | சேய்மை விளி |
| 3. | அப்பாவோ | – | புலம்பல் விளி |

**(56)**

313. நுவ்வொடு வினாச்சுட் டுற்ற னளர
வைதுத் தாந்தா னின்னன விளியா.

நுவ் ஒடு வினாச் சுட்டு உற்ற ன ள ர
வை து தாம் இன்னன விளியா.

nuvotu viṉās suttu uūūa ṉa ḷa ra
vai ṭu ṭām iṉṉaṉa viḷiyā

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Nouns which do not admit of the vocative form**

Personal in o, l, and r beginning with **nu**, and the interrogative and Demonstrative letters, impersonals ending in **vai** and **tu**, (the common-class Nouns)tam and tan, with others of this kind, — are destitute of the vocative form.

## ஒப்புமைப் பகுதி

தநநு எஎன அவைமுத லாகித்
தன்மை குறித்த னரளஎன் இறுதியும்
அன்ன பிறவும் பெயர்நிலை வரினே
இன்மை வேண்டும் விளியொடு கொளலே

(தொல். சொல்.: 154)

தானென் பெயரும் சுட்டுமுதற் பெயரும்
யானென் பெயரும் வினாவின் பெயரும்
அன்றி யனைத்தும் விளிகோ ளிலவே

(தொல். சொல்.: 137)

சுட்டுமுதற் பெயரே முற்கிளந் தன்ன

(தொல். சொல்.: 142)

.................... வினாவின் பெயரென்று
அம்முறை யிரண்டும் அவற்றியல் பியலும்

(தொல். சொல்.: 143)

சுட்டுமுதற் பெயரும் வினாவின் பெயரும்
முற்கிளந் தன்ன என்மனார் புலவர்

(தொல். சொல்.: 148)

**தநநு எஎன அவை முதலாகித்**
**தன்மை குறித்த னஎரஎன் இறுதியும்**
**வினாச் சுட்டுஎனும் அவைமுதல் ஆகி**
**ஐம்பால் குறித்த ஐவகை இறுதியும்**
**அன்ன பிறவும் தாமும் தானும்**
**இன்மை வேண்டும் விளியொடு கொளலே**

(இ.வி.: 216)

**தமர்நுமர் தமன்நுமன் தமள்நமள் நுமள்விளி**
**ஏலா நமர்நமள் என்பதும் அற்றே**

(மு.வீ.: 593)

**யாவள் அவள் இவள் உவள் விளியாவே**

(மு.வீ.: 587)

**அவர் இவர் உவர் விளையடையா ஆகும்**

(மு.வீ.: 581)

**யான் அவன் இவன் உவன் விளி ஏலாவே**

(மு.வீ.: 575)

## மயிலை நாதர்

**எ–ன்,** மேல் விளியேற்குமென்ற ஈற்றுப்பெயர்களுள் இவை ஏலாவென எடுத்துணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** நுவ்வையும் முதல்வினாக்களையும் சுட்டையு முதலாகவுடைய னகாரமே ளகாரமே ரகாரமே வையே நுவ்வே யென்றீற்றுப் பெயர்களும் தாமென்பதும் தானென்பதும் விளியேலா, எ–று.

**வ–று.:** நுமன், நுமள், நுமர்; எவன், எவள், எவர், எவை, எது; ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது; யாவன், யாவள், யாவர், யாவை, யாது; அவன், அவள், அவர், அவை அது; இவன், இவள், இவர், இவை, இது; உவன், உவள், உவர், உவை, உது; தாம்; தான் என்பன.

**'இன்னன'** என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையவை, மற்றையதென்பனவும், எண்ணிறை யளவுப்பெயர் முதலாயினவுங் கொள்க.

நுவ்வையும் செவ்வெண்ணாக எண்ணாது ஒடுக் கொடுத்து வேறோதியது, வையும் துவ்வும் அதனொடு சாராவென்பது அறிவித்தற்கெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** 'இ உ ஊ வோடு' (304) என்னும் சூத்திரத்திற்கு ஆவதோர் புறனடை **உணர்—ற்று.**

**இ—ள்.:** மேல் விளிக்கப்படும் என்றவற்றுள் நுவ்வுடனே மூன்று முதல்வினாவையும் மூன்று சுட்டையும் வரன்முறையே பொருந்திய ன ள ர என்னும் மூன்றீற்று உயர்திணைப் பெயர்களும், வை து என்னும் இரண்டு ஈற்று அஃறிணைப் பெயர்களும், தான் என்னும் பொதுப்பெயரும் விளிக்கப்படா, **எ—று.**

இங்ஙனம் விதந்த கிளைப்பெயர் வினாப்பெயர் சுட்டுப்பெயர்களின் இடை நிற்கும் எழுத்தை ஒழித்து முதலெழுத்தோடு உற்றதாக இறுதி ன ள ரக்களைக் கூறினமையின் வரன் முறை என்றாம்.

நுவ்வொடு, வை து என்னும் ஈறு இரண்டும் பொருந்தா என்பார் அதனை ஒடுக் கொடுத்துப் பிரித்தார்.

மகர ஈற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமையின் ஈண்டுத் தாம் என்றது அசைநிலை.

**வ—று.:** நுமன் நுமள் நுமர் எனவும்; எவன் எவள் எவர் எவை எது எனவும்; யாவன் யாவள் யாவர் யாவை யாது எனவும்; ஏவன் ஏவள் ஏவர் ஏவை ஏது எனவும்; அவன் அவள் அவர் அவை அது எனவும்; இவன் இவள் இவர் இவை இது எனவும்; உவன் உவள் உவர் உவை உது எனவும்; தான் எனவும் வரும்.

'இன்னன' என்றமையானே, பிறன் மற்றையான் என்றற் றொடக்கத்தனவும் கொள்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ—ம்,** விளி ஏற்குமென்ற ஈற்றுப் பெயருள்ளும் இவை ஏலாவென எடுத்துக் கூறுகின்றது.

**இ—ள்.: நுவ்வொடு வினாச் சுட்டு** – நுவ்வையும் முதல் வினாக்களையும் மூன்று சுட்டையும், **உற்ற ன ள ர வை து** – பொருந்திய னவ்வும் ளவ்வும் ரவ்வும் வையும் துவ்வும் என்று இவ்வீற்றுப் பெயர்களும், **தாம் தான் இன்ன விளியா** – தாமென்பதும் தா னென்பதும் இவை போல்வன விளியுருபு ஏலா, **எ—று.**

உ—ம்: நுமன், நுமள், நுமர், எவன், எவள், எவர், எது, எவை, யாவன், யாவள், யாவர், யாது, யாவை, அவன், அவள், அவர், அது, அவை, இவன், இவள், இவர், இது, இவை, உவன், உவள், உவர், உது, உவை, தாம், தான் என்ன விளி ஏலா என்க.

**"இன்னன"** என்றதனால் மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றையன எனவும் எண்ணிறையளவுப் பெயர் முதலவும் விளி ஏலா எனக் கொள்க.

## விசாகப் பெருமாளையர்

இது, இ உ ஊ வோடென்ற சூத்திரத்திற்கு ஆவதோர் புறனடை யுணர்த்துகின்றது.

**இ–ள்.: நுவ்வொடு** – நுவ்வுடனே, **வினா** – மூன்று முதல் வினாவையும், **சுட்டு** – மூன்று சுட்டையும், **உற்ற** –முறையே பொருந்திய, **னளர** – ன ள ர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களும், **வை து** – வை து என்கிற விரண்டு, ஈற்று – அஃறிணைப் பெயர்களும், **தாந்தான்** – இவ்விரண்டு பொதுப்பெயர்களும், **இன்ன**–இவை போல் கின்ற பிறவும், **விளியா** – விளிக்கப்படுவனவல்ல, **எ–று.**

(வை து என்கிற விரண்டும் நுவ்வொடு பொருந்தா தென்பார் ஒடுக் கொடுத்துப் பிரித்தார்) நுமன், நுமள், நுமர் எனவும், எவன், எவள், எவர், எது, எவை, யாவன், யாவள், யாவர், யாது, யாவை, எவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை எனவும், அவன், அவள், அவர், அது, அவை எனவும், இவை எனவும், தான் எனவும், தாம் எனவும், வருகின்றவிப் பெயர்கள் விளியேலாமை காண்க. இன்னன வென்றதனால், பிறன் மற்றையான், முதலானவையுங் கொள்க.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

விளியேலாப் பெயர்கள் இவையெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

நுவ்வொடு வினாச்சுட்டுற்ற ன ள ர

வை துத் தாந்தா னின்னன விளியா

(நுவ்வொடு வினாச்சுட்டு உற்ற ன ள ர

வை து தான் தாம் இன்னன விளியா.)

**இ–ள்.:** நுவ்வுடனே மூன்று முதல்வினாவையும் மூன்று சுட்டையும் முறையே பொருந்திய ன ள ர என்னும் மூன்றீற்றுயர் திணைப்பெயர்களும் வை து என்னுமிரண்டீற்றஃறிணைப் பெயர்களும் தாம் தானென்னும் பொதுப்பெயர்களும் இவை போல்வன பிறவும் விளிக்கப்படுவனவல்ல, **எ–று.**

வை து என்னு மிரண்டும் நுவ்வொடு பொருந்தா என்பார், ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

**உ–ம்.** நுமன், நுமள், நுமர் எனவும், எவன், எவள், எவர், எவை, எது எனவும், யாவன், யாவள், யாவர், யாவை, யாது எனவும், எவன், ஏவள், ஏவர், எவை, எது எனவும், அவன், அவள், அவர், அவை, அது எனவும், இவன், இவள், இவர், இவை, இது எனவும், உவன், உவள், உவர், உவை, உது. எனவும், தாம், தான் எனவும் வரும் இப்பெயர்கள் விளியேலாமை காண்க.

இன்னன என்றதனால், தமன், தமள், எமன் முதலியனவும் மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றையன, மற்றையவை, பிறன், பிறள், பிறிது, பிற முதலியனவுங் கொள்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** இ உ ஊவோ டென்னுஞ் சூத்திரத்திற்குப் புறனடை கூறுகின்றது.

**இ—ள்.: நுவ்வொடு வினாச் சுட்டுற்ற** — (மேல்விளியுருபேற்கு மென்றவற்றுள்) நுவ்வுடனே மூன்று முதல்வினா வெழுத்தையும் மூன்று சுட்டெழுத்தையும் வரன்முறையாகவே பொருந்திய, **ன ள ர வை து ன ள ர** — என்னும் மூன்று ஈற்று உயர்திணைப் பெயர்களும் வை து என்னும் இரண்டீற்று அஃறிணைப் பெயர்களும், **தாந் தான்**—தாம் தான், என்னும் பொதுப் பெயர்களும், **இன்னன**— இவை போல்வனவும், **விளியா**—விளியுருபு கொள்ளாவாம், **எ—று.**

இந்த மூவகைப் பெயர்களின் இடையெழுத்தைச் சொல்லாத தினாலே வரன்முறை யெனப்பட்டது. நுவ்வை ஒடுக் கொடுத்துப் பிரித்ததினாலே அதனோடு வை, து பொருந்தாதெனக் காண்க. தாம்—என்பதை யிங்குங் கூறியது தொடர்பு தோன்றற்கு.

**வ—று.:** நுமன், நுமள், நுமர் எனவும்; எவன், எவள், எவர், எவை, எது எனவும்; அவன், இவன், உவன், அவள், இவள், உவள், அவர், அவை, அது எனவும்; தாம், தான் எனவும் வரும். இன்ன வென்றதினால் பிறன், பிறள், பிறர், மற்றையான், மற்றையாள், மற்றையார், அன்னன், அன்னள், அன்னர் ஏனையோன், ஏனையோள், ஏனையோர், ஏனையவை, ஏனையது என்றாற் போல்வனவும் விளியேலாவெனக் கொள்க.

> **"தானென் பெயருஞ் சுட்டுமுதற் பெயரும்**
> **யானென் பெயரும் வினாவின் பெயரு**
> **[illegible] யனைத்தும் விளிகோ ளிலவே"**

எனவும்,

> **"தநநு எஎன வவை முதலாகித்**
> **தன்மை குறித்த னளர வெனிறுதியு**
> **மன்ன பிறவும் பெயர்நிலை வரினே**
> **யின்மை வேண்டும் விளியொடு கொளலே"**

எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :— நுவ்வோடு** — 'நு' என்பதையும், **வினா** (எ ஏ யா என்னும மூன்று முதல்) வினாவையும், **சுட்டு** — அ இ உ என்னும் மூன்று சுட்டையும், **உற்ற** — முறைப்படி பொருந்திய, **ன ள ர** — ன ள ர என்னும் மூன்று மெய்யீற்றுயர்திணை முப்பாற்பெயர்களும், **வைது** — வைது என்கிற இரண்டு ஈற்று அஃறிணை இருப்பாற்பெயரும், **தாம் தான்** — இவ்விரண்டு பொதுப் பெயர்களும், **இன்னன** — இவைபோல்வன பிறவும், **விளியா** — விளிக்கப் படுவனவல்ல.

அவை வருமாறு :— நுமன், நுமள், நுமர் அவன், அவள், அவர்.

| | |
|---|---|
| எவன், எவள், எவர் | இவன், இவள், இவர். |
| யாவன், யாவள், யாவர் | உவன், உவள், உவர். |
| ஏவன், ஏவள், ஏவர் | அது, அவை. |
| எது, எவை. | இது, இவை. |
| ஏது, ஏவை | உது, உவை. |

தாம், தாம்.

(இவை விளிக்கப்படாவாம்)

**குறிப்பு :–** 'படர்க்கையோரைத் தன் முகமாகத் தானழைப்பதுவே' என்றதனால் – யான் முதலிய தன்மைபெயர்களும், நீ முதலிய முன்னிலைப் பெயர்களும், 'இன்னன' என்றதனால் – பிறன், மற்றையான், எல்லாம் முதலியனவும் விளியேலாமை காண்க. வை து என்கிற இரண்டும் நுவ்வோடு பொருந்தாவென்பார் அதனை ஒடுக்கொடுத்துப் பிரித்துக் கூறினார். ஓசையின்பம்நோக்கி, 'வைதுத்தாம்தான்' எனமாற்றிக் கூறினார்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: நுவ்வொடு வினாச்சுட்டு உற்ற ன ள ர** – நுவ்வுடனே மூன்று முதல் வினாவையும் மூன்று சுட்டையும் முறையே பொருந்திய ன ள ர என்னு மூன்றீற்றுயர்திணைப்பெயர்களும், **வை து** – வை து என்னு மிரண்டீற்றஃறிணைப் பெயர்களும், **தான்** – தானென்னும் பொதுப்பெயரும், **இன்னன**–இவை போல்வன பிறவும், **விளியா**–விளிக்கப்படுவனவல்ல, **எ–று.**

வை து என்னுமிரண்டும் நுவ்வொடு பொருந்தா என்பார், ஒடுக் கொடுத்துப் பிரித்தார்.

மகர வீற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமையால் இங்கே தாம் என்றது அசைநிலை.

**உ–ம்.:** நுமன், நுமள், நுமர். எனவும்; எவன், எவள், எவர், எவை, எது. எனவும்; யாவன், யாவள், யாவர், யாவை, யாது. எனவும்; ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது, எனவும்; அவன், அவள், அவர், அவை, அது. எனவும்; இவன், இவள், இவர், இவை, இது. எனவும்; உவன், உவள், உவர், உவை, உது. எனவும்; தான் எனவும்; வரும் இப்பெயர்கள் விளியேலாமை காண்க.

'**இன்னன**' என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றையன, மற்றையவை, பிறன், பிறள், பிறர், பிறிது, பிற முதலியனவுங் கொள்க.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். நுவ்வொடு வினாச்சுட்டு உற்ற னளர** – நுவ்வுடனே மூன்று முதல்வினாவையும் மூன்று சுட்டையும் முறையே பொருந்திய னளர என்னு மூன்றீற்றுயர் திணைப்பெயர்களும், **வைது** – வைது என்னு மிரண்டீற் றஃறிணைப் பெயர்களும் **தான்** – தானென்னும் பொதுப்பெயரும், – **இன்னன**– இவைபோல்வன பிறவும், – **விளியா** – விளிக்கப்படுவன வாகா, எ–று.

வைது என்னுமிரண்டும் நுவ்வொடு பொருந்தா என்பார், ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

மகரவீற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமையால் இங்கே தாம் என்றது அசைநிலை.

உ–ம் நுமன், நுமள், நுமர் எனவும் எவன், எவள், எவர், எவை, எது – எம், யாவன், யாவள், யாவர், யாவை, யாது, எ–ம், ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது, எ–ம் அவன், அவள், அவர், அவை, அது. எ–ம். இவன், இவள், இவர், இவை, இது. எ–ம் உவன், உவள், உவர், உவை, உது. எ–ம். தான் எ–ம் வரும் இப்பெயர்கள் விளியேலாமை காண்க.

இன்னன என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றையன, மற்றயவை, பிறன், பிறள், பிறர், பிறிது, பிற முதலியனவுங்கொள்க.

சூத்திரம். தானென்பெயருஞ்சுட்டுமுதற் பெயரும், யானென்பெயரும் வினாவின்பெயரு, மன்றியனைத் தும்விளிகோளிலலே. எ–ம். தநநுஎ எனவவை முதலாகித் தன்மைகுறித்தனளர வெனிறுதியு, மன்னபிறவும்பெ யர்நிலைவரினே, யின்மைவேண்டும் விளியொடு கொளலே, எ–ம். ஆசிரியர் தொல்காப்பியனார் கூறுதலுங் காண்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: நுவ்வொடு –** நு என்பதையும், **வினா**–(எ ஏ யா என்னும் மூன்று முதல்) வினாவையும், **சுட்டு** – (அ இ உ என்னும் மூன்று) சுட்டையும், **உற்ற** – (முதலாகப்)பொருந்திய, **ன ள ர** – ன ள ர என்னும் மூன்று மெய்யீற்று உயர்திணை முப்பாற் பெயர்களும், **வை து** – வை து என்கிற இரண்டு ஈற்று அஃறிணையிருபாற் பெயர்களும், **தாம் தான்** – இந்த இரண்டு பொதுப்பெயர்களும், **இன்னன** – இவை போல்வன பிறவும், **விளியா** – விளிக்கப்படுவனவல்ல; **எ–று.** ன, ள, ர, – அன், அள், அர் விகுதிகள்.

முன் '**படர்க்கையோரைத் தன்முகமாகத் தானழைப்பது**' என்றதனால், தன்மை முன்னிலைப் பெயர்கள் விளியுருபை யேலாமை அமைந்து கிடந்தது. ஆகவே, படர்க்கைப் பெயர்களுள் விளியுருபை யேலாதவற்றை இங்குக் கூறினார்.

வை து என்கிற இரண்டும் நுவ்வொடு பொருந்தா வென்பார், அதனை '**ஒடு**' கொடுத்துப் பிரித்துக் கூறினார்.

**வ–று.:** யான், யாம், நாம், நீ, நீர், எல்லீர் எனவும்; நுமன், நுமள், நுமர் எனவும்; எவன், எவள், எவர், எது, எவை: யாவன், யாவள், யாவர், யாது, யாவை; ஏவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை எனவும்; அவன், அவள், அவர், அது, அவை; இவன், இவள், இவர், இது, இவை: உவன், உவள், உவர், உது; உவை எனவும்; தாம் எனவும், தான் எனவும் வருகின்ற இப்பெயர்கள் விளியை ஏலாமை காண்க.

**'இன்னன'** என்றதனால் மற்றையான், எல்லாம் முதலியன கொள்க.

ஓசையின்பம் நோக்கி, 'வை து' என மாற்றிக் கூறினார்.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். நுவ்வொடு வினாச்சுட்டு உற்ற ன ள ர–நுவ்வுடனே மூன்று முதல் வினாவையும் மூன்று சுட்டையும் முறையே பொருந்திய ன ள ர என்னும் மூன்றீற்றுயர்திணைப்பெயர்களும், வை து – வை து என்னுமிரண்டீற்றஃறிணைப்பெயர்களும், தான் – தானென்னும் பொதுப்பெயரும், இன்னன – இவை போல்வன பிறவும், விளியா – விளிக்கப்படுவனவல்ல. எ–று.

'வை' 'து' என்னுமிரண்டும் நுவ்வொடு பொருந்தா என்பார், ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

மகரவீற்றுப் பொதுப்பெயர் முன்னரே விலக்கப்பட்டமையால் இங்கே 'தாம்' என்றது அசைநிலை.

உ–ம். நுமன், நுமள், நுமர் (நுவ்வொடுற்ற ன ள ர). எவன், எவள், எவர், எவை, எது. யாவன், யாவள், யாவர், யாவை, யாது. ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது (வினாவுற்ற ன, ள, ர, வை, து). அவன், அவள், அவர், அவை, அது. இவன், இவள், இவர், இவை, இது. உவன், உவள், உவர், உவை, உது (சுட்டுற்ற ன, ள, ர, வை,து). தான். இப்பெயர்கள் விளியேலாமை காண்க.

'இன்னன' என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றையன, மற்றையவை; பிறன், பிறள், பிறர், பிறிது, பிற முதலியனவுங் கொள்க.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) நுவ்வொடு – நுவ்வுடனே, வினா – (மூன்று முதல்) வினாவையும், சுட்டு– (மூன்று) சுட்டையும், உற்ற – முறையே பொருந்திய, ன ள ர – ன ள ர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களும், வைது – வைது என்கிற இரண்டு ஈற்று அஃறிணைப் பெயர்களும், தாம் தான் – இவ்விரண்டு பொதுப்பெயர்களும், இன்னன் – இவை போன்ற பிறவும், விளியா – விளிக்கப்படுவனவல்ல. (எ–று)

(பொ–ரை.) (மேல் விளிக்கப்படும் என்றவற்றுள்) நுவ்வுடனே (மூன்று முதல்) வினாவையும், (மூன்று) சுட்டையும; வான் முறையே பொருந்திய ன, ள, ர என்னும் மூன்றீற் அஃறிணைப் பெயர்களும், தாம், தான் என்னும் பொதுப் பெயரும், இவைபோன்ற பிறவும் விளிக்கப்படா.

(உ–ம்.) நுமன், நுமள், நுமர்.

எவன், எவள், எவர், எது, எவை.

யாவன், யாவள், யாவர், யாது, யாவை.

ஏவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை.

அவன், அவள், அவர், அது, அவை.

இவன், இவள், இவர், இது, இவை.

உவன், உவள், உவர், உது, உவை.

தாம்.

தான்.

இன்னன என்றதனால், பிறன், பிறள், மற்றையான் முதலானவையும் கொள்க.

வை து என்கிற இரண்டும் நுவ்வொடு பொருந்தா தென்பார், ஒடுக்கொடுத்துப் பிரித்தார்.

## கா. நமச்சிவாய முதலியார்

**நுவ்வொடு** – நுவ்வுடனே, **வினா** – மூன்று முதல் வினாவையும், **சுட்டு** – மூன்று சுட்டையும், **உற்ற** – முறையே பொருந்திய, **ன ள ர** – ன ள ர மெய்யீற்று உயர்திணைப் பெயர்களும், **வை து** – வை து என்னும் இரண்டு ஈற்று அஃறிணைப் பெயர்களும், **தாம் தான்** – தாம் தான் என்னும் இவ்விரண்டு பொதுப்பெயர்களும், **இன்னன** – இவை போன்ற பிறவும், **விளியா** – விளிக்கப்படுவன அல்ல.

**உதாரணம்**

நுமன், நுமள், நுமர் ;
எவன், எவள், எவர், எது, எவை ;
யாவன், யாவள், யாவர், யாது, யாவை ;
ஏவன், ஏவள், ஏவர், ஏது, ஏவை ;
அவன், அவள், அவர், அது, அவை ;
இவன், இவள், இவர், இது, இவை ;
உவன், உவள், உவர், உது, உவை ;
தாம், தான் ;

இப்பெயர்கள் விளியேலா

'இன்னன' என்றதனால், பிறன், மற்றையான் முதலானவையுங் கொள்க.

வை து என்னும் இரண்டும் நுவ்வொடு பொருந்தாதென்பார், ஒடுக் கொடுத்துப் பிரித்தார்.

## மோசசு பொன்னையா

முன்னர் விளியேற்பன இவையெனச் சொல்லப்பட்ட ஈறுகளையுடைய பெயர்களுள் நுவ்வையும், முதல் வினாக்கள் மூன்றையும், சுட்டுக்கள் மூன்றையும் முதலாகப் பெற்ற னளர என்னும் மூன்று ஈற்று உயர்திணை முப்பாற் பெயர்களும், வை, து என்னும் இரண்டு ஈற்று அஃறிணை இருபாற் பெயர்களும்; தான், தாம் என்னும் பொதுப் பெயர்களும் இவைபோல்வன பிறவும் விளியேற்பன அல்ல எ–று.

**'படர்க்கையோரைத், தன்முக மாகத் தானழைப்பதுவே'**

என முன்னர்க் கூறியுள்ளதால், விளியேலா இப்பெயர்களெல்லாம் படர்க்கைப் பெயர்களே எனவும், நுவ்வை ஒடுக்கொடுத்துப் பிரித்துள்ளமையால் வை, து என்னும் இரண்டும் நுவ்வோடு பொருந்தா எனவுங் கொள்க.

எ–டு

**நுமன், நுமள், நுமர்;**
**எவன், எவள், எவர், எவை, எது;**
**யாவன், யாவள், யாவர், யாவை, யாது;**
**ஏவன், ஏவள், ஏவர், ஏவை, ஏது;**
**அவன், அவள், அவர், அவை, அது;**
**இவன், இவள், இவர், இவை, இது;**
**உவன், உவள், உவர், உவை, உது;**
**தாம், தான்;**

இன்னன என்றதனால், மற்றையான், மற்றையாள், மற்றையார், மற்றையது, மற்றையன், மற்றவை, பிறன், பிறள், பிறர், பிறிது, பிற முதலியன விளியேலா எனக் கொள்க. அதனாலே மூவிடக் கொள்பெயர்களாகிய தமன், தமர், தமள்; நமன், நமர், நமள்; எமன், எமள், எமர் என்பனவும் விளியேலா எனக் கொள்க. தொல்காப்பியர்.

**தநநு எஎன அவைமுத லாகித்**
**தன்மை குறித்த னரளஎன் இறுதியும்**
**அன்ன பிறவும் பெயர்நிலை வரினே**
**இன்மை வேண்டும் விளியொடு கொளலே,**

எனக் கூறி அவை விளியேலா என்றார்.

**(57)**

**314. முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும்**
**அதுமுதற் [1]காயிற் சினைக்கை யாகும்.**

**முதலை ஐ உறின் சினையைக் கண்ணுறும்**
**அது முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும்.**

muṭalai ai uūin̲ sin̲aiyaik kaṇ uūum
aṭu muṭaūku āyin̲ sin̲aikku ai ākum

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Special rule regarding the use of the casal signs, ai atu and kan**

---

பாட வேறுபாடு:–

1. *காகிற்*

**in nouns expressing whole and it parts.**

If (sign) 'ai' is added to the whole, (the sign) '**kan**' must be added to its '**member**'; but if the whole has 'atu' the member must have '**ai**'.

## ஒப்புமைப் பகுதி

**முதல்முன் ஐவரின் கண்ணென் வேற்றுமை**
**சினைமுன் வருதல் தெள்ளி தென்ப**

(தொல். சொல்.: 88)

**முதற்சினைக் கிளவிக்கு அதுஎன் வேற்றுமை**
**முதற்கண் வரினே சினைக்கு ஐ வருமே**

(தொல். சொல்.: 87)

**முதன்முன் ஐ வரின்கண் சினைமுன் வருதலும்**
**அதுமுதற்கு ஆகின் சினைக்கு ஐ ஆதலும்**
**இனையவை பிறவும் நினைதல் வேண்டும்**

(இ.வி.: 221)

**சினைநிலைக் கிளவிக் கிரண்டும் ஏழும்**
**வினைநிலை ஒக்கும் என்மனார் புலவர்**

(மு.வீ.: 527)

**முதற்கு ஆறுஆயின் சினைக்கு இரண்டாகும்**

(மு.வீ.: 529)

## மயிலை நாதர்

**எ–ன்,** இஃதோர் சொல்லுதல் [2]வகைமை யுணர்த்துதல் நுதலிற்று.

**இ–ள்.:** சினை தொடர்ந்த முதற்பொருட்கு இரண்டாம் வேற்றுமை யுருபுவரிற் சினைக்கு ஏழனுருபு வரும்; முதற்குஆறாமுருபு வரிற் சினைக்கு இரண்டனுருபு வரும், **எ–று.**

**வ–று.:** [3]யானையைக் கோட்டின்கட்குறைத்தான் எனவும், யானையது கோட்டைக் குறைத்தான் எனவும் வரும்.

'**ஐயுற**' என்னாது, '**ஐயுறின்**' என்றதனால், யானையைக் கோட்டைக் குறைத்தானெனவும் வருமெனக்கொள்க.

---

**பாட வேறுபாடு:–**

1. வழுவமைப் புணர்த்துதல்
2. ஆனையை

## சங்கர நமச்சிவாயர்

**எ–னின்,** முதல்சினைத் தொடர்பின்கண் இரண்டாம் உருபு வரின் முதல் சினை இரண்டன்பாலும் வாராது; தடுமாறி வருதலே மரபு எனப் புறனடை **உணர்–ற்று.**

**இ–ள்.:** முதலினை ஐயுருபு பொருந்தின் சினையினைக் கண்ணுருபு பொருந்தும்; அதுவுருபு முதலுக்கு வரின் சினைக்கு ஐயுருபு வரும், **எ–று.**

'ஒருமொழி ஒழிதன் னினங்கொளற் குரித்தே' (358) என்பதனான் ஆறாவதன் பன்மையுருபும் கொள்க.

இனி **இரட்டுறமொழிதல்** என்னும் உத்தியான் அது என்பதனைச் சுட்டாக்கிக் கண்ணுருபு முதற்காயின் சினைக்கு ஐயாகும் எனவும் பொருளுரைத்துக் கொள்க.

**வ–று.:** யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான், யானையின கால்களை வெட்டினான், யானையின்கண் காலை வெட்டினான் எனவும்; கையினை விரலின்கண் பிடித்தான், கையது விரலைப் பிடித்தான், கையின விரல்களைப் பிடித்தான், கையின்கண் விரலைப் பிடித்தான் எனவும் வரும்.

இங்ஙனம் கூறவே யானையைக் காலை வெட்டினான் என இரண்டன்பாலும் ஐயுருபு வாராது என்றாராயிற்று. வரின் செயப்படுபொருள் இரண்டாய் முதல் சினைகள் ஒருபொருட் பகுதியவல்லவாமாதலின், இங்ஙனம் செய்யப்பட்டது ஒரு பொருளே, முதல் சினைகள் ஒருபொருட் பகுதியவே என்பது தோன்றக் கண்ணுருபும் அதுவுருபும் வரும் என்பதாயிற்று.

இவ்வாறன்றி ஒரோவழி முதல் சினை இரண்டன்பாலும் ஐயுருபு வரின் 'யாத னுருபின் கூறிற்றாயினும்' (317) என்னும் சூத்திரத்தான் முதலின்பால் ஐயுருபை அதுவுருபாயேனும் சினையின்பால் ஐயுருபைக் கண்ணுருபாயேனும் திரிக்கப்படும் என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** இஃதோர் வேற்றுமை உருபு பெறும் வகைமை கூறுகின்றது.

**இ–ள்.: முதலை ஐயுறின்** – சினை தொடர்ந்த முதற் பொருட்கு இரண்டாம் வேற்றுமை ஐயுருபு பொருந்தில், **சினையைக் கண்ணுறும்** – முதல் தொடர்ந்த சினைப் பொருட்கு ஏழாம் வேற்றுமைக் கண்ணுருபு வரும்; **அது முதற்காகில்** – ஆறாம் வேற்றுமை அதுவென்னும் உருபு முதற் பொருட்கு வரில், **சினைக்கு ஐயாகும்** – சினைப் பொருட்கண் இரண்டாம் வேற்றுமை ஐயுருபு வரும், **எ–று.**

**உ–ம்.:** யானையைக் கோட்டின்கட் குறைத்தான், யானையது கோட்டைக் குறைத்தான் என வரும். முதலை ஐயுற என்னாது **"ஐயுறின்"** என்றதனால் யானையைக் கோட்டைக் குறைத்தான், பசுவைப் பாலைக் கறந்தான் என வரும்.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முதல்சினைத் தொடர்பின்கண் இரண்டா முருபு வரின் முதல் சினை யிரண்டிடத்தும் வராது தடுமாறி வருதலே மரபெனப் புறனடை யுணர்த்துகின்றது.

**இ–ள்.: முதலை**–முதலினை, **ஐயுறின்**–ஐயுருபு பொருந்தினால், **சினையை**–சினையினை, **கண்** – கண்ணுருபு, **உறும்**–பொருந்தும், **அது**–அது வுருபு, **முதற்கு** – முதலுக்கு, **ஆயின்** – வரின், **சினைக்கு**–சினையினுக்கு, **ஐ**–ஐயுருபு, **ஆகும்**–வரும், **எ–று.**

(இன்னும் **இரட்டுறமொழிதல்** என்கிற வுத்தியால், 'அது முதற்காயிற் சினைக்கையாகும்' என்கிற வாக்கியத்தில் அது வென்பதற்கு அக் கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக் கொள்க.)

**வ–று.:** யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலைவெட்டினான், யானையின்கட் காலை வெட்டினான் எனவரும். எனவே முதல் சினை யிரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன் றென்பதாயிற்று.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

முதல்சினைத்தொடர்பின்கண் இரண்டாமுருபு தடுமாறிவருமெனக் கூறுஞ் சூத்திரம் யாது?

முதலை யையுறிற் சினையைக் கண்ணுறும்

அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்.

(முதலை ஐ உறின் சினையைக் கண் உறும்

அது முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும்.)

**இ–ள்.:** முதற்சொல்லினை ஐயுருபு பொருந்தினாற் சினைச்சொல்லைக் கண்ணுருபு பொருந்தும் அதுவுருபு முதலுக்குவரிற் சினையினுக்கு ஐயுருபு வரும், **எ–று.**

**உ–ம்.** யானையைக் கோட்டின்கட் குறைத்தான். யானையது கோட்டைக் குறைத்தான்.

இப்படிவருமெனவே சிறுபான்மை யானையைக் கோட்டைக் குறைத்தான் என ஈரிடத்தும் ஐயுருபே வருதலும் முண்டென்பதாயிற்று.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** முதல் சினை யிரண்டிடத்தும் ஐயுருபு வாராதெனப் புறனடை கூறுகின்றது.

**இ–ள்.: முதலையுறின்** – முதற்பொருளை ஐயுருபு பொருந்தின், **சினையைக் கண்ணுரும்** – சினைப்பொருளைக் கண்ணுருபு பொருந்தும், **அது முதற்காகின்** – அது உருபு முதலுக்கு வரின், **சினைக் கையாகும்** – சினைப்பொருளுக்கு ஐயுருபு வரும், **எ–று.**

**வ–று.:** யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான் எனவும் கையைவிரலின்கட் பிடித்தான், கையினது விரலைப் பிடித்தான் எனவும் வரும். இனியிரட்டுறமொழித லென்னும் உத்தியால், அது என்பதைச் சுட்டாக்கி அந்தக் கண்ணுருபு முதற்பொருளுக்காயின், எனவும் – பொருளுரைத்துக் கொள்க.

**உ–ம்.:** யானையின்கட் காலை வெட்டினான், கையின்கண் விரலைப் பற்றினான், எனக் காண்க. இதனுள், விரலைச் சினைப் பொருளாகக் குறித்தபோது கை முதற்பொருளாய் நின்றது; ஆதலால் முதல் சினை யிரண்டிடத்தும் ஐயுருபு வாராதென்பது இவர் கருத்து.

இனி, ஆசிரியர் தொல்காப்பியனார் “

**“முதற்சினைக் கிளவிக் கதுவென் வேற்றுமை**
**முதற்கண் வரினே சினைக்கை வருமே”**

எனக் கூறி இதை யுருபுமயக்க மெனவும் “முதன்மு னைவரிற் கண்ணென் வேற்றுமை – சினைமுன் வருத றெள்ளி தென்ப” எனக் கூறியதைப் பொருள் மயக்கமெனவும் முதல் சினை யிரண்டிடத்தும் ஐயுருபு வருமெனவுங் கொண்டது, அவர் கருத்தென்பதை யவ்வுரையினாலுமுணர்க.

**இனி யுரையிற்கோடலென்னு**முத்தியால் உருபுமயக்கம், பொருள்மயக்க மிருவகைப்படுமெனவும், அவற்றுள் உருபு மயக்கமாவது ஒருருபின் பொருளொடு தன்பொருள் விடுத்துத் தலைமயங்குத லெனவும்; அதற்குதாரணம், மணலுளீன்ற என்னும் ஏழாம் வேற்றுமைப் பொருளிலே, மணற்கீன்ற என நான்காவது தன் பொருளை விட்டு மயங்கிற் றெனவும், பொருள் மயக்கமாவது–பிறிதொன்றன் பொருளொடு தன்பொருள் விடாது தலைமயங்குதலெனவும், அதற்குதாரணம் கோட்டைக் குறைத்தான் என வரும் இரண்டாவதன் பொருளிலே, கோட்டின்கட் குறைத்தான் என ஏழாவது தன்பொருளை விடாது மயங்கிற்றெனவும், இந்த இருவகை மயக்கங்களில் உருபேற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்முள் இயைந்து நிற்பது பொருள்மயக்க மெனவும், இயையாது நிற்பது உருபு மயக்கமெனவுங் கொள்க. இங்கே யுருபுமயக்கம், பொருளின் மயக்கங்களின் இலக்கணந் தெரிதற்கு வேண்டிய அளவே சொல்லப்பட்டன. அவற்றை யெல்லாம் விரித்து **‘யாதனுருபிற் கூறிற்றாயினு’**மென்னுஞ் சூத்திரத்தாற் காட்டப்படும்; அங்கே கண்டுகொள்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **முதலை** – முதற்பெயரை, **ஐஉறின்** – இரண்டனுருபு பொருந்தினால், **சினையை** – சினைப்பெயரை, **கண்** – எழனுருபு, **உறும்** – பொருந்தும்; **அது** ஆறனுருபு, **முதற்கு** – முதற்பெயர்க்கு, **ஆயின்** – வந்தால், **சினைக்கு** – சினைப்பெயர்க்கு, **ஐ** – இரண்டனுருபு, **ஆகும்** – வரும்.

குறிப்பு :– இன்னும் **இரட்டுறமொழிதல்** என்னும் உத்தியால் – அது என்பதைச் சுட்டாக்கி – ‘அக்கண்ணுருபு’ எனவும் பொருளுரைத்துக் கொள்க.

உ—ம் :— யானையைக் காலின்கண்வெட்டினான் யானையின்கண்
யானையதுகாலைவெட்டினான் காலைவெட்டினான்.

(எனவே, முதல் சினையிரண்டிலும் ஐஉருபுவருதல் சிறப்பு அன்று என்க)

## ஆறுமுக நாவலர்

**இ—ள்.: முதலை ஐ உறின் சினையைக் கண் உறும்** – முதலினை ஐயுருபு பொருந்தினாற் சினையினைக் கண்ணுருபு பொருந்தும், **அது முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும்** – அதுவுருபு முதலுக்கு வரிற் சினையினுக்கு ஐயுருபு வரும், **எ—று.**

இனி **இரட்டுறமொழிதலென்னுமுத்தியால்,** அது 'முதற்காயிற் சினைக்கையாகும்' என்னும் வாக்கியத்தில், அது என்பதற்கு அக்கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக் கொள்க.

**உ—ம்.:** யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான், யானையின்கட் காலை வெட்டினான் என வரும். எனவே, முதல் சினை யிரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன்றென்பதாயிற்று.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ—ள். முதலை ஐஉறின் சினையைக் கண் உறும்** – முதலினை ஐயுருபு பொருந்தினாற் சினையினைக் கண்ணுருபு பொருந்தும், – **அது முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும்** – அதுவுருவு முதலுக்குவரிற் சினையினுக்கு ஐயுருபுவரும். **எ—று.**

**உ—ம்** யானையைக் காலின்கண்வெட்டினான், யானையது காலைவெட்டினான். எ—ம். கையை விரலின்கட்பிடித்தான். கையினது விரலைப் பிடித்தான் எனவும் வரும்.

இனி இரட்டுறமொழி தலென்னும் உத்தியால், அது என்பதைச் சுட்டாக்கி, அந்தக் கண்ணுருபு முதற்பொருளுக்காயின், எனவும், பொருளுரைத்துக் கொள்க.

உ—ம் யானையின் கட்காலைவெட்டினான். கையின் கண்விரலைப் பற்றினான். எனக்காண்க. இதனுள், விரலைச் (சினைப்பொருளாகக் குறித்தபோது கை, முதற்பொருளாய்நின்றது. ஆதலால் முதல்சினையிரண்டிடத்தும் ஐயுருபு வாராதென்பது இவர் கருத்து.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார் (சூத்திரம்) முதற்சினைக் கிளவிக்கது வென்வேற்றுமை, முதற்கண்வரினே சினைக்கைவருமே எனக் கூறி இதையுருபு மயக்கமெனவும், (சூத்திரம்) முதன்முனைவரிற்கண்ணென் வேற்றுமை சினை முன் வருதறெள்ளிதென்ப எனக் கூறியதைப் பொருள் மயக்கமெனவும், முதல்சினையிரண்டிடத்தும் ஐயுருபு வருமெனவுங் கொண்டது.

அவர் கருத்தென்பதை யவ்வுரையினாலுமுணர்க. இனி உரையிற் கோடலென்னுமுத்தியால், உருபுமயக்கம், பொருள் மயக்கமென மயக்கமிரு வகைப்படுமெனவும், அவற்றுள், உருபுமயக்கமாவது, ஒருருபின் பொருளொடு தன்பொருள்விடுத்துத் தலைமயங்குதலெனவும், அதற்குகாரணம், மணலுளீன்ற என்னும் ஏழாம் வேற்றுமைப் பொருளிலே, மணற்கீன்ற, என நான்காவது தன்பொருளைவிட்டு மயங்கிற்றெனவும், பொருள்மயக்கமாவது, பிறிதொன்றன் பொருளொடு தன்பொருள்விடாது தலைமயங்குதலெனவும், அதற்குதாரணம், கோட்டைக் குறைத்தான் எனவரும், இரண்டாவதன் பொருளிலே கோட்டின் கண் குறைத்தான் என ஏழாவது தன்பொருளைவிடாது மயங்கிற்றெனவும், இந்த இருவகைமயங்களில் உருபேற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்முள் இயைந்து நிற்பது, பொருள்மயக்கமெனவும், (இசையாது நிற்பது உருபுமாயக்க மெனவுங் கொள்க).(ஐயுருபு முதல் சினையிரண்டினும் வாராமைக்குக் காரணமும் மேலைச் சூத்திரப் பொருளோடு இப்பொருளைப் பிண்டப் பொருளுக்கும் ஏற்பித்தலும்).

## வை.மு. சடகோபராமானுசா சாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: முதலை** – முதற்பெயரை, **'ஐ' உறின்** – இரண்டனுருபு பொருந்தினால், **சினையை** – சினைப்பெயரை, **'கண்'** – ஏழனுருபு, **உறும்** – பொருந்தும்; **'அது'** – ஆறனுருபு, **முதற்கு** – முதற் பெயர்க்கு, **ஆயின்** – வந்தால், **சினைக்கு** – சினைப் பெயர்க்கு, **'ஐ'** – இரண்டனுருபு, **ஆகும்** – வரும்; **எ–று.**

இன்னும் **இரட்டுறமொழிதல்** என்கிற உத்தியால் அது என்பதைச் சுட்டாக்கி, அது – அக் கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக்கொள்க.

**உ–ம்.:** யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான் யானையின் கண் காலை வெட்டினான். எனவே, யானையைக் காலை வெட்டினான் என முதல் சினை இரண்டிலும் ஐயுருபு வருதல் அவ்வளவாகச் சிறப்பன்று என்க.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். முதலை ஐ உறின் – முதலினை ஐயுருபு பொருந்தினால், சினையைக் கண் உறும் – சினையினைக் கண்ணுருபு பொருந்தும். அது முதற்கு ஆயின் சினைக்கு ஐ ஆகும் – அதுவுருபு முதலுக்குவரின் சினையினுக்கு ஐயுருபு வரும். எ–று.

இனி 'இரட்டுறமொழித' லென்னுமுததியால், அது முதற்காயிற் சினைக்கையாகும் என்னும் வாக்கியத்தில், அது என்பதற்கு அக் கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக்கொள்க.

உ–ம். யானையைக் காலின்கண் வெட்டினான், யானையது காலை வெட்டினான், யானையின்கட் காலை வெட்டினான்.

எனவே, முதல்சினையிரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன் றென்ப தாயிற்று.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) முதலை – முதற்பெயரை,ஐ உறின் ஐயுருபு பொருந்தினால், சினையை – சினைப்பெயரை, கண் உறும் – கண்ணுருபு பொருந்தும்; அது– அது உருபு, முதற்கு ஆயின் – முதற்பெயர்க்கு வரின், சினைக்கு – சினைப்பெயர்க்கு, ஐ ஆகும் – ஐ உருபு வரும். (எ–று)

(பொ–ரை.) முதற் பெயரை ஐ உருபு பொருந்தினால், சினைப் பெயரைக் கண் உருபு பொருந்தும்; அது உருபு முதற்பெயருக்கு வந்தால், சினைப் யெர்க்கு ஐ உருபு வரும்.

இன்னும் இரட்டுறமொழிதல் என்கிற உத்தியால் 'அது முதற் காயிற் சினைக்கு ஐயாகும்' என்கிற வாக்கியத்துல் அது என்பதற்கு அக் கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக் கொள்க.

(உ–ம்) யானையைக் காலின்கண் வெட்டினான்.

யானையது காலை வெட்டினான்.

யானையின்கட் காலை வெட்டினான்.

எனவே முதல் சினையிரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன்று என்பதாயிற்று.

## கா. நமச்சிவாய முதலியார்

**முதலை** – முதற்பெயரினை, **ஐஉறின்** – ஐயுருபு பொருந்தினால், **சினையை** – சினைப் பெயரினை, **கண்** – கண்ணுருபு, **உறும்** – பொருந்தும்; **அது** – அது உருபு, **முதற்கு** – முதலுக்கு, **ஆயின்** – வரின், **சினைக்கு** – சினையினுக்கு, **ஐ** – ஐயுருபு, **ஆகும்** – வரும்.

**உதாரணம்**

யானை**யைக்** காலின்**கண்** வெட்டினான்
யானைய**து** கா**லை** வெட்டினான்

எனவரும்.

இனி, **இரட்டுறமொழிதல்** என்னும் உத்தியால் 'அதுமுதற் காயிற் சினைக்கை யாகும்' என்னும் வாக்கியத்தில், அது என்பதற்கு அக்கண்ணுருபு எனவும் பொருளுரைத்துக் கொள்க.

**உதாரணம்**

யானையின்**கட்** காலை வெட்டினான்.

எனவே, முதல் சினை இரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன்று என்பதாயிற்று.

(58)

**315.** **முதலிவை சினையிவை யெனவே றுளவில**
**உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.**

**முதல் இவை சினை இவை என வேறு உள இல**
**உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும்.**

mutal ivai sinai ivai ena vēūu ula ila
uraippōr kuūippina aūūē pintamum

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**The whole and part are only distinguished in the mind of the speaker**

It is not possible to distinguish between 'wholes' and their members as if they existed apart from one another; they may be (distinguished) only in the minds of those who speak (thus) of them; even collections are of the same nature.

## ஒப்புமைப் பகுதி

**முதலும் சினையும் பொருள் வேறுபடாஅ**
**நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே**

(தொல். சொல்.: 88)

**முதலிவை சினையிவை எனவேறு உளஇல**
**உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும்**

(இ.வி.: 222)

**முதல்இவை சினைஇவை எனவேறு உளஇல**
**உரைப்போர் குறிப்பின் அற்றே பிண்டமும்**

(மு.வீ.: 530)

## மயிலை நாதர்

இதுவுமது.

இ–ள்.: இவையே முதல், இவையே சினையென வேறறியக் கிடப்பனவில்லை; சொல்லுவோர் குறிப்பினானே முதலே சினையுமாம்; சினையே முதலுமாம்; பிண்டப்பொருளும் அவ்வாறே யாம், எ–று.

வ–று.: கோட்டது நுனியைக்கு றைத்தான் எனவும்; கோட்டை நுனிக்கட் குறைத்தான் எனவும் சினையே முதலுமாம். நெற்குப்பை யென்றால், நெல்லது

குப்பை குப்பையது நெல்லென வரும். இதில் இரண்டாவது வேறில்லாதவாறு காண்க.

## சங்கர நமச்சிவாயர்

**எ—னின்,** மேல் முதல் சினை இரண்டன்பாலும் ஐயுருபு வாராது என அருத்தாபத்தியால் கூறினார்; அங்ஙனம் வாராமைக்கு ஏதுவாகவும் மேலைச் சூத்திரப்பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலும் **உணர்—ற்று.**

**இ—ள்.:** கடங்கள் இவை, படங்கள் இவை என்றாற்போல முதற்பொருள்கள் இவை, சினைப்பொருள்கள் இவை என இரண்டாக வேறுள்ளன இலவாம்; ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துக் கூறுவார் குறிப்பின் மாத்திரையவேயாம்; பிண்டப்பொருளும் அத் தன்மைத்தாம், **எ—று.**

யானையைக் குறித்தவழி யானையுண்டாய்க் கால் கை கோடு முதலியன வேறில்லையாய், கால் கை கோடு முதலியவற்றைக் குறித்தவழி அவையுண்டாய் யானை வேறில்லையாய் நிற்கும் ஒருபொருட் பகுதியவாதலின் இவ்வாறு கூறப்பட்டன.

**'வேறுளவில'** என்றமையான், யானையைக் காலை வெட்டினான் என ஐயுருபு முதல் சினை இரண்டன்பாலும் வாராமைக்கு ஏது கூறினாராயிற்று.

இனி ஒருபொருட்கண் முதலைக் கருதிச் சினை எனவும் சினையைக் கருதி முதல் எனவும் கூறுதல்போலப் பிண்டித்த பொருள்களைக் கருதியல்லது பிண்டமெனல் கூடாமையின் பிண்டமும் அற்றே என்ற துணையானே பிண்டித்த பொருள்களும் அனையவே என்பது தாமே போதரும் என்க. அவை வருமாறு: நெல்லைப் பொலியின்கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் என வரும். நெல்லைப் பொலியை வாரினான் என இரண்டன்பாலும் ஐயுருபு வாராது. இப்பிண்டப் பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருள்களாகிய நெல்லும் முதல் சினை அனையவாய் வேறுள இலவாம் ஆதலின் என்க.

இச் சூத்திரத்திற்கு இவ்வாறன்றி யானையது கோடு, கோட்டது நுனி என ஒன்றற்குச் சினை மற்றொன்றற்கு முதலாயும் ஒன்றற்கு முதல் மற்றொன்றற்குச் சினையாயும் நியதியின்றி வருதலின் இவையே முதல் இவையே சினை என வேறறியக் கிடப்பன இல்லை; அவை சொல்லுவோர் குறிப்பின் ஆங்காங்கு முதல் சினை என உணரப்படுவனவாம்; நெல்லினது குப்பை, குப்பையினது நெல் எனப் பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாய்க் கிழமையாய் நின்றது கிழமைத்தாயும் கிழமைத்தாய் நின்றது கிழமையாயும் நியதியின்றிச் சொல்லுவோர் குறிப்பினான் அறிய வரும் எனப் பொருள் கூறுவாரும் உளர். இப்பொருள் முதல் சினை இரண்டன்பாலும் ஐயுருபு வாராமைக்கு ஏது ஆகாமையானும், இவ்வாறு முதலும் சினையும் வருதல் வெளிப்படையாதலின் இவற்றை உரைப்போர் குறிப்பின எனக் கூறவேண்டாமையானும், ஆசிரியர் தொல்காப்பியரும் முதல் சினைகள் ஒருபொருட்பகுதிய என்பது தோன்ற,

**"முதலும் சினையும் பொருள்வேறு படாஅ"**

என்றமையானும் இப்பொருளும் இதனோடு மாட்டெறிந்த பொருளும் பொருந்தா என்க.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** இது ஓர் சொல்லுதல் வகைமை கூறுகின்றது.

**இ–ள்.: முதலிவை சினையிவை யென** – இதுவே முதற் பொருள் இது சினைப் பொருளென்று சொல்ல, **வேறுளவில்லை** – வேறாக அறியக் கிடப்பன இல்லை; **உரைப்போர் குறிப்பின** – சொல்லுவான் குறிப்பினாலே முதற் பொருளே சினைப் பொருளாம்; சினைப் பொருளே முதற் பொருளாம்; **அற்றே பிண்டமும்** – பிண்டப் பொருளும் அவ்வாறேயாம், **எ–று.**

**உ–ம்.:** கோட்டை நுனிக்கட் குறைத்தான், கோட்டை நுனியைக் குறைத்தான், கைவிரற்கண் மடக்கினான், கையது விரல் மடக்கினான் எனவும் வந்தன. நெற்குப்பை என்றால் நெல்லினது குப்பை, குப்பையது நெல் என இரண்டாவது வேறில்லாதது காண்க.

## விசாகப் பெருமாளையர்

**இது,** முன் சூத்திரத்திலே முதல் சினை யிரண்டனிடத்தும் ஐயுருபு வாராதென்பது தோன்றச் சொல்லியதற்குக் காரணமும் அச் சூத்திரப் பொருளோடு இச் சூத்திரப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலும் உணர்த்துகின்றது.

**இ–ள்.: முதலிவை சினை யிவை யென** – கடங்களிவை படங்களிவை யென்கிறது போல முதற்பொருள்களிவை சினைப் பொருள்களிவை என்கிறதற்கு, **வேறுளவில** – இரண்டாக வேறுள்ளனவிலவாம், **உரைப்போர்** – ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துச் சொல்வோரது, **குறிப்பின** – குறிப்பின் மாத்திரையன வேயாம், **பிண்டமும்**–பிண்டப்பொருளும், **அற்று** – அத்தன்மைத்தாம், **எ–று.**

யானையைக் குறித்தபோது யானையுண்டாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறில்லையாம், அவ்வவயவத்தைக் குறித்தபோது அவையுண்டாக யானை வேறில்லையாம். ஆதலால் இப்படிச் சொல்லப்பட்டன. இனிப் பிண்டப்பொருள், நெல்லைப் பொலியின்கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான், என வரும். பிண்டப்பொருளாகிய பொலிக் குப்பையும் பிண்டித்த பொருளாகிய நெல்லும் வேறாகாமையால் அவ்விரண்டனிடத்தும் ஐயுருபு வருவது சிறப்பன்றெனவறிக.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

முதற்பொருளுக் கோதப்பட்டவுருபு சினைக்கும் வருமெனவும் வரினும் முதற்பொருளுக் கோதியவிதி பிழையாதெனவும் பிண்டப் பொருளும் அவ்வாறே வருமெனவுங் கூறுஞ் சூத்திரம் யாது?

முதலிவை சினையிவை யெனவே றுளவில
உரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.
(முதல் இவை சினை இவை என வேறு உள இல
உரைப்போர் குறிப்பின அற்றே பிண்டமும்)

**இ—ள்.:** முதற்பொருள் இவை சினைப்பொருள் இவை எனத் தம்முள் வேறுவேறு பொருளுமாகா; சொல்லுவாரது குறிப்பின்வழி முதற்பொருள் சினைப்பொருளுமாய்ச் சினைப்பொருள் முதற்பொருளுமாய் நிற்பன பிண்டப்பொருண்மையை யுணர்த்தும் பெயரும் அவ்வியல்பினதாம், **எ—று.**

அற்றே பிண்டமும் என்பதனாற் கொள்ளக்கிடப்பது யாது?

பிண்டப்பொருளும் முதலுஞ் சினையுமாக வழங்கப்பட்டு முதலுக்கு இரண்டாவதுவரின் சினைக்கு ஏழாவது வருதலும், சிறுபான்மை இரண்டாவது வருதலும், முதலுக்கு ஆறாவது வரின் கினைக்கு இரண்டாவது வருதலும் பெறும் என்பது.

முதலெனப்பட்டது தானே தன்னைப் பிறிதொன்றற்கு ஏகதேசமாக நோக்கிச் சினையெனக் குறித்தவழிப் படையதியானை எனச் சினையும், சினையெனப்பட்டது தானே தன்கண் ஏகதேசத்தை நோக்கி, முதலெனக் குறித்தவழிக் கோட்டதுநுனி என முதலுமாமென்பார் **'உரைப்போர் குறிப்பின்'** என்றார். கோட்டைநுனிக்கட் குறைத்தான் கோட்டைநுனியைக் குறைத்தான் கோட்டதுநுனியைக் குறைத்தான்என முதற்கு ஒதப்பட்ட உருபு சினைக்கண்ணும் வந்ததாலென்று ஐயுற்றாற்குக் கருத்துவகையாற் கோடென்பதூஉம் ஆண்டு முதலாய் நிற்றலின் முதற்கு ஒதிய உருபே முதற்கண் வந்ததென ஐயமகற்றியவாறு காண்க. குப்பையைத் தலைக்கட் சிதறினான் குப்பையைத் தலையைச்சிதறினான் குப்பையது தலையைச்சிதறினான் என வரும். இது வேறுபல குழீஇய காடு முதலியவற்றிற்கும் ஒக்கும். பிண்டமும், முதலுஞ் சினையுமாகலின் வேறு கூறவேண்டாவெனின், குப்பையென்புழித் தொக்க பல்பொருளல்லது அவற்றின் வேறாய் அவற்றின் இயன்று தான் ஒன்றெனப்படும் பொருளின்மையிற் றொல்லாசிரியர் அதனை முதலென்று வேண்டார் அது மேற்றொட்டு வழங்கிவருங் கூற்றால் மருவியமரபென்பது அறிவித்தற்கு வேறுகூறினாரென்க.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** ஐயுருபு முதல் சினை யிரண்டிடத்தும் வாராமைக்குக் காரணமும் மேலைச் சூத்திரப் பொருளோடு இப்பொருளைப் பிண்டப்பொருளுக்கும் ஏற்பித்தலு முணர்த்திற்று.

**இ—ள்.: முதலிவை சினையிவை யென வேறுள வில**—(கடங்கள் இவை, படங்கள் இவை என்றாற்போல) முதற்பொருள்கள் இவை சினைப் பொருள்கள் இவை என இரண்டாக வேறு வேறு உள்ளன அல்லவாம், **உரைப்போர் குறிப்பின** — ஒருபொருளையே யிரண்டாகப் பகுத்துச் சொல்லுவோர் குறிப்பினளவேயாம், **அற்றே பிண்டமும்** —பிண்டப்பொருளும் அத் தன்மைத்தே யாம், **எ—று.**

யானையைக் குறித்தபோது யானையுண்டாகிக் கால், கை, கொம்பு முதலியன வேறேயில்லையாகியும்; கால், கை, கொம்பு முதலியவற்றைக் குறித்தபோது அவை யுண்டாகி யானை வேறே யில்லை யாகியும் நிற்கும் ஒருபொருளின் பிரிவுகளாதலால் இவ்வாறு கூறப்பட்டன. 'வேறுளவில' வென்றதினால், யானையைக் காலை வெட்டினான் என ஐயுருபு முதல் சினை யிரண்டிடத்தும் வாராமைக்குக் காரணங் கூறினாரென்பதாம். இனி

ஒருபொருளினிடத்து முதலைக் குறித்துச் சினை யெனவுஞ் சினையைக் குறித்து முதலெனவுங் கூறுதல்போலப் பிண்டித்த பொருள்களைக் குறித்தால் அல்லது பிண்டமென்பது கூடாமையால், '**பிண்டமும் அற்றே**' என்ற அளவிலே பிண்டித்த பொருள்களும் அனைய என்பது தானே வந்து இயையும், அவை வருமாறு:– நெல்லைப் பொலியின் கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் எனக் காண்க. நெல்லைப் பொலியை வாரினான் என இரண்டிடத்தும் ஐயுருபு வாராவாம், என்னெனின் பிண்டப் பொருளாகிய பொலிக் குப்பையும் பிண்டித்த பொருளாகிய நெல்லும் முதல் சினைகளைப் போலே வேறு வேறில்லாததினாலென்க. உளவில எனவும் அவைகுறிப்பின எனவும் பிண்டமும் அற்று எனவும் மூன்று முடிபாக முடிந்தது இச்சூத்திரம்.

இனி இச்சூத்திரத்தை, 'முதலிவை சினையிவை யெனவே றுளவில' என்றே முடிப்பின், முதலுஞ் சினையு மொருபொருளாதலால், அந்த ஒரு பொருளில் இரண்டு உருபு வாராமைக்குக் காரணமெனப்படும். மீட்டும், 'உரைப்போர் குறிப்பின' என்றமையால், உரைப்போர் குறிப்பின்வழி அது தானே யிரு பொருளென்பதாயிற்று. ஆகவே, ஒருபொருளில் இரண்டு உருபு வாராதென்பது கருத்தன்று ; வாராதென்பது கருத்தாயின், யானையைக் கோட்டைக் குறைத்தான், மணியை நிறத்தைக் கெடுத்தான், பசுவைப் பாலைக் கறந்தான் என வரும் செய்யுள் வழக்கிற்கும், அவனைக் கண்ணைக் குத்திக் காட்டிலே விட்டான், அவனைக் கையைப் பற்றியிழுத்து விட்டான், அவனைப் பல்லையுடைத்து விட்டான், அவனையிடுப்பை யொடித்துப் போட்டான் என வரும் உலக வழக்கிற்கும் இலக்கணம் இன்றாய் முடிவதுமன்றி, முன்னோர் நூலொடு முரணுதலால் **மாறுகொளக் கூற**லென்னுங் குற்றமுமாம்; ஆதலால், அது கருத்தன்று. இன்னும், அவனைக் குத்தினான், இழுத்தான், உடைத்தான், ஒடித்தான் எனின் குறித்த பொருள் விளங்காததினாலே கண்ணை, கையைப்பற்றி, பல்லை, இடுப்பை என்பன இடைப்பிறவரலாய் வரவேண்டியே நிற்றலாலும். இரண்டாம் வேற்றுமைப் பொருளில் ஈருருபு இணைதல் இருவகைப்படுமெனக் கூறுதலாலும், வடநூலாரும் இவ்வாறு வருதலை ஓர்பிரயோகமெனப் பெயரிட்டு வழங்குதலாலும், முதல் சினைகளை யிருபொருளாகக் குறித்தபோது இரண்டிடத்தும் ஐயுருபுவரு மென்பதே ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தென்பதை,

> **"முதலுஞ் சினையும் பொருள்வே றுபடாஅ**
> **நுவலுங் காலைச் சொற்குறிப் பினவே"**

> **"பிண்டப் பெயரு மாயிய றிரியர்**
> **பண்டியன் மருங்கின் மரீஇய மரபே"**

எனக் கூறியதினாலும் அவ்வுரையாலும், முதலாயது. சினையாயுஞ் சினையாயது முதலாயும் மாறிவருதலும்; அங்ஙனமாறி வருங்கால் முதல் சினை ஒருபொருளாயினும்; சொல்லுவான் குறிப்பின்வழி இரு பொருளாதலும்; அவ்விரு பொருளில் ஐயுருபு இணைந்துவர உதாரணங் காட்டலாலும், ஒருபொருளையே இருபொருளாக வைத்துச் சொல்லுதல் இலக்கணமன்றாயினும் அது தொன்றுதொட்ட நெறியாய் வரும் வழக்கு உண்மையால் மருஉ முடிபென்று

சொல்ல வந்தவர், 'பண்டியன் மருங்கின் மரீஇய மரபு' என்றதினாலுங் காண்க. இன்னுங் கோட்டை நுனியைக் குறைத்தான் என வரின், கோட்டது நுனியைக் குறைத்தான், என முதலின்பால் ஐயுருபை அது உருபாகத் திரிக்கப்படுமெனின், யானையதுகோடென யானைக்குக் கோடு உறுப்புத் தற் கிழமையாவ தன்றி, கோட்டது நுனி என உறுப்புக்கு உறுப்புத் தற்கிழமை யென்பதுங் கூடாதென வுணர்க. 'பண்டியன் மருங்கின் மரீஇ, யமரபென்றது, பிண்டத்திற்கெனின், பிண்டப் பெயரு மாயிய றிரியா' எனவும், 'அற்றே பிண்டமும்' எனவும் மாட்டெறிதலால் இரண்டிற்கும் இலக்கண மொன்றென்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :–** **முதல் இவை சினை இவை என** – முதற்பொருள்கள் இவை சினைபொருள்கள் இவை என்கிறதற்கு, **வேறு உள இல** – (இரண்டாக) வேறு உள்ளன இலவாம்; **உரைப்போம்** – (ஒருபொருளையே இரண்டாகப் பகுத்துச்) சொல்வோரது, **குறிப்பின்** – குறிப்பினளவேயாம்; **பிண்டமும்** – பிண்டப்பொருளும், **அற்றே** – அத்தன்மையதேயாம்.

**குறிப்பு :–** 'அற்றே பிண்டமும்' என்றதனால் முன் சூத்திரப் பொருளும் இச்சூத்திரப் பொருளும் பிண்டப்பொருளுக்கும் பொருந்து மென்றதாயிற்று.

யானையைக் குறித்தபோது, யானையுண்டாகிக் கைகால் கொம்பு முதலியன வேறில்லையாகியும், கால் கை கொம்பு முதலியவற்றைக் குறித்த போது அவையுண்டாகி யானை வேறில்லையாகியும் நிற்கும் ஒருபொருளின் பிரிவுகளாதலால் இவ்வாறு கூறப்பட்டன. இவ்வாறே, பிண்டப் பொருளாகிய பொலியைக் குறித்தபோது பொலி உண்டாகி நெல் வேறில்லையாகியும், பிண்டிக்கப்பட்டபொருளாகிய நெல்லைக் குறித்தபோது நெல்லுண்டாகிப் பொலி வேறில்லையாகியும் நிற்கும் ஒருபொருளின் பிரிவுகளாதலால் 'அற்றேபிண்டமும்' என்றார். அவ்விரண்டிடத்தும் ஐ உருபு வருவது சிறப்பு அன்று எனவறிக. (பொலி– குப்பை,) இனி, முதற்பொருள்கள் இவை, என்பதன்றி 'கை' என்பது மனிதனைநோக்கச் சினைப்பொருளாயும், விரலைநோக்க முதற்பொருளாயும் வருதல்பற்றி 'உரைப்போர் குறிப்பின்' என்றார்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: முதல் இவை சினை இவை என வேறு உள இல**–கடங்களிவை படங்களிவை என்றாற்போல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவை என்பதற்கு இரண்டாக வேறுள்ளனவிலவாம், **உரைப்போர் குறிப்பின** – ஒருபொருளையே இரண்டாகப் பகுத்துச் சொல்வோரது குறிப்பின் மாத்திரையனவேயாம், **பிண்டமும் அற்று** – பிண்டப்பொருளும் அத் தன்மைத்தாம், **எ–று.**

யானையைக் குறித்தபோது யானையுண்டாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறில்லையாம்; அவ்வவயவத்தைக் குறித்தபோது அவையுண்டாக யானை வேறில்லையாம்; ஆதலால் இப்படிச் சொல்லப்பட்டன.

இனிப் பிண்டப்பொருள்: நெல்லைப் பொலியின்கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் என வரும். பிண்டப் பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருளாகிய நெல்லும் வேறாகாமையால், அவ்விரண்டனிடத்தும் ஐயுருபு வருவது சிறப்பன்றென வறிக.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள் முதல் இவை சினை இவை எனவேறு உள இல** – கடங்களிவை படங்களிவை என்றாற்போல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவை என்பதற்கு இரண்டாக வேறுள்ளனவிவலாம். – **உரைப்போர்குறிப்பின** – ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துச் சொல்வோரது குறிப்பின் மாத்திரையனவேயாம், **பிண்டமும் அற்று** – பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாம். **எ–று.**

யானையைக் குறித்தபோது யானையுண்டாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறில்லையாம்; அவ்வவயல்களைக் குறித்தபோது அவையுண்டாக யானை வேறில்லையாம்; ஆதலால் இப்படிச் சொல்லப்பட்டன.

இனிப் பிண்டப்பொருள்; நெல்லைப் பொலியின் கண்வாரினான், நெல்லினது பொலியைவாரினான் எனவரும். பிண்டப் பொருளாகிய பொலிக் குப்பையும் பிண்டித்த பொருளாகிய நெல்லும் வேறாகாமையால் அவ்விரண்டினிடத்தும் ஐயுருபுவருவது சிறப்பன்றெனவறிக. (குப்பை – குவியல்).

சூத்திரம் முதலுஞ்சினையும் பொருள்வேறுபடா, நுவலுங்காலைச் சொற்குறிப்பினவே, பிண்டப்பெயருமாயியறிரியா, பண்டியன் மருங்கின்மரீஇய மரபே எனக் கூறியதினாலும் அவ்வுரையாலும், முதலாயது சினையாயுஞ் சினையாயது முதலாயும் மாறிவருதலும் அங்ஙனமாறிவருங்கால், முதல்சினை ஒருபொருளாயினும் சொல்லுவான் குறிப்பின் வழி இருபொருட் பாவனையாய் வருதலுங் கொள்க.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: முதல் இவை சினை இவை என** – முதற் பொருள்கள் இவை சினைப் பொருள்கள் இவை என்கிறதற்கு, **வேறு உள இல** – (இரண்டாக) வேறு உள்ளன இலவாம்; **உரைப்போர்** – (ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துச்) சொல்வோரது, **குறிப்பின** – குறிப்பினளவேயாம்; **பிண்டமும்**– பிண்டப்பொருளும், **அற்றே** – அத்தன்மையதேயாம்; **எ–று.**

**'அற்றே பிண்டமும்'** என்றதனால், முன் சூத்திரப் பொருளையும் இச் சூத்திரப் பொருளையும் பிண்டப்பொருளுக்கும் ஏற்கச் செய்தார்.

யானையைக் குறித்தபோது, யானை உள்ளதாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறு இல்லையாம்; அவ்வவயவத்தைக் குறித்த போது, அவை உள்ளனவாக யானை வேறு இல்லையாம். ஒருபொருளின் பிரிவுகளாதலால், இவ்வாறு கூறப்பட்டன. பிண்டப்பொருள், நெல்லைப்

பொலியின் கண் வாரினான், நெல்லினது பொலியை வாரினான் என வரும். பிண்டித்த பொருளாகிய பொலி (குவியல்)யும், பிண்டிக்கப்பட்ட பொருளாகிய நெல்லும் வேறாகாமையால், அவ்விரண்டிலும் ஐயுருபு வருவது சிறப்பன்றென்க.

இனி, இச்சூத்திரத்திற்கு, உலகத்தில் முதற்பொருள்கள் இவை சினைப் பொருள்கள் இவை எனத் தனித்தனி வெவ்வேறு பொருள்கள் இல்லையாம்; சொல்லுவான் குறிப்பால், முதற்பொருளே சினைப்பொருளாயும், சினைப்பொருளே முதற்பொருளாயும் மாறுபட்டு வரும்; கை என்பது – மனிதனை நோக்கச் சினையாயும், விரலை நோக்க முதலாயும்; விரல் என்பது – கையை நோக்கச் சினையாயும், நகத்தை நோக்க முதலாயும் வருதல் காண்க. பிண்டப்பொரு (தொகுதிப்பொரு)ளும், அவ்வாறே தொகுத்த பொருளிவை தொகுக்கப்பட்ட பொருளிவை என வெவ்வேறு பொருள்களுடையனவல்ல; சொல்லுவான் குறிப்பால், பிண்டித்த பொருளே பிண்டிக்கப்பட்ட பொருளாயும், பிண்டிக்கப்பட்ட பொருளே பிண்டித்த பொருளாயும் வரும்; படைகள் என்பது, தொகுதியை நோக்கப் பிண்டிக்கப்பட்ட பொருளாயும், வேல் வாள் வில் முதலிய உட்பகுதிகளை நோக்கப் பிண்டப் பொருளாயும் வருதல் காண்க; என இவ்வாறு பொருள் கொள்ளுதலும் ஒன்று.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். முதல் இவை சினை இவை என வேறு உள இல–கடங்களிவை படங்களிவை என்றாற்போல முதற்பொருள்களிவை சினைப்பொருள்களிவை என்பதற்கு இரண்டாக வேறுள்ளன விலவாம்; உரைப்போர் குறிப்பின் – ஒருபொருளையே இரண்டாகப் பகுத்துச் சொல்வோரது குறிப்பின் மாத்திரையனவேயாம். பிண்டமும் அற்று – பிண்டப்பொருளும் அத்தன்மைத்தாம். **எ–று.**

யானையைக் குறித்தபோது யானையுண்டாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறில்லையாம்; அவ்வவயவத்தைக் குறித்த போது அவையுண்டாக யானை வேறில்லையாம்; ஆதலால் இப்படிச் சொல்லப்பட்டன.

இனிப் பிண்டப்பொருள் : 'நெல்லைப் பொலியின்கண் வாரினான்', 'நெல்லினது பொலியை வாரினான்' – என வரும். பிண்டப்பொருளாகிய பொலிக்குப்பையும் பிண்டித்த பொருளாகிய நெல்லும் வேறாகாமையால், அவ்விரண்டனிடத்தும் ஐயுருபு வருவது சிறப்பன்றெனவறிக.

## கா. நமச்சிவாய முதலியார்

(1) **முதல் இவை சினை இவை என** – முதற்பொருள்கள் இவை சினைப்பொருள்கள் இவை என்பதற்கு, **வேறு உள இல** – இரண்டாக வேறுள்ளன இலவாம், **உரைப்போர்** – ஒரு பொருளையே இரண்டாகப் பகுத்துச் சொல்வோரது, **குறிப்பின** – குறிப்பின் மாத்திரை யளவேயாம் ;

(2) **பிண்டமும்** – பிண்டப் பொருளும், **அற்று** – அத்தன்மைத்தாம்.

(1) யானையைக் குறித்தபோது யானை உண்டாக அதனுடைய கை கால் கொம்பு முதலியவை வேறில்லையாம் ; அந்த அவயவங்களைக் குறித்தபோது

அவை உண்டாக யானை வேறில்லையாம், ஆதலால் இப்படிச் சொல்லப்பட்டன.

(2) இனி, பிண்டப்பொருள் : (முன் சூத்திர விதி)

நெல்லைப் பொலியின்**கண்** வாரினான் ;
நெல்லின**து** பொலியை வாரினான்.
நெல்லின்கண் பொலியை வாரினான்.

என வரும்.

பிண்டப் பொருளாகிய பொலிக்குப்பையும், பிண்டித்த பொருளாகிய நெல்லும் வேறாகாமை காண்க. அதனால், அவ்விரண்டிடத்தும் ஐயுருபு வருவது சிறப்பன்று என அறிக.

## மோசசு பொன்னையா

முதற்பெயரை ஐயுருபு பொருந்துமாயின், சினைப் பெயரைக் கண்ணுருபு பொருந்தும்; முதற்பெயருக்கு அது உருபுவரின், சினைப் பெயருக்கு ஐயுருபு வரும். முதற் பொருள் இவை, சினைப் பொருள் இவை என வேறு வேறாக அவைகள் அமைந்து கிடப்பன அல்ல; முதற் பொருளும் சினைப்பொருளும் இணைந்து வழங்குங்கால், சொல்வோரது குறிப்பின் தன்மையாலேயே அவ்விரண்டும் ஒரே பொருளின் முதலும் சினையுமாம் என விளங்கும்; பிண்டமும் பிண்டிக்கப்பட்டவையும் அத்தன்மையவேயாம் எ–று.

எ–டு.

**1. யானையைக் காலிக்கண் வெட்டினான்**

**யானையது காலை வெட்டினான்**

**2. பொலியைத் தலைக்கண் சிதறினான்**

**பொலியது தலையைச் சிதறினான்**

தொல்காப்பியர் நான்கு நூற்பாக்களிற்1 கூறிய முடிபை இவ்வாசிரியர் இரண்டு நூற்பாக்களிற்கூறினார். சினைப் பெயர்கள் ஐயுருபையும் கண்ணுருபையும் ஏற்ற பெற்றி பெற்று வினைஏற்றுப் பயன்முற்றும் என்பதைத் தொல்காப்பியர்,

**சினைநிலைக் கிளவிக் கையுங் கண்ணும்**

**வினைநிலை யொக்கும் என்மனார் புலவர்,2**

என உரைத்த பின்னர், அவ்விரு உருபுகட்கும் ஏற்ற இடத்தை மேற்கண்டவாறே விதித்துள்ளார்.

---

குறிப்புகள்:–

1. **தொல் சொல், 87–90;**
2. **தொல், சொல் 85**

இவ்வா றல்லாமல், யானையைக் காலை வெட்டினான் என்றோ, பொலியைத் தலையைச் சிதறினான் என்றோ முடிவெய்தி நிற்பின் முதற்பொருளும் சினைப்பொருளும் இருவேறு செயப்படு பொருட்கள் எனப்பட்டு, இரண்டும் ஒன்றன் முதலும்

சினையுமானவை என்பது தோன்றவாகலின், இவ்வாறு அமைதி கூறினார் எனக் கொள்க.

யானையைக் காலின்கண் வெட்டினான் என முடிந்ததே போல், காலை நுனியின்கண் வெட்டினான் என முடிவெய்தி ஒன்றன் சினையே முதலாக வழங்குதலும் மரபே யாகலின் முதலியவை சினையிவை யெனவே றுளவில என்றார் பிண்டம் பலபொருட்களின் தொகுதியாக அமைந்துகிடப்பதேயல்லாமல், தானென்றெனப்படுமாறில்லை யாதலின், அதனை முதலுள்ளடக்காது வேறு கூறினார். படை, காடு முதலியவற்றையும் பிண்டத்துள் ளடக்கி,

**பலவி னையைந்தவு மொன்றெனப் படுமே**

**யடிசில் புத்தகஞ் சேனை யமைந்த**

**கதவ மாலை கம்பல மனைய,1**

என நூற்பா செய்தாரு முளர் ஆதலின், அவற்றையும் பிண்டமெனவே கொள்க.

(59)

**316. யாத னுருபிற் கூறிற் றாயினும்**
**பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.**

**யாதன் உருபின் கூறிற்று ஆயினும்**
**பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்.**

yāṭaṉ urupiṉ kūūiūūu āyiṉum
poru!sel maruṅkiṉ vēūūumai sārum

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

### Interchange of cases

Whatever sign may be added (to a Noun), its case should be decided by the meaning implied (and not by the sign itself)

## ஒப்புமைப் பகுதி

யாதனு ருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்
(தொல். சொல்.: 106)

பொருண்மயங் குதலும் உருபுமயங் குதலும்
தெரிநிலை உடைய வேற்றுமைக் கண்ணே
(இ.வி.: 217)

அவற்றுட்
பொருளின் மயக்கம் பிறிதுஒன்றன் பொருளொடு
தன்பொருள் விடாது தலை மயங்குதலே
(இ.வி.: 218)

உருபின் மயக்கம் ஓர் உருபின் பொருளொடு
தன்பொருள் விடுத்துத் தலை மயங்குதலே
(இ.வி.: 219)

அவ்விரு திறனும் செவ்விதின் நாடி
இவ்வென அறிதல் இயல்பு உணர்ந்தோரே
(இ.வி.: 220)

யாதனுருபிற் கூறிற் றாயினும்
பொருண்சென் மருங்கின் வேற்றுமை சாரும்
(மு.வீ.: 541)

## மயிலை நாதர்

எ–ன், உருபுகள் ஒருவழித் தம்பொருண்மேலன்றி [1]மயங்கி வருதலுமுடையவென வழுவமைப் புணர்த்துதல் நுதலிற்று.

இ–ள்.: யாதானும் ஒருருபினாற் சொல்லப்பட்டதே ஒரு சொல்லெனினும் அச்சொற்கு அவ்வுருபின் பொருளே பொருளென்று கொள்ளற்க; அச் சொல்லின் பொருள் எவ்வுருபிற்கேற்கும்? அவ்வுருபாகக் கொள்வதே முறை, எ–று.

வ–று.:
“கிளையரி னாணற் கிழங்குமணற் கீன்ற
முளையோ ரன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்”
(அகநா. 211)

பாட வேறுபாடு:–

1. மருங்கின் வருதலும்

என நான்காம் வேற்றுமை வந்ததாயினும், அதனை ஏழாம் வேற்றுமையாகக் கொள்க.

**“நாகு வேயொடு நக்கு வீங்குதோள்”**

இதனுள், ஒடுவை ஐயாகக் கொள்க.

**“அறிவுடை யந்தண னவளைக்காட் டென்றானோ”**

(கலி. 74)

இதனுள், ஐயைக் குவ்வாகக் கொள்க. பிறவுமன்ன.

இஃது உருபுமயக்கம்; பொருண்மயக்கம் தொகை சொல்லுழிச் சொல்லுதும்.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ—னின்,** வேற்றுமை யுருபுகள் மயங்கி ஒன்று நிற்கும் நிலைக்களத்து மற்றொன்று வரினும் அமையும் எனப் புறனடை **உணர்—ற்று.**

**இ—ள்.:** ஒரு வேற்றுமைப்பொருள் மற்றொரு வேற்றுமை உருபால் கூறப்பட்டதாயினும் அவ்வுருபு மயங்கி வந்தமையின் அவ்வுருபு சென்றவழியே பொருள் சாராது பொருள்சென்ற வழியே அவ்வுருபு சாரும், **எ—று.**

எனவே அங்ஙனம் மயங்கிவந்த உருபைப் பொருளுக்கு இயைந்த வுருபாகத் திரித்துப் பொருள்கொள்க என்பதாயிற்று.

**வ—று.:**

“நாகு வேயொடு நக்கு விங்குதோள்” என்புழி நாகுவேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்றலின் ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.

[2] “கிளையரி நாணற் கிழங்கு மணற்கீன்ற
முளையோர் அன்ன முள்ளெயிற்றுத் துவர்வாய்”

என்புழி மணல் ஏற்றுக்கோடற் பொருளாகாது; இடப்பொருளாய் நிற்றலின் குவ்வருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. பிறவும் அன்ன.

வேற்றுமையுருபு மயங்கிவரின் பொருள்நோக்கித் திரித்துக் கொள்ளவேண்டும் என்பதாயிற்று.

இனி இவ்வாறு மாறுபட நிற்றலன்றி, உரையிற்கோடல் என்பதனால் தடுமாறுருபுகள் தாஞ் சிலவுள எனவும், ஒரு பொருட்கே தத்தம் உருபுகள்போல வேறு உருபுகள் வருவனவுள எனவும் கொள்க.

தடுமாறுருபுகள் தாம் சிலவுளவாதற்கு உதராணம்:

“அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்”

எனவரும். இதனுள் ஐயும் குவ்வும் தடுமாறி வருமாறு காண்க.

ஒருபொருட்கே தத்தம் உருபுகள்போல வேறு உருபுகள் வருவன வினைமுதன்முதலாக முறையே உரைக்கின்றாம்.

*"ஒன்று மூன்றுநான் காறெனும் உருபொடு*
*வருமே வினைமுதல் எனவகுத் தனரே"*

உ–ம்.: அவர்செய்தார், அவராற் செய்யத்தகும் அக்காரியம், அவர்க்குச் செய்யத்தகும் அக்காரியம், அவரது வரவு என முறையே காண்க.

"எல்லா உருபொடும் செயப்படு பொருளெழும்"

உ–ம்.: சோறடப்பட்டது, சோற்றையட்டான், அரிசியாற் சோறாக்கினான், அவட்குக் கொள்ளும் இவ் வணிகலம், பழியின் அஞ்சும், நூலது குற்றம் கூறினான், தூணின்கண் சார்ந்தான் என முறையே காண்க.

*"ஒன்று மூன்றுநான் கைந்தா றுருபொடு க ரு வி*
*வருமெனக் கருதினர் பெரியோர்"*

உ–ம்.: கண்காணும், கண்ணாற் காண்பன், கண்ணிற்குக் காணலாம், கண்ணிற் காணலாம், கண்ணினது காட்சி என முறையே காண்க.

"எல்லா வுருபொடும் கொள்வோன் எழுமே"

உ–ம்.: "இரப்பவர் என்பெறினும் கொள்வர்" "செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்" நாகராற்பலி, நாகர்க்குப்பலி, நாகரின் அன்புசெய்தான், நாகரது பலி, நாகர்கண் அன்பு செய்தான் என முறையே காண்க.

"இரண்டுநான் கைந்தொடும் எழுமே நீக்கம்"

உ–ம்.: மதுரையை நீங்கினான், மதுரைக்கு வடக்குச் சிதம்பரம், மதுரையின் வடக்குச் சிதம்பரம் என முறையே காண்க.

"நான்கைந் தாறே ழொடுகுறை நடக்கும்"

உ–ம்.: சாத்தனுக்கு மகன், மரத்தின்நீங்கின கொம்பு, சாத்தனது கை, உயிரின்கண் உணர்வு என முறையே காண்க.

"ஒன்றி ரண்டுநான் கேழோ டிடமெழும்"

***உ–ம்.: தூண் போதிகைதொட்டது, தூணைச்சார்ந்தான், இன்றைக்கு நாளைக்கு பகலைக்கு அந்திக்கு சந்திக்கு மாலைக்கு காலைக்கு ஊர்க்கு வீட்டிற்கு வருவான், தூணின்கண் சார்ந்தான் என முறையே காண்க.***

## கூழங்கைத் தம்பிரான்

**கூ–ம்,** உருபுகள் ஒரு சார் அதன் பொருண்மேலன்றி மயங்கி வருதலும் உடையவென வழுவமைப்புக் கூறுகின்றது.

**இ–ள்.: யாதனுருபிற் கூறிற்றாயினும்** – ஒருருபிற் சொல்லப்பட்டதே ஒரு சொல் ஆயினும் அச்சொற்கு அவ்வுருபின் பொருளே பொருளென்று கொள்ளற்க; **பொருள்சென் மருங்கின்** – அச்சொல்லின் பொருள் அவ்வுருபிற்கு ஏற்குமோவென்று அப்பொருள் நோக்கும் உருபு அறிந்து, **வேற்றுமை சாரும்** – அவ்வேற்றுமை உருபே கொள்க, **எ–று.**

**உ–ம்.:** "கிளையரி னாணற் கிழங்கு மணற்கீன்ற; முளையோ ரன்ன முள்ளெயிற்றுப் பேழ்வாய்" (அகம். 212) என நான்காம் வேற்றுமை வந்ததாயினும் அதனை ஏழாம் வேற்றுமையாகக் கொள்க. "நாகு வேயொடு நக்கு வீங்குதோள்" என இதனுள் ஒடுவை ஐயாகக் கொள்க. "ஆலத்தினால் அமிர்தாக்கிய கோன்" என ஆலை ஐயாகக் கொள்க. பிறவுமன்ன. இவை உருபு மயக்கம்; பிறவுமன்ன.

## விசாகப் பெருமாளையர்

**இது,** வேற்றுமை யுருபுகள் மயங்கி யொன்று நிற்கின்றவிடத்து மற்றொன்று வரினும் அமையுமெனப் புறனடை யுணர்த்துகின்றது.

**இ–ள்.: யாதனுருபின்** – மற்றொரு வேற்றுமையுருபால், **கூறிற்றாயினும்**– ஒரு வேற்றுமைப் பொருள் சொல்லப்பட்டதாயினும், **பொருள் சென்மருங்கின்** – அப்பொருள் சென்றவழியே, **வேற்றுமை** – அவ்வுருபு, **சாரும்**– சேரும், **எ–று.** (எனவே வேற்றுமையுருபு மயங்கி வந்தால் அப்பொருணோக்கித் திரித்துக் கொள்க. வென்றதாயிற்று.)

**வ–று.:**

'மணற்கீன்ற நாணற்கிழங்கின்முளை' என்கிறவிடத்தே, மணல் கோடற் பொருளாகாது இடப்பொருளாய் நிற்கையாற் குவ் வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க.

இனி **உரையிற் கோடலென்**கிற உத்தியால், ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமை யுருபோடு தகுதியாய் வருதலும் உண்டெனக் கொள்க.

**வ–று.:** வினைமுதற் பொருள் எழுவாயுடனேயும், மூன்றனுருபுடனேயும் அன்றிச் சிறுபான்மை, 'அவர்க்குச் செய்யத்தகுமக்காரியம்', என நான்கனுருபுடனேயும் வரும் செயப்படுபொருள், இரண்டனுருபோடன்றிச் சிறுபான்மை 'சோறடப்பட்டது', என வெழுவாயுருபோடும், 'அரிசியாற் சோறாக்கினான்' என மூன்றனுருபோடும், 'அவட்குக்கொள்ளு மிவ்வணிகலம்' என நான்கனுருபோடும், 'பழியினஞ்சும்', என வைந்தனுருபோடும், 'தூணின்கட் சார்ந்தான்', என வேழனுருபோடும் வரும். கருவிப் பொருள் மூன்றுனுருபோடும் ஐந்தனுருபோடும் அன்றிச் சிறுபான்மை, கண்காணும், என வெழுவா யுருபோடும், கண்ணிற்குக் காணலாம், என நான்கனுருபோடும் வரும்.

கோடற்பொருள் நான்கனுருபோடன்றிச் சிறுபான்மை, 'செய்யவ டௌவையைக் காட்டிவிடும்', என

விரண்டனுருபோடும், 'சாத்தனொடு சொன்னான்' என மூன்றனுருபோடும் வரும் 'பொருட்டுப்பொருள்', 'கூலியைக் குறித்து வேலை செய்தான்' என விரண்டனுருபோடும் வரும் நீக்கப்பொருள் ஐந்தனுருபோடன்றிச் சிறுபான்மை, 'மதுரையை நீங்கினான்' என விரண்டனுருபோடும் வரும். எல்லைப் பொருள், 'மதுரையின் வடக்குச் சிதம்பரம்', என நான்கனுருபோடும் வரும். சம்பந்தப் பொருள் ஆறனுரு போடன்றிச் சிறுபான்மை, 'உயிர்க்கணுணர்வு' என வேழனுருபோடும் வரும். இடப்பொருள் ஏழனுருபோடன்றிச் சிறுபான்மை, வழியைச் சென்றான், என விரண்டனுருபோடும் 'வீட்டிற்குப் போவான்' 'நாளைக்கு வருவான்' என நான்கனுருபோடும் வரும். மற்றுமிப்படி வருவனவற்றை யாராய்ந்து அறிந்து கொள்க.

## ஆ- முத்துத்தம்பிப் பிள்ளை

உருபுமயக்கம் வந்தவிடத்துப் பொருள்கொள்ளுமாறு கூறுஞ் சூத்திரம் யாது?

யாத னுருபிற் கூறிற் றாயினும்

பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்

(யாதன் உருபின் கூறிற்று ஆயினும்

பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்.)

**இ–ள்.:** ஒரு வேற்றுமைப்பொருள் மற்றொரு வேற்றுமையுருபாற் சொல்லப்பட்டதாயினும், அவ்வுருபு மயங்கிவந்தமையின், அவ்வுருபு சென்றவழியே பொருள் சாராது அப்பொருள் சென்றவழியே அவ்வுருபு சாரும், **எ–று.**

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கிவந்த உருபைப் பொருளுக்கியைந்த உருபாகத் திரித்துப் பொருள்கொள்க என்பதாயிற்று.

**உ–ம்.**

(1) "நாகுவேயொடுநக்குவீங்குதோள்" (இளமூங்கிலை நகைத்துப் பருத்ததோள் என்பது பொருள்). என்புழி, வேய் உடனிகழ்ச்சிப்பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்றலால், ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துப் பொருள்கொள்க. (2) "கிழங்குமணற்கீன்றமுளை" (கிழங்கு மணற்கண் ஈன்ற முளை என்பது பொருள்.) என்புழி, மணல் கோடற் பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலால், குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துப் பொருள்கொள்க. பிறவுமன்ன.

(3) சாத்தனினெடியன் என ஐந்தாவதனுருபு சாத்தற்கு நெடியன் என நான்காவதனுருபாக மயங்கிற்று.

இனி **உரையிற்கோட** லென்னுமுத்தியால், ஒரு

வேற்றுமைப்பொருள் மற்றொரு வேற்றுமை யுருபுகளோடு தகுதியாக வருதலும் உண்டெனக் கொள்க. அவை வருமாறு:—

1. வினைமுதற்பொருள், எழுவாயுருபு மூன்றனுருபுக ளோடன்றிச் சிறுபான்மை நான்கனுருபு ஆறனுருபுகளோடும் வரும்.

சூத்திரம்—

**"ஒன்று மூன்றுநான் காறெனு முருபொடு**
**வருமே வினைமுத லெனவகுத் தனரே."**

**உ—ம்.** அவர் செய்யத்தகுமக்காரியம்—எழுவாய்; அவராற் செய்யத்தகுமக்காரியம்—மூன்றாம்வேற்றுமை; அவர்க்கு செய்யத் தகுமக்காரியம்—நான்காவது; அவரது செயல்—ஆறாவது. அவராற்செய்யத் தகுமக்காரியம் என்பது முதலியவெல்லாம் உருபின்றியும் எழுவாய் மாத்திரையாகவும் நிற்கும்.

2. செயப்படுபொருள், இரண்டனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாய்வேற்றுமையுருபு முதல் ஏழாம்வேற்றுமையுருபீறாய உருபுகள் எல்லாவற்றோடும் வரும்.

சூத்திரம் —

**"எல்லா வுருபொடுஞ் செயப்படு பொருளெழும்."**

**உ—ம்.** அரிசியடப்பட்டது—எழுவாய்; அரிசியை யட்டான்—இரண்டாம் வேற்றுமை; அரிசியாற் சோறாக்கினான்—மூன்றாவது; அவட்குக்கொள்ளுமிவ்வணி—நான்காவது; பழியினஞ்சும்—ஐந்தாவது; நூலது குற்றங்கூறினான்—ஆறாவது; தூணின்கட் சார்ந்தான்—ஏழாவது.

அரிசியடப்பட்டது—அரிசியையட்டது. அரிசியாற் சோறாக் கினான்—அரிசியைச் சோறாக்கினான். அவட்குக் கொள்ளுமிவ்வணி—அவளைக்கொள்ளுமிவ்வணி. பழியினஞ்சும்—பழியை அஞ்சும். நூலதுகுற்றங்கூறினான்—நூலைக் குற்றங் கூறினான்.

3. கருவிப்பொருள், மூன்றனுருபு ஐந்தனுருபுகளோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபு நான்கனுருபு ஆறனுருபுகளோடும் வரும்.

சூத்திரம் —

**"ஒன்று மூன்றுநான் கைந்தா றுருபொடு**
**கருவி வருமெனக் கருதினர் பெரியோர்."**

**உ—ம்.** கண்காணும்—எழுவாய்; கண்ணாற்காணும்—மூன்றாவது; கண்ணுக்குக்காணலாம்—நான்காவது; கண்ணிற் காணாம்—ஐந்தாவது; கண்ணதுகாணல்—ஆறாவது.

கண்காணும்–கண்ணாற்காணும். கண்ணுக்குக்காணலாம்–கண்ணாற் காணலாம். கண்ணிற் காணலாம்–கண்ணாற் காணலாம். கண்ணதுகாணல்–கண்ணாற்காணல்.

4. கோடற்பொருள், நான்கனுருபோடன்றிச், சிறுபான்மை எட்டாம் வேற்றுமையொழிந்த எல்லாவுருபுகளோடும் வரும்.

சூத்திரம் – "எல்லா வுருபொடுங் கொள்வோ னேழுமே."

**உ–ம்.** இரப்பவர் என்பெறினுங்கொள்வர்–எழுவாய்; செய்யவள் தவ்வையைக் காட்டிவிடும்–இரண்டாவது; நாகராற்பலி–மூன்றாவது; நாகர்க்குப்பலி–நான்காவது; நாகரினன்பு செய்தான்–ஐந்தாவது; நாகரதுபலி–ஆறாவது; நாகர்கணன்புசெய்தான்–ஏழாவது.

இரப்பவர் என்பெறினுங்கொள்வர்–இரப்பவர்க்கு என்பெறினுங் கொள்வர். தவ்வையைக் காட்டிவிடும்–தவ்வைக்குக் காட்டிவிடும். நாகராற்பலி–நாகர்க்குப்பலி. நாகரினன்பு–நாகர்க்கன்பு. நாகரதுபலி–நாகர்க்குப்பலி. நாகர்கணன்பு–நாகர்க்கணன்பு.

5. ஐந்தாம்வேற்றுமைப்பொருள்களுள், நீக்கப்பொருள் சிறுபான்மை இரண்டனுருபோடும், எல்லைப்பொருள் சிறுபான்மை நான்கனுருபோடும் வரும்.

சூத்திரம் – "இரண்டுநான் கைத்தொர்டு மெழுமே நீக்கம்."

**உ–ம்.** மதுரையை நீங்கினான்–இரண்டாவது. மதுரைக்கு வடக்குச் சிதம்பரம்–நான்காவது. மதுரையின் வடக்குச் சிதம்பரம்–ஐந்தாவது.

மதுரையை நீங்கினான்–மதுரையினீங்கினான். மதுரைக்கு வடக்கு–மதுரையின்வடக்கு.

6. சம்பந்தப்பொருள், ஆறனுருபோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஐந்தனுருபு ஏழனுருபுகளோடும் வரும்.

சூத்திரம் – "நான்கைத் தாறே ழோடுகுறை நடக்கும்."

இங்கே குறையென்றது ஆறாம்வேற்றுமையை.

**உ–ம்.** சாத்தனுக்கு மகன்–சாத்தனது மகன். மரத்தினீங்கின கொம்பு–மரத்தினது ஒருதிசைநோக்கி நீங்கினகொம்பு. சாத்தனதுகை. உயிரின் கண்உணர்வு–உயினதுணர்வு.

7. இடப்பொருள், ஏழனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாயுருபு இரண்டனுருபு நான்கனுருபுகளோடும் வரும்.

சூத்திரம் – "ஒன்றி ரண்டுநான் கேழோ டிடமெழும்."

**உ–ம்.** தூண்போதிகை தொட்டது – தூண்கட்பொதிகை தொட்டது. தூணைச்சார்ந்தான் – தூண்கட்சார்ந்தான். இன்றைக்குவருவான் நாளைக்குவருவான் வீட்டிற்குவருவான்

– இன்றைக்கண்வருவான் நாளைக்கண்வருவான் வீட்டின்கண் வருவான்.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** உருபு மயக்க முணர்த்திற்று.

**இ–ள்.: யாதனுருபிற் கூறிற்றாயினும்** – எந்த வேற்றுமைப் பொருள் எந்த வேற்றுமை யுருபினாலே சொல்லப்பட்டதாயினும், **பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்** – (அந்த உருபு சென்றவழிப் பொருள் சாராது) பொருள் சென்றவழியேப் பொருளினுருபு சாரும், **எ–று.**

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கிவந்த வுருபைப் பொருளுக்கு இயைந்த வுருபாகத் திரித்துக் கொள்க வென்பதாயிற்று.

**வ–று.:**

'நாகு வேயொடு நக்கு வீங்குதோள்' எனின், நாகுவேய் செயப்படுபொருளாக நிற்றலால், ஒடுவை ஐயுருபாகத் திரித்துக் கொள்க. (நாகு–இளமை, நகல்–நகைத்தல்,) 'மணற்கீன்றமுளை' எனின், மணல் இடப்பொருளாய் நிற்றலால், குவ்வைக் கண்ணுருபாக்குக, 'செய்யவ டௌவையைக் காட்டிவிடும்' எனின், தௌவை ஏற்றுக்கோடற் பொருளாய் நிற்றலால் ஐயுருபைக் குவ்வுருபாக்குக இவைபோல்வன வெல்லாம் உருபுமயக்கம், பிறவுமன்ன.

இனி **யுரையிற்கோட**லென்னும் உத்தியால் ஒரோருபின் பொருட்கே அவ்வுருபு போல வேறு உருபுகள் வருமெனவும் அவை பொருண்மயக்க மெனவுங் கொள்க.

"ஒன்று மூன்று நான் காறெனு முருபொடு–வருமே
வினைமுத லென வகுத் தனரே"

**உ–ம்.:** அவர் செய்தார் எனவும், அவராற் செய்யத் தகுமக் காரியம் எனவும், அவர்க்குச் செய்யத் தகுமக்காரியம் எனவும், அவரது வரவு எனவு முறையே காண்க.

எல்லா உருபொடுஞ் செயப்படு பொருளேழும்.

**உ–ம்.:** சோறு அடப்பட்டது, சோற்றையட்டான், அரிசியாற் சோறாக்கினான், அவட்குக் கொள்ளுமிவ்வணிகலம், பழியினஞ்சும், நூலது குற்றங் கூறினான், தூணின்கட் சார்ந்தான் என முறையே காண்க.

"ஒன்று மூன்றுநான் கைதா றுருபொடு
கருவி வருமெனக் கருதினர் புலவர்"

**உ–ம்.:** கண்காணும், கண்ணாற் காண்பன், கண்ணிற்குக் காணலாம், கண்ணிற் காணலாம், கண்ணினதுகாட்சி என முறையே காண்க.

"எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே"

**உ–ம்.:** இரப்பவரென் பெறினுங் கொள்வர், செய்யவ டௌவையைக் காட்டிவிடும், தேவராற்பலி நேர்ந்தான், தேவர்க்குப் பலிநேர்ந்தான், தேவரினன்பு செய்தான், தேவரது பலி, தேவர்கணன்பு செய்தான் என முறையே காண்க.

"இரண்டு நான் கைத் தொடு மெழுமே நீக்கம்."

**உ–ம்.:** மதுரையை நீங்கினான், மதுரைக்கு வடக்கு மாயபுரம். மதுரையின் வடக்கு மாயபுரம் என முறையே காண்க.

"நான்கைத் தாறே ழொடுகுறை நடக்கும்"

**உ–ம்.:** சாத்தனுக்குமகன், மரத்தி னீங்கின கொம்பு, சாத்தனது கை, உயிரின்கண் ணுணர்வு என முறையே காண்க. ஒன்றி ரண்டுநான் கேழோ டிடமெழும்.

**உ–ம்.:** தூண்போதிகை தொட்டது, தூணைச் சார்ந்தான், இன்றைக்கு நாளைக்கு, காலைக்கு மாலைக்கு, வீட்டிற்கு வருவான், தூணின்கட் சார்ந்தான், என முறையே காண்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– யாதன் உருபின் கூறிற்று ஆயினும்** – எந்த வேற்றுமை உருபால் (எந்த வேற்றுமைப்பொருள்) சொல்லப்பட்டதாயினும், (உருபு சென்ற வழியே பொருள் சேராமல்), **பொருள்செல் மருங்கின்** – அப்பொருள் சென்ற வழியே, **வேற்றுமை** – அவ்வுருபு, **சாரும்** – சேரும்.

**குறிப்பு** :– இதனால் பொருளுக்கு இமையாமல் மயங்கிவந்த வேற்றுமை யுருபை அப்பொருளுக்கு இயைந்த உருபாகத் திரிந்துக் கொள்க என்றதாயிற்று.

**உதாரணம்**

| | |
|---|---|
| 1. – "கைத்தொழிற்கு மின்கான்" | இங்கு, 'தொழில்' ஏற்றுக்கொள்ளு தற்பொருளாகாமல், ஏதுப்பொரு ளாய் நிற்றலின் 'தொழிலின்மிக் கான்' எனக் குவ்வுருபை இன் உருபாகத் திரித்துக்கொள்க. |
| 2. – "காலத்தினாற் செய்த நன்றி" | இங்கு, 'காலம்' கருவி கருத்தாப் பொருளாகாமல், இடப்பொருளாய் நிற்றலின், 'காலத்தின்கண் செய்த' என ஆல் உருபைக் கண் உருபாக த்திர்த்துக்கொள்க. |
| 3. – "நாற்றமொன் றில்லாத பூ" | இங்கு, ஒரு உருபும் ஐ உருபும் மு |

**வொடு** சாந்தினை நாற்றந்தா
ன் வேண்டியது போலும்"

றையே உடனிகழ்ச்சிப்பொருளும் செயப்படுபொருளுமாகவும், இடப் பொருளாய் நிற்றலில் அவற்றைக் கண் உருபாகத்திரித்துக்கொள்க.

இனி, **உரையிற்கோடல்** என்னும் உத்தியால் ஒருவேற்றுமைப் பொருள் மற்றை வேற்றுமை யுருபுகளோடு தகுதியாக வருதலும் உண்டெனக்கொள்க; **உ-ம்;** – அவர்க்குச் செய்யத்தகு மக்காரியம்.

உருபுமயக்கம், வேற்றுமை மயக்கம் என்பன ஒன்றென்க. இனி, ஒருவேற்றுமையின் உருபு நிற்கவேண்டியவிடத்து மற்றொரு வேற்றுமை யுருபு தகுதிபடவந்துநிற்பது வேற்றுமை மயக்கம் எனவும், ஒரு வேற்றுமையின் பலவுருபுகளில் ஒருருபு குறிக்கவேண்டிய பொருளை அவ்வேற்றுமையின் மற்றோருருபு குறிப்பது உருபுமயக்கம் எனவுங் கூறப் பொருந்தும். இன்னும், பொருள்மயக்கம் எனவொன்றுங்கொள்வர். அஃதாவது – ஒருவேற்றுமை யுருபு பிறிதொன்றின் பொருளோடு தன்பொருளை விடாமல் மயங்குவது; உ-ம்;– கோட்டைக்குறைத்தான் –இதில் இரண்டாவதன் பொருளிலே கோட்டின்கண் குறைத்தான் என ஏழனுருபு தன் பொருளை விடாமல் மயங்கிற்று.

"தொக்குழி மயங்குன" என மேற்பொது வியலுட்கூறுஞ்சூத்திரத்து, வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்கள் பலபொருளால் மயங்கும் பொருண்மயக்கமுமுளது. இவ்விரண்டிற்குமுள்ள வேறுபாட்டை ஆங்குக் காட்டுதும்.

இச்சூத்திரம் இவ்வாசிரியர் தொல்காப்பியத்தினின்று மெடுத்துக் கொண்ட மேற்கோள்.

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: யாதன் உருபின் கூறிற்று ஆயினும்** – ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமை யுருபாற் சொல்லப்பட்டதாயினும், **பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்** – அப்பொருள் சென்றவழியே அவ்வுருபு சேரும், **எ–று.**

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கி வந்த உருபைப் பொருளுக்கியைந்த உருபாகத் திரித்துக் கொள்க என்பதாயிற்று.

**உ–ம்.:** "நாகு வேயொடு நக்கு வீங்கு தோள்" என்புழி, வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படு பொருளாய் நிற்றலால், ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.

"கிழங்கு மணற்கீன்ற முளை" என்புழி, மணல்கோடற் பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலால், குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. பிறவுமன்ன.

இனி **உரையிற்கோடலென்னுமுத்தி**யால், ஒரு வேற்றுமைப் பொருள்

மற்றை வேற்றுமை யுருபுகளோடு தகுதியாக வருதலும் உண்டெனக் கொள்க. அவை வருமாறு:–

(1) வினைமுதற்பொருள், எழுவாயுருபு மூன்றனுருபுகளோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஆறனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்.:

**"ஒன்று மூன்றுநான் காறெனு முருபொடு**
**வருமே வினைமுத லெனவகுத் தனரே."**

**உ–ம்.:** அவர்க்குச் செய்யத் தகுமக் காரியம், 4–கு. அவரது வரவு: 6–அது. என வரும்.

(2) செயப்படுபொருள், இரண்டனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாய் வேற்றுமையுருபு முதல் ஏழாம்வேற்றுமை யுருபீறாய உருபுகள் எல்லாவற்றோடும், வரும்.

சூத்திரம்.:

**"எல்லா வுருபொடுஞ் செயப்படு பொருளெழும்."**

**உ–ம்.:** சோறடப்பட்டது: எழுவாய், அரிசியாற் சோறாக்கினான்:

3–ஆல். அவட்குக் கொள்ளுமிவ்வணிகலம்: 4–கு. பழியினஞ்சும்: 5–இன். நூலது குற்றங் கூறினான்: 6– அது. தூணின்கட்சார்ந்தான்: 7–கண் என வரும்.

(3) கருவிப்பொருள், மூன்றனுருபு ஐந்தனுருபுகளோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபு நான்கனுருபு ஆறனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்.:

**"ஒன்று மூன்றுநான் கைந்தா றுருபொடு**
**கருவி வருமெனக் கருதினர் பெரியோர்"**

**உ–ம்.:** கண் காணும்: எழுவாய். கண்ணிற்குக் காணலாம். 4 –கு. கண்ணது காட்சி: 6–அது என வரும்.

கோடற்பொருள், நான்கனுருபோடன்றிச், சிறுபான்மை எட்டாம் (4) வேற்றுமை யொழிந்த எல்லாவுருபுகளோடும் வரும்.

சூத்திரம்.: **"எல்லா வுருபொடுங் கொள்வோ னெழுமே".**

**உ–ம்.:** "இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்." எழுவாய், "செய்யவ டவ்வையைக் காட்டிவிடும்" 2–ஐ. நாகராற்பலி: 3–ஆல். நாகரி னன்பு செய்தான். 5–இன். நாகரதுபலி: 6–அது. நாகர்கணன்பு செய்தான்: 7–கண் என வரும்.

(5) ஐந்தாம் வேற்றுமைப் பொருள்களுள், நீக்கப் பொருள் சிறுபான்மை இரண்டனுருபோடும், எல்லைப் பொருள் சிறுபான்மை நான்கனுருபோடும், வரும்.

சூத்திரம்.: **"இரண்டுநான் கைந்தொடு மெழுமே நீக்கம்"**

**உ–ம்.:** மதுரையை நீங்கினான். 2–ஐ. நீக்கப்பொருள். மதுரைக்கு வடக்குச் சிதம்பரம்; 4–கு. எல்லைப்பொருள்.

6. சம்பந்தப்பொருள், ஆறனுருபோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஐந்தனுருபு ஏழனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்.: **"நான் கைந்தாறே ழொடுகுறை நடக்கும்."**

**உ–ம்.:** சாத்தனுக்கு மகன்: 4–கு மரத்தினீங்கின கொம்பு: 5–இன். உயிரின்க ணுணர்வு: 7–கண் என வரும்.

(7) இடப்பொருள், ஏழனுருபோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபு இரண்டனுருபு நான்கனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்.: "ஒன்றி ரண்டுநான் கேழோடிட மெழும்."

**உ–ம்.: தூண்** போதிகை தொட்டது: எழுவாய். தூணைச் சார்ந்தான்; 2–ஐ. இன்றைக்கு, நாளைக்கு, பகலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு வருவன்: 4–கு, என வரும்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள்.: யாதன் உருபின் கூறிற்று ஆயினும்** – ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமையுருபாற் சொல்லப்பட்டதாயினும், – **பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்** – அப்பொருள் சென்றவழியே அவ்வுருபு சேரும். **எ–று.**

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கி வந்த உருபைப் பொருளுக்கியைந்த உருபாகத் திரித்துக் கொள்க என்பதாயிற்று:

**உ–ம்(1)** "நாகுவேயொடுநக்குவீங்குதோள்" என்புழி, வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்றலால், ஒடுவு ருபை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.

(2) "கிழங்குமணற்கீன்றமுளை" என்புழி, மணல் கோடற்பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலால், குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. பிறவுமன்ன.,

இனி உரையிற் கோடலென்னுமுத்தியால், ஒரு வேற்றுமைப் பொருள் மற்றை வேற்றுமையுருபுகளோடு தகுதியாக வருதலும் உண்டெனக் கொள்க. அவைவருமாறு;–

1, **வினைமுதற்பொருள்**, எழுவாயுருபு மூன்றனுருபு களோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஆறனுருபுகளோடும் வரும்.

சூத்திரம், "ஒன்றுமூன்று நான்காறென்னுமுருபொடு வருமேவினை முதலென வகுத்தனரே".

உ–ம். அவர்க்குச் செய்யத்தகுமக்காரியம் : ச–கு. அவரது வரவு; 6.அது. எனவரும்.

2, **செயப்படுபொருள்**, இரண்டனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாய் வேற்றுமையுருபு முதல் ஏழாம் வேற்றுமையுருபீறாய உருபுகள் எல்லாவற்றோடும் வரும்.

சூத்திரம் : "எல்லாவுருபொடுஞ் செயப்படுபொருளெழும்".

உ–ம். சோறப்பட்டது; எழுவாய். அரிசியாற் சோறாக்கினான்; 3. ஆல், அவட்குக் கொள்ளுமிவ்வணிகலம் : 4–கு, பழியினஞ்சும்; 5–இன்

நூலது குற்றங்கூறினான்: 6 – அது, தூணின் கட்சார்ந்தான்: 7 – கண். என வரும்.

3. **கருவிப்பொருள்,** மூன்றனுருபு ஐந்தனுருபுகளோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபு நான்கனுருபு ஆறனுருபுகளோடும் வரும்.

சூத்திரம்: "ஒன்று மூன்று நான்கைந்தாறுருபொடு கருவிவருமெனக் கருதினர் பெரியோர்"

உ–ம். கண்காணும்: எழுவாய். கண்ணிற்குக்காணலாம்: 4 – கு. கண்ணது காட்சி: 6 – அது. என வரும்.

4. **கோடற்பொருள்,** நான்கனுருபோடன்றிச், சிறுபான்மை எட்டாம் வேற்றுமையொழிந்த எல்லாவுருபுகளோடும் வரும்.

சூத்திரம்: "எல்லாவுருபொடுங்கொள்வோனெழுமே."

உ–ம். "இரப்பவரென்பெறினுங்கொள்வர்" எழுவாய். "செய்யவடவ்வையைக் காட்டிவிடும்". 2–ஐ. நாகராற்பலி: 3–ஆல். நாகரினன்புசெய் தான்; 5–இன். நாகரதுபலி; 6–அது. நாகர்கணன்புசெய்தான்.: 7–கண். எனவரும்.

ரு. ஐந்தாம் வேற்றுமைப் பொருள்களுள், நீக்கப்பொருள் சிறுபான்மை இரண்டனுருபோடும், எல்லைப்பொருள் சிறுபான்மை நான்கனுருபோடும் வரும்.

சூத்திரம்: "இரண்டு நான்கைந்தொடுமெழுமே நீக்கம்."

உ–ம். மதுரையைநீங்கினான்; வ–ஐ. நீக்கப்பொருள். மதுரைக்குவடக்குச்சிதம்பரம்: 4–கு. எல்லைப்பொருள்.

6, சம்பந்தப்பொருள், ஆறனுருபோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஐந்தனுருபு ஏழனுருபுகளோடும், வரும்.

சூத்திரம்: "நான்கைந்தாறேழொடு குறை நடக்கும்."

உ–ம். சாத்தனுக்குமகன்: 4–கு. மரத்தினீங்கினகொம்பு: 5–இன். உயிரின்கணுணர்வு: 7–கண். எனவரும்.

7, இடப்பொருள், ஏழனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாயுருபு இரண்டனுருபு நான்கனுருபுகளோடும் வரும்.

சூத்திரம்: "ஒன்றிரண்டு நான்கேழோடிடமெழும்."

உ–ம். தூண்போதிகைதொட்டது: எழுவாய். தூணைச் சார்ந்தான்: வ–ஐ. இன்றைக்கு, நாளைக்கு, பகலைக்கு, அந்திக்கு,

சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு வருவன்:
4–கு. எனவரும்

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: யாதன் உருபின் கூறிற்று ஆயினும்** – எந்த வேற்றுமையுருபால் (எந்த வேற்றுமைப்பொருள்) சொல்லப்பட்டதாயினும், (உருபுசென்ற வழியே பொருள் சேராமல்,) **பொருள் செல் மருங்கின்** – அப்பொருள் சென்ற வழியே, **வேற்றுமை** – அவ்வுருபு, **சாரும்** – சேரும்.

எனவே, வேற்றுமையுருபு பொருளுக்கு இயையாமல் மாறிவந்தால், அவ்வுருபைப் பொருளுக்கு இயைந்த உருபாகத் திரித்துக் கொள்க. உருபு மயக்கமெனினும், வேற்றுமை மயக்கமெனினும் ஒக்கும். மயக்கம்–மாறுதல்.

**உ–ம்.:**

"இந்நகர்க்கே வாழ்கின்றோம்."–இங்கு நகர் – ஏற்றுக் கொள்ளுதற் பொருளாகாமல் இடப்பொருளாய் நிற்கையால், நகர்க்கண் வாழ்கின்றோம் எனக் குவ் வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. "ணனவல்லினம்வர" என்ற சூத்திரத்தில், 'வேற்றுமைக்கு' 'அல்வழிக்கு' என்பன வேற்றுமையில், அல்வழியில் எனப் பொருள்படுதலும் இது.

"காலத்தினாற் செய்த நன்றி"–இங்குக் காலம், கருவி கருத்தாப் பொருளாகாமல் இடப்பொருளாய் நிற்கையால், காலத்தின்கண் செய்த நன்றி என ஆலுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. "குறில்வழிலள" என்ற சூத்திரத்தில், 'அல்வழியான்' என்றது – அல்வழியில் எனப்பொருள்படுதலும் இது.

## பவானந்தம் பிள்ளை

இ–ள். யாதன் உருபின் கூறிற்று ஆயினும் – ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமையுருபாற் சொல்லப்பட்டதாயினும், பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும் – அப்பொருள் சென்ற வழியே அவ்வுருவு சேரும். எ–று.

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கிவந்த உருபைப் பொருளுக்கியைந்த உருபாகத் திரித்துக்கொள்க என்பதாயிற்று.

உருபு மயக்கம் எனினும் வேற்றுமை மயக்கம் எனினும் ஒக்கும்.

உ–ம்.

(1) "நாகு வேயொடு நக்கு வீங்கு தோள்" என்புழி, வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்றலால், ஒடுவுருபை ஐயுருபாகத் திரித்துக்கொள்க.

(2) "கிழங்கு மணற்கீன்ற முளை" என்புழி, மணல் கோடற்

பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலால், குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க. பிறவு மன்ன. இனி 'உரையிற்கோட'லென்னு முத்தியால், ஒரு வேற்றுமைப் பொருள் மற்ற வேற்றுமை யுருபுகளோடு தகுதியாக வருதலும் உண்டெனக் கொள்க. அவை வருமாறு :–

1. வினைமுதற்பொருள், எழுவாயுருபு மூன்றனுருபுகளோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஆறனுருபுகளோடும் வரும்.

உ–ம், அவர்க்குச் செய்யத்தகு மக்காரியம் : 4 – கு. அவரது வரவு : 6 – அது.

2. "எல்லாவுருபொடுஞ் செயப்படு பொருளெழும்."

உ–ம். சோறடப்பட்டது. எழுவாய். அரிசியாற் சோறாக்கினான் : 3–ஆல். அவட்குக் கொள்ளு மிவ்வணிகலம் 4–கு. பழியி னஞ்சும் : 5–இன். நூலது குற்றங்கூறினான் : 6–அது. தூணின்கட் சார்ந்தான் : 7–கண்.

3. கருவிப்பொருள், மூன்றனுருபு ஐந்தனுருபுகளோடன்றிச், சிறுபான்மை எழுவாயுருபு நான்கனுருபு ஆறனுருபுகளோடும் வரும்.

உ–ம். கண் காணும் : எழுவாய். கண்ணிற்குக் காணலாம் : 4–கு. கண்ணது காட்சி : 6–அது.

4. கோடற்பொருள், நான்கனுருபோடன்றிச் சிறுபான்மை எட்டாம்வேற்றுமையொழிந்த எல்லாவுருபுகளோடும் வரும்.

உ–ம். "இரப்பவ ரென்பெறினுங் கொள்வர்." எழுவாய். "செய்யவ டவ்வையைக் காட்டி விடும்." 2–ஐ. நாகராற் பலி : 3–ஆல். நாகரி னன்பு செய்தான் : 5–இன். நாகரது பலி : 6–அது. நாகர்க ணன்புசெய்தான் : 7–கண்.

5. ஐந்தாம்வேற்றுமைப் பொருள்களுள், நீக்கப்பொருள் சிறுபான்மை இரண்டனுருபோடும், எல்லைப்பொருள் சிறுபான்மை நான்கனுருபோடும் வரும்.

உ–ம். மதுரையை நீங்கினான் : 2–ஐ. நீக்கப்பொருள். மதுரைக்கு வடக்குச் சிதம்பரம் : 4–கு. எல்லைப்பொருள்.

6. சம்பந்தப்பொருள், ஆறனுருபோடன்றிச், சிறுபான்மை நான்கனுருபு ஐந்தனுருபு ஏழனுருபுகளோடும் வரும்.

உ–ம். சாத்தனுக்கு மகன் : 4–கு. மரத்தினீங்கின கொம்பு : 5–இன். உயிரிதன்க ணுணர்வு : 7–கண்.

7. இடப்பொருள், ஏழனுருபோடன்றிச், சிறுபான்மை எழுவாயுருபு இரண்டனுருபு நான்கனுருபுகளோடும் வரும்.

உ–ம். தூண் போதிகை தொட்டது : எழுவாய். தூணைச்

சார்ந்தான் : 2–ஐ. இன்றைக்கு, நாளைக்கு, கலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, மாலைக்கு, காலைக்கு, ஊர்க்கு, வீட்டிற்கு வருவன் : 4–கு.

## கொ. இராமலிங்கத் தம்பிரான்

(இ–ள்.) யாதன் உருபின் – (ஒரு வேற்றுமைப்பொருள்) மற்றொரு வேற்றுமையுருபால், கூறிற்று ஆயினும் – சொல்லப்பட்ட தாயினும், பொருள் சொல் மருங்கின் – அப் பொருள் சென்ற வழியே, வேற்றுமை சாரும் – வேற்றுமையுருபு சேரும். (எ–று)

(பொ–ரை.) எந்த வேற்றுமையிற் சொல்லி இருந்தாலும், பொருள் சார்ந்த பக்கமே வேற்றுமை சாரும்.

எனவே, பொருளுக்கியையாது மயங்கி வந்த வேற்றுமை யுருபை அப் பொருளுக்கியைந்த உருபாகத்திரித்துக் கொள்க என்பதாயிற்று. உருபுமயக்க மெனினும், வேற்றுமைமயக்க மெனினும் ஒக்கும். ( மயக்கம் – மாறுதல்)

1. “நாகுவேயொடு நக்கு வீங்கு தோள்”– இங்கு வேய் உடனிகழ்ச்சிப் பொருகுளாகாது செயப்படு பொருளாய் நிற்றலால், ஒடு வுருபை ஐ யுருபாய்த் திரித்துக் கொள்க.

(நாகு – இறமை. வேய் – மூங்கில். நகல் – நகைத்தல்.)

2. “மணற்கீன்ற நாண்மற்கிழங்கின் முளை” – இங்கு, மணல் கோடற் பொருளாகாது இடப் பொருளாய் நிற்கையால், குவ்வுருபைக் கண்ணுருபு ஆகத்திரித்துக் கொள்க.

3. “காலத்தினாற் செய்த நன்றி” – இங்கு, காலம் – கருவி கருத்தாப் பொருளாகாமல் இடப்பொருளாய் நிற்கையால், காலத்தின் கண் செய்த நன்றி என ஆலுருபைக் கண்ணுரு பாகத்திரித்துக் கொள்க.

4. “அழுக்கா றுடையானைச் செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்.” – இங்கு, தவ்வை – செயப்படுபொரு ளாகாமல் ஏற்றுக் கொள்ளுகிதற் பொருளாய் நிற்கையால், தவ்வைக்குக் காட்டி விடும் என ஐ உருபைக் குவ்வுருபாகத்திரித்துக் கொள்க.இனி, உரையிற் கோடலென்கிற் உத்தியால் ஒரு வேற்றுமைப் பொருள் மற்றொரு வேற்றுமை யுருபோடு தகுதியாய் வருதலும் உண்டெனக் கொள்க. அவைவருமாறு:–

(1) வினை முதற்பொருள், எழுவாயுடனேயும், மூன்றனுருபுடனேயும் அன்றிச் சிறுபான்மை நான்கனுருபுடனேயும் வரும்.

(உ–ம்.) அவர் செய்தார்; அவராற் செய்யத்தகுமக் காரியம்; அவர்க்குச் செய்யத்தகு மக்காரியம்.

(2) செயப்படுபொருள், இரண்டனுருபோடன்றிச் சிறு பான்மை எழுவாயிருபோடும், மூன்றனுருபோடும், நான்கனுரு போடும், ஐந்தனுருபோடும் ஏழனுருபோடும் வரும்.

(உ–ம்.) சோற்றையட்டான்; சோறடப்பட்டது; அதிசியாற் சோறாக்கினான்; அவட்குக் கொள்ளுமிவ்வணிகலம்; பழியினஞ்சும்; தூணின்கட் சார்ந்தான்.

(3) கருவிப் பொருள், மூன்றனுருபோடும், ஐந்தனுருபோடும் அன்றிச் சிறுபான்மை எழுவாயுருபோடும், நான்கனுருபோடும் வரும்.

(உ–ம்.) கண்ணுற்காண்பன்; கண்ணிற் காணலாம்; கண் காணும்; கண்ணிற்குக் காணலாம்.

(4) கோடற் பொருள் நான்க னுருபோடன்றிச் சிறுபான்மை இரண்டனுருபோடும், மூன்றனுருபோடும் வரும்.

(உ–ம்.) நாகர்க்குப்பலி; "செய்யவடவ்வையைக் காட்டி விடும்"; நாகராற்பலி.

(5) பொருட்டுப் பொருள் இரண்டனுருபோடும் வரும்.

(உ–ம்.) கூலியைக் குறித்து வேலை செய்தான்.

(6) நீக்கப்பொருள் ஐந்தனுருபோடன்றிச் சிறுபான்மை இரண்டனுருபோடம் வரும்.

(உ–ம்.) மதுரையின் வடக்குச் சிதம்பரம்; மதுரையை நீங்கினான்.

(7) எல்லைப்பொருள் நான்கனுருபோடும் வரும்.

(உ–ம்.) மதுரைக்கு வடக்குச் சிதம்பரம்.

(8) சம்பந்தப் பொருள் ஆறனுருபோடன்றிச் சிறுபான்மை ஏழனுருபோடும் வரும்.

(உ–ம்.) சாத்தனதுகை; உயிரின் கணுணர்வு.

(9) இடப்பொருள் ஏழனுருபோடன்றிச் சிறுபான்மை இரண்டனுருபோடும், நான்கனுருபோடும் வரும்.

(உ–ம்.) தூணின்கட் சார்ந்தான்; தூணைச் சார்ந்தான்; வீட்டிற்கு வருவான்.

மற்றுமிப்படி வருவனவற்றை ஆராய்ந்து அறிந்துகொள்க.

## கா. நமச்சிவாய முதலியார்

**யாதன் உருபின்** – மற்றொரு வேற்றுமை யுருபால், **கூறிற்று ஆயினும்** – ஒரு வேற்றுமைப் பொருள் சொல்லப்பட்டதாயினும், **பொருள்செல் மருங்கின்** – அப்பொருள் சென்றவழியே, **வேற்றுமை** – அவ்வுருபு, **சாரும்** – சேரும்.

எனவே, பொருளுக்கு இயையாது மயங்கிவந்த வேற்றுமையுருபை, அப்பொருளுக்கு இயைந்த உருபாகத் திரித்துக்கொள்க என்பதாயிற்று.

**உதாரணம்**

1. **'நாகுவேயொடு நக்கு வீங்குதோள்'** – இங்கு, வேய் உடனிகழ்ச்சிப் பொருளாகாது செயப்படுபொருளாய் நிற்றலால், ஒடு வுருபை ஐயுருபாகத் திரித்துக் கொள்க.

2. **'மணற்கீன்ற நாணற்கிழங்கின் முளை'** – இங்கு மணல், கோடற் பொருளாகாது இடப்பொருளாய் நிற்கையால், குவ்வுருபைக் கண்ணுருபாகத் திரித்துக் கொள்க.

இனி, **உரையிற் கோடல்** என்னும் உத்தியால், ஒரு வேற்றுமைப் பொருள், மற்றொரு வேற்றுமை யுருபோடு தகுதியாய் வருதலும் உண்டெனக் கொள்க. அவை வருமாறு :

(1) **எழுவாய்ப்பொருள்,** மூன்றனுருபுடனேயும் அன்றிச் சிறுபான்மை நான்கனுருபுடனேயும் வரும்.

(2) **செயப்படுபொருள்,** இரண்டனுருபோடன்றிச் சிறுபான்மை எழுவாயுருபோடும், மூன்றனுருபோடும், நான்கனுருபோடும், ஐந்தனுருபோடும், ஏழுனுருபோடும் வரும்.

சோறு அடப்பட்டது – எழுவாய்
அரிசியாற் சோறாக்கினான் – 3–ஆம் வேற்றுமை.
அவட்குக் கொள்ளும் இவ்வணிகலம் – 4–ஆம் வேற்றமை.
பழியின் அஞ்சும் – 5–ஆம் வேற்றுமை.
தூணின்கண் சார்ந்தான் – 7–ஆம் வேற்றுமை.

(3) **கருவிப்பொருள்,** மூன்றனுருபோடும் ஐந்தனுருபோடும் அன்றிச் சிறுபான்மை எழுவாயுருபோடும் நான்கனுருபோடும் வரும்.

கண்காணும் எழுவாய்
கண்ணிற்குக்காணும் 4ஆம் வேற்றுமை.

(4) **கோடற்பொருள்,** நான்கனுருபோடன்றிச் சிறுபான்மை இரண்டனுருபோடும் மூன்றனுருபோடும் வரும்.

'செய்யவள் தௌவையைக் காட்டிவிடும்' – 2ஆம் வேற்றுமை.
சாத்தனோடு சொன்னான் – 3ஆம் வேற்றுமை.

(5) **பொருட்டுப்பொருள்,** இரண்டனுருபோடும் வரும்.
கூலியைக் குறித்து வேலை செய்தான் – 2ஆம் வேற்றுமை.

(6) **நீக்கப்பொருள்,** ஐந்தனுருபோடன்றிச் சிறுபான்மை இரண்டனுருபோடும் வரும்.

மதுரையை நீங்கினான் – 2ஆம் வேற்றுமை.

(7) **எல்லைப்பொருள்,** நான்கனுருபோடும் வரும்.

மதுரைக்கு வடக்குச் சிதம்பரம் – 4ஆம் வேற்றுமை.

(8) **சம்பந்தப்பொருள்,** ஆறனுருபோடன்றிச் சிறுபான்மை ஏழனுருபோடும் வரும்.

உயிர்க்கண் உணர்வு.

(9). **இடப்பொருள்,** ஏழனுருபோடன்றிச் சிறுபான்மை இரண்டனுருபோடும் நான்கனுருபோடும் வரும்.

வழியைச் சென்றான் – 2ஆம் வேற்றமை

வீட்டிற்குப் போவான் – 4ஆம் வேற்றுமை.

மற்றும் இப்படி வருவனவற்றை ஆராய்ந்து அறிந்து கொள்க.

## மோசகு பொன்னையா

ஒரு வாக்கியத்தில், ஒரு வேற்றுமைக்கு உரியது எனப்பட்ட பொருளை, மற்றொரு வேற்றுமைக்கு உரியது எனப்பட்ட உருபு கூணர்த்தி நிற்பினும், அப்பொருள் சென்றவழியே உருபையும் திரித்துப் பொருள் செய்வது தகும் எ–று.

இது தொல்காப்பிய நூற்பா.2 பொருள் வேறுபாடே வேற்றுமை யாதலின் உருபாம் குறி பிறழினும் பொருள் பிறழாது எனக் கூறினார்.

எ–டு

1. நாகு வேயொடு நக்கு வீங்குதோள்–இதில் வேய்

செயப்படுபொருளேயல்லாமல் கருவிப் பொருளாகாது

ஆதலின் ஒடுவுருபாற் கூறினும் செயப்படு பொருளே

கொள்க.

1. இதனை அகத்திய நூற்பா என்பர். 2. தொல், சொல். 106.

இந்நூற்பாவின் உரைவிளக்கம் 'ஏற்குமெவ்வகைப் பெயர்க்கு மீறாய்'1 என்ற நூற்பாவின் கண்ணும் பிறாண்டும் விரித்துரைக்கப்பட்டது; ஆண்டுக் கண்டு தெளிக.

வேற்றுமை உருபும் இடைச்சொல்லாதலின், தனக்கென ஒரியல்பில்லாத2 உருபைத் தன் பொருளில் தீர்ந்தோ தீராமலோ பிறபொருளின் பொருட்டாதற்கு உரியது எனச் சேனாவரையரையுள்ளிட்டார் உரைப்பது பொருந்தாது என்பதை அவர் உரை நோக்கித் தெரிந்து கொள்க. யாதனுருபு என்பது வேற்றுமையல்லாத உருபு' என்று தெய்வச்சிலையார் கூறுவதும் பொருந்தாது என்பது வேற்றுமையல்லாத உருபு வரற்கும் விரித்தற்கும்,

**வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை**
**ஈற்றுநின் றியலுத் தொகைவயின் பிரிந்து**
**பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்**
**எல்லாச் சொல்லும் உரிய என்ப.3**

என்ற தொல்காப்பிய நூற்பாவே விதியாக அமைந்துள்ளமையாற் புலனாகும்.

(60)

### 317. ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்
### ஆகா வஃறிணைக் கானல் லாதன.

**ஐ ஆன் குச் செய்யுட்கு அவ்வும் ஆகும்**
**ஆகா அஃறிணைக்கு ஆன் அல்லாதன.**

ai ā<u>n</u> kus seyyutku avvum ākum
ākā ak<u>h</u>ūiṇaikku ā<u>n</u> allāṭa<u>n</u>a

## இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Poetical licence regarding the casal signs ai, an and ku**

In poetry, the signs ai, än and ku are some times changed into a; but among impersonals, an alone is thus changed.

## ஒப்புமைப் பகுதி

குஐ ஆனென வரூஉ மிறுதி
அவ்வொடு சிவணுஞ் செய்யு ளுள்ளே

(தொல். சொல்.: 108)

அஎனப் பிறத்தல் அஃறிணை மருங்கின்
குவ்வும் ஐயும் இல்லென மொழிப

(தொல். சொல்.: 109)

ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்
ஆகா அஃறிணைக் கானல் லாதன

(இ.வி.: 223)

ஐஆன்குச் செய்யுட்கு அவ்வு மாகும்
ஆகா அஃறிணைக்கு ஆன் அல்லாதன

(தொ.வி.: 64)

ஐகுஆ னென வரூஉ மிறுதி
அவொடு சிவணும் யாப்பின் மருங்கே

(மு.வீ.: 544)

அஃறிணை மருங்கி னன்அ வாகும்

(மு.வீ.: 545)

## மயிலை நாதர்

**எ—ன்,** அவ்வுருபுகள் செய்யுளுட்டிரியவும் பெறுமென்பது உணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:** ஐயும் ஆனும் குவ்வுமென்னு மூன்றுருபும் செய்யுட்கண் அகரமாகி நிற்கவும் பெறும்; அஃறிணைக்கண் ஐயும் குவ்வும் திரியாவாம், **எ—று.**

**'ஆகா வஃறிணைக் கானல் லாதன'** எனவே மூன்றும் உயர்திணைக்கண் ஆமென்பது தானே போதருமென்க.

**வ–று.:** காவ லோனைக் களிறஞ் சும்மே என்பது, "காவலோனக் களிறஞ் சும்மே" எனவும், புலவரான் என்பது, "புலவரான" எனவும், கடிநிலை யின்றே யாசிரி யற்கு என்பது, "கடிநிலை யின்றே யாசிரி யற்க" (தொல். புள்ளி. 94) எனவும் மூன்றுருபும் உயர்திணைக்கண் அகரமாய்த் திரிந்தன. புள்ளினான் என்பது, "புள்ளினான" என ஆனீறு அஃறிணைக்கட் டிரிந்தது.

உம்மை எதிர்மறையாதலின், அவ்வாறு திரிதல் சிறுபான்மையெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

எ–னின், சில வேற்றுமையுருபு செய்யுட்கண் திரிந்து வரினும் அமையும் எனப் புறனடை **உணர் – ற்று.**

**இ–ள்.:** ஐ ஆன் கு என்னும் மூன்று உருபும் செய்யுளகத்து ஒரோவழி அகரமாகத் திரிந்துவரவும் பெறும்; அஃறிணைக்கண் எனின் ஆன் ஒன்றுமே திரியும்; ஐயும் குவ்வும் திரியா, **எ–று.**

ஆகா அஃறிணைக்கு ஆன் அல்லாதன எனவே உயர்திணைக்கண் மூன்றுருபும் திரியும் என்பது பெற்றாம்.

**வ–று.:**

"காவலோனைக் களிறஞ்சும்மே" என்பது காவலோனக் களிறஞ்சும்மே என்றும், "புலவரான்" என்பது புலவரான என்றும், "கடிநிலை இன்றே ஆசிரியற்கு" என்பது கடிநிலை இன்று ஆசிரியற்க என்றும் உயர்திணைக்கண் மூன்று உருபும் திரிந்தன. "புள்ளினான்" என்பது புள்ளினான என ஆன்உருபு ஒன்றும் அஃறிணைக்கண் திரிந்தது.

அவ்வுமாகும் என்னும் இழிவு சிறப்பும்மையான் இங்ஙனம் திரிதல் ஒரு தலையன்று என்க.

அகரமாகத் திரியும் என்றமையின் ஆனும் குவ்வும் திரிந்துழி அவற்றின் முன்னின்ற ஆனும் குவ்வும் சாரியை என்பது பெற்றாம். அல்லது அவ்வுமாகும் என்பதனை இரட்டுற மொழிதலாக்கி ஐயுருபு அகரமாய்த் திரியவும்பெறும்; ஆனுருபும் குவ்வுருபும் அகரத்தின்கண்ணாகவும் பெறும் எனப் பொருள் கோடலும் ஒன்று.

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** அவ்வுருபுகள் செய்யுள் விகாரப்படுமெனக் கூறுகின்றது.

**இ–ள்.: ஐயான்கு** – ஐயுருபும் ஆனுருபும் குவ்வுருபும் என்னும் மூன்றும், **செய்யுட்கு அவ்வுமாகும்** – செய்யுட்கண் அகரமாகியும் நிற்கப் பெறும்; **ஆகா அஃறிணைக் கானல் லாதன** – அஃறிணைக் கணாமேயெனில் ஆனல்லாத ஐயுருபும் குவ்வுருபும் திரியாவாம், **எ–று.**

**உ–ம்.:**

"காவ லோனைக் களிறஞ் சும்மே" என்பது "காவ லோனக் களிறஞ் சும்மே" என்றும், "புலவரான்" என்பது "புலவரான" என்றும், "கடிநிலை யின்றே யாசிரி யர்க்கு" என்பது "கடிநிலை யின்றே யாசிரி யர்க்க" (தொல். எழு. 390) என்றும் இவை உயர்திணைக்கண் திரிந்தன. "புள்ளினான்" என்பது "புள்ளினான" என அஃறிணைக்கண் ஆன் ஒன்றும் திரிந்தது.

## விசாகப் பெருமாளையர்

இது, சிலவேற்றுமையுருபு செய்யுளிடத்தே திரிந்து வரினும் அமையுமெனப் புறனடை யுணர்த்துகின்றது.

**இ—ள்.: ஐயான்கு** – ஐயும் ஆனும் குவ்வும் ஆகிய மூன்றுருபுகளும், **செய்யுட்கு** – செய்யுளிடத்து, **அவ்வுமாகும்** – ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும் பெறும், **அஃறிணைக்கு**–அஃறிணையிடத்து, **ஆனல்லாதன**– ஆனல்லாத ஐயுங் குவ்வும், **ஆகா**–அகரமாகத் திரியாவாம், **எ—று.**

**வ—று.:**

காவலோனைக் களிறஞ்சுமமே – காவலோனக் களிறஞ்சும்மே எனவும்; புலவரான், புலவரான எனவும், கடிநிலையின்றே யாசிரியற்கு – ஆசிரியற்க எனவும், உயர்திணையிலே மூன்றுருபுந் திரிந்தன. புள்ளினான் – புள்ளினான, என வஃறிணையில் வரும்.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

வேற்றுமையுருபுகளுட் சிலவுருபுகள் செய்யுளிலே திரிந்தும் வருமெனக்கூறுஞ் சூத்திரம் யாது?

ஐயான்குச் செய்யுட் கவ்வு மாகும்

ஆகா வஃறிணைக் கானல் லாதன.

(ஐ ஆன் கு செய்யுட்கு அவ்வும் ஆகும்

ஆகா அஃறிணைக்கு ஆன் அல்லாதன.)

**இ—ள்.:** ஐயும் ஆனுங் குவ்வுமாகிய மூன்றுருபுகளுஞ் செய்யுளிடத்து ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும்பெறும். அஃறிணையிடத்து ஆனல்லாத ஐயும் குவ்வும் அகரமாகத் திரியாவாம்.

அவ்வும் என்றவும்மையால் இங்ஙனமாதல் சிறுபான்மையெனக் கொள்க.

ஆகாவஃறிணைக் கானல்லாதன எனவே, மூன்றும் உயர்திணைக்க ண்ணாமென்பது தானே போதருமென்க.

திரியுமெனக்கூறாது ஆகுமெனக் கூறியது யாதுபற்றி?

ஐகாரம் அகரமாகத் திரிதலும், ஆன் அகரம் பெறுதலும், குவ்வீது அகரமாகத் திரிதலும் பெறுமென்பது குறித்தற்காம்.

உயர்திணையிலே அகரமாகத் திரியவும்பெறும் வேற்றுமையுருபுகள் யாவை?

"ஐயான்குச்செய்யுட்கவ்வுமாகும்."

அஃறிணையிலே அகரமாகத்திரியவும் பெறும்வேற்றுமையுருபு யாது?

"ஆன்" (ஆகாவஃறிணைக்கானல்லாதன)

**உ–ம்.:–**

(1)களிறுமஞ்சுமக்காவலோனை என்பது களிறுமஞ்சுமக்காவலோன" என்றும், புரைதீர்கேள்விப்புலவரான் என்பது "புரைதீர்கேள்விப்புலவரான" என்றும், கடிநிலையின் றேயாசிரியற்கு என்பது "கடிநிலையின்றே யாசிரியற்க" என்றும் உயர்திணையிலே மூன்றுருபுந் திரிந்தன.

## முகவை இராமானுச கவிராயர்

**இது,** சில வேற்றுமையுருபுகள் செய்யுளிடத்துத் திரிந்து வரினும் அமையு மெனப் புறனடை கூறுகின்றது.

இ–ள்.: **ஐ யான் கு** – இந்த மூன்று உருபுகளும், **செய்யுட்பாடடு** – செய்யுளிடத்து, **அவ்வுமாகும்** – அகரமாகத்திரிந்து வரவும் பெறும், அஃறிணையிடத்து, **ஆனல்லாதனவாகா** – ஆன்உருபு ஒன்றுமே திரியும் மற்ற ஐயுருபுங் குவ்வுருபுந் திரியாவாம், **எ–று.**

எனவே, உயர்திணையிலே மூன்று உருபுந் திரியு மென்றதாயிற்று.

**வ–று.:**

காவலோனை என்பது 'காவலோனக் களிறஞ்சும்மே' எனவும், புலவரான் என்பது புலவரான எனவும்; ஆசிரியற்கு என்பது 'கடிநிலையின்றே யாசிரியற்க' எனவும்; உயர்திணையிலே மூன்று உருபுகளுந் திரிந்தன. 'புள்ளினான்' என்பது, புள்ளினான என ஆனுருபு ஒன்றும் அஃறிணையிலே திரிந்து வந்தது. அவ்வுமாமென்னும் இழிவு சிறப்பு உம்மையால் இப்படித் திரிதல் நியமம் அன்றென்க. (நியமம், நியதி, நிச்சயம் என்பன ஒரு பொருள்). திரியுமென்றதினாலே, ஆனுங் குவ்வுந் திரிந்தபோது முன்னின்ற ஆனுங் குவ்வுஞ் சாரியை யெனப்படும். அல்லாவிடின், ஐ யுருபு அகரமாகத் திரியவும் ஆனுருபுங் குவ்வுருபும் அகரத்தினைச் சார்ந்து நிற்கவும் பெறுமெனப் பொருள் கொள்க.

## கா. கோபாலாசாரியர்

## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– ஐ ஆன்கு** – ஐயும் ஆனும் குவ்வுமாகிய மூன்று உருபுகளும், **செய்யுட்கு** –செய்யுளில், **அவ்வும் ஆகும்** – (சிலவிடத்தில்) அகரமாக வரவும் பெறும்; **அஃறிணைக்கு** – அஃறிணையில், **ஆன் அல்லாதன ஆகா**–ஆன் உருபுமாத்திரம் அகரமாக வருமேயன்றி அல்லாத ஐயும் குவ்வும் (அகரமாக) வாராவாம்.

குறிப்பு :–

எனவே, உயர்திணையில் மூன்றும் உருபுந் திரியுமென்றதாயிற்று. 'செய்யுட்கு,' 'அஃறிணைக்கு' என்பன உருபுமயக்கம். 'ஐ ஆன் கு அவ்வுமாகும்' எனப்பொதுப்படக் கூறினாரேனும், ஐ உருபு – அகரமாகத் திரியவும், ஆன் உருபும் குவ்வுருபும் – அகரத்தைச்சார்ந்து நிற்கவும் பெறும் எனப் பொருள்கொள்க.

| | | | |
|---|---|---|---|
| **உ–ம் :–** | "காவலோனக்களிறஞ்சும்மே" | – காவலோனை | உயர்திணை |
| | "புலவரான' | – புலவரான் | |
| | "கடிநிலையின்றே ஆசிரியற்க" | – ஆசிரியற்கு | |
| | "புள்ளினான" | – புள்ளினான் | (அஃறிணை) |

## ஆறுமுக நாவலர்

**இ–ள்.: ஐ ஆன் குச்செய்யுட்கு அவ்வும் ஆகும்** – ஐயும் ஆனுங் குவ்வுமாகிய மூன்றுருபுகளுஞ் செய்யுளிடத்து ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும் பெறும், **அஃறிணைக்கு ஆன் அல்லாதன ஆகா** – அஃறிணையிடத்து ஆனல்லாத ஐயும் குவ்வும் அகரமாகத் திரியாவாம், **எ–று.**

ஆகாவஃறிணைக் கானல்லாதன எனவே, உயர்திணையிலே மூன்றுருபுந் திரியுமென்பது பெற்றாம்.

**உ–ம்.:**

காவலோனைக் களிறஞ்சும்மே என்பது "காவலோனக் களிறஞ்சும்மே" என்றும், புலவரான் என்பது, "புலவரான" என்றும், கடிநிலையின்றே யாசிரியற்கு என்பது "கடிநிலை யின்றே யாசிரியற்க" என்றும் உயர்திணையிலே மூன்றுருபுந் திரிந்தன. புள்ளினான் என்பது "புள்ளினான" என ஆனுருபொன்றும் அஃறிணையிலே திரிந்தது.அகரமாகத் திரியும் என்றதனால், ஆனுங் குவ்வுந் திரிந்தபோது முன்னின்ற ஆனுங் குவ்வுஞ் சாரியை யென்பது பெற்றாம்.

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். ஐ ஆன் குச்செய்யுட்கு அவ்வும் ஆகும்** – ஐயு ஆனுங் குவ்வுமாகிய மூன்றுருபுகளுஞ் செய்யுளிடத்து ஒரோவழி அகரமாகத் திரிந்துவரவும்பெறும், – **அஃறிணைக்கு ஆன் அல்லாதன ஆகா** – அஃறிணையிடத்து ஆனல்லாத ஐயும் குவ்வும் அகரமாகத் திரியாவாம். **எ – று.**

ஆகாவஃறிணைக் கானல்லாதன எனவே, உயர்திணையிலே மூன்றுருபுந் திரியுமென்பது பெற்றாம்.

**உ–ம். (1)** காவலோனைக் களிறஞ்சும்மே என்பது "காவலோனக் களிறஞ்சும்மே" என்றும், புலவரான் என்பது "புலவரான" என்றும்,கடிநிலையின்றே யாசிரியற்கு என்பது "கடிநிலை யின்றே யாசிரியற்க." என்றும், உயர் திணையிலே மூன்றுருபுந் திரிந்தன.(2)புள்ளினான் என்பது "புள்ளினான" என ஆனுரு பொன்றும் அஃறிணையிலே திரிந்தது, அவ்வுமாகும் என்னு மிழிவுசிறப்பும்மையால் இவ்வாறு திரிதல் நியமமன்றாம்.

ஐ உருபு அகரமாகத் திரியும் எனவும், ஆன் உருபும் குவ்வுருபும் அக கரஞ்சார்ந்துநிற்கப் பெறும் எனவும் பொருள்விளக்கங் கொள்ளுக.

## வை.மு. சடகோபராமாநுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

**இ–ள்.: ஐ ஆன் கு** – ஐயும் ஆனும் குவ்வும் ஆகிய மூன்று உருபுகளும், **செய்யுட்கு** – செய்யுளில், **அவ்வும் ஆகும்** – (சில இடத்தில்) அகரமாக வரவும் பெறும்; **அஃறிணைக்கு** – அஃறிணையில், **ஆன் அல்லாதன ஆகா** – ஆன் உருபு மாத்திரம் அகரமாக வருமே யன்றி அல்லாத ஐயும் குவ்வும் (அகரமாக) வராவாம்; **எ–று.** எனவே, உயர்திணையில் மூன்று உருபும் திரியு மென்றதாயிற்று. செய்யுட்கு, அஃறிணைக்கு, என்பன – உருபுமயக்கம்.

'**ஐ ஆன் கு அவ்வாகும்**" எனப் பொதுப்படக் கூறினாராயினும், ஐ உருபு அகரமாகத் திரியவும், ஆன் உருபும் குஉருபும் – அகரத்தைச் சார்ந்து நிற்கவும் பெறுமெனப் பொருள் கொள்க.

**உ–ம்.:**

'காவலோனக் களிறஞ்சும்மே' – காவலோனை

'புலவரான' – புலவரான் உயர்திணை

புள்ளினான – புள்ளினான் அஃறிணை

'கடிநிலையின்றே ஆசிரியற்க' – ஆசிரியற்கு

'உம்மை' எதிர்மறை யாகலின், அவ்வாறு திரிதல் சிறுபான்மையெனக் கொள்க' என்பது பழையஉரை.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** ஐ ஆன் குச்செய்யுட்கு அவ்வும் ஆகும்–ஐயும் ஆனுங்குவ்வுமாகிய மூன்றுருபுகளுஞ் செய்யுளிடத்து ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும் பெறும். அஃறிணைக்கு ஆன் அல்லாதன ஆகா – அஃறிணையிடத்து ஆனல்லாத ஐயும் குவ்வும் அகரமாகத் திரியாவாம். **எ–று.**

'ஆகாவஃறிணைக் கானல்லாதன' எனவே, உயர்திணையிலே மூன்றுருபுந் திரியுமென்பது பெற்றாம்.

உ—ம்.

(1) காவலோனைக் களிறஞ்சும்மே என்பது "காலலோனக் களிறஞ்சும்மே." என்றும், புலவரான் என்பது, "புலவரான" என்றும், கடிநிலையின்றே யாசிரியற்கு என்பது "கடிநிலையின்றே யாசிரியற்க" என்றும உயர்திணையிலே மன்றுருபுந் திரிந்தன.

(2) புள்ளினான் என்பது "புள்ளினான" என ஆனுருபொன்றும் அஃறிணையிலே திரிந்தது.

அகரமாகத் திரியும் என்றதனால், ஆனுங் குவ்வுந் திரிந்தபோது முன்னின்ற ஆனுங் குவ்வுஞ் சாரியை யென்பது பெற்றாம்.

## கா. நமச்சிவாய முதலியார்

**ஐ ஆன் கு** – ஐயும் ஆனும் குவ்வும் ஆகிய மூன்று உருபுகளும், **செய்யுட்கு** – செய்யுளிடத்து, **அவ்வும் ஆகும்** – ஒரோவழி அகரமாகத் திரிந்து வரவும் பெறும், **அஃறிணைக்கு** – அஃறிணையிடத்து, **ஆன் அல்லாதன** – ஐயும் குவ்வும், **ஆகா** – அகரமாகத் திரியாவாம்.

எனவே, உயிர்திணையிலே மூன்று உருபும் திரியும் என்றதாயிற்று.

உதாரணம்

காவலோனைக் களிறஞ்சும்மே –
காவலோனக் களிறஞ்சும்மே

புலவரான்– புலவரான உயர்திணை

கடிநிலையின்றே

ஆசிரியற்கு – ஆசிரியற்க

புள்ளினான் – புள்ளினான அஃறிணை

## மோசசு பொன்னையா

ஒரு வாக்கியத்தில், ஒரு வேற்றுமைக்கு உரியது எனப்பட்ட பொருளை, மற்றொரு வேற்றுமைக்கு உரியது எனப்பட்ட உருபு உணர்த்தி நிற்பினும், அப்பொருள் சென்றவழியே உருபையும் திரித்துப் பொருள் செய்வது தகும் எ—று.

இது தொல்காப்பிய நூற்பா. பொருள் வேறுபாடே வேற்றுமை யாதலின் உருபாம் குறி பிறழினும் பொருள் பிறழாது எனக் கூறினார்.

எ—டு

1. நாகு வேயொடு நக்கு வீங்குதோள்—இதில் வேய் செயப்படுபொருளேயல்லாமல் கருவிப் பொருளாகாது ஆதலின் ஒடுவுருபாற் கூறினும் செயப்படு பொருளே கொள்க.

இந்நூற்பாவின் உரைவிளக்கம் 'ஏற்குமெவ்வகைப் பெயர்க்கு மீறாய்'[1] என்ற நூற்பாவின் கண்ணும் பிறாண்டும் விரித் துரைக்கப்பட்டது; ஆண்டுக் கண்டு தெளிக.

வேற்றுமை உருபும் இடைச்சொல்லாதலின், தனக்கென ஒரியல்பில்லாத[2] உருபைத் தன் பொருளில் தீர்ந்தோ தீராமலோ பிறபொருளின் பொருட்டாதற்கு உரியது எனச் சேனாவரை யரையுள்ளிட்டார் உரைப்பது பொருந்தாது என்பதை அவர் உரை நோக்கித் தெரிந்து கொள்க. யாதனுருபு என்பது வேற்றுமையல்லாத உருபு' என்று தெய்வச்சிலையார் கூறுவதும் பொருந்தாது என்பது வேற்றுமையல்லாத உருபு வரற்கும் விரித்தற்கும்,

வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
ஈற்றுநின் றியலுத் தொகைவயின் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கும்
எல்லாச் சொல்லும் உரிய என்ப.

என்ற தொல்காப்பிய நூற்பாவே விதியாக அமைந்துள்ளமையாற் புலனாகும்.

**(60)**

## 318. எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும் அல்ல வினைகொளு நான்கே ழிருமையும் புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்

**எல்லை இன்னும் அதுவும் பெயர் கொளும்**
**அல்ல வினை கொளும் நான்கு ஏழ் இருமையும்**
**புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்**

ellai in̲n̲um aṭuvum peyarkoḻum
alla vin̲ai koḻum nān̲ku ēḷ irumaiyum
pullum perumpālum en̲man̲ār pulavar

### இலாசரசு (ஆங்கிலமொழிபெயர்ப்பு)

**Government of cases**

The learned say that the 5th case implying 'limit' and the 6th are governed by Nouns; all others by verbs but (of these) the 4th and 7th are governed to a great extent by the both (Verbs and Nouns).

## ஒப்புமைப் பகுதி

எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்
அல்ல வினைகொளும் நான்குஏழ் இருமையும்
புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்

(இ.வி.: 224)

## மயிலை நாதர்

**எ—ன்,** வேற்றுமைகட்கு ஆவதோர் விதியுணர்த்துதல் நுதலிற்று.

**இ—ள்.:** எல்லைப் பொருண்மைக்கண் வரும் ஐந்தாம் வேற்றுமையும் அதுவென்னும் ஆறாம் வேற்றுமையும் பெயரையும், ஒழிந்தன வினையையும் வினைக் குறிப்பையும், நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் பெயரையும் வினையையும் கொண்டுமுடியும் பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர், **எ—று.**

எழுவாய் வேற்றுமைக்கு ஆண்டே பயனிலை சொல்லுதலின், ஈண்டு இரண்டாவது முதல் ஏழுக்குமே இவ்விதி சொன்னாரெனக் கொள்க.

**வ—று.:**

கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு எனவும், சாத்தனது குணம், சாத்தனதுகை, நெல்லதுகுப்பை, படையது குழாம், எள்ளது சாந்து, சாத்தனதாடை எனவும் பெயர் கொண்டன. அறத்தை ஆக்கும், மறத்தை மாற்றும், [1]குருவைச்சேரும் தாயை ஒக்கும், எனவும், கொழுநனை இலள்; எம்மையின்றிப் பொன்னையுடையன் எனவும் இரண்டாவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டது. சுடரினாற் கண்டான், அரசனாற் பெற்றான், சாத்தனொடு வந்தான் எனவும், கல்வியால் நல்லன், அரசனாற் செவ்வியன்எனவும் மூன்றாவது வினையும் வினைக் குறிப்புங் கொண்டது. மலையினிழிந்தான், பொன்னிற்றிகழும், வாளின் வணக்கினான் எனவும், இதனின்வெளிது (நீங்கல்), காக்கையிற்கரியன் (ஒப்பு), அறிவிற் பெரியன் (ஏது) எனவும் ஐந்தாவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டது. இறைவகூறாய், மன்னவாராய், சாத்தகூறாய்; கொற்ற கொள்ளாய், நிலனே நில்லாய், புலனே போகாய் எனவும், இறைவகொடியை, மன்ன வலியை, சாத்த நெடியை, கொற்ற கொடியை, நீரே தண்ணியை, தீயே வெய்யை எனவும் எட்டாவது வினையும் வினைக்குறிப்புங் கொண்டது. நாகர்க்குப் பலி, வளைக்குப் பொன், கரும்பிற்கு வேலி எனவும், இரவலர்க்கீந்தான், பொருட்குப் போயினான் எனவும், மறுமைக்கு நன்று, அவர்க்கினிது எனவும் நான்காவது முறையானே பெயரும் வினையும் வினைக்குறிப்புங் கொண்டது. மணியின்கண் ஒளி, மலரின்கண் வண்டு; மலையின் கண் ஒக்கும், பனையின்கண் அன்றில் எனவும், அரங்கின்கண் அகழ்ந்தான், [3]யாண்டின்கட் சென்றான் எனவும், நாட்டின்கண் நன்று, கூதிர்க்கண் உள்ளது, விலங்கின்கட் கொடிது எனவும் ஏழாவது முறையே

---

பாட வேறுபாடு:—

1. திருவினைச்
2. சீரினைச்
3. ஆண்டின்கட்

பெயரும் வினையும் வினைக்குறிப்பும் கொண்டது.'**பெரும்பாலும்**' என்றதனால், ஆறாவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டும், அல்லன வினையும் வினைக்குறிப்பும் பற்றிய பெயர்கொண்டும் முடியவும் பெறுமெனக் கொள்க.

**வ—று.:**

சாத்தனது வந்தது, சாத்தன வந்தன எனவும் சாத்தனது நன்று, சாத்தன நல்லன எனவும் ஆறாவது வினையும் வினைக்குறிப்பும் கொண்டது. அறத்தை அடைந்தவன், மறத்தை மறந்தவன், திருவைச் சேர்ந்தவன் எனவும், பொருளை உடையவன், புதல்வனை இல்லவன், அறத்தை ஆக்கல், மறத்தைமாற்றல் எனவும், இரண்டாவது வினையும் வினைக் குறிப்பும் பற்றிய பெயர் கொண்டது. சுடரினாற் கண்டவன், அரசனாற் பெற்றவன், நெய்யானுகர்ந்தவன் எனவும், குணத்தாற் பெரியவன், இனத்தாற் செவ்வியவன், அரசனாற் பெறுதல், வாளால் வணக்குதல் எனவும் மூன்றாவது வினையும் வினைக்குறிப்பும் பற்றிய பெயர் கொண்டது. இரவலர்க்கீந்தவன், பொருட்குப் போனவன் எனவும், எனக்கினியவன், அவர்க்கு நல்லவன், இரவலர்க்கீதல் எனவும், நான்காவது வினையும் வினைக் குறிப்பும் பற்றிய பெயர் கொண்டது. மலையின் இழிபவன், மன்னரில் வாழ்ந்தவன், பொன்னிற்றிகழ்பவன், வாளியிற்செகுத்தவன் எனவும், காக்கையிற் கரியவன், அறிவிற் பெரியவன், வாளியிற் செகுத்தல் எனவும் ஐந்தாவது வினையும் வினைக்குறிப்பும் பற்றிய பெயர்கொண்டது. அரங்கின்கண் அகழ்ந்தவன், ஆகாயத்தின்கட் சென்றவன், ஆண்டின்கட் போனவன், குணத்தின்கண் ஒழிந்தவன், எனவும், நாட்டின்கண் நல்லது, கூதிர்க்கண் உள்ளது, வாளின்கண் உள்ளது, அரங்கின்கண் அகழ்தல், பரணிக்கட் பிறத்தல் எனவும் ஏழாவது வினையும் வினைக்குறிப்பும் பற்றிய பெயர் கொண்டது.

நான்காவதற்கும் ஏழாவதற்கும் இவ்விலேசினானே இருமையும் கொள்ளுமென்பது பெறலாகவும் எடுத்தோதியது, இலேசாற் பெறுவன இவ்வாறு அருகி வருவன வென்பது அறிவித்தற்கெனக் கொள்க.தச்சனாற்செய்தமாடம், வாளாற்கொண்டகொடி என்பனவும் பெயர் கொண்டனவன்றோ வெனின், அவை செய்த கொண்டவென்னும் பெயரெச்சவினை கொண்டனவெனக் கொள்க.

## சங்கர நமச்சிவாயர்

## சிவஞான முனிவர்

**எ—னின்,** ***எழுவாய் முதலிய எட்டு வேற்றுமைக்கும்*** முடிக்குஞ்சொல் **உணர்—ற்று.**

**இ—ள்.:** 'நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப் பொருளே' (299) என்னும் நான்கு பொருள்களுள் எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும், ஆறாம் வேற்றுமையும் பெயரைக் கொண்டு முடியும்; ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம் வினையைக் கொண்டு முடியும்; அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையினையே யன்றி வினையொடு பொருந்தும் பெயரையும் கொண்டுமுடியும்; பெரும்பாலும் என்று சொல்லுவர் புலவர், **எ—று.**

நான்கு ஏழ் பெயரும் புல்லும் என்னாது **'இருமையும் புல்லும்'** என்றமையான், வினையொடு பொருந்தும் பெயர் என்றாம்.

**'பெரும்பாலும்'** என்றமையானே, வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயர் கோடலும் வினையாலணையும் பெயர் கோடலும் ***அவற்றுள் எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலே யன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையும் கொண்டு முடிதலும்*** கொள்க.

**வ—று.:**

கருவூரின் கிழக்கு, சாத்தனது கை, என எல்லை இன்னும் அதுவும் பெயர்கொண்டன. ***சாத்தன் வந்தான், சாத்தன் நல்லன்;*** குடத்தை வனைந்தான் குடத்தையுடையன்; வாளால் வெட்டினான், வாளால் வலியன்; சாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்கு நல்லன்; நோயின்நீங்கினான், நோயிற் கொடியன்; அவையின்கண் இருந்தான், அவையின்கண் பெரியன்; கொற்றா கொள், கொற்றா வலியை என அல்லன வினைகொண்டன. பிணிக்கு மருந்து, மணியின்கண் ஒளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையே யன்றிப் பெயரும் கொண்டன. இப்பெயர்கள் எல்லையின்னும் அதுவும் கொள்ளும் பெயர்கள் போலாது பிணிக்குக் கொடுக்கும் மருந்து, மணியின்கண் இருக்கும் ஒளி என வினைவேண்டி நிற்றலின் வினையொடு பொருந்தும் பெயர்களாயின. இங்ஙனமாதலின் இவற்றிற்கும் வினைப்பயனிலை ஒன்றுமே சிறந்தது என்பதூஉம், இது கருதி அல்ல வினைகொளும் என முடித்தோதினார் என்பதூஉம் பெற்றாம்.

**'வினைகொளும்'** எனப் பொதுப்படக் கூறினமையின் காட்டா தொழிந்த வினை விகற்பங்கள் எல்லாம் வருவித்து முடித்துக் காண்க.சாத்தன் வருதல், சாத்தன் வந்தான், குடத்தை வனைதல், குடத்தை வனைந்தவன் எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும் பெயரும் கொண்டன. பிறவும் அன்ன.இங்ஙனம் காட்டாதொழிந்த உருபுகளோடும் இவ்வாறே ஒட்டுக.

சாத்தன் அவன், சாத்தன் யாவன், சாத்தன் யார் எனப் பெயரேயாகிய எழுவாய் வேற்றுமை சிறுபான்மை

சுட்டுப்பெயரும் வினாப்பெயரும் வினாவினைக் குறிப்பும் கொண்டது.

***இங்ஙனம், சாத்தன் என்பான் பிறனொருவனால் சுட்டவும் வினாவவும்பட்டு நிற்றன்மாத்திரையே யன்றி இவன் இத்தொழிலியற்றினான் என வாராமையின் இவ்வெழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலே சிறந்தது என்பார் ஏனையுருபுகளோடு சேர்த்துப் பொதுப்பட அல்ல வினைகொளும் என வரையறுத்தும், சுட்டவும் வினாவவும்பட்டு நிற்றலின் பெயரும் வினாவுங் கொண்டு முடிதலைப் பெரும்பாலும் என்பதனால் தழுவவும் கூறினார் என்க.***

## கூழங்கைத் தம்பிரான்

**சூ–ம்,** வேற்றுமைகட்கு ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

**இ–ள்.: எல்லை இன்னும் அதுவும்** – எல்லைப் பொருண்மைக்கண் வரும் ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும், **பெயர் கொளும்** – பெயரைக் கொண்டு முடியும்; **அல்ல வினை கொளும்** – ஒழிந்த வேற்றுமைக்கண் வினையைக் கொண்டு முடியும்; **நான்கேழிருமையும் புல்லும்** – நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் பெயர் வினை என்னும் இரண்டையும் கொண்டு முடியும், **பெரும்பாலும் என்மனார் புலவர்** – பெரும்பாலும் என்று சொல்லுவர் புலவர், **எ–று.**

**உ–ம்.:**

கருவூரின் கிழக்கு, மருவூரின் மேற்கு எனவும் சாத்தனது குணம், சாத்தனது கை, நெல்லது குப்பை, படையது குழாம், எள்ளது சாந்து, சாத்தனது ஆடை எனவும் பெயர் கொண்டன. அறத்தைச் செய்தான், சுடரினாற் கண்டான், வாளான் மறிந்தான், சேனையொடு சென்றான், சாத்தனொடு வந்தான், மலையின் இழிந்தான், வாளின் வணக்கினான், இறைவ கூறாய், மன்ன வாராய், ஏனை வினை கொண்டன. கரும்பிற்கு வேலி, இரவலர்க்கு ஈந்தான் எனவும் பனையின்கண் அன்றில், தினையின்கட் பிள்ளை, பனையின்கட் சென்றான் எனவும் பெயரும் வினையும் கொண்டன. "**பெரும்பாலும்**" என்றதனாற் சிறுபான்மை சாத்தனது வந்தது, அறத்தை அடைந்தவன், சுடரினாற் கண்டவன். இவ்வாறு வருவனவும் கொள்க.

தச்சனாற் செய்த மாடம், வாளாற் கொண்ட கொடி என்பனவும் பெயர் கொண்டனவன்றோ வெனின் செய்த, கொண்ட என்னும் பெயரெச்ச வினை கொண்டன என்க.

## விசாகப் பெருமாளையர்

இது எழுவாய் முதலிய வெட்டு வேற்றுமைக்கு முடிக்குஞ் சொல்லுணர்த்துகின்றது.

**இ—ள்.: எல்லை யின்னும்** – எல்லைப் பொருட்டாகிய வைந்தாம் வேற்றுமையும், **அதுவும்** – ஆறாம் வேற்றுமையும், **பெயர்** – பெயரை, **கொளும்** – கொண்டு முடியும், **அல்ல** – ஒழிந்த வெழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம், **வினை** – வினையை, **கொளும்** – கொண்டு முடியும், **நான்கேழ்** – நான்காம் வேற்றுமையு மேழாம்வேற்றுமையும், **இருமையும்** – வினையையே யன்றிப் பெயரையும், **புல்லும்** – கொண்டு முடியும், **பெரும்பாலும்** – மிகவும், **என்மனார்** – என்று சொல்லுவர் புலவர், **எ—று.** (பெரும்பாலு மென்றதனால் எழுவாய்ப்பெயர் கொள்ளுதலும் பிறவுங் கொள்க.)

**வ—று.:**

கருவூரின் கிழக்கு, சாத்தனதுகை, எல்லையின்னும் அதுவும் பெயர்கொண்டன. சாத்தன்வந்தான், குடத்தை வனைந்தான், வாளால் வெட்டினான், சாத்தனுக்குக் கொடுத்தான், நோயினீங்கினான்,அவையின்கணிருந்தான், கொற்றாகொள், அல்லவை வினைகொண்டன. இப்படியே வினைக்குறிப்புங் கொள்ளும். பிணிக்குமருந்து, மணியின் கண்ணொளி நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையே யன்றிப் பெயருங் கொண்டன பிறவுமன்ன.

## ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை

எட்டுவேற்றுமைக்கும் முடிக்குஞ்சொல் உணர்த்துஞ் சூத்திரம் யாது?

எல்லை யின்னு மதுவும் பெயர்கொளும்

அல்ல வினைகொளு நான்கே ழிருமையும்

புல்லும் பெரும்பாலு மென்மனார் புலவர்.

(எல்லை இன்னும் அதுவும் பெயர் கொளும்

அல்ல வினை கொளும் நான்கு ஏழ் இருமையும்

புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்.)

**இ—ள்.:** எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் பெயரைக்கொண்டு முடியும். ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம் முற்றும் எச்சமுமாகிய வினையைக்கொண்டு முடியும். அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையையும் பெயரையுங்கொண்டு முடியும் பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர்.

பெயர்கொண்டுமுடியும் வேற்றுமைகள் எவை?

"எல்லையின்னும் அதுவும் பெயர்கொளும்."

வினைகொண்டுமுடியும் வேற்றுமைகள் யாவை?

"அல்லவினைகொளும்."

வினையும் பெயருங்கொண்டு முடியும் வேற்றுமைகள் எவை?

"நான்கேழ் இருமையும்புல்லும்."

பெரும்பாலும் என்றதனால், வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையுங்கொண்டு முடிதலும், அவற்றுள் எழுவாய்வேற்றுமை வினைகொண்டு முடிதலே யன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங் கொண்டு முடிதலுங் கொள்க.

**உ–ம்.**

(1) கருவூரின்கிழக்கு, சாத்தனதுகை என எல்லையின்னும் அதுவும் பெயர்கொண்டன.

(2) சாத்தன்வந்தான் ... தெரிநிலைவினை

குடத்தைவனைந்தான் ... ,,

வாளால்வெட்டினான்... ,,

சாத்தனுக்குக்கொடுத்தான் ... ,,

நோயினீங்கினான் ... ,,

அவையின்கணிருந்தான் ... ,,

கொற்றாகொள் ... ,,

சாத்தன்நல்லன் ... ,, குறிப்புவினை

குடத்தையுடையன் ... ,,

வாளால்வலியன் ... ,,

சாத்தனுக்குநல்லன் ... ,,

நோயிற்கொடியன் ... ,,

அவையின்கட்பெரியன் ... ,,

கொற்றாவலியை ... ,,

என அல்லவை இருவகை வினையுங் கொண்டன.

(3) பிணிக்குமருந்து, மணியின்கணொளி என நான்காம்வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையேயன்றிப் பெயருங்கொண்டன.

(4) சாத்தன்வருதல், சாத்தன்வந்தவன்; குடத்தைவனைதல். குடத்தைவனைந்தவன் எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும் பெயருங் கொண்டன. பிறவுமன்ன.

(5) சாத்தனவன், சாத்தன் யாவன், சாத்தன்யார் என எழுவாய்வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும் வினாப் பெயரும் வினாவினைக் குறிப்புங் கொண்டது.

எட்டுவேற்றுமைகளுள், எட்டாவதும் ஆறாவதுமொழிந்த ஆறு வேற்றுமைப் பொருள்களும் வினைகொண்டுமுடியிற் காரகமெனப் பெயர்பெறும். ஆறாவதும், வினைப்பெயர் கொள்ளின்; அப்பெயர்பெறும்.

சூத்திரம் – "விளிகுறை யிரண்டையும் விட்டவேற் றுமைகள்
வினையான் முடியிற் காரகமெனப்பெறுங்
குறையும் வினைகொளி னொரோவழிக் கூடும்
நாரா யணன்பூ வோரா யிரத்தைக்
கரத்தாற் கொய்தோ ரரற்கே கொடுத்துச்
சக்கரச் சிறமையி னீங்கி நற்சுவைப்
பாற்கடற் கண்ணே பள்ளிகொண் டானெனத்
காரக முழுதும் வந்தன காண்க
இவற்றினு ளொன்றே யியம்பினுங் காரகம்"
காரகமாவது யாது?

காரகமாவது ஒருவாக்கியத்திலேயுள்ள பெயருக்கும் முடிக்கும் வினைக்குமிடையேயுள்ள தொழிற்சம்பந்தம். எனவே வினைகொண்டுமுடியும் வேற்றுமைகளெல்லாம் காரகம் எனப் பெயர்பெறும். காரகம் செயல். எழுவாய் வேற்றுமையின் செயல் கர்த்திருகாரகமெனப்படும். இரண்டாம் வேற்றுமையின் செயல் கருமகாரகமெனப்படும். மூன்றாம் வேற்றுமையின்செயல் கரணகாரக மெனப்படும். நான்காவதன்செயல் சம்பிரதான காரகமெனப்படும். எல்லைப் பொருளில் வராத ஐந்தாவதன்செயல் அபாதான காரகமெனப்படும். ஏழாவதன்செயல் அதிகரண காரகமெனப்படும்.

கண்ணனதுவரவு என்புழி ஆறாம்வேற்றுமையின் செயலும் ஒருவாறுகாரகமாம்."எல்லையின்னும்" என்னுஞ் சூத்திரத்தில் வரும் "வினைகொளும்" என்பதனாற் கொள்ளக்கிடப்பது யாது? மேல்வரும் வினையியலுக்குத் தோற்றுவாய் செய்தாரென்பது.

## முகவை இராமானுச கவிராயர்

இது, எட்டு வேற்றுமைகளுக்கு முடிக்குஞ் சொல்லுணர்த்துகின்றது.

**இ–ள்.**: எல்லை யின்னும் அதுவும் பெயர்கொளும் – எல்லைப் பொருளிலே வருகின்ற இன்னுருபும், ஆறாம் வேற்றுமையுருபும், பெயரைக் கொண்டு முடியும், **அல்ல வினைகொளும்** – அல்லாத எழுவாய் முதலிய எல்லா வுருபுகளும் வினையைக் கொண்டு முடியும், **நான்கேழி ருமையும் புல்லும் பெரும்பாலும் என்மனார் புலவர்** – நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையையும் வினையொடு பொருந்தும் பெயரையுங் கொண்டு முடியும் பெரும்பாலு மென்று சொல்லுவர் புலவர், **எ–று.**

**பெரும்பாலு**மென்றதனால், வினைகொளற்கு உரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையுங் கொண்டு முடிதலும், எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங் கொண்டு முடிதலுங் கொள்க.

**வ–று.:**

கருவூரின் கிழக்கு, சாத்தனதுகை என எல்லை யின்னும் அதுவும் பெயர்கொண்டன. சாத்தன் வந்தான் – சாத்தன் நல்லன், குடத்தை வனைந்தான் – குடத்தையுடையன், வாளால் வெட்டினான், வாளால் வலியன், சாத்தனுக்குக் கொடுத்தான் – சாத்தனுக்கு நல்லன், நோயின்நீங்கினான், நோயிற் கொடியன், அவையின்கணிருந்தான், அவையின்கட் பெரியன், கொற்றாகொள் கொற்றா வலியை, என – அல்லன வெல்லாம் வினை கொண்டன. பிணிக்கு மருந்து – மணியின்கண் ஒளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையே யன்றிப் பெயருங் கொண்டன. இப்பெயர்கள் இன்னுருபும் அது உருபுங்கொண்ட பெயர்களைப் போலாகாமல் பிணிக்குக் கொடுக்கும் மருந்து – மணியின்கண்ணிருக்கும் ஒளி என வினை வேண்டி நிற்றலால், வினையொடு பொருந்தும் பெயர்களென்று சொல்லப்பட்டன. இங்ஙனம் ஆதலால், இவற்றிற்கும் வினைப்பயனிலை யொன்றுமே சிறந்த தென்பதாயிற்று.

இனி 'வினைகொளு'மெனப் பொதுபடக் கூறினதினாலே, ஒழிந்த வினைவிகற்பங்களெல்லாம் வருவித்து முடித்துக் கொள்க.

**உ–ம்.:** சாத்தன்வந்த, வந்து, வாராத, வாராது வந்தவன், வருதல் எனவும்; குடத்தை வனைந்த, வனைந்து, வனையாத, வனையாது, வனைந்தவன், வனைதல் எனவும் வினைவிகற்பங்களுந் தொழிற்பெயரும் வினையாலணையும் பெயருங் கொண்டன. ஒழிந்த வுருபுகளோடு மிவ்வாறே யொட்டுக. சாத்தன் அவன், சாத்தன்யாவன், சாத்தன்யார் என வெழுவாய் வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும், வினாப்பெயரும், வினாவினைக் குறிப்புங் கொண்டது, இங்ஙனஞ் சுட்டவும் வினாவவும்பட்டு நிற்றலன்றி, இவன் இத்தொழில் செய்தான் என வாராததினாலே இந்த எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலே சிறந்ததென்று சொல்ல வந்தவர், மற்ற உருபுகளோடு சேர்த்துப் பொதுப்பட அல்ல வினைகொளுமென வரையறுத்தும், சுட்டவும் வினாவவும் பட்டு நிற்றலால் பெயரும் வினாவுங் கொண்டு முடிதலைப் பெரும்பாலு மென்றதனால் தழுவவுங் கூறினாரெனக் காண்க. கொளும் புல்லு மென்மனார் புலவரென முற்றும் பயனிலையுமாக முடிந்தது.

## கா. கோபாலாசாரியர்
## தி.கோ. ரங்காசாரியர்

**உரை :– எல்லை இன்னும்** – எல்லைப் பொருளில்வரும் ஐந்தாம் வேற்றுமையும், **அதுவும்** – ஆறாம் வேற்றுமையும், **பெயர்கொளும்** – பெயரைக் கொண்டுமுடியும்; **அல்ல** – எல்லைப் பொருளல்லாத – மற்றைப் பொருளில் வரும் ஐந்தாம் வேற்றுமையும் எழுவாய் முதலிய வேற்றுமைகளும், **வினைகொளும்** – வினையைக் கொண்டு முடியும்; **நான்கு ஏழ்** – நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும், **இருமையும்** – இரண்டையும் (வினையையும் வினையோடு பொருந்தும் பெயரையும்), **புல்லும்** – கொண்டு முடியும், **பெரும்பாலும் –, என்மனார்**–என்று சொல்வர், **புலவர்** – அறிவுள்ளோர்.

உதாரணம்

| | |
|---|---|
| மதுரையின் வடக்கு<br>இராமனது மாளிகை | எல்லை இன்னும் அதுவும்பெயர் கொண்டன. |
| இராமன் வந்தான்<br>இராமன் பெரியன் | முதலாவது வினைகொண்டது. |
| வீட்டைக் கட்டினான்<br>வீட்டையுடையான் | 2–ஆவது வினைகொண்டது |
| பொன்னால் செய்தான்<br>பொன்னால்பெரியன் | 3–ஆவது வினைகொண்டது |
| இராமனுக்குக் கொடுத்தான்<br>இராமனுக்கு நல்லன் | 4–ஆவது வினைகொண்டது |
| நோயின் நீங்கினான்<br>நோயிற் கொடியன் | 5–ஆவது வினைகொண்டது |
| அவைக்கண் இருந்தான்<br>அவைக்கண் பெரியன் | 7–ஆவது வினைகொண்டது |
| இராமா கொடு.<br>இராமா நல்லை. | 8–ஆவது வினைகொண்டது |
| பிணிக்கு மருந்து.<br>மலர்க்கண் மணம். | 4–உம், 7–உம் வினையையேய ன்றிப் பெயரையுங் கொண்டன |

**குறிப்பு** :– இப்பெயர்கள் – 'இன்', 'அது' உருபுகள் கொண்டு முடிந்த பெயர்கள் போலாகாமல், 'பிணிக்குக் கொடுக்கும் மருந்து', 'மலர்க்கண் இருக்கும் மணம்' என வினையை வேண்டி நிற்பதனால் வினையோடு பொருந்தும் பெயர்களாயின. 'பொரும்பாலும்' என்றதனால் – வினைகொள்ளுதற்குரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையும் கொண்டு முடிதலும், எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங் கொண்டு முடிதலுங் கொள்க.

| | |
|---|---|
| 'சாத்தன் வருதல்'<br>'குடத்தை வனைந்தவன்' | வினைகொள்வன்–தொழிற்பெயரையும்,<br>வினையாலணையும் பெயரையுங் கொண்டன |
| 'சாத்தன் அவன்'<br>'சாத்தன்' யாவன்' | எழுவாய் வேற்றுமை – பெயரையும் வினா<br>வையுங் கொண்டது. |

'இராமனது வந்தது' என்பதில் – 'அது' என்பது அகரச்சாரியையும், துவ்விகுதியுமன்றி ஆறனுருபு அன்று; ஆகவே 'இராமனது' என்பது குறிப்பு வினையாலணையும் பெயராய் வினைகொண்டது என்றிக.

## ஆறுமுக நாவலர்

**நான்கு ஏழ் இருமையும் புல்லும்** – அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையையே யன்றி வினையொடு பொருந்தும் பெயரையுங் கொண்டு முடியும், **பெரும்பாலும் என்மனார் புலவர்** – பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர், **எ–று.**

**'பெரும்பாலும்'** என்றதனால், வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையும் கொண்டு முடிதலும், அவற்றுள் எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலே யன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங் கொண்டு முடிதலுங் கொள்க.

**உ–ம்.:**

கருவூரின் கிழக்கு, சாத்தனது கை என எல்லையின்னும் அதுவும் பெயர் கொண்டன.சாத்தன் வந்தான், சாத்தனல்லன்; குடத்தை வனைந்தான், குடத்தை யுடையன்; வாளால் வெட்டினான், வாளால் வலியன்; சாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்கு நல்லன், நோயினீங்கினான், நோயிற் கொடியன், அவையின் கணிருந்தான், அவையின்கட் பெரியன்; கொற்றா கொள், கொற்றா வலியை என அல்லவை வினைகொண்டன.பிணிக்கு மருந்து, மணியின் கணொளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையே யன்றிப் பெயருங் கொண்டன. இப்பெயர்கள், எல்லை யின்னும் அதுவும் கொள்ளும் பெயர்கள் போலாது, பிணிக்குக் கொடுக்கு மருந்து, மணியின்கணிருக்கு மொளி என வினை வேண்டி நிற்றலின், வினையொடு பொருந்தும் பெயர்களாயின. சாத்தன் வருதல், சாத்தன் வந்தவன்; குடத்தை வனைதல், குடத்தை வனைந்தவன் எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும் பெயருங் கொண்டன. பிறவுமன்ன.சாத்தனவன், சாத்தன் யாவன், சாத்தன்யார் என எழுவாய் வேற்றுமை சிறுபான்மை சுட்டுப் பெயரும் வினாப்பெயரும் வினாவினைக் குறிப்புங் கொண்டது.

எட்டுவேற்றுமைகளுள், எட்டாவதும் ஆறாவது மொழிந்த ஆறுவேற்றுமைப் பொருள்களும் வினைகொண்டு முடியிற் காரகமெனப் பெயர் பெறும். ஆறாவதும், வினைப்பெயர் கொள்ளின், அப்பெயர் பெறும்.

சூத்திரம்:

''விளிகுறை யிரண்டையும் விட்டவேற் றுமைகள்

வினையான் முடியிற் காரக மெனப்பெறுங்
குறையும் வினைகொளி னொரோவழிக் கூடும்
நாரா யணன்பூ வோரா யிரத்தைக்
கரத்தாற் கொய்தோ ரரற்கோ கொடுத்துச்
சக்கரச் சிறுமையி னீங்கி நற்சுவைப்
பாற்கடற் கண்ணே பள்ளிகொண் டானெனக்
காரக முழுதும் வந்தன காண்க.
இவற்றினு ளொன்றே யியம்பினுங் காரகம்”

## வ. குமாரசாமிப் புலவர்

**இ–ள். எல்லை இன்னும் அதுவும்பெயர் கொளும்** – எல்லைப்பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் பெயரைக்கொண்டு முடியும், – **அல்ல வினை கொளும்** – ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம் வினையைக் கொண்டு முடியும், – **நான்கு ஏழு இருமையும் புல்லும்** – அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையையேயன்றி வினையொடு பொருந்தும் பெயரையுங்கொண்டு முடியும், – **பெரும்பாலும் என்மனார் புலவர்** – பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர்.

பெரும்பாலும் என்றதனால், வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையுங் கொண்டு முடிதலும், அவற்றுள் எழுவாய்வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங்கொண்டு முடிதலுங்கொள்க.

**உ–ம்.**

(1) கருவூரின் கிழக்கு, சாத்தனது கை, என எல்லையின்னும் அதுவும்பெயர் கொண்டன.

(2) சாத்தன்வந்தான், சாத்தனல்லன்; குடத்தை வனைந்தான், குடத்தையுடையன்; வாளால்வெட்டினான், வாளால்வலியன்; சாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்குநல்லன்; நோயி னீங்கினான் நோயிற்கொடியன்; அவையின் கணிருந்தான், அவையின்கட்பெரியன்; கொற்றாகொள், கொற்றாவலியை என அல்லவை வினைகொண்டன.

(3) பிணிக்குமருந்து, மணியின்கணொளி என நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையேயன்றிப் பெயருங் கொண்டன. இப்பெயர்கள், எல்லையின்னும் அதுவுங் கொள்ளும் பெயர்கள் போலாகாது, பிணிக்குக் கொடுக்குமருந்து மணியின் கணிருக்குமொளி என வினை வேண்டி நிற்றலின், வினையொடு பொருந்தும் பெயர்களாயின.

(4) சாத்தன்வருதல், சாத்தன்வந்தவன்; குடத்தைவனைதல், குடத்தைவனைந்தவன் எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும் பெயருங் கொண்டன. பிறவுமன்ன.

(5) சாத்தனவன், சாத்தன்யாவன் சாத்தன்யார் என எழுவாய்வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும் வினாப் பெயரும் வினாவினைக் குறிப்புங்கொண்டது. வினையா லணையும் பெயருக்குந் தொழிற்பெயருக்கும் பகுதி வினை யாதலின் அவற்றைக்கொள்ளுதலும் ஒருவாறுவினை வினை கொண்டதாம். முடிக்குஞ் சொல்லாக வந்தபோது சுட்டும் வினாவுங் குறிப்புவினைப்பாற் படுமாதலின் முடிபும் ஒருவாறு வினை முடிபாம். இக்கருத்துப் பற்றி முதல்வேற்றுமை வினை கொளுமென்பதை அல்லவினைகொளு மென்பதிலடக்கிக் கூறினாரென்றறிக.

எட்டு வேற்றுமைகளுள், எட்டாவதும் ஆறாவதுமொழிந்த ஆறுவேற்றுமைப் பொருள்களும் வினைகொண்டு முடியிற் காரகமெனப் பெயர்பெறும். ஆறாவதும் வினைப்பெயர் கொள்ளின், அப்பெயர்பெறும்.

சூத்திரம்.

**"விளிகுறை யிரண்டையும் விட்டவேற் றுமைகள்**
**வினையான் முடியிற் காரக மெனப்பெறுங்**
**குறையும் வினைகொளி னொரோவழிக் கூடும்**
**நாரா யணன்பூ வோரா யிரத்தைக்**
**கரத்தாற் கொய்தோ ரரற்கே கொடுத்துச்**
**சக்கரச் சிறுமையி னீங்கி நற்சுவைப்**
**பாற்கடற் கண்ணே பள்ளிகொண் டானெனக்**
**காரக முழுதும் வந்தன காண்க.**
**இவற்றினு ளொன்றே யியம்பினுங் காரகம்."**

இன்பெயர்கொளுமென்னாது, எல்லை இன் ................................... பெயர்கொளும் என்றதினால் "விசும்பிற்றுளிவீழினல்லான்மற்றாங்கே, பசும்புற்றலைகாண் பரிது." என்பதில் விசும்பின் என்னும் ஐந்தனுருபு வீழின் என்னும் வினை கொண்டது, எல்லைப் பொருளில் வாராது நீக்கப்பொருளில் வந்தமையா லென்றறிக.

## வை.மு. சடகோபராமானுசாசாரியார்
## சே. கிருஷ்ணமாசாரியார்

இ–ள்.: **எல்லை இன்னும்** – எல்லைப் பொருளில்ள வருகிற ஐந்தாம் வேற்றுமையும், **அதுவும்** – ஆறாம் வேற்றுமையும், **பெயர்** – பெயரை, **கொளும்** – கொண்டு முடியும்; **அல்ல** – மற்றை எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம், **வினை** – வினையை, **கொளும்** – கொண்டு முடியும்; **நான்கு ஏழ்** – நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும், **இருமையும்** – இரண்டையும் (வினையையும் வினையோடு பொருந்தும் பெயரையும்), **புல்லும்** – கொண்டு முடியும், **பெரும்பாலும்**–, **என்மனார்** – என்று சொல்வர், **புலவர்** – அறிவுள்ளோர்; **எ–று.**

அல்ல – முதல், இரண்டு, மூன்று, நான்கு, (எல்லைப் பொருளொழிந்த பொருளில் வரும்) ஐந்து, ஏழு, எட்டு ஆகிய வேற்றுமைகள்.'பெரும்பாலும்' என்றதனால்: வினைகொளற்கு உரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையும் கொண்டு முடிதலும், எழுவாய் வேற்றுமை வினைகொண்டு முடிதலே யன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையும் கொண்டு முடிதலும் கொள்க.

**உ–ம்.:**

கருவூரின் கிழக்கு

சாத்தனது கை–எல்லை இன்னும், அதுவும் – பெயர்கொண்டன. சாத்தன் வந்தான், சாத்தன் கரியன். குடத்தை வனைந்தான், குடத்தை யுடையவன். வாளால் வெட்டினான், வாளால் வலியவன். ாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்கு நல்லவன். நோயின் நீங்கினான், காக்கையின் கரிது. அவையின்கண் இருந்தான், அவையின்கண் பெரியன்.கொற்றா கொள், கொற்றா வலியை. –மற்றவை – தெரிநிலையும்குறிப்புமாகிய வினைகளைக் கொண்டன.மணியின் கண் ஒளி, பிணிக்கு மருந்து நான்கும், ஏழும் வினையையே யன்றிப் பெயரையும் கொண்டன.இப்பெயர்கள்: இன் அது உருபுகள் கொண்டு முடிந்த பெயர்கள் போலாகாமல் பிணிக்கு (க்கொடுக்கும்) மருந்து, மணியின்கண் (இருக்கும்) ஒளி என வினையை வேண்டி நிற்பதனால், வினையோடு பொருந்தும் பெயர்களாயின.சாத்தன் வருதல்
வினைகொள்வன – தொழிற் பெயரையும், வினையாலணையும் குடத்தை வனைந்தவன்பெயரையும் கொண்டன. சாத்தன் அவன் எழுவாய் வேற்றுமை – பெயரையும் வினாவையும் கொண்டது. சாத்தன் யாவன்.

## பவானந்தம் பிள்ளை

**இ–ள்.:** எல்லை இன்னும் அதுவும் பெயர் கொளும் – எல்லைப் பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும் ஆறாம் வேற்றுமையும் பெயரைக்கொண்டு முடியும்; அல்ல வினை கொளும் – ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம் வினையைக்கொண்டு முடியும்; நான்கு ஏழ் இருமையும் புல்லும் – அவற்றுள் நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும் வினையையேயன்றி வினையொடு பொருந்தும் பெயரையும் கொண்டு முடியும்; பெரும்பாலும் என்மனார் புலவர் – பெரும்பாலுமென்று சொல்லுவர் புலவர். **எ–று.**

'பெரும்பாலும்' என்றதனால், வினைகொளற்குரியன சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும்பெயரையுங் கொண்டு முடிதலும், அவற்றுள் எழுவாய்வேற்றுமை வினைகொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும் வினாவையுங் கொண்டு முடிதலும் கொள்க.

உ–ம்.

(1) கருவூரின் கிழக்கு, சாத்தனது கை – என எல்லை இன்னும் அதுவும் பெயர் கொண்டன.

(2) சாத்தன் வந்தான், சாத்தன் நல்லன்; குடத்தை வனைந்தான், குடத்தை யுடையன்; வாளால் வெட்டினான்,

வாளால் வலியன்; சாத்தனுக்குக் கொடுத்தான், சாத்தனுக்கு நல்லன்; நோயினீங்கினான், நோயிற் கொடியன்; அவையின்க ணிருந்தான், அவையின்கட் பெரியன்; கொற்றா கொள், கொற்றா வலியை – என அல்லவை விவனகொண்டன.

(3) பிணிக்கு மருந்து, மணியின்க ணொளி – என நான்காம் வேற்றுமையும் ஏழாம்வேற்றுமையும் வினையேயன்றிப் பெயருங்கொண்டன.

இப்பெயர்கள், எல்லையின்னும் அதுவும் கொள்ளும் பெயர்கள் போலாது, பிணிக்குக் கொடுக்கும் மருந்து மணியின்க ணிருக்கு மொளி என வினை வேண்டி நிற்றலின், வினையொடு பொருந்தும் பெயர்களாயின.

(4) சாத்தன் வருதல், சாத்தன் வந்தவன்; குடத்தை வனைகதல், குடத்தை வனைந்தவன் – எனச் சிறுபான்மை தொழிற்பெயரும் வினையாலணையும்பெயருங் கொண்டன. பிறவுமன்ன.

(5) சாத்தன் அவன், சாத்தன் யாவன், சாத்தன் யார் – என எழுவாய் வேற்றுமை சிறுபான்மை சுட்டுப்பெயரும் வினாப்பெயரும் வினாவினைக் குறிப்புங் கொண்டது.

எட்டு வேற்றுமைகளுள், எட்டாவதும் ஆறாவதுமொழிந்த ஆறு வேற்றுஜமப் பொருள்களும் வினைகொண்டு முடியின் காரகம் எனப்பெயர் பெறும். ஆறாவதும், வினைப்பெயர் கொள்ளின், அப்பெயர் பெறும்.

உ–ம். ''இந்திர தேவன் அந்தா மரையைக்
கரத்தாற் கொய்திறை வற்கே கொடுதததுத்
தாங்கிய சிறுமையி னீங்கி
விண்ணிடை மேதக வீற்றிருந் தானே''–

எனக் காரக முழுதும் வந்தன காண்க. இவற்றினு ளொன்றே யியம்பினுங் காரகம்.

## .கா. நமச்சிவாய முதலியார்

**எல்லை இன்னும்** – எல்லைப் பொருட்டாகிய ஐந்தாம் வேற்றுமையும், **அதுவும்** – ஆறாம் வேற்றமையும், **பெயர்** – பெயரை, **கொள்ளும்** – கொண்டு முடியும், **அல்ல** – ஒழிந்த எழுவாய் முதலிய வேற்றுமைகளெல்லாம், **வினை** – வினையை, **கொள்ளும்** – கொண்டு முடியும், **நான்கு ஏழ்** – நான்காம் வேற்றுமையும் ஏழாம் வேற்றுமையும், **இருமையும்** – வினையையும் பெயரையும், **புல்லும்** – கொண்டு முடியும், **பெரும்பாலும்** – மிகவும், **என்மனார் புலவர்** – என்று சொல்லுவர் புலவர்.

பெரும்பாலும் என்றதனால், வினைகொளற்கு உரியன, சிறுபான்மை தொழிற்பெயரையும் வினையாலணையும் பெயரையும் கொண்டு முடிதலும், எழுவாய்வேற்றுமை வினை கொண்டு முடிதலேயன்றிச் சிறுபான்மை பெயரையும், வினாவையும் கொண்டு முடிதலுங் கொள்க.

**உதாரணம்**

1. கருவூரின் கிழக்கு
சாத்தனதுகை — இன்னும், அதுவும் பெயர் கொண்டன.

2. சாத்தன் வந்தான்
சாத்தன் கரியன்
குடத்தை வனைந்தான்
குடத்தை யுடையன்
வாளால் வெட்டினான்
வாளால் வலியன்
சாத்தனுக்குக் கொடுத்தான்.
சாத்தனுக்கு நல்லன்
நோயின் நீங்கினான்
நோயிற் கொடியன்
அவையின்கண் இருந்தான்
அவையின்கண் பெரியன்
கொற்றா கொள்
கொற்றா வலியை. — அல்லன, தெரிநிலையும் குறிப்பும் ஆகிய வினைகளைக் கொண்டன.

3. பிணிக்கு மருந்து
மணியின்கண் ஒளி — நான்காம் வேற்றுமையும், ஏழாம் வேற்றுமையும் பெயர் கொண்டன.

இப்பெயர்கள், இன், அது என்னும் உருபுகள் கொண்ட பெயர்கள் போலாகாமல், பிணிக்குக் கொடுக்கும் மருந்து, மணியின் கண் இருக்கும் ஒளி என வினை வேண்டி நிற்றலால், வினையொடு பொருந்தும் பெயர்களாயின.

4. சாத்தன் அவன்
சாத்தன் யாவன்
சாத்தன் யார் — எழுவாய் வேற்றுமை – பெயரையும் வினாவையும், வினாவினைக்குறிப்பை யுங் கொண்டன.

இனி, 'வினைகொளும்' எனப் பொதுப்படக் கூறியதனால், ஒழிந்த வினைவிகற்பங்கள் எல்லாம் வருவித்து முடித்துக் கொள்க.

5. சாத்தன் வந்த குடத்தை வனைந்த – பெயரெச்சம்
சாத்தன் வந்து குடத்தை வனைந்து – வினையெச்சம்
சாத்தன் வாராத குடத்தை வனையாத – எதிர்மறை பெயரெச்சம்
சாத்தான் வாராமல் குடத்தை வனையாமல் – எதிர்மறைபெயரெச்சம்
சாத்தன் வருதல் குடத்தை வனைதல் – தொழிற்பெயர்
சாத்தன் வந்தவன் குடத்தை வனைந்தவன் – வினையாலணையும் பெயர்.

மற்ற உருபுகளோடும் இவ்வாறே ஒட்டி முடித்துக் கொள்க.

## மோசசு பொன்னையா

எல்லைப் பொருளுக்குரிய ஐந்தன் இன் என்னும் உருபும் கிழமைப்

பொருளுக்குரிய ஆறன் அது என்னும் உருபும் முடிக்குஞ் சொல்லாகப் பெயரையே பெறும்; ஏனைய முடிக்குஞ் சொல்லாக வினையையே பெறும்; நான்கன் உருபும் ஏழன் உருபும் வினையோடு பெயரையும் முடிக்குஞ் சொல்லாகப் பெரும்பாலும் பெறும் எனப் புலன் வல்லார் கூறுப எ-று.

எழுவாய் வேற்றுமையின் முடிக்குஞ்சொற்கள் இவை என்பதை,

*வினைப்பெயர் வினக்கொள லதன்பய னிலையே,*

என்ற நூற்பாவால் உணர்த்தினார். விளியேற்றுமையின் பொருள்.

*படர்க்கையோரைத்*

*தன்முக மாகத் தானழைப் பதுவே*

என்றதனால். எதிர்முகமாக அழைப்ப தொன்றையே அது பொருளாகக் கொள்ளுதலின், விளிவேற்றுமைக்கு முடிக்கும் சொல் இல்லை. எனவே, அல்லன என்பதற்கு எழுவாய், விளியேற்றுமைகளும் எல்லை இன்னும் அதுவும் அல்லாதன என்றே பொருள் கொள்க. வினை என்றது வினைமுற்று, தொழிற்பெயர், தொழில்முதனிலை யாகிய வினையாலணையும் பெயர் என்பவற்றை என அறிக.

எ–டு.:–

1. (அ) கோனாடு கருவூரின் கிழக்கு

(ஆ) இது சாத்தனது கை

2. (அ) அவன் குடத்தை வனைந்தான் / உடையன் / வனைதல் / வனைந்தவன்

(ஆ) அவன் வாளால் வெட்டினான் / வெட்டுதல் / வெட்டினவன்

(இ) அவன் புலியின் பாய்ந்தான் / பாய்தல் / பாய்ந்தவன்

3. (அ) கரும்புக்கு வேலி நன்று / கட்டினான் / கட்டுதல் / கட்டியவன்

(ஆ) ஒளி மணியின் கண் உளது;

அவன் வீட்டில் உள் சென்றான் / செல்லுதல் / சென்றவன்

இவ்வாறு கொள்ளும் பெயரும் வினையுமாயவை எழுவாயின் பயனிலைகளாய் இவ்வேற்றுமைகளின் முடிக்குஞ் சொற்களாய் மட்டும் நிற்பன ஆதலின் இவற்றைப் பயனிலைகள் என்னாது பெயர், வினை என்றே கூறினார் என அறிக.

(62)

**நனனூல் உரைவளம்**

**பெயரியல் – 2**

**முற்றிற்று**